# மாயங்களின் சங்கமம்

## தொகுதி - 1

### ஓஷோ

ஹக்கிம் சனாய் என்னும் சூஃபி ஞானியின்
ஹடிகா
என்னும் தத்துவக்கவிதைகளுக்கான சொற்பொழிவுகள்

தமிழாக்கம்:
சுவாமி சியாமானந்த்



கவிதா பப்ளிகேஷன்
தபால் பெட்டி எண் : 6123
8, மாசிலாமணி தெரு, பாண்டி பஜார்,
தி. நகர், சென்னை - 600 017.
✆ 2436 4243, 2432 2177

மாயங்களின் சங்கமம் (தொகுதி-1)

முதற் பதிப்பு : டிசம்பர், 2012

விலை : ₹ 330/-

**Maayangalin Sangamam - 1**

Originally published in English as
**Unio Mystica, Vol.1**



| | | |
|---|---|---|
| Translated by | : | **Swami Shyamanand** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December, 2012 |
| Pages | : | 512 |
| **Price** | : | ₹ 330/- |
| ISBN | : | 978-81-8345-284-7 |
| Printed at | : | **Padmavathi Offset, Chennai - 2 ☎ 28450105** |

Published by :
**KAVITHA PUBLICATION**
Post Box No. 6123, # 8, Masilamani Street,
Pondy Bazaar, Thyagaraya Nagar, Chennai - 600 017.
Phone : 044 - 24364243 / 24322177 Tele Fax : 044 - 24364243
E-mail : kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

# பொருளடக்கம்

அவரை அடைவதற்குரிய
நமது பாதையில் நாம்
பகுத்தறிவை முயற்சித்தோம்:
அது வேலை செய்யவில்லை ;
ஆனால் நாம் அதை கைவிட்ட அந்த
நொடிப் பொழுதில், தடைகள் எல்லாம்
இல்லாமல் போய்விட்டன.

கனிந்த அன்பினால் அவர் தன்னை
நமக்கு அறிமுகம் செய்தார்;
அது அல்லாமல் நம்மால் அவரை
எப்படி அறிந்து கொள்ள முடியும்?
பகுத்தறிவானது நம்மை அவரது வாசல்
வரையில் எடுத்துச் சென்றது;
ஆனால் அவரது பிரசன்னம் தான்
நம்மை உள்ளே இருக்கும்படி செய்தது.

ஆனால் உங்களை நீங்களே அறிந்து
கொள்ள முடியாமல் இருக்கிறவரையில்
உங்களால் அவரை எப்படி அறிந்து
கொள்ள முடியும்?

அதிகமாகவும் இல்லாமல், குறைவாகவும் இல்லாமல்
ஒருவன், ஒருவனாகவே இருந்து விட்டால்:
இரண்டு ஆவதில் பிழை ஆரம்பிக்கிறது;
ஒன்று ஆதல் பிழைகள் எதையும் அறியாது.

*உங்களது இதயத்தின் கண்ணாடியை*
*பளபளப்பாக்குவதில் தான் உங்களது*
*ஆன்மாவானது பயணிப்பதற்கான சாலை இருக்கிறது.*
*உங்களது இதயத்தின் கண்ணாடியில் நம்பிக்கையின்மை*
*மற்றும் போலித்தனம் என்னும் துரு இல்லாமல் அதை*
*பளபளப்பாக ஆக்குதல் என்பது புரட்சியினா லோ*
*அல்லது உடன்பாடு இன்மையாலோ நடக்கக் கூடியது*
*அல்ல:*

*உங்களது உறுதியினால், கலப்படமற்ற உங்களது*
*தூய்மையான நம்பிக்கையினால் மட்டுமே உங்களது*
*கண்ணாடி பளபளப்பாக ஆகிறது.*

*உங்களைச் சுற்றி நீங்கள் அணிந்துள்ள*
*பொய் விலங்குகளை உடைந்தெறிந்து விடுதலை*
*அடையுங்கள்; ஏனெனில் நீங்கள் களிமண்ணில்*
*இருந்து விடுதலை அடைந்து விடும் போது நீங்கள்*
*சுதந்திரமாக இருப்பீர்கள்.*
*உடல் இருள் நிறைந்து இருக்கிறது -*
*இதயம் நன்றாக பிரகாசித்துக் கொண்டிருக்கிறது;*
*உடலானது வெறும் கலப்பு எருஉரம் -*
*இதயம் ஒரு மலர் நிறைந்த தோட்டம்.*

**ஹ**க்கிம் சனாய் - இந்தப் பெயரானது எனக்கு தேன் போன்று, தேவாமிர்தம் போன்று இனிமையானது. சூஃபிக்களின் உலகில் ஹக்கிம் சனாய் தனித்துவம் மிக்கவர். வேறு எந்த ஒரு சூஃபியும் இந்த அளவுக்கு வெளிப்படுத்துதலின் உச்சத்தையும், ஊடுருவிச் செல்கின்ற ஆழத்தையும் அடைய முடிந்ததில்லை. கிட்டத்தட்ட செய்வதற்கு சாத்தியமில்லாததை ஹக்கிம் சனாய் செய்தவராக் இருந்தார்.

ஞானிகளின் உலகில் இருந்து இரண்டே இரண்டு புத்தகங்களை மட்டுமே பாதுகாக்க வேண்டும் என்று இருந்தால், அதன் பின்னர் நான் இந்த இரண்டு புத்தகங்களை மட்டுமே

பாதுகாப்பேன். முதல் புத்தகமானது ஜென் உலகில் இருந்து வந்துள்ள, விழிப்புணர்வு பாதை என்கின்ற சின்சின்மிங் என்னும் சோசனுடைய புத்தகமாகும். அதைப் பற்றி நான் ஏற்கனவே பேசி இருக்கிறேன்; அது ஜென்னின் சாராம்சத்தை பெற்றுள்ளது, தியானம் மற்றும் விழிப்புணர்வு பாதையைப் பெற்றுள்ளது. அடுத்த புத்தகம் ஹக்கிம் சனாயின் ஹடிகாட்டுல் ஹடிகட், தி வால்டு கார்டன் ஆஃப் ட்ரூத் என்பதாகும். சுருக்கமாக அது ஹடிகா, தோட்டம் என்று அழைக்கப்படுகிறது. இன்று நாம் அந்த புத்தகத்தினுள் தான் நுழைந்து கொண்டு இருக்கிறோம்.

அன்பு என்னும் பாதையின் முக்கிய நறுமணமாக இந்த ஹடிகா இருக்கிறது. சோசன் எப்படி ஜென்னின் ஆன்மாவை பற்றி பிடித்துக் கொண்டாரோ அதே போன்று ஹக்கிம் சனாய் சூஃபியிசத்தின் ஆன்மாவை பற்றிப் பிடித்துக் கொண்டார். இப்படிப்பட்ட புத்தகங்கள் எழுதப்படுவதில்லை, அவை பிறக்கின்றன. யாராலும் அவற்றை இயற்ற முடியாது. அவை மனதினால், மனதிலிருந்து உற்பத்தி செய்யப்படுபவை அல்ல; அவை எட்டாத தூரத்தில் இருந்து வருகின்றன. அவை ஒரு வெகுமதி. ஒரு குழந்தையோ அல்லது ஒரு பறவையோ அல்லது ஒரு ரோஜா மலரோ பிறப்பது போன்று அந்த அளவுக்கு புதிர்நிறைந்த விதத்தில் பிறக்கின்றன. அவை நம்மிடம் வருகின்றன, அவை பரிசுப் பொருள்கள்.

முடிவில், இந்த ஹடிகா, தி கார்டன் என்கிற மாபெரும் புத்தகம் எப்படி புதிர்களோடு பிறந்தது என்பதைக் காண்போம். அந்தக் கதை அபரிமிதமான அழகுடையது.

இந்தியாவை வெற்றி கொள்ளவேண்டும் என்று கசானாவின் சுல்தானாகிய பஹ்ரம் ஷா, தனது மிகப்பெரிய படையுடன் இந்தியாவை நோக்கி வந்து கொண்டிருந்தார். புகழ் பெற்ற அவரது அரசவைக் கவிஞராகிய ஹக்கிம் சனாயும் சுல்தானின் படையெடுப்பில் அவரோடு சேர்ந்து வந்துகொண்டு இருந்தார். அப்போது அவர்கள் சுற்றிலும் சுவர் எழுப்பப்பட்ட ஒரு மாபெரும் தோட்டத்தின் பக்கம் வந்தனர். ஃபிர்டௌஸ் என்பதற்கு சுவர் சூழ்ந்த தோட்டம் என்று தான் அர்த்தம். மேலும்

இந்த ஃபிர்டௌஸ் என்கிற வார்த்தையில் இருந்து தான் ஆங்கிலத்தின் பாரடைஸ் என்னும் வார்த்தை வந்தது.

அவர்கள் அவசரமாக சென்று கொண்டு இருந்தார்கள். அந்த சுல்தான் இந்தியாவைக் கைப்பற்ற ஒரு மிகப்பெரிய போர்ப்படையோடு சென்று கொண்டு இருந்தான். அவனுக்கு நேரம் இல்லை. ஆனால் ஏதோ ஒன்று அதிசயம் போல நிகழ்ந்த தால் அவன் நிற்க வேண்டியதாயிற்று; அதைத் தவிர்ப்பதற்கு எந்த ஒரு வழியும் இல்லாமல் போய்விட்டது.

அந்த தோட்டத்தில் இருந்து வந்த பாடலின் ஒலி சுல்தானின் கவனத்தை ஈர்த்தது. அவர் இசையை நேசிப்பவர், ஆனால் இதைப் போன்ற இசையை அவர் ஒரு போதும் கேட்டது கிடை யாது. அவரது அரச சபையில் மாபெரும் சங்கீத வித்துவான்களும், மிகப்பெரிய நடனக்கலைஞர்களும் இருந்தனர். ஆனால் இந்த இசையோடு ஒப்பிடும் போது அவை ஒன்றுமில்லாதவை ஆகிவிட்டன. அந்த அளவுக்கு பாட்டின் இசையும், ஒலியும், நடனமும் இருந்தது. அவர் அதை வெளியில் இருந்தபடி மட்டுமே கேட்டார், ஆனால் அவர் தனது போர்ப்படையை நிற்கும்படி ஆணையிடும்படி ஆயிற்று. அந்த அளவுக்கு அந்த இசை பரவசமாக இருந்தது. அந்த இசையும், ஒலியும், நடனமும், பாட்டும், வண்மையானதாக இருந்தது. அது திராட்சை ரசத்தை ஊற்றுவது போல் இருந்தது; அந்த சுல்தான் அதனால் குடிகாரன் போல ஆகிவிட்டான்.

இந்த விஷயமானது நிச்சயமாக இந்த உலகம் சம்பந்தப் பட்டது போன்று தோன்றவில்லை. நிச்சயமாக எல்லாவற்றையும் கடந்து உள்ள ஏதோ ஒன்று அதில் இருந்தது; வானத்தில் உள்ள ஏதோ ஒன்று இந்த பூமியை அடைவதற்கு முயற்சிப்பது போன்று இருந்தது. அறியாத ஒன்றில் இருந்து ஏதோ ஒன்று அறிந்த ஒன்றோடு தொடர்பு கொள்ள முயற்சிப்பது போன்று இருந்தது. அதைக் கேட்பதற்கு அவன் நிற்கும்படி ஆகிவிட்டது. அதில் பரவசநிலை இருந்தது. மிகவும் இனிமையாகவும் அதே சமயம் மிகவும் வேதனை நிறைந்ததாகவும் இருந்தது. அது இதயத்தை

தொடுவதாக இருந்தது. அவர் அந்த இடத்தை விட்டு நகர்ந்து செல்ல விரும்பினார். அவர் அவசரத்தில் இருந்தார்; அவர் விரைவில் இந்தியாவை சென்றடைய வேண்டியதிருந்தது. எதிரியை வெற்றி கொள்வதற்கு இதுதான் சரியான நேரமாகும். ஆனால் அதற்கு வழியில்லாமல் போய்விட்டது. அந்த இசையில் அந்த அளவுக்கு தவிர்க்கமுடியாத பலமும், விநோதமும், காந்தம் போன்று கவர்ந்து இழுக்கப்படுதலும் இருந்ததால், அவரையும் அறியாமலேயே அவர் அந்த தோட்டத்திற்குள் செல்லும்படி ஆகிவிட்டது.

அதனுள் லை-குர் என்னும் சூஃபி ஞானி இருந்தார். ஆனால், பெரும்பான்மை மக்களால் அவர் ஒரு குடிகாரர், ஒரு பைத்தியம் என்று அறியப்பட்டார். இந்த ஒட்டுமொத்த உலக வரலாற்றின், மிகப் பெரிய பெயர்களில் லை-குர் ஒன்றாகும். அவரைப் பற்றி அதிகம் தெரியவில்லை; இப்படிப்பட்ட மக்கள் தங்களுக்கு பின்னால் அநேக காலடித் தடங்களை விட்டுச் செல்வது கிடையாது. இந்த கதையைத் தவிர வேறு எதுவும் உயிர் பிழைத்து இருக்கவில்லை. ஆனால் காலம் காலமாக சூஃபிக்களின் நினைவுகளில் லை-குர்; வாழ்ந்து வந்தார். அவர் தொடர்ந்து சூஃபிக்களின் உலகை ஆட்கொண்டு வந்தார். ஏனெனில் மீண்டும் இதுபோன்ற ஒரு மனிதர் காணப்படவில்லை.

அவர் அந்த அளவுக்கு குடிபோதையில் இருந்ததால் மக்கள் அவரை குடிகாரன் என்று அழைத்ததில் தவறேதும் இல்லை. அவர் இருபத்து நான்கு மணிநேரமும் போதையில் இருந்தார், தெய்விகத்தை குடித்துக் கொண்டு இருந்தார். இந்த உலகத்தை மறந்து ஒரு குடிகாரன் போன்று நடந்தார். ஒரு குடிகாரன் போன்று யாழ்ந்தார். மேலும் அவர் கூறியவை எல்லாம் வெறுமனே பைத்தியக்காரத் தனமானவை போன்று இருந்தன. இது தான் பரவச நிலையின் மிகவும் உயர்ந்த சிகரம் போன்ற நிலையாகும். இப்போது ஒரு ஞானியின் கூற்றுகளை வேறு ஒரு ஞானியால் மட்டுமே புரிந்து கொள்ள முடியும். சாதாரண மக்களுக்கு அவரது பேச்சுக்கள் சம்பந்தம் இல்லாதவை போன்றும், வெறும் உளறல்கள் போன்றும் தெரிந்தது.

ஜிப்பரிஷ் என்னும் ஆங்கில வார்த்தையானது ஜப்பார் என்னும் சூஃபி ஞானியின் பெயரை அடிப்படையாகக் கொண்டது என்பதை அறிந்து நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். ஜப்பாரின் உளறல்களினால் தான் ஜிப்பரிஷ் என்னும் ஆங்கில வார்த்தை வந்தது. ஆனால் லை-குர்ருடன் ஒப்பிடும் போதும் ஜப்பார் ஒன்றுமில்லாதவர். அறியாதவர்களுக்கு அவரது பேச்சுக்கள் தவறானதாகவும், மதத்திற்கு புறம்பானதாகவும், பாரம்பரியம் மற்றும் பழக்கவழக்கம், நெறிமுறை மற்றும் மரியாதைக்கு எதிரானதாகவும், மொத்தத்தில் அவரது பேச்சுக்கள் எல்லாம் மதம் என்பதற்கு எதிரானதாக அறியப்பட்டு, புரிந்து கொள்ளப்பட்டன. ஆனால் அறிந்து கொண்டவர்களுக்கு அவரது பேச்சுக்கள் தூய்மையான தங்கம் என்பதைத் தவிர வேறு எதுவாகவும் இல்லை.

தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சிலருக்கு மட்டுமே அவர் கிடைப்பவராக இருந்தார். ஏனெனில் அவர் வாழ்ந்த அந்த உச்சநிலைக்கு வெகு சில மக்களால் மட்டுமே எழுந்து நிற்க முடியும். மேகங்களுக்கு அப்பால் ஒரு எவரெஸ்ட் சிகரத்தில், மனித தன்னுணர்வின் எவரெஸ்ட் சிகரத்தில் வாழ்ந்தார். அந்த மலை மீது ஏறுவதற்கு போதுமான தைரியம், போதுமான அதிர்ஷ்டமும் உள்ளவர்களால் மட்டுமே அவர் என்ன கூறுகிறார் என்பதை புரிந்து கொள்ள முடிந்தது. பொது மக்களுக்கு அவர் ஒரு பைத்தியம் போன்று இருந்தார். அறிந்து கொண்டவர்களுக்கு அவர் இந்த பிரபஞ்சத்திற்கான ஒரு வாகனமாக இருந்தார். மேலும் அவர் மூலமாக வெளிவந்தவை எல்லாம் தூய்மையாக உண்மையாக மட்டுமே இருந்தன.

லை-குர், வேண்டும் என்றே தனக்கு கெட்ட பெயரை ஏற்படுத்திக் கொண்டார். இப்போது, என்னை விடவும் அதிக கெட்ட பெயர் வாங்கிய மனிதரை நீங்கள் காணமுடியுமா? ஆனால் இது மிகவும் நல்லதாக உள்ளது. இது முட்டாள்களை அணுக விடாமல் செய்து விடுகிறது. அவரை உணர்ந்து கொண்டவர்களுக்கு மட்டுமே அவர் இப்போது தென்பட்டார். ஒரு குருவானவர், உண்மையிலேயே அவர் தனது பணியை

செய்ய விரும்பினால், அவர் தனது ஆன்மிகப் பணியை செய்ய விரும்பினால், அப்போது பொய்யாக ஆன்மிகத்தை தேடுபவர்களின் கண்களில் அவர் தென்படாமல் இருந்தாக வேண்டும்.

அதைத்தான் குர்ட்ஜியப் செய்வது வழக்கம். லை-குர் இடம் இருந்து சில விஷயங்களை குர்ட்ஜியப் கற்றுக் கொண்டு இருந்திருக்க வேண்டும். தனது சொந்த உரிமையில் குர்ட்ஜியப் ஒரு குருவாக ஆவதற்கு முன்பு அநேக வருடங்கள் அவர் சூஃபி குருமார்களுடன் வசித்தார். மேலும் இந்தக் கதையை நான் கூறி முடிக்கும் போது, குர்ட்ஜியப் மற்றும் லை-குர் ஆகியவர்களுக்கு இடையே அநேக ஒற்றுமைகள் இருப்பதை நீங்கள் காண்பீர்கள்.

''சுல்தான் பக்ரம்ஷாவின் குருட்டுத்தனத்திற்கு'' வாழ்த்துக் கூறிக் கொண்டு, திராட்சை ரசம் கொண்டு வரும்படி லை-குர் கூறினார்.

இப்போது, முதலில் இந்த மிகப்பெரிய ஞானி திராட்சை ரசம் கொண்டுவரச் சொல்கிறார். மதப்பற்றுள்ளவர்கள் இப்படி மதுரசம் குடிக்கக் கூடாது. மதுரசம் குடிப்பது என்பது இஸ்லாமியர்களின் மிகப்பெரிய பாவங்களில் ஒன்றாகும், அது குர்ஆனுக்கு எதிரானது. இது ஒரு மதத்துறவி எப்படி இருக்க வேண்டும் என்கிற மதக்கருத்திற்கு எதிரானது. ஆனால் இந்த லை-குர், ''சுல்தான் பக்ரம்ஷாவின் குருட்டுத்தனத்தை'' வாழ்த்துக் கூறி கொண்டாடுவதற்கு மதுரசம் கொண்டு வரும்படி கூறினார்.

அந்த சுல்தானுக்கு இதைக் கேட்டவுடன் பைத்தியம் பிடித்தது போல் ஆகிவிட்டது. அவரை குருடன் என்று அழைப்பதா? எனவே அவர் கோபம் கொண்டார். ஆனால் அவர் லை-குர்ரின் மாபெரும் பரவசநிலையின் தாக்கத்திற்கு உள்ளாகி இருந்தார். எனவே அவர் தனக்குள் கொதித்துக்கொண்டு இருந்தாலும் கூட அவர் எதுவும் கூறவில்லை. இன்னமும் கூட, அந்த அழகான ஒலியும், இசையும், நடனமும் அவரை ஆட்கொண்டு இருந்தன. இன்னமும் அவரது இதயத்தில் இருந்தன. அவர் வேறு ஒரு உலகிற்கு கொண்டு செல்லப்பட்டவராக இருந்தார். ஆனால் அவருடன் வந்த மற்றவர்கள் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர்.

அவரது படைத்தளபதிகளும், அரச சபையினரும் இதற்கு எதிர்ப்பு தெரிவித்தனர்.

இப்படி எதிர்ப்புகள் எழுந்தபோதும் கூட, லை-குர் பைத்தியம் போன்று சிரித்துக்கொண்டு, இப்படிப்பட்ட ஒரு முட்டாள்தனமான பயணத்தை மேற்கொள்வதால் இந்த சுல்தானை குருடர் என்று அழைப்பது தகுதியானது தான் என்று வலியுறுத்திக் கூறினார். இந்த உலகில் ''நீங்கள் எதை வெற்றி கொள்ளப் போகிறீர்கள்? எல்லாமே உங்களின் பின்னால் விடப்பட்டுவிடும். வெற்றி கொள்ளுதல் என்னும் எண்ணமே முட்டாள்தனமானது, முற்றிலும் முட்டாள்தனமானது. நீங்கள் எங்கே போகிறீர்கள்? நீங்கள் குருடர்களாக இருக்கிறீர்கள், ஏனெனில் பொக்கிஷமானது உங்களுக்குள் இருக்கிறது'' என்று அவர் கூறினார். மேலும் அவர், ''நீங்கள் இந்தியாவுக்கு செல்கிறீர்கள். உங்களது நேரத்தை வீணாக்கி கொண்டு, மற்றவர்களின் நேரத்தையும் வீணாக்கி கொண்டு செல்கிறீர்கள். ஒரு மனிதனைக் குருடன் என்று அழைப்பதற்கு இதை விட வேறு என்ன தேவை?'' என்று கேட்டார்.

''சுல்தான் ஒரு குருடர். அவர் குருடர் இல்லை என்றால் அவர் தனது வீட்டிற்கு திரும்பிச் செல்ல வேண்டும். அவர் நாட்டைப் பிடிப்பதை எல்லாம் மறந்து விடவேண்டும். சீட்டுக் கட்டுகளால் வீட்டினை உருவாக்காதீர்கள்; மணலினால் மாளிகை களை உருவாக்காதீர்கள். கனவுகளின் பின்னால் செல்லாதீர்கள்; பைத்தியமாக இருக்காதீர்கள். திரும்பிச் செல்லுங்கள்! உங்களுக்குள் உற்று நோக்குங்கள்!'' என்று கூறினார்.

கண்கள் இருக்கினற மனிதன் உள்ளுக்குள் பார்க்கிறான், குருட்டு மனிதன் வெளியில் பார்க்கிறான். கண்கள் உள்ள மனிதன் பொக்கிஷத்தை உள்ளுக்குள் தேடுகிறான். குருடான மனிதன் இந்த உலகம் முழுவதும் ஓடிக்கொண்டும், பிச்சை எடுத்துக் கொண்டும், மக்களிடம் கொள்ளை அடித்துக் கொண்டும், கொலை செய்து கொண்டும், தான் தவறவிட்டுவிட்ட ஏதோ ஒன்றினைக் கண்டுபிடித்து விடுவோம் என்கிற நம்பிக்கையில் ஓடிக்கொண்டும் இருக்கிறான். அப்படிப்பட்ட வழியில்

உங்களால் ஒரு போதும் அதைக் கண்டு பிடிக்க முடியாது ஏனெனில் நீங்கள் அதை வெளியில் தொலைத்து விடவில்லை. நீங்கள் அதை உங்களது சொந்த உயிர் உணர்வில் தொலைத்து விட்டீர்கள்; அங்கு தான் நீங்கள் வெளிச்சத்தைக் கொண்டு வர வேண்டும்.

சுல்தான் ஒரு குருடர் என்று லை-குர் வலியுறுத்திக் கொண்டே இருந்தர். லை-குர் அவரிடம், ''சுல்தான் குருடர் இல்லை எனில், அதன் பின்னர் அதற்கான ஆதாரத்தை என்னிடம் கொடுங்கள். போர்ப்படையை திரும்பிப் போகும்படி கட்டளை இடுங்கள். இப்படி நாடுகளை வெற்றி கொள்வதை எல்லாம் மறந்து விடுங்கள், மேலும் மீண்டும் ஒருபோதும் இது போன்று நாட்டைப் பிடிப்பதற்கு வேறு எங்கும் படையெடுத்துப் போகாதீர்கள். இது எல்லாம் முட்டாள்தனமானது '' என்று கூறினார். சுல்தான் இதனால் மனம் கவரப்பட்டார். ஆனால் அவர் திரும்பிப் போக முடியாமல் இருந்தார்.

இதற்கு முன்பு, மாவீரன் அலெக்ஸாண்டர் இந்தியாவை வெற்றி கொள்ள வந்த போதும் இதே சூழ்நிலை தான் நிகழ்ந்திருக்க வேண்டும். அப்போது டயோஜெனிஸ் என்னும் வேறு ஒரு ஞானி சிரித்துக்கொண்டு அவரிடம், ''ஏன்? எதற்காக நீங்கள் இப்படிப்பட்ட ஒரு நீண்ட பயணத்தில் போய்க்கொண்டு இருக்கிறீர்கள்? மேலும் இந்தியாவை வெற்றி கொள்வதன் மூலம் அல்லது இந்த மொத்த உலகத்தையும், வெற்றி கொள்வதன் மூலம் நீங்கள் என்ன பயன் அடையப் போகிறீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு அலெக்ஸாண்டர், ''இந்த ஒட்டு மொத்த உலகத்தையும் நான் வெற்றி கொள்ள விரும்புகிறேன் அப்போது தான் என்னால் இறுதியில் ஓய்வுடன், இளைப்பாறிக் கொண்டு, மகிழ்ச்சியாக இருக்க முடியும்'' என்று பதில் கூறினார்.

டயோஜெனிஸ் சிரித்தார், மேலும் அவர், ''நீ ஒரு முட்டாளாக இருக்க வேண்டும், ஏனெனில் இப்போது நான் ஓய்வெடுத்துக் கொண்டு தானே இருக்கிறேன்'' என்றார். அப்போது அவர் ஒரு சிறிய நதிக்கரையில் ஓய்வாக இளைப்பாறிக் கொண்டு இருந்தார்.

அது ஒரு அதிகாலைப் பொழுது எனவே அவர் ஆடைகள் இல்லாமல் ஆற்று மணலில் சூரியக்குளியல் எடுத்துக் கொண்டு இருந்தார். எனவே அவர், இப்போது நான் ஓய்வாக இளைப்பாறிக் கொண்டுதான் இருக்கிறேன். ஆனால் நான் இந்த உலகத்தை வெற்றி கொள்ளவில்லை. இந்த உலகினை வெற்றிக் கொள்வது குறித்து நான் நினைத்துக் கூட பார்க்கவில்லை. ஆகவே, வெறுமனே இளைப்பாறவும், ஓய்வுடன் இருப்பதற்கும் தான் நீ இந்த உலகை வெற்றி கொள்ள முயற்சிக்கிறாய் என்றால், அது முற்றிலும் அர்த்தமற்றதாகத் தெரிகிறது ஏனெனில் நான் எந்த நாட்டையும் வெற்றி கொள்ளாமலேயே இப்போது ஓய்வாக இளைப்பாறிக் கொண்டுதான் இருக்கிறேன். மேலும் இந்த ஆற்றின் கரையானது மிகவும் பெரியதாக உள்ளதால், இதில் நாம் இருவரும் சௌகரியமாக இளைப்பாறலாம். இங்கேயே ஓய்வெடு. உனது ஆடைகளை கழற்றி எரிந்து விட்டு, நன்றாக சூரிய ஒளியில் குளித்துக்கொண்டு, நாட்டை வெற்றி கொள்வதை எல்லாம் மறந்து விடு, என்று கூறினார்.அவர் மேலும், ''என்னைப் பார், இந்த உலகை வெற்றி கொள்ளாமலேயே நான் ஒரு வெற்றியாளனாக இருக்கிறேன் ஆனால் நீயோ ஒரு பிச்சைக்காரன் போல நிற்கிறாய்'' என்று கூறினார்.

இதே சூழ்நிலை தான் சுல்தான் பக்ரம் ஷா மற்றும் லை-குர் ஆகியோருக்கு இடையே இருந்திருக்க வேண்டும். மீண்டும் அதே போன்ற தொரு மனிதர். இந்த உலகில் இரண்டே இரண்டு வகையான மக்கள் மட்டுமே இருந்து வந்துள்ளனர். அறிந்த வர்கள் மற்றும் அறியாதவர்கள். எனவே அதே நாடகம் தான் மீண்டும் மீண்டும் நடக்கிறது. அதே கதை தான் மீண்டும் மீண்டும் நடத்தப்படுகிறது. சில சமயம் குருட்டு மனிதர் பாத்திரத்தை அலெக்ஸாண்டர் நடிக்கிறார் அப்போது டயோஜெனிஸ் அவரை விழிப்புறச் செய்கிறார். வேறு ஒரு நேரத்தில் லை-குர். சுல்தான் பஹ்ரம் ஷாவை விழிப்புறச் செய்வதற்கு முயற்சிக்கிறார்.

அப்போது அலெக்ஸாண்டர், ''என்னை மன்னிக்கவும். நீங்கள் சொல்வது எனக்கு புரிகிறது. ஆனால் நான் திரும்பி போக முடியாது. நான் இந்த உலகம் முழுவதையும் வெற்றி கொண்டாக

வேண்டும்; இதை வெற்றி கொள்ளாமல் என்னால் இளைப்பாற முடியாது. என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் சொல்வது சரியானது தான், நான் அதை ஒத்துக்கொள்கிறேன்.'' என்று கூறினார்.

அதே கதை தான் பஹ்ரம் ஷாவுடன் நடந்தது. அவர் வெட்கமும், கேவலமும், சோகமும் கொண்டார். ஆனாலும் கூட அவர், ''என்னை மன்னித்து விடுங்கள், நான் சென்றாக வேண்டும், நான் திரும்பி போக முடியாது. இந்தியாவை நான் வெற்றி கொள்ள வேண்டும். இந்தியாவை வெற்றி கொள்ளாத வரையில் என்னால் ஓய்வாக இருக்க முடியாது அல்லது அமைதியாக உட்கார முடியாது'' என்று கூறினார்.

அதன் பின்னர், ''ஹக்கிம் சனாய் அவர்களின் குருட்டுத் தனத்திற்கு'' வாழ்த்துகள் சொல்லப்பட்டது. ஏனெனில் பஹ்ரம் ஷாவிற்கு அடுத்தபடியாக அவர்தான் மிகவும் முக்கியமான மனிதராக இருந்தார். அவர்தான் சுல்தானில் ராஜகுரு, ஆலோசகர், ராஜகவி, அவரது அரசசபையில் ஹக்கிம் சனாய் தான் மிகவும் புத்திசாலி மனிதர், எனவே அவரது புகழ் வேறு நாடுகளுக்கும் கூட பரவி இருந்தது. அவர் ஏற்கனவே ஒரு சிறந்த கவிஞர் மேலும் எல்லாருக்கும் தெரிந்த மிகவும் புத்திக் கூர்மையான மனிதர்.

''ஹக்கிம் சனாயின் குருட்டுத் தனத்திற்கு'' வாழ்த்துகள் கூறப்பட்டதைக் கேட்டு அந்த அரசு கவி கொஞ்சம் அதிர்ச்சி அடைந்தார். ஆடிப்போய்விட்டார். ஹக்கிம் சனாய் மிகுந்த புகழும், அறிவும், நல் ஒழுக்கமும் கொண்டவராக இருந்ததால் லை -குர் அவரைக் குருடர் என்று அழைத்ததற்கு இன்னும் அதிக எதிர்ப்பு எழுந்தது. அவர் நல்ல குணநலன் உள்ள மனிதர், மிகவும் புண்ணியம் செய்பவர், மிகவும் மதப்பற்றுள்ளவர். அவரது வாழ்வில் யாரும் எந்த ஒரு தவறையும் காணமுடியாது. குறைந்த பட்சம் அவரது கண்களுக்காவது. அவர் மிக மிக தன்னுணர்வுள்ள ஒரு வாழ்க்கை வாழ்ந்து வந்தவர். அவர் மனசாட்சி உள்ள ஒரு மனிதர்.

எனவே ஹக்கிம் சனாய் பற்றி இப்படி கூறியதற்கு மேலும் அதிக எதிர்ப்பு கிளம்பியது. ஏனெனில் அந்த கல்தான் வேண்டுமானால் ஒரு குருடராக இருக்கலாம். அவர் ஒரு பேராசைக்காரர், அவர் மிகப்பெரிய ஆசைகள் உள்ளவர். எல்லாவற்றையும் தன்னுடையதாக ஆக்கிக்கொள்கின்ற ஆசையுடன் இருந்தார். ஆனால் இந்த ஹக்கிம் சனாய் பற்றி அப்படி எதுவும் சொல்லி விட முடியாது. அவர் அரச சபையில் இருந்தாலும் கூட ஏழை மனிதன் ஒருவனின் வாழ்க்கையை வாழ்ந்தவர். பஹ்ரம் ஷாவின் அரசசபையில் மிகவும் மரியாதைக்குரிய மனிதராக இருந்தாலும் கூட அவர் ஒரு ஏழையின் வாழ்க்கையை வாழ்ந்தவர். எளிமை, பணிவு மற்றும் உயரிய ஞானம் மற்றும் குண நலன்கள் கொண்டவர்.

ஆனால், தான் எதற்காக படைக்கப்பட்டோம் என்கிற அந்த நோக்கத்தை அறிந்து கொள்ளாததால் இந்த ஹக்கிம் சனாய் பற்றி தான் கூறியது மிகவும் பொருத்தமானது என்று லை-குர் பதிலடி கொடுத்தார். இன்னும் கொஞ்ச நாட்களில் அவரை உண்டாக்கியவரின் முன்பு அவர் கொண்டு வரப்பட்டு அவர் தனது சாதனைகளைப்பற்றி காட்டும்போது அவரால் சில முட்டாள் அரசர்கள் பற்றிய முட்டாள்தனமான புகழ்பாடும் பாடல்களைத் தான் காட்ட முடியும். ஏனைய மரணிப்பவர் போன்றே அவரும் தன்னைக் காட்டிக் கொள்ள முடியும்.

ஹக்கிம் சனாய் குறித்து தான் கூறியது மேலும் அதிக பொருத்தமானது. ஏனெனில் பஹ்ரம் ஷாவை விடவும் ஹக்கிம் சனாயிடம் இன்னும் அதிக எதிர்பார்ப்பு இருந்தது. ''அவரிடம் மிகப்பெரிய சக்தி உள்ளது. ஆனால் அவர் அதை வீணாக்கிக் கொண்டு இருக்கிறார். அவர் தனது கடவுளை நேருக்கு நேர் எதிர் கொள்ள முடியாது; அவர் கஷ்டப்படுவார், அவரால் பதில் கூற முடியாது. இந்த குருட்டு மனிதர் பஹ்ரம் ஷா போன்ற முட்டாள் மன்னர்கள் பற்றி தான் எழுதிய புகழ்பாடல்களை மட்டுமே அவரால் கடவுளிடம் காட்டமுடியும். எனவே அவர் இன்னும் அதிக குருடாக இருக்கிறார், முற்றிலும் குருடராக இருக்கிறார்'' என்று லை குர் கூறினார்.

அப்போது, லை குர்ரின் இந்த வார்த்தைகளை கேட்டுக் கொண்டு, அந்த பைத்தியக் கார மனிதனின் கண்களைப் பார்த்துக் கொண்டும் இருந்த ஹக்கிம் சனாய்க்கு பேரின்பமான ஏதோ ஒன்று, ஒரு சிறிய சமாதிநிலை, ஒரு திடீர் மெய்ஞ்ஞான அனுபவம் ஏற்பட்டது. அவருக்குள் உடனடியாக ஏதோஒன்று மரணமடைந்தது. மேலும் உடனடியாக ஏதோ ஒன்று பிறந்தது, முற்றிலும் புதிய ஒன்று பிறந்தது. ஒரு சிறு நொடிப்பொழுதில் அந்த மாற்றம் ஏற்பட்டு விட்டது. முன்பு இருந்த அதே மனிதராக அவர் இப்போது இல்லை. இந்த பைத்தியக்காரமனிதர் உண்மையிலேயே சனாயின் ஆன்மாவிற்குள் ஊடுருவிச் சென்று விட்டார். அவரை விழிப்படையச் செய்வதில் இந்த பைத்தியக்கார மனிதர் வெற்றி பெற்று விட்டார்.

சூஃபிக்களின் வரலாற்றில் இந்த ஒரு நிகழ்ச்சி மட்டுமே சட்டோரி அதாவது சமாதி நிலையின் ஒரு சிறிய காட்சியாக இருக்கிறது. ஜென்னில் இது போன்று அநேகருக்கு நிகழ்ந் துள்ளது. அப்படிப்பட்ட நிகழ்வுகள் பற்றி நான் உங்களிடம் ஏற்கனவே பேசி இருக்கிறேன். ஆனால் சூஃபிக்களின் உலகில் இந்த ஒரே ஒரு நிகழ்வு மட்டுமே சட்டோரியாக, திடீர் மெய்ஞ்ஞானமாக இருக்கிறது. இந்த மெய்ஞ்ஞானமானது செய்முறைகளின்படியோ அல்லது படிப்படியாகவோ நடந்தது அல்ல, ஒரு விதமான அதிர்ச்சியில், சமாதி நிலையின் ஒரு சிறிய காட்சி ஹக்கிம் சனாய்க்கு திடீரென்று நிகழ்ந்து விட்டது.

லை-குர், ஒரு அபரிமிதமான அகப்பார்வை உள்ள ஒரு மனிதராக இருந்திருக்க வேண்டும். ஹக்கிம் சனாய் தனது சிரம் தாழ்த்தி, அந்த பைத்தியக்கார மனிதரின் பாதங்களை தொட்டு வணங்கி தான் வீடு பேற்றினை பெற்றுவிட்ட அந்த மகிழ்ச்சியும் ஆனந்தக் கண்ணீர் வடித்தார். அவர் இறந்து பின்னர் மறுபடியும் பிறந்து விட்டார். அது தான் சட்டோரி எனப்படுகிறது. இறந்து பிறத்தல், அது ஒரு மறுபிறவி.

எனவே அவர் சுல்தானை விட்டு விட்டு மெக்காவிற்கு புனிதப் பயணம் சென்றார். சுல்தான் அதற்கு தயாராக இல்லை, ஹக்கிம் சனாய் செல்வதற்கு அனுமதி கொடுக்க அவர் தயாராக

இல்லை. எல்லா வழிகளிலும் அவரைத் தடுப்பதற்கு முயற்சி செய்தார்; சுல்தான் தனது ஒரே சகோதரியை சனாய்க்கு மணமுடித்து வைத்து தனது சாம்ராஜ்ஜியத்தில் பாதியை அவருக்கு கொடுப்பதற்கும் கூட தயாரானார். ஆனால் இப்போது எல்லாமே அர்த்தமற்றதாக ஆகிவிட்டது. இதைக் கேட்ட ஹக்கிம் சனாய் சிரித்துவிட்டு, ''இப்போது நான் ஒரு குருடன் அல்ல. உங்களுக்கு நன்றி, ஆனால் என் கதை முடிந்து விட்டது. இந்த பைத்தியக்கார மனிதர் என்னை ஒரே அடியில் வீழ்த்தி விட்டார்'' என்று கூறினார். அதன் பின்னர் அவர் மெக்காவிற்கு புனிதப் பயணம் சென்றார். ஏன் சென்றார்?

பின்னாளில் இது பற்றி அவரிடம் கேட்டதற்கு அவர், ''அந்த பைத்தியக்கார மனிதர் திடீரென்று தனக்கு என்ன கொடுத்தாரோ அதை வெறுமனே ஜீரணிப்பதற்கும், வெறுமனே எனக்குள் உறிஞ்சிக் கொள்வதற்கும் நான் புனிதப்பயணம் சென்றேன். ஏனெனில் அவர் கொடுத்த சக்தி அந்த அளவுக்கு தாங்கமுடியாத தாக இருந்தது! அது பொங்கி வழிவதாக இருந்தது. அது தாங்கமுடியாததாக இருந்தது. அது ஜீரணிக்கப்பட வேண்டும். எனது தகுதியை விடவும் அவர் எனக்கு மிகவும் அதிக சக்தியைக் கொடுத்து விட்டார்'' என்று விளக்கமளித்தார்.

ஆகவே அவர் தியானம் செய்யவும், அமைதியாக இருக்கவும் மெக்காவிற்கு புனிதப்பயணம் சென்றார். யாருக்கும் தெரியாத, ஒரு அனாமதேயப் பயணியாக இருப்பதற்கு சென்றார். நடக்க வேண்டிய விஷயம் நடந்து விட்டது. ஆனால் அது உள்வாங்கப்படவேண்டும். நிறைந்த வெளிச்சம் நிகழ்ந்து விட்டது. ஆனால் ஒருவர் அந்த வெளிச்சத்திற்கு தன்னை பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டும்.

மேலும் அவர் இந்த புதிய பின்புலத்திற்கு, இந்த புதிய பார்வைக்கு தன்னை பழக்கப்படுத்திக் கொண்ட பின்னர் அவர் மீண்டும் லை-குர் அவர்களைத் பார்ப்பதற்கு திரும்பி வந்து அவரிடம் இந்த ஹடிகா என்னும் புத்தகத்தை பரிசாக அளித்தார். மெக்காவில் இருந்து திரும்பி வரும் போது அந்த புத்தகத்தை தான் அவர் எழுதினார்.

அவர் தனது அனுபவத்தை, தனது சட்டோரியை அதில் ஊற்றியிருந்தார். இப்படித்தான் இந்த புத்தகம் பிறந்தது. புதிதாக ஒரு குழந்தை பிறப்பது போன்று; ஒரு விதையானது புதிர்களோடு முளைவிடுவது போன்று; ஒரு பறவைக் குஞ்சானது முட்டையில் இருந்து புதிதாக வெளிவருவது போன்று; இந்த புத்தகம் வந்தது. அதிகாலைப் பொழுதில் ஒரு மொட்டானது மலர்ந்து தனது நறுமணத்தைக் காற்றில் பரப்புவது போன்று இந்த புத்தகம் வந்தது.

ஆம். இந்த புத்தகம் எழுதப்படவில்லை, இந்த புத்தகம் பிரபஞ்சத்தில் இருந்து வந்த ஒரு பரிசுப் பொருள். லை-குர் என்னும் அந்த விநோதமான பைத்தியக்கார மனிதருக்கு ஹக்கிம் சனாயின் நன்றிக் கடன் தான் இந்த புத்தகம்.

இப்போது சூத்திரங்களைப் பார்ப்போம் :

*அவரை அடைவதற்குரிய*
*நமது பாதையில் நாம்*
*பகுத்தறிவை முயற்சித்தோம்;*
*அது வேலை செய்யவில்லை ;*
*ஆனால் நாம் அதை கைவிட்ட அந்த*
*நொடிப் பொழுதில், தடைகள் எல்லாம்*
*இல்லாமல் போய் விட்டன.*

ஹக்கிம் சனாய், ஒரு நல்ல குணம்உள்ள மதப்பற்றாளராக இருந்தார். அவர் கடவுளை அடைவதற்கான எல்லா வஃழிகளையும் கடினமாக முயற்சித்து பார்த்தார். மேலும் அவர் மிகவும் புத்திசாலித்தனம் நிறைந்தவராக, அறிவு நிறைந்தவராக, ஒரு ஞானவான் என்று அறியப்பட்டார். அவர் மிகவும் திறமைமிக்க பகுத்தறிவாளராக இருந்தார்.

பகுத்தறிவின் மூலம் கடவுளை அடைவதற்கான எல்லா வழிகளையும் அவர் முயற்சி செய்தார். ஆனால் பகுத்தறிவின் மூலம் யாரும் ஒருபோதும் கடவுளை அடைந்ததில்லை. அது கடவுளை அடைவதற்கான வாசல் அல்ல; அது நம்மைத்

தடுக்கின்ற ஒரு சுவர். பகுத்தறிவானது மேம்போக்கான விஷயங்களை அறிந்து கொள்வதில் முற்றிலும் திறமையானது. ஆனால் அதனால் ஆழத்தில் குதித்து ஆழ்ந்து செல்ல முடியாது. மேற்பரப்பில் நீந்துவது எப்படி என்று மட்டுமே பகுத்தறிவிற்கு தெரியும். வெளி உலக பயணத்தைப் பொருத்த மட்டில் பகுத்தறிவானது முற்றிலும் நல்லது, ஆனால் நமக்குள் செல்கின்ற பயணத்தைப் பொருத்தமட்டில் அது முற்றிலும் சக்தி இல்லாத தாகும்.

நீங்கள் பொருள்களைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பி னால் பகுத்தறிவானது நல்லது மேலும் போதுமானது. ஆனால் நீங்கள் தன்னுணர்வை பற்றி அறிந்து கொள்ள விரும்பினால் அது முற்றிலும் தகுதி இல்லாதது. பகுத்தறிவை அளந்து விடமுடியும், ஆனால் தன்னுணர்வை அளவிடமுடியாது. பகுத்தறிவிற்கு எடை உண்டு, ஆனால் தன்னுணர்விற்கு எடை கிடையாது, பகுத் தறிவைக் காண முடியும், ஆனால் தன்னுணர்வைக் காண முடியாது. பகுத்தறிவானது, ஐந்து புலன்களை தனது வேலைக் காரர்களாக பெற்றுள்ளது, ஆனால் தன்னுணர்வானது ஐந்து புலன்களுக்கு பின்னால் இருக்கிறது. உங்களால் அதை தொட முடியாது. உங்களால் அதை நுகர முடியாது, உங்களால் அதை ருசித்துப் பார்க்க முடியாது, உங்களால் அதைக் கேட்க முடியாது, உங்களால் அதைப் பார்க்க முடியாது. அது எல்லாற்றிற்கும் பின்னால் உள்ளது.

புலன்களின் இந்த ஐந்து ஜன்னல்களும் வெளிப்பக்கமாக திறக்கின்றன. நீங்கள் சூரிய வெளிச்சத்தைப் பார்க்கமுடியும், ஆனால் உங்களது கண்களின் மூலம் உங்களுக்குள் உள்ள ஒளியைக் காண முடியாது. பறவைகள் பாடுவதை உங்களால் கேட்க முடியும், ஆனால் உங்களது சொந்த இதயத்தின் பாடலை உங்களால் கேட்க முடியாது.

பகுத்தறிவிற்கு அளக்கின்ற திறன் உண்டு; அப்படித்தான் MATTER என்னும் ஆங்கிலவார்த்தை வழக்கத்திற்கு வந்தது. MATTER (பொருள்) என்றால் அளக்கக் கூடிய ஒன்று என்று அர்த்தமாகும். பகுத்தறிவு அளவிடக்கூடியது. எனவே

பகுத்தறிவின் பொறிக்குள் சிக்கிக் கொள்பவை எல்லாம் பொருள்கள் என்று அழைக்கப்படுகின்றன.

ஆனால் அளக்க முடியாத விஷயங்கள் இங்கு உள்ளன. அன்பை அளப்பது எப்படி? தன்னுணர்வை அளப்பது எப்படி? இங்கே அளக்க முடியாதது உள்ளது. ஆனால் அதை அறிந்து கொள்வதற்கு நீங்கள் உங்களது பகுத்தறிவைத் தான் பயன்படுத்துவேன் என்று வலியுறுத்தினால், அதன் பின்னர் நீங்கள் அந்த அளவிடமுடியாததைப் பற்றி அறியாதவராகவே இருந்து விடுவீர்கள்; அதன் பின்னர் நீங்கள் கடவுளை அறியாமையிலேயே இருந்து விடுவீர்கள். **அவரை அடைவதற்குரிய பாதையில் நாம் பகுத்தறிவை முயற்சித்தோம். அது வேலை செய்யவில்லை...** என்று ஹக்கிம் சனாய் கூறுகிறார். அதனால் வேலை செய்ய முடியாது. உள் உறைந்துள்ள அளவில் அது போதுமானது அல்ல. அறியவே முடியாத ஒன்றினைப் பற்றி தர்க்க அறிவினால் முடிவெடுக்க முடியாது. அறிந்தவற்றின் உலகில் மட்டுமே தர்க்க அறிவானது நகர்ந்து செல்கிறது; பகுத்தறிவினால் அறியாத ஒன்றினுள் தாவிக் குதிக்க முடியாது.

இதை நீங்கள் கவனித்தது கிடையாதா? அறிந்த ஒன்றினைப் பற்றித்தான் உங்களது மனமானது நினைக்க முடியும். அறியாத ஒன்றினைப் பற்றி நீங்கள் எப்படி நினைப்பீர்கள்? அது அறியாத ஒன்று என்றால், அதைப் பற்றி நினைப்பதற்கு வழியே கிடையாது. நினைத்தல் என்பது அறிந்ததை அடிப்படையாகக் கொண்டது. அதனால் தான் நினைத்தல் என்பது திரும்பத்திரும்ப ஒரே விஷயத்தை நினைக்கிறது, அது ஒரு வட்டப்பாதையில் செல்கிறது. ஆம், நினைத்தல் என்பது அறிந்த ஒன்றினை நேர்த்தியானதாக ஆக்கிக் கொண்டே செல்லும், அந்த விஷயத்தை அது மேலும் மேலும் அதிகமாக நேர்த்தியானதாக ஆக்கிக் கொண்டே போகும், அறிந்ததை அது பளபளப்பாக்கும், ஆனால் அதனால் ஒருபோதும் அறியாத ஒன்றினை அறிந்து கொள்ள முடியாது.

அதிக பட்சமாக அது அறியாத ஒன்றினைப் பற்றி ஏதாவது யூகிக்க முடியும். ஆனால் யூகம் என்பது யூகம் தான், அது

ஒருபோதும் நிச்சயமானதாக ஆக முடியாது. அது ஒருபோதும் உங்களுக்கு நம்பிக்கையைக் கொடுக்காது, அது திடநம்பிக்கையாக ஆக முடியாது, ஏனெனில் உங்களுக்குள் அடி ஆழத்தில் அது ஒரு யூகம் தான் என்பதை நீங்கள் அறிவீர்கள். அதுவாக இருந்தாலும் இருக்கலாம் அல்லது அதுவாக இல்லாமலும் போகலாம். வாழ்க்கை என்னும் கோயிலைக் கட்டுவதற்கான ஒரு பாறையாக அது இருக்க முடியாது. ஏனெனில் அது சந்தேகமானதாகவே இருக்கிறது.

ஒவ்வொரு யூகமும் சந்தேகத்தில் தான் வேர் ஊன்றி இருக்கிறது. ஒருவேளை அப்படி இருந்தாலும் இருக்கலாம் அல்லது ஒருவேளை அப்படி இல்லாமலும் போகலாம். மேலும் இந்த இயற்கையில் மூன்று அடுக்குகள் உள்ளன. அதில் ஒன்று அறிந்ததாக உள்ளது. இது மிகவும் சிறிய, ஒளி நிறைந்த பகுதி. நாம் அறிந்து கொண்ட இந்த பகுதி மிகவும் சிறியது. அதன் பின்னர் இதைச் சுற்றிலும் அறியாதது எல்லையற்று உள்ளது. அது மிகப்பெரிய இருள் நிறைந்த இரவு போன்று உள்ளது. ஆனால் இந்த அறியாத ஒன்றினைப்பற்றி நாம் சில யூகங்களைக் கொள்ள முடியும், நாம் கண்டுபிடிக்க முடியும். ஏனெனில் அறிந்ததும், அறியாததும் தன்மையில் வெவ்வேறானவை அல்ல. இன்று நாம் அறிந்து கொண்டது, நேற்று நாம் அறியாத ஒன்றாக இருந்தது. மேலும் இன்று நமக்கு தெரியாமல் இருக்கின்ற ஒன்று நாளை நாம் அறிந்து கொள்கின்ற ஒன்றாக ஆகலாம். ஆகவே அறிந்ததும், அறியாததும் தொடர்புடையவை, அவை ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை.

அறிவியலானது இந்த இரண்டு உலகத்தில் மட்டுமே வாழ்கிறது; அறிந்தது மற்றும் அறியாதது ஆகிய உலகில் மட்டுமே வாழ்கிறது. நீங்கள் உங்களது பகுத்தறிவை, உங்களது யூகத்தை, உங்களது கண்டுணர்தலை நீங்கள் அறிந்த ஒன்றில் அடிப்படையில் செய்கிறீர்கள். அப்போது தான் உங்களால் அறியாத ஒன்றில் உள்ள ஏதோ ஒன்றினைக் கண்டு பிடிக்க முடியும், மேலும் நீங்கள் அந்த இருள் நிறைந்த பகுதிக்குள் சென்று அதன் எல்லைக்குள் உள்ளவற்றில் கொஞ்சம் வெளிச்சத்தை ஏற்படுத்த முடியும்.

ஆனால் இங்கு மூன்றாம் பகுதி என்னும் வேறு ஒன்றும் உள்ளது. அது அறியவே முடியாதது. தர்க்க அறிவானது அறிந்த ஒன்றில் மட்டுமே முற்றிலும் நிறைவுடன் செயல்பட முடியும்; யூகித்தல் என்னும் பெயரில் அதனால் அறியாத ஒன்றினுள் அரை குறையாக மட்டுமே செயல்பட முடியும், ஆனால் தர்க்க அறிவினால் இந்த அறியவே முடியாத ஒன்றினுள் செயல்படவே முடியாது. இந்த அறியவே முடியாத ஒன்றானது, தர்க்க அறிவிற்கு அப்பால், பகுத்தறிவிற்கு அப்பால், கற்றறிவுக்கு அப்பால், இந்த மனதிற்கு அப்பால் இருக்கிறது. அந்த அறியவே முடியாத ஒன்று தான் கடவுள் என்பதாக இருக்கிறது.

**அவரை அடைவதற்குரிய நமது பாதையில் நாம் பகுத்தறிவை முயற்சித்தோம்: அது வேலை செய்யவில்லை; ஆனால் நாம் அதைக் கைவிட்ட அந்த நொடிப் பொழுதில், தடைகள் எல்லாம் இல்லாமல் போய்விட்டன.** சரணாகதி அடைவதில், அவரது போக்கில் விட்டுவிடுவதில் தான் கடவுள் நிகழ்கிறார். நீங்கள் அவரை தேடிக் கண்டு பிடிக்க முடியாது. எல்லா தேடுதல்களும் பகுத்தறிவாகவே இருக்கும். எல்லா தேடுதல்களும் மனதை அடிப்படையாகக் கொண்டதாகவே இருக்கும். மனம் என்பது மாபெரும் தேடுதலாளன், எல்லாத் தேடுதல்களும், விசாரணைகளும் ஆர்வக் கோளாறை அடிப்படையாகக் கொண்டே இருக்கிறது.

உங்களது தேடுதலின் பின்னால் அடி ஆழத்தில் "நான் அதை அறிந்து கொண்டவன் ஆக விரும்புகிறேன்" என்கிற உங்களது ஆணவம் உள்ளது அறியாமல் இருப்பது உங்களைக் காயப்படுத்துகிறது. உங்களது ஆணவமானது தன்னை திருப்திப்படுத்த விரும்புகிறது. ஆனால் இந்த ஆணவத்தின் மூலம் கடவுளை அறிய முடியாது ஏனெனில் ஆணவம் தான் அதற்கு இடையூறாக உள்ளது. நாம் இந்த பிரபஞ்சத்தில் இருந்து வேறானவர்கள் அல்லர், ஆனால் இந்த நான் என்னும் தன்முனைப்பு தான் நாம் தனியானவர்கள் என்கிற ஒரு மாயத்தோற்றத்தை நமக்கு கொடுக்கிறது. நான் என்னும் தன்முனைப்பிற்கு வெறுமனே இந்த பிரபஞ்சத்திலிருந்து நாம் தனியானவர்கள் என்று கற்பனை செய்தல் என்றுதான் அர்த்தம்.

இப்படிப்பட்ட தனியானவன் என்கிற கற்பனையை கைவிட்டு விடுவதுதான் சரணாகதி என்பதாகும். அதன் போக்கில் விட்டுவிடுதல் என்பதற்கு ''நான் என்று எதுவும் இல்லை'' என்று அர்த்தம். கடவுளின் போக்கில் விட்டுவிடுதல் என்பதற்கு, ''நான் கரைந்து போய் விட்டேன், எல்லாத் தேடுதல்களையும், விசாரணைகளையும் நான் கைவிட்டு விட்டேன், நான் வெறுமனே அப்படியே இருந்து கொண்டு கடவுளுக்கு கிடைக்கின்றவனாக இருப்பேன்'' என்று அர்த்தமாகும். ஆனால் அதன்பிறகு கடவுளை அடைதல் என்பது நிகழ்கிறது.

இப்படித்தான் சனாய்க்கு நிகழ்ந்தது. லை-குர் என்கிற அந்த மனிதரின் கண்களை உற்றுப்பார்த்த போது, அவரது விநோதமான வார்த்தைகளை காதால் கேட்டபோது, விநோதமான அந்த இசையைக் கேட்டபோது, அவரது பிரசன்னத்தை உணர்ந்த போது, அது நிகழ்ந்தது. சனாய் தனது வாழ்நாள் முழுவதும் அதற்காக செயலாற்றினார். ஆனால் அவரால் நெருங்கி வரமுடியவில்லை. ஆனால் லை-குர்ரின் பிரசன்னத்தில், எங்கிருந்தோ அது தானாகவே நிகழ்ந்து விட்டது.

''ஹக்கிம் சனாய் நீ ஒரு குருடன்!'' என்று லை-குர் கூறியது. அவருக்கு ஒரு அதிர்ச்சியாக இருந்திருக்க வேண்டும். யாரும் சனாயிடம் இப்படி கூறியது இல்லை. அவருக்கு மரியாதை கொடுத்தார்கள். அவர் ஞானவான் என்று நினைத்தனர். அரசர்களும், சக்கரவர்த்திகளும் கூட அவரது ஆலோசனையைக் கேட்டனர். ஆனால் இந்த பைத்தியக்காரன், இந்த பிச்சைக்காரன், அவரை குருடன் என்று அழைக்கிறார்! எனவே சனாய் அதிர்ச்சி அடைந்திருக்க வேண்டும். அந்த அதிர்ச்சியில் அவரது மனம் நின்றிருக்க வேண்டும். இது கிட்டத்தட்ட ஒரு மின்சார அதிர்ச்சி போன்று இருந்தது.

ஒரு குருவின் சக்தியானது உங்களுக்கு கிடைக்கும் படியாக நீங்கள் இருந்தால், அது ஒரு மின்சார அதிர்ச்சி போன்று தான் இருக்கிறது. அது உங்களது மனதைச் சுக்குநூறாக ஆக்கிவிடும். அது ஒரு குழப்பத்தை உருவாக்கும். ஒரு அழகான குழப்பத்தை, பிரபஞ்சத்து நட்சத்திரங்கள் ஒரு பெரும் குழப்பத்தினால்

உருவானதைப் போன்ற ஒரு குழப்பத்தை உருவாக்கும். லை-குர்ரின் தாக்கத்தினால் இப்படிப்பட்டதொரு குழப்பம் சனாய்க்கு உருவாக்கப்பட்டது.

சனாய் என்கிற மனிதர் மறைந்துவிட்டார். ஒரு நொடிப் பொழுது அவர் இல்லாமல் போய்விட்டார். குருவும், அவரது பிரசன்னமும், மேலும் அந்த குருவிடம் இருந்து வந்த அந்த மாபெரும் அலைகளும் மட்டுமே இருந்தன. அவர் அந்த அலையில் மூழ்கிவிட்டார். அது குருவின் போக்கில் விடப்பட்ட ஒரு தருணமாக இருந்தது. எனவே கடவுளானவர் லை-குர்ரின் வடிவத்தில் வந்தார். லை-குர் என்னும் புல்லாங்குழலின் மூலம் கடவுள் வந்தார்.

*............... ஆனால், நாம் அதைக் கைவிட்ட*
*அந்த நொடிப் பொழுதில் தடைகள்*
*எல்லாம் இல்லாமல் போய்விட்டன.*

*அவர் தன்னை நமக்கு அறிமுகம் செய்தார்............*

நீங்கள் இயற்கையின் போக்கில் உங்களை விட்டு விடும் போது கடவுள் வருகிறார். மனிதன் ஒருபோதும் கடவுளைச் சென்றடைவதில்லை. சூஃபியிஸத்தின் அடிப்படைகளில் இதுவும் ஒன்றாகும். கடவுள் தான் எப்போதும் மனிதனை வந்தடைகிறார்.

உங்களை அடைவதற்கு கடவுள் இடைவிடாமல் முயற்சித்துக் கொண்டு இருக்கிறார் ஆனால் நீங்கள் தான் அதை அனுமதிப்பது இல்லை. நீங்கள் அந்த அளவுக்கு மூடிக்கொண்டு இருக்கிறீர்கள், நீங்கள் உங்களது ஜன்னல்களை ஒருபோதும் திறந்து வைப்பதில்லை. நீங்கள் மிகவும் இறுக்கமாக மூடிக் கொண்டு இருக்கிறீர்கள்,உங்களுக்குள் எதுவுமே நுழைய முடியாது; காற்று கூட புக முடியாதபடிக்கு நீங்கள் மூடிக்கொண்டு இருக்கிறீர்கள். தாய் தனது குழந்தையைத் தேடுவதைப் போன்று, கடவுள் எல்லா வழிகளிலும் உங்களை அடைவதற்கு முயற்சி செய்து கொண்டு இருக்கிறார். ஆனால் நீங்கள் தான் அவருக்கு கிடைப்பதில்லை, நீங்கள் இருப்பதில்லை. நீங்கள் அதிக பயத்துடனும் அதிக பாதுகாப்புடனும் இருக்கிறீர்கள்.

இது தினந்தோறும் நடக்கிறது. நான் உங்களுக்கு சந்நியாச தீட்சை கொடுக்கும் போது நான் உங்களை அடைவதற்கு முயற்சி செய்கிறேன். ஆனால் மிகவும் அபூர்வமாக ஒரு சிலர் மட்டுமே தங்களைத் திறந்து கொண்டு இருக்கிறார்கள். உங்களது இதயத்தை அடைவதற்கு நான் மிகவும் அபூர்வமாகத் தான் வழிகளைக் காண்கிறேன். ஆனால் அது நடந்து விடும் போது, உடனடியாக நீங்கள் பழைய மனிதராக இருப்பதில்லை. இது சில சமயம் நடக்கிறது. ஒரு மனிதர், பாதுகாப்பு என்பது இல்லாமல், திறந்த இதயத்துடன், தனது பாதுகாப்பு கவசங்களை எல்லாம் கைவிட்டு விடும் போது அவரை எப்போதும் நாங்கள் சுமந்து கொண்டு செல்கின்ற நிலை கூட நடந்துள்ளது.

நாம் மக்களைக் கண்டு அதிகம் பயப்படுகிறோம், நாம் அன்பைக் கண்டு அதிகம் பயப்படுகிறோம், நாம் அடுத்தவர் களைக் கண்டு அதிகம் பயப்படுகிறோம், அதனால் நாம் கொஞ்சம் தூரம் விலகியே இருக்கிறோம். இது ஒரு பழக்கமாக ஆகிவிட்டது. எனவே நீங்கள் ஒரு குருவிடம் வரும்போதும் கூட அந்த பழக்கம் வந்து விடுகிறது.

இரண்டு இரவுகளுக்கு முன்பு ஒரு சந்நியாசி இளைஞன் ஒருவன் தனது வீட்டிற்கு திரும்பி போவதற்கு முன்பு இங்கு வந்தான். நான் அவனிடம், ''நீ எப்போது போகிறாய்?'' என்று கேட்டேன். அவனால் பதில் சொல்ல முடியவில்லை. அதன் பின்னர் நான் அவனிடம், ''நீ எப்போது திரும்பி இங்கு வருவாய்?'' என்றும் கேட்டேன். அதற்கும் அவன் பதில் கூறவில்லை. அதன் பின்னர் நான் அவனிடம், ''உனது தலையைத் தொட வேண்டும், எனவே கொஞ்சம் நெருங்கி வா,'' என்று கூறினேன். அவன் என்னிடம் நெருங்கி வரக் கூட முடியாத அளவுக்கு முற்றிலும் தன்னை மூடிக்கொண்டு இருந்தான். அவன் எந்த விதத்திலும் தன்னை எனக்கு திறந்து காட்டவில்லை.

இவை எல்லாம் நீ எங்காவது உங்களைத் திறந்து காட்டுகிறாயா என்பதை கண்டு கொள்வதற்கான வழிகள். நீ இன்று போகிறாயா அல்லது நாளை போகிறாயா என்பது ஒரு பொருட்டல்ல. நீ உனது இதயத்தை கொஞ்சமாவது திறப்பாய்

என்பதற்காகத் தான் இப்படி பேசுகிறேன்; உன்னை என்னோடு ஒன்று கலப்பதற்கு மாற்றுவதற்காகத் தான் நான் உன்னிடம் உரையாடல் கொள்கிறேன்.

ஆனால் அவன் எதையும் கூறுவதற்கு தயாராக இல்லை. உனக்கு எதுவும் சொல்ல விரும்பவில்லை என்றால் அதில் தவறேதும் இல்லை; அது முற்றிலும் நல்லது. மௌனம் அளவு கடந்த அழகுடன் இருக்க முடியும். ஆனல் அந்த மௌனமானது திறந்ததாக இருக்க வேண்டும், அப்போது மட்டுமே அது அழகானது; இல்லையெனில் அது ஒரு அசிங்கமான விஷயமாக ஆகிவிடும். அவன் ஒரு விஷயத்தை கூறுவதற்கு பயப்பட்டான், ஒரு வார்த்தை கூறுவதற்கு கூட அவன் பயப்பட்டான், ஏனெனில் அவன் ஒரு வார்த்தை கூறிவிட்டால் போதும் நான் அவனுக்குள் நுழைவதற்கான வழியைக் கண்டு கொள்ள முடியும். குறைந்த பட்சம் ஒரு வார்த்தையைக் கூறுவதற்காகவாவது அவன் தன்னைக் கொஞ்சமாவது திறந்தாக வேண்டும்.

அவனது மௌனம் திறந்த ஒன்றாக இருந்திருந்தால் அதில் எந்தத் தவறும் இருக்காது, அது அபரிமிதமான அழகுடையதாக இருந்திருக்கும். ஆனால் அது திறந்த மௌனம் அல்ல, இல்லையெனில் அவன் நெருங்கி வந்திருப்பான். நான் அவனைத் தொடுவதற்கு விரும்பினேன் ஏனெனில் வார்த்தைகள் அவனைச் சென்றடையவில்லை என்றால், எனது பிரசன்னமாவது அவனைச் சென்றடைய முடியும் அல்லவா. ஆனால் அவன் அதையும் கூட அனுமதிக்க வில்லை.

கடவுள் உங்களை அடைவதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறார். மேலும் நீங்கள் ஒரு குருவின் சந்நிதானத்தில் இருக்கும்போது கடவுள் உங்களை வந்தடைவதற்கு மிகவும் கடினமாக முயற்சித்துக் கொண்டு இருக்கிறார்.

**கனிந்த அன்பினால் அவர் தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டார்....** என்று சனாய் கூறுகிறார். சனாய் கடவுளைத் தேடி செல்லவில்லை. ஒரு நாட்டினை வெற்றி கொள்வதற்கான பயணத்தில் அவர் அரசருடன் போய்க் கொண்டு இருந்தார்.

ஆனால் அது வானத்தில் எங்கிருந்தோ நடந்துவிட்டது. அந்த பாடலும், அந்த நடனமும், லை-குர்ரின் இசையும் அவரை அறியாமலேயே அவரைப் பிடித்து ஆட்கொண்டு விட்டது. நீங்கள் வெறுமனே அங்கு பார்த்தால் அந்த இடத்தில் அநேக மக்கள் இருந்தனர். சுல்தான் கூட அங்கு இருந்தார். ஆனால் அவர் அதை தவறவிட்டு விட்டார்; அவர் திறந்த இதயத்துடன் இல்லை. ஆனால் ஹக்கிம் சனாய் அதை பெற்றுவிட்டார். அவர் திறந்த இதயத்துடன் இருந்தார், அது நடப்பதற்கு அவர் அனுமதித்து விட்டார், அவர் அதற்கு எதிர்ப்பேதும் தெரிவிக்கவில்லை.

*கனிந்த அன்பினால் அவர் தன்னை*
*நமக்கு அறிமுகம் செய்தார்......*

இதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் தகுதியானவர் என்பதால் அவர் உங்களிடம் வரவில்லை. நீங்கள் என்ன மதிப்பை பெற்றிருக்கிறீர்கள்? நீங்கள் அந்த மதிப்பை சம்பாதித்ததாலோ அல்லது அதற்கு நீங்கள் தகுதியானவர் என்பதாலோ அல்ல, ஆனால் அவர் கனிந்த அன்புடையவர் என்பதால் மட்டுமே அது நடந்தது. அவர் ரகீம், அவர் ரஹ்மான், அவர் கருணை மிக்கவர், இவை எல்லாம் கடவுளுக்குத்தான் சூஃபி பெயர்கள். ரகீம் என்றால் கருணை மிக்கவர் என்று அர்த்தம். ரஹ்மான் என்றால் கருணை, இரக்கம், அன்பு உள்ளவர் என்று அர்த்தம். அவரது கனிந்த அன்பினால் அவர் உங்களிடம் வருகிறார். உங்களது முயற்சியால் அவர் வரவில்லை, அவர் நீங்கள் சரணாகதி அடைந்ததால் வருகிறார்.

*அது அல்லாமல் நம்மால் அவரை*
*எப்படி அறிந்து கொள்ள முடியும்?*

''அவரை அறிந்து கொள்ளவேறு வழி இல்லை என்று என்னால் இப்போது கூறமுடியும். நான் எல்லா வழிகளிலும் கடினமாக முயற்சி செய்து பார்த்து விட்டேன், பகுத்தறிவுடன் கூடிய எல்லா வழிகளிலும் நான் அவரைத் தேடிப் பார்த்து விட்டேன்'' என்று சனாய் கூறுகிறார். நீங்கள் பகுத்தறிவை பற்றிக் கொண்டு இருந்தால் கூடிய விரைவில் நீங்கள் கண்டிப்பாக நாஸ்திகராக ஆகிவிடுவீர்கள் அல்லது நீங்கள் ஒரு

போலித்தனமானவராக ஆகிவிடுவீர்கள். இப்படிப்பட்ட மக்கள் தான் உங்களைச் சுற்றிலும் இருக்கின்றனர்.

மனம் மற்றும் பகுத்தறிவின் மூலமாக கடவுளை அடைவதற்கு முயற்சித்துக் கொண்டு இருப்பவர்கள் நிச்சயமாக இந்த இரண்டு பிரிவுகளில் வருவார்கள். ஒன்று அவர்கள் போலியானவர்களாக ஆகிவிடுவார்கள், மதவாதிகள் என்று தங்களை அழைத்துக் கொள்வார்கள். இத்தகைய மக்களை நீங்கள் தேவாலயத்திலும், கோயிலிலும், மசூதிகளிலும், குருத்துவாராக்களிலும், குர் ஆன் மற்றும் கீதை மற்றும் பைபிளை படித்துக் கொண்டு இருப்பார்கள். இவர்கள் தான் மதவாதிகள் என்று அழைத்துக் கொள்ளும் போலித்தனமானவர்கள். அவர்கள் நேர்மையற்றவர்கள், அவர்கள் இறைவனைக் காணவில்லை, ஆனால் தாங்கள் தோல்வி அடைந்துவிட்டதைக் கூட ஏற்றுக் கொள்வதற்கு அவர்கள் தயாராக இல்லை. அவர்களது ஆணவத்தின் தோல்வியை அவர்களால் ஏற்றுக் கொள்ள முடிவதில்லை, எனவேதான் அவர்கள் கடவுளை நம்புவதற்கு ஆரம்பித்துவிட்டனர். அவர்கள் கடவுளைக் கண்டு கொள்ளவில்லை. ஆனால் இன்னமும் கூட அவர்கள் கடவுளை நம்புகின்றனர். இந்த நம்பிக்கை பொய்யானது, இது ஒரு மனிதனை போலித்தனமானவனாக ஆக்கி விடுகிறது.

அதனால் தான் மதவாதிகள் எல்லாரும் அசிங்கமானவர்களாகவும், போலித்தனமான மக்களாகவும் இருக்கின்றனர். தங்களின் மேற்பரப்பில் ஒரு மாதிரி இருக்கின்றனர் ஆனால் தங்களது அடி ஆழத்தில் அவர்கள் முற்றிலும் வேறுபட்ட ஒருவராக இருக்கின்றனர். அவர்களுக்குள் அடி ஆழத்தில் ஆயிரத்தோரு சந்தேகங்கள் உள்ளன. ஆனால் வெளியே வெறுமனே வண்ணம் தீட்டப்பட்ட ஒரு நம்பிக்கை உள்ளது. அந்த நம்பிக்கை அவர்களது ஆன்மாவில் இருந்து வரவில்லை; அது அவர்களது வாழ்க்கையின் ஒரு அங்கமாக இல்லை, அது அவர்களுக்குள் வளரவில்லை, இருப்பியல் அனுபவத்தின் அடிப்படையில் அது இல்லை. பயத்தினால் தான் அவர்கள் நம்புகின்றனர், விரக்தியினால் தான் அவர்கள் நம்புகின்றனர்.

அதற்கு அப்பால் அவர்கள் தங்களின் விசாரணையை செய்ய முடியாததால் அவர்கள் வெறுமனே நம்புகின்றனர். அவர்கள் களைப்படைந்து விட்டனர், அவர்கள் தைரியத்தை இழந்து விட்டனர். அவர்கள் இதயம் உடைந்து போய் விட்டனர். ''நாங்கள் முயற்சி செய்தோம் ஆனால் நாங்கள் கண்டு கொள்ளவில்லை. எனவே கடவுள் என்பவர் இல்லாமலும் கூட போகலாம்'' என்று கூறுமளவுக்கு அவர்கள் உண்மையானவர்களாகவும் கூட இல்லை.

அவர்கள் தான் நாத்திகர்கள் என்னும் அடுத்த பிரிவினர். நாத்திகர் குறைந்தபட்சம் உண்மையானவராக இருக்கிறார், அவர் குறைந்தபட்சம் நேர்மையானவராகவும், உண்மையானவராகவும் இருக்கிறார். ஆத்திகர் அந்த அளவுக்கு நேர்மையானவராகக் கூட இல்லை. ஆத்திகர் இரட்டை வேடம் போடுகிறார், அவர் நேர்மையை நம்புகிறார், ஆனால் அவர் நேர்மை இல்லாமையில் இருக்கிறார்.

இப்போது இந்த உலகம் முழுவதும் உள்ள உங்களது தேவாலயங்களில், நீங்கள் நேர்மையானவராக இருந்து கொண்டு கடவுளை நம்ப வேண்டும் என்று உங்களது பாதிரியார்கள் போதித்துக் கொண்டு உள்ளனர். ஆனால் இந்த இரண்டு விஷயங்களும் ஒரு போதும் ஒன்று சேர்வது சாத்தியப்படாது என்பதை நீங்கள் எப்போதாவது சிந்தித்தது உண்டா? நேர்மையாக இருங்கள், கடவுளை நம்புங்கள்: இது இரட்டை வேடம். நீங்கள் ஒரு முரண்பாட்டை உருவாக்குகிறீர்கள். ஒரு மனிதர் நேர்மையானவராக இருக்கவேண்டும் என்றால் அவர் கடவுளை நம்ப முடியாது, ஏனெனில் நேர்மையான ஒரு மனிதனுக்கு நம்பிக்கை என்பது என்ன அர்த்தத்தை கொடுக்கும்? ஒன்று உங்களுக்கு தெரிந்திருக்கவேண்டும் அல்லது உங்களுக்கு தெரியாமல் இருக்க வேண்டும். கடவுள் இருக்கிறார் என்று உங்களுக்கு தெரிந்தால் அதன் பிறகு நீங்கள் அவரை நம்ப வேண்டிய அவசியம் கிடையாது, நீங்கள் ஏற்கனவே அதை அறிந்தவர். நீங்கள் அதை அறிந்து கொள்ளவில்லை எனில், உங்களால் எப்படி அவரை நம்ப முடியும்?

ஒரு மனிதர் நேர்மையானவராக இருக்கவேண்டும் என்றால் அவரால் நம்ப முடியாது, அவர் நம்ப வேண்டிய அவசியமும் கிடையாது. ஆனால் ஒரு மனிதர் நம்ப வேண்டும் என்று இருந்தால், அதன் பின்னர் அவர் நேர்மையானவராக இருக்க முடியாது. இப்போது நீங்கள் ஒரு மனிதனின் உணர்வில் ஒரு முரண்பாட்டினை உருவாக்கி விட்டீர்கள். இது தான் ஒவ்வொருவரையும் ஒரு போலித்தனமானவராக தரம் தாழ்த்தி விடுகிறது. அதன் பின்னர் நீங்கள் இரண்டாமவர் அல்லது அநேகராகக் கூட ஆகிவிடுகிறார்கள். அதன் பின்னர் நீங்கள் உங்களுக்குள் ஒருங்கிணைப்பை இழந்து விடுகிறீர்கள். நீங்கள் இரட்டையர் ஆகிவிடுகிறீர்கள். நீங்கள் சொல்வது ஒன்றும், செய்வது மற்றொன்றுமாக ஆகி விடுகிறீர்கள், நீங்கள் ஒன்றைச் செய்துவிட்டு அதற்கு வேறு அர்த்தத்தை கொள்கிறீர்கள். நீங்கள் ஒருபோதும் ஒன்றானவராக இல்லை. மேலும் நீங்கள் ஒன்றானவராக இல்லாதபோது உங்களால் ஒரு போதும் பேரானந்தத்தில் இருக்க முடியாது. ஒன்றுபட்டு இருத்தல் என்பதால் விளைகின்ற ஒரு உபபொருள் தான் பேரானந்தமாகும்.

பகுத்தறிவானது அவரைக் காணமுடியாது. உங்களது ஆன்மாவில் பகுத்தறிவு மட்டுமே வாசல் அல்ல, உங்களது ஆன்மாவில் ஆழ்ந்த வாசல்கள் உள்ளன. இதயம் பற்றி நீங்கள் உணர்ந்தது கிடையாதா? இதயத்தின் துடிப்பை உங்களால் உணர முடியாதா? இதயத்தின் மூலம் நடக்கின்ற எதையும் நீங்கள் கண்டதில்லையா? நீங்கள் ஒரு தாமரை மலரைப் பார்த்து அதன் அழகை உணரும்போது, அது பகுத்தறிவா? அந்த மலர் அழகாக உள்ளது என்று பகுத்தறிவானது நிரூபிக்கமுடியுமா?

அழகு என்றால் என்ன என்று கூட பகுத்தறிவினால் விவரிக்க முடியாது. பகுத்தறிவுள்ள ஒரு மனதிற்கு அழகு என்பதே கிடையாது. ஆனால் அழகு என்றால் என்ன என்று உங்களுக்கு தெரியும். மேலும் நீங்கள் அதைப் பார்க்கும் போது அதனால் பெரு மகிழ்ச்சி அடைகிறீர்கள். பகுத்தறிவுள்ள மனமானது அழகு என்று ஒன்று இல்லை என்று கூறுகிறது. அது வெறுமனே ஒரு கற்பனை, ஒரு கனவு, ஒரு திரையிடல் என்று கூறுகிறது.

இரவின் முழு நிலவு - இது ஒரு கற்பனையா? மனதை மயக்குகின்ற அதன் கம்பீரமானது வெறுமனே உங்களது மனதின் திரையிடலா? அப்படி இருக்க முடியாது. ஏனெனில் மனம் என்கிற ஒன்று இல்லாத அந்தக் கடலும் கூட முழு நிலவால் பாதிக்கப் படுகிறது; எனவே அது அப்படி இருக்கமுடியாது. சூரிய உதயம் என்பது வெறுமனே மனம் மற்றும் அந்த மனதின் திரையிடலாக இருக்க முடியாது.

அழகு என்பது இருக்கிறது. ஆனால் பகுத்தறிவினால் அதை அணுகுவதற்கு வழிதான் இல்லை. அது இதயத்தில் இருந்து உணரப்படுகிறது. நீங்கள் அழகை உணர்ந்ததில்லையா? காதல் இருக்கிறது. அதுவும் கூட பகுத்தறிவின் மூலம் வருவதில்லை. அதுவும் கூட இதயத்தின் மூலம் உணரப்படுகிறது. நீங்கள் காதலில் விழும் போது, அதை உங்களால் பகுத்தறிவுடன் தீர்மானிக்க முடியுமா? காதல் என்றால் என்ன என்று உங்களால் கூற முடியுமா? இது வரை யாரும் அதைக் கூறியது இல்லை.

இந்த அனுபவங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்தவர் தான் கடவுள். அழகின் அனுபவங்கள், நல்லவற்றின் அனுபவங்கள், அன்பின் அனுபவங்கள், சத்யத்தின் அனுபவங்கள், இப்படி நடக்கின்ற எல்லா அனுபவங்களும் தான் கடவுள். ஆனால் பகுத்தறிவின் மூலம் அதை அடைவதற்கு முயற்சி செய்யாதீர்கள், அவை இதயத்தின் மூலம் நிகழ்கின்றன. இதயத்திலிருந்து வருகின்ற இந்த அனுபவங்கள் அனைத்தும், அவற்றின் ஒட்டு மொத்தமும் தான் கடவுள் என்று அழைக்கப்படுகிறது. கடவுள் என்பவர் எங்கோ உள்ள ஒரு சொர்க்கத்தில் அமர்ந்து கொண்டிருப்பவர் அல்லர்.

கீழை நாட்டில், சத்யம் சிவம் சுந்தரம் என்பது தான் கடவுள் என்பதற்கான விவரிப்பாக இருந்து வருகிறது. சத்யம் அவர் உண்மை என்பதாக இருக்கிறார். சிவம் அவர் நன்மையாக இருக்கிறார். சுந்தரம், அவர் அழகாக இருக்கிறார். இந்த அனுபவங்கள் தான் உங்களது இதயத்தை கலக்குகின்றன. மேலும் கடவுள் என்பது இதயத்தின் மூலம் கிடைக்கின்ற இறுதியான அனுபவமாகும்.

கடவுளை அனுபவித்தல் என்பதற்கு இதயத்தின் மூலம் உண்மையை அறிந்து கொள்ளுதல் என்பது தான் அர்த்தமாக உள்ளது. மனதின் மூலம் உண்மையை அறிந்து கொள்ளுதல் என்பது பொருள் என்பதன் அனுபவமாக இருக்கிறது.

உண்மை என்பது ஒன்றுதான். பொருள் மற்றும் உணர்வு ஆகிய இரண்டு உண்மைகள் உள்ளன என்கிற பொய்யான சிந்தனைக்குள் ஒருபோதும் விழுந்து விடாதீர்கள். கடவுள் தனி, இந்த உலகம் தனி என்பது கிடையாது, உண்மை ஒன்றானது. எது இருக்கிறதோ அது ஒன்றாகவே இருக்கிறது. ஆனால் அந்த 'ஒன்றினை' நீங்கள் இரண்டு வழிகளில் அணுக முடியும்; உங்களுக்கு இரண்டு வழிகள் சாத்தியப்படும். நீங்கள் உங்களது தலை, அல்லது மூளையின் மூலம் உண்மையை அறியலாம். அப்போது அது பொருள் என்பதாக உள்ளது. அப்போது உண்மையின் பொருள் விளக்கம் பொருள் உலக வார்த்தைகளில் வருகிறது. அல்லது நீங்கள் உண்மையை இதயத்தின் மூலம் அடையலாம். அதன் பின்னர் அது தன்னுணர்வு அல்லது கடவுளாக இருக்கிறது.

இவை எல்லாம் நமது பொருள் விளக்கங்கள். ஆனால் இதயத்தில் இருந்து வருகின்ற பொருள் விளக்கம் நிச்சயமாக உயர்ந்ததாகவும், ஆழமானதாகவும், அதிக அறிவுள்ளதாகவும் இருக்கிறது. மேலும் அது உங்களது வாழ்க்கையை மாற்றி விடுகிறது, அது உங்களை பேரானந்தம் மற்றும் வரப்பிரசாதம் என்கிற மற்றொரு பரிமாணத்திற்கு கொண்டு செல்கிறது.

*கனிந்த அன்பினால் அவர் தன்னை*
*நமக்கு அறிமுகம் செய்தார்.*
*அது அல்லாமல் நம்மால் அவரை*
*எப்படி அறிந்து கொள்ள முடியும்?*
*பகுத்தறிவானது நம்மை அவரது வாசல்*
*வரையில் எடுத்துச் சென்றது;*
*ஆனால் அவரது பிரசன்னம் தான்*
*நம்மை உள்ளே இருக்கும்படி செய்தது.*

இன்னும் ஒரு விஷயத்தை நீங்கள் நினைவில் கொள்ளுங்கள். சூஃபியிசமானது பகுத்தறிவிற்கு எதிரானது அல்ல. ஜென் அணுகுமுறைக்கும், சூஃபி அணுகு முறைக்கும் இடையே உள்ள வேறுபாடு இது தான். ஜென் பகுத்தறிவற்றது. "பகுத்தறிவை கைவிடுங்கள், அதை முற்றிலும் கைவிடுங்கள்" என்று அது கூறுகிறது. சூஃபியிஸமானது பகுத்தறிவற்றதாக இல்லை. அது பகுத்தறிவிற்கு மேலே உள்ளது. "பகுத்தறிவை பயன்படுத்துங்கள், ஆனால் அது உங்களை வாசல் வரை மட்டுமே எடுத்து செல்லும். அது உங்களை கோயிலுக்குள் எடுத்துச் செல்ல முடியாது. அது வாசல் வரை மட்டுமே எடுத்து செல்லும். எனவே பகுத்தறிவை பயன்படுத்துங்கள், ஆனால் அதனால் பிடிக்கப்பட்டு கிடக்காதீர்கள். அதோடு தடைபட்டு நின்று போகாதீர்கள்" என்று கூறுகிறது.

இப்படித்தான் சனாய்க்கு நடந்தது. அவர் தனது பகுத்தறிவை அதன் முடிவான சக்தி வரை பயன்படுத்தினார். உண்மையில் அதனால் தான் லை-குர் சனாயை கோயிலுக்குள் கொண்டு செல்ல முடிந்தது. அந்த சுல்தான் தவறவிட்டு விட்டார். ஏனெனில் அவர் தனது பகுத்தறிவை கூட அதிகபட்சமாக பயன்படுத்த வில்லை. மற்றவர்களும் கூட அப்போது அங்கு இருந்தனர். அவர்கள் அனைவரும் இந்த விஷயத்தை தவறவிட்டு விட்டனர். சனாய் மட்டுமே அதைப் பிடித்துக் கொண்டார். அவர் தனது பகுத்தறிவை அதிக பட்ச நிலையில் பயன்படுத்தினார். பகுத்தறிவானது ஒரு குறிப்பிட்ட அளவு வருகிறது. அது குறிப்பிட்ட நிலை வரை மட்டுமே உங்களை எடுத்துச் செல்கிறது. அதன் பின்னர் அது அப்படியே நின்று விடுகிறது. அதன் பின்னர் அது தீர்ந்து போகிறது என்பதை சனாய் கண்டு கொண்டார். ஆனால் உண்மை நிலையானது அதற்கும் அப்பால் தன்னை பரப்பிக் கொண்டே செல்கிறது, எனவே பகுத்தறிவை விடவும் உண்மை நிலையானது பெரியது, பகுத்தறிவானது உங்களை எதுவரை கொண்டு செல்லுமோ அதுவரை அதைப் பயன்படுத் துங்கள், ஆனால் அதன் பின்னர் அங்கேயே இருந்து விடாதீர்கள். அதற்கு அப்பால் செல்லுங்கள்.

ஜென் பகுத்தறிவற்றது, ஜென் அர்த்தமற்றது; அது தான் அதன் அழகு. சூஃபியிஸமானது பகுத்தறிவிற்கும் மேலானது. அது அர்த்தமற்றது அல்ல; அதுதான் அதன் அழகு. இரண்டுமே தெய்விகத்திற்கான சரியான வாசல்கள். ஆனால் ஜென்னில் எதிர்மறையான வழியாக உள்ளது. ''பகுத்தறிவை கைவிடுங்கள்'' என்று அது கூறுகிறது. சூஃபியிஸம் நேர்மறையான வழியாகும்; ''பகுத்தறிவை பயன்படுத்துங்கள் ஆனால் அதற்கு அப்பால் ஏதோ ஒன்று உள்ளது என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். அப்பால் உள்ளதை ஒருபோதும் மறந்து விடாதீர்கள்'' என்று அது கூறுகிறது.

ஜென் எதிர்மறையான வழியில் செல்வது, சூஃபியிஸம் நேர்மறையான வழியில் செல்வது. சூஃபியிஸம் முற்றிலும் நேர்மறையானது எனவே நேர்மறை பக்கம் சாய்கின்ற மக்கள் சூஃபியிஸத்தை நோக்கி சுலபமாக ஈர்க்கப்படுவதை காணலாம். மேலும் எதிர்மறையான அணுகுமுறை உள்ள மக்கள் ஜென்னின் பாதையை சுலபமாக பின்பற்றி நடக்கலாம். எனவே ஒருவர் தீர்மானிக்க வேண்டும், முடிவெடுக்க வேண்டும். ஒருவர் தனது குணாதிசயத்தை, தான் எந்த பக்கம் சாய்கிறோம் என்பதைக் கவனிக்கவேண்டும்.

**பகுத்தறிவானது நம்மை அவரது வாசல் வரையில் எடுத்துச் சென்றது; ஆனால் அவரது பிரசன்னம் தான் நம்மை உள்ளே இருக்கும்படி செய்தது.** வாசலை அடைவதற்கு பகுத்தறிவை பயன்படுத்துங்கள். உண்மை நிலையானது இனிமேல்தான் நிகழ வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். காத்திருங்கள். அபரிமிதமான திறந்த இதயத்துடன் காத்திருங்கள். உங்களை மூடிக் கொள்ளாதீர்கள். ஒரு முடிவுக்கு வர ஆரம்பிக்காதீர்கள். ஒரு முடிவுக்கு வந்து விட்டால் நீங்கள் மூடிக் கொண்டீர்கள் என்று அர்த்தம். பகுத்தறிவானது இப்படியோ அல்லது அப்படியோ, கடவுளுக்கு ஆதரவாகவோ அல்லது எதிராகவோ ஒரு முடிவைக் கொடுத்து விட்டால் அதன் பின்னர் நீங்கள் முடிந்து போய் விட்டீர்கள்; அதன் பின்னர் அதற்கு அப்பால் என்பது இருக்காது.

பகுத்தறிவானது முடிவெடுக்க முடியாதது என்கிற நிலையைப் பாருங்கள், எனவே முடிவு எதுவும் எடுக்காமல் காத்திருங்கள். நீங்கள் அவரது வாசல் வரை வந்து விட்டீர்கள். இப்போது அவரது பிரசன்னம் உங்களை உள்ளே எடுத்துச் சென்று விடும்.

''சீடன் தயாராக இருக்கும் போது குரு தோன்றுகிறார்'' என்கிற மாபெரும் வாக்கியத்திற்கு இது தான் அர்த்தம். எனவே ஹக்கிம் சனாய்க்காகவே லை-குர் ஆடிக்கொண்டும், பாடிக்கொண்டும், இசை மீட்டிக்கொண்டும் இருந்ததற்கான சாத்தியங்கள் உள்ளது. இயற்கையின் வழிகள் புதிர் நிறைந்தவை ஹக்கிம் சனாய் மாட்டிக் கொள்வதற்கான பொறி தயாராக இருந்தது. அந்த மனிதர் தயாராக இருந்தார், அவர் வாசல் வரை வந்து விட்டார்.

இதே நிலை தான் ஓமர்கயாம் என்கிற மற்றொரு சூஃபிக்கும் ஏற்பட்டது. அவர் ஒரு கணிதமேதை, அறிவாளி. அவர் தனது பகுத்தறிவை அதன் உச்சநிலை வரை பயன்படுத்திவிட்டார். எனவே அதன் பின்னர் அவர் கடவுளுக்குள் எடுக்கப்பட்டு விட்டார். அப்போது அந்த கணிதமேதை ஒரு குடிகாரர் ஆகிவிட்டார். அந்த மாபெரும் கணிதமேதை மதுரசம் மற்றும் குடிபோதை பற்றி பேச ஆரம்பித்து விட்டார். அப்போதுதான் மாபெரும் ருபையாத் என்னும் அவரது கவிதை நூல் பிறந்தது.

ஓமர் கயாமின் ருபையாத்தை படித்த ஒருவர், அவர் மாபெரும் கணித மேதை என்பதை நம்பவே முடியாது. அவர் எந்த வகையான கணிதமேதையாக இருந்தார் என்று ஒருவராலும் கருத்தில் கொள்ள முடியாது ஏனெனில் அவரது கவிதை அந்த அளவுக்கு தூய்மையானதாக இருந்தது. ஒரு கணிதமேதையால் இப்படிப்பட்ட கவிதையின் தூய்மையை எப்படி அடைய முடியும்? ஒரு கணித மேதை தர்க்க அறிவு மிக்கவர்; அவர் தர்க்க அறிவின் ஒரு முறையோடு செயல்பட்டார். அவர் செய்முறை யாளர், அவர் புற உலகு சார்ந்தவர். அவர் தனது கணித சோதனைகளில் தனது அக உணர்வை அனுமதிக்க மாட்டார்; அவர் அக உணர்வில் இருந்து பிரிந்து இருந்தார். மேலும் இந்த உலகில் கணிதம் தான் குறைகளற்ற ஒரு நிறைவான விஞ்ஞானம்

ஆகும். ஏனைய விஞ்ஞானம் எல்லாம் அப்படி இப்படி இருப்பவை; கணிதம் மட்டுமே நிறைவான விஞ்ஞானம். ஒரு நிறைவான விஞ்ஞானி எப்படி ஒரு சூஃபியாக ஆக முடியும்? ஆனால் அது எப்படி நடந்தது என்பதை நீங்கள் இப்போது புரிந்து கொள்ள முடியும்.

நீங்கள் உங்களது பகுத்தறிவின் இறுதி முனை வரை வந்து விட்டால், மேலும் அப்போதும் நீங்கள் மூடப்பட்டவராக இல்லாமல் இன்னமும் கிடைக்கக் கூடியவராக இருந்தால் அதன் பின்னர் நீங்கள் கடவுளின் சந்நிதானத்திற்குள் எடுக்கப்பட்டு விடுவீர்கள். இந்த வழி அல்லது அந்த வழி என்று நீங்கள் முடிவு செய்யாமல் இருந்தால், நீங்கள் ஒரு ஆத்திகராகவோ அல்லது நாததிகராகவோ இன்னமும் ஆகாமல் இருந்தால், பகுத்தறிவானது முடிவெடுக்கமுடியாத ஒன்றாக இருக்கிறது என்கிற விழிப்புணர்வை நீங்கள் பெற்றிருந்தால், அதன் பின்னர் அவரது சந்நிதானத்திற்குள் நீங்கள் எடுக்கப்பட்டு விடுவீர்கள்.

அவர் ஒரு குருவாக தோன்றி உங்களை உள்ளே எடுத்து விடுவார். அப்போது அது ஒரு நொடிப்பொழுதில் நடந்து விட முடியும். ஒருவர் எல்லைக் கோட்டில் நின்று கொண்டு இருக்கும் போது, அதன் பின்னர் ஒரு சிறு நொடிப் பொழுதில் நடந்து விட முடியும். ஒருவர் எல்லைக் கோட்டில் நின்று கொண்டு இருக்கும் போது, அதன் பின்னர் ஒரு சிறு நொடிப்பொழுதில் அவர் அறியவே முடியாத ஒன்றினுள் நுழைந்து விட முடியும்.

*ஆனால் உங்களை நீங்களே அறிந்து*
*கொள்ள முடியாமல் இருக்கிற வரையில்*
*உங்களால் அவரை எப்படி அறிந்து*
*கொள்ள முடியும்?*

நீங்கள் உங்களை அறிந்திருந்தால் மட்டுமே கடவுளை அறிந்து கொள்ள முடியும். நீங்கள் எங்கு இருக்கிறீர்கள்? நீங்கள் உங்களது தலையில் இல்லை, நீங்கள் உங்களது இதயத்தில் இருக்கிறீர்கள். உங்களது மூளையானது செயலற்ற நிலையில், கோமா நிலையில் இருந்து விடலாம், ஆனாலும் கூட நீங்கள்

உயிரோடு இருப்பீர்கள். கோமா நிலையில் வீழ்ந்து விட்டு பல வருடங்களாக அப்படியே இருப்பவர்கள் இருக்கிறார்கள். ஒருமுறை, முற்றிலும் நினைவு இழந்த நிலையில், ஒன்பது மாதங்களாக மூளை செயலற்ற நிலையில் உள்ள ஒரு பெண்மணி என்னிடம் கொண்டு வரபட்டாள். அவளது மனமானது வேலை செய்யவில்லை, அவள் கிட்டத்தட்ட ஒரு தாவரம் போன்று உயிர்வாழ்ந்தாள். ஆனால் அவள் உயிரோடு இருந்தாள் ஏனெனில் அவளது இதயம் இன்னமும் துடித்துக் கொண்டு இருந்தது. இதயம் நின்று விட்டால் அதன் பின்னர் எல்லாமே நின்று விடுகிறது.

எனவே உங்களது உயிரானது எப்படியோ இதயத்தில் தான் வேர் ஊன்றி உள்ளது, உங்களது தலையில் அல்ல. உங்களுக்கும் இந்த பிரப்ஞ்சத்திற்கும் இடையேயான தொடர்பு புள்ளியாக உங்களது இதயம் இருப்பதாக தெரிகிறது. இதயத்தின் மூலமாகவே நீங்கள் இந்த பிரபஞ்சத்தில் சொருகப்பட்டு இருக்கிறீர்கள். மேலும் ஒருவர் தனது இதயத்தை அறிந்து கொள்ள வேண்டும். அது தான் ஆன்ம அறிவு, ''உன்னையே நீ அறிவாய்'' என்பதற்கு அதுதான் அர்த்தம், ஏனெனில் உங்களது இதயத்தை அறிந்து கொள்வதன் மூலமாக மட்டுமே உங்களுக்கும் இந்த பிரபஞ்சத்திற்கும் உள்ள தொடர்பை உங்களால் அறிந்து கொள்ள முடியும். உங்களது இதயத்திற்குள் நுழைந்தால் தான் முடிவான ஒன்றிற்குள் உங்களால் நுழைய முடியும்.

*அதிகமாகவும் இல்லாமல், குறைவாகவும் இல்லாமல்*
*ஒருவன் ஒருவனாகவே இருந்து விட்டால்;*
*இரண்டு ஆவதில் பிழை ஆரம்பிக்கிறது;*
*ஒன்று ஆதல் பிழை எதையும் அறியாது.*

உங்களிடம் பல மனங்கள் உள்ளன. ஆனால் உங்களுக்கு ஒரே ஒரு இதயம் மட்டுமே உள்ளது. இந்த உண்மையை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? உங்களுக்கு ஒரு மனம் இல்லை; நீங்கள் பல மனம் கொண்டவர்கள். அவை இடைவிடாமல் மாறிக் கொண்டு இருக்கின்றன; ஒவ்வொரு நொடிப் பொழுதும் உங்களது மனம் மாறுகிறது. ஒரு தருணத்தில் அது சந்தேகம்

நிறைந்து உள்ளது, அடுத்த தருணத்தில் அது நம்பிக்கை நிறைந்து உள்ளது, மேலும் அடுத்த தருணத்தில் மீண்டும் அது சந்தேகம் நிறைந்து உள்ளது. ஒரு தருணத்தில் அது உள்ளே குதித்து விட விரும்புகிறது, அடுத்த தருணத்தில் அது தப்பி ஓடிவிடுகிறது. ஒரு தருணத்தில் நீங்கள் அன்பு நிறைந்து இருக்கிறீர்கள். அடுத்த தருணத்தில் நீங்கள் கோபம் மற்றும் வெறுப்பு நிறைந்து இருக்கிறீர்கள்.

இதை கவனியுங்கள் உங்களிடம் ஆயிரத்தோரு மனம் உள்ளது. அவை சுழற்சி முறையில் வந்து கொண்டே இருக்கின்றன. உங்களது தலையில் ஒரு விதமான சுழற்சி அமைப்பு உள்ளது. ஒரு சமயத்தில் ஒரு மனம் எஜமானாக உள்ளது. எனவே அந்த சமயத்தில் நீங்கள் ஏதோ ஒன்றைச் செய்வதற்கு முடிவெடுத்து அதை உங்களால் செய்து விட முடியும் என்று நினைக்கிறீர்கள். அடுத்த நொடியில் உங்களால் அதை செய்ய முடியாமல் போய்விடுகிறது. ஏனெனில் அடுத்த நொடியில் அந்த சர்வாதிகாரி மனம் போய்விட்டது. இது ஒரு விதமான சுழற்சி முறை. அடுத்த மனம் மேலே வந்துவிட்டது. இப்போது சக்கரத்தின் வேறு ஒரு ஆரம் மேலே வந்து விட்டது. முந்தைய மனம் எடுத்த முடிவைப் பற்றி இந்த மனதிற்கு எதுவும் தெரியாது. இந்த உயிர் அடுத்த உயிர் பற்றி எதையும் அறியாது; நீங்கள் என்ன முடிவு எடுத்து இருக்கிறீர்களோ அதை எல்லாம் இது அழித்து விடும்.

ஒரு சமயம் நீங்கள் மீண்டும் புகைப்பிடிக்கக் கூடாது என்று முடிவு செய்கிறீர்கள். அடுத்த நொடி நீங்கள் உங்களது சிகரெட் பெட்டியை வெளியே எடுக்கிறீர்கள். இதைக் கண்டு நீங்கள் ஆச்சரியம் அடைந்தீர்கள். ஒரு நொடிக்கு முன்புதான் நீங்கள் முடிவெடுத்தீர்கள். அந்த முடிவெடுத்தல் அந்த அளவுக்கு முழுமையாகவும், அந்த அளவுக்கு நம்பிக்கையானதாகவும் இருந்தது. ஆனால் இப்போது அவை எல்லாம் போய்விட்டன. சாக்கடைக்குள் போய்விட்டன. அதன் அறிகுறிகள் எதுவும் இப்போது அங்கு இல்லை. இப்போது நீங்கள் அதன் அறிகுறிகள் எதுவும் இப்போது அங்கு இல்லை. இப்போது நீங்கள் மீண்டும்

முற்றிலும் புகை பிடிக்க விரும்புகிறீர்கள். உங்களது பழைய மனம் திரும்பி வந்து உங்களைத் துன்புறுத்தும் அப்போது நீங்கள் மனம் வருந்துவீர்கள். நீங்கள் குற்ற உணர்வு கொள்வீர்கள். ஆனால் இது மாறிக் கொண்டே போகும்.

மனம் என்பது ஓடிக்கொண்டிருப்பது, அது பல மனங்களின் தொடர்ச்சி. அதனால்தான் மனதின் சொல்படி வாழ்பவர்கள் ஒருங்கிணைப்பு இல்லாத, துண்டு துண்டான வாழ்க்கை வாழ்கிறார்கள்.

இதயம் ஒன்று தான், அது எப்போதும் ஒன்றாகவே இருக்கிறது. இதயம் என்றால் உங்களுக்குள் உள்ள, எல்லாவற்றையும் கவனிக்கின்ற தன்னுணர்வு என்று அர்த்தம். தலையின் செயல்பாடுகளை கவனிப்பவர் யார்? அது குறித்து தியானம் செய்ய முயற்சி செய்யுங்கள். உங்களுக்கு கோபம் வருகிறது. அதை யார் கவனிக்கிறார்கள்? உங்களுக்கு கோபம் வருகிறது என்பதை நீங்கள் முற்றிலும் அறிகிறீர்கள்; கோபம் வந்து அது வளர்ந்து கொண்டு இருக்கிறது என்பதை நீங்கள் நன்றாக அறிவீர்கள். விரைவில் அந்த கோபத்தினால் நீங்கள் மூழ்கடிக்கப்பட போகிறீர்கள் என்பதையும் நீங்கள் நன்றாக அறிவீர்கள். அதன்பின்னர் கோபம் போகிறது, குறைந்து கொண்டே சென்று மறைந்து விடுகிறது. அது போய் விட்டது என்பதையும் நீங்கள் அறிவீர்கள். போனது, போனது, போயேவிட்டது. அது இப்போது உங்களிடம் இல்லை. இதைக் கவனிப்பவர் யார்? காதல் வருகிறது போகிறது. துன்பம் வருகிறது, இன்பம் வருகிறது, எல்லாமே வருகிறது. எல்லாமும் போகிறது. இதை எல்லாம் கவனிப்பவர் யார்? கவனிப்பவர் எப்போதும் அப்படியே இருக்கிறார்.

உங்களுக்குள் ஒன்றே ஒன்று மட்டுமே நிலையானதாக உள்ளது. அது தான் கவனிப்பாளன். எல்லாமே மாறுகிறது. கவனிப்பாளன் மட்டுமே அப்படியே இருக்கிறான். அவன் எப்போதும் அங்கே இருக்கிறான். நீங்கள் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் போது கூட அவன் கனவுகளைக் கவனித்துக்கொண்டு

இருக்கிறான்; உங்களுக்குள் கனவுகள் இல்லை என்றாலும் கூட அவன் உங்களது ஆழ்ந்த உறக்கத்தை கவனித்துக்கொண்டு இருக்கிறான். நீங்கள் விழித்து எழுந்த உடன் அவன் இந்த உலகை கவனிக்கிறான், நீங்கள் தூங்கும் போது அவன் உங்களது அக உலகை கவனிக்கிறான், ஆனால் கவனித்தல் தொடர்ந்து நடைபெறுகிறது. ஒரு சிறு நொடிப் பொழுது கூட கவனிப்பது நின்று போவதில்லை. உங்களுக்குள் உள்ள முடிவில்லாத ஒரே விஷயம் அதுதான். நிலையானது உங்களது இதயம் மட்டுமே. சூஃபிக்கள் அதை உள்ளம் என்று அழைக்கிறார்கள். அது ஒன்று தான். எனவே அந்த ஒன்றினை அறிந்து கொள்வது தான் எல்லாப் பிழைகளுக்கும் அப்பால் செல்வதாகும். **அதிகமாகவும் இல்லாமல், குறைவாகவும் இல்லாமல், ஒருவன் ஒருவனாகவே இருந்து விட்டால்; இரண்டு ஆவதில் பிழை ஆரம்பிக்கிறது: ஒன்று ஆதல் பிழை எதையும் அறியாது.** இந்த ஒன்று படுதல்தான் புதிரான ஒன்றுதல் என்று அழைக்கப்படுகிறது. இது தான் ஒருங்கிணைதல், இது தான் தனித்துவமாதல், இதுதான் ஆன்மாவில் மையம் கொள்ளல். அதன் பின்னர் உங்களைச் சுற்றிலும் சூறாவளி சுழன்று அடித்தாலும் கூட நீங்கள் மையத்தில் இருக்க முடியும். அதன் பின்னர் நீங்கள் சூறாவளியின் மையமாக இருக்கிறீர்கள். அதன் பின்பு நீங்கள் இந்த உலகில் இருப்பீர்கள். ஆனால் இந்த உலகத்தவராக இருக்க மாட்டீர்கள்.

இரண்டு பட்டு இருப்பதால் தான் எல்லாப் பிழைகளும் எழுகின்றன. நீங்கள் இரண்டு பட்டவராக மட்டுமல் லாமல், நீங்கள் பலவகைப் பட்டவராகவும் இருக்கிறீர்கள். எனவேதான் உங்களிடம் தவறுகள், தவறுகள் தவறுகள் என்று எல்லாமே தவறுகளாக உள்ளது. நீங்கள் பல துண்டுகளாக பிரிக்கப்பட்டு இருக்கிறீர்கள். நீங்கள் உங்களுக்குள் ஒரு கூட்டம் போன்று இருக்கிறீர்கள். அது தான் உங்களது பிரச்சினை. உங்களுக்குள் உள்ள அந்த கூட்டமானது இடைவிடாமல் சண்டை போட்டுக் கொண்டு இருக்கிறது. அது சண்டை போட்டுக் கொண்டே போகிறது. நீங்கள் ஒரு மனிதப் போர் போன்று இருக்கிறீர்கள்.

எனவே தான் உங்களது வாழ்க்கையானது எல்லா மகிழ்ச்சியையும், எல்லா பேரானந்தத்தையும், எல்லா அருளையும் இழந்துவிட்டு இருக்கிறது.

நீங்கள் உங்களுக்குள் ஏகனாக இருந்தால் அப்போது திடீரென்று உங்களுக்கு இறையருள் கிட்டுகிறது. அப்போது நீங்கள் எந்த விதமான முயற்சியும் இல்லாமல் திடீரென்று நேர்த்தியானவராக ஆகி விடுகிறீர்கள். அதன் பின்னர் உங்களது வாழ்க்கையானது அதற்கே உரித்தான அழகைக் கொண்டிருக்கிறது. அது கண்கவர்வதாக இருக்கிறது. அதன் பிறகு அது ஒருபோதும் இந்த அசிங்கமான, சாதாரண, கீழ்த்தரமான வாழ்க்கையாக இருப்பதில்லை. இப்போது அது புனிதத்திலும் புனிதமானதாக இருக்கிறது. அது புனிதமானது, அது தெய்விகமானது.

*உங்களது இதயத்தின் கண்ணாடியை*
*பளபளப்பாக்குவதில் தான் உங்களது*
*ஆன்மாவானது பயணிப்பதற்கான சாலை இருக்கிறது*
*அது புரட்சியினாலோ அல்லது உடன்பாடு*
*இல்லாமையாலோ*
*நடக்கக் கூடாதது அல்ல.*

நீங்கள் உங்களோடு போரிடவேண்டாம், உங்கள் மீது நீங்கள் எதையும் வலுக்கட்டாயமாக திணிக்கவேண்டாம், நீங்கள் சச்சரவுடன் இருக்க வேண்டிய அவசியம் இல்லை. நீங்கள் உடன்பாட்டில் இருக்க வேண்டும், உடன்பாடு இல்லாமல் இருக்கக் கூடாது. அதனால் தான் சூஃபியிஸத்தில் உடலை வருத்திக்கொள்ளுதல் என்று எதுவும் கிடையாது. உடலை வருத்திக் கொள்பவர் தன்னைத் தானே துன்புறுத்திக் கொள்பவர், அவர் உண்மையான மதப்பற்று உள்ளவர் அல்லர். அவர் தன்னையே நேசிப்பது இல்லை, அவர் தன்னையே வெறுக்கிறார். சூஃபிக்கள் தங்களை நேசிக்கின்றனர். சூஃபி எல்லாரையும் நேசிக்கிறார், சூஃபி நேசமாகவே இருக்கிறார்.

*உங்களது இதயத்தின் கண்ணாடியில்*
*நம்பிக்கை இன்மை மற்றும் போலித்தனம்*

*என்னும் தூசு இல்லாமல் அதை பளபளப்பாக*
*ஆக்குதல் என்பது புரட்சியினாலோ அல்லது*
*உடன்பாடு இல்லாமையாலோ நடக்கக் கூடியது அல்ல.*

நீங்கள் மனதில் இருந்து செயல்பட்டால் உங்களுக்கு இரண்டு சாத்தியங்கள் உள்ளன என்று நான் கூறியதை நினைவில் கொள்ளுங்கள். அதில் ஒன்று போலித்தனம் அதாவது இந்து, முகமதியன், கிறிஸ்துவன், சமணன், யூதன் என்று தங்களை அழைத்துக் கொள்கின்ற மதவாதி மனிதன், போலித்தனமானவன். இது ஒரு சாத்தியம்.

அடுத்த சாத்தியமானது நம்பிக்கையின்மை, நாத்திகம் ''இங்கு கடவுள் இல்லை. நான் தேடிப் பார்த்து விட்டேன். நான் எனது பகுத்தறிவின் எல்லை வரை சென்று தேடிப் பார்த்து விட்டேன். மேலும் என்னால் கடவுளைக் காண முடியவில்லை. எனவே கடவுள் இல்லை'' என்று கூறுகின்ற நாத்திகர்.

இரண்டுமே முட்டாள்தனமான நோக்கங்கள், ஒருவர் எந்த முடிவுக்கும் வராதவராக இருக்க வேண்டும். ஒருவர் பகுத்தறிவின் எல்லையில் எந்த ஒரு முடிவுக்கும் வராமல் வெறுமனே அமைதியாக, எதையும் ஏற்பவராக, எதற்கும் கிடைக்கக் கூடியவராக இருந்தாக வேண்டும். அதன் பின்னர் கடவுளின் பிரசன்னம் உங்களை உள்ளே எடுத்துக் கொள்ளும்.

*உங்களது உறுதியினால், கலப்படமற்ற உங்களது*
*தூய்மையான நம்பிக்கையினால் மட்டுமே உங்களது*
*கண்ணாடி பளபளப்பாக ஆகிறது.*

பகுத்தறிவின் மூலம் அடையப்படுகின்ற உறுதிப்பாடு ஒன்று அங்கு உள்ளது. ஆனால் அந்த உறுதிப்பாடானது எப்போதுமே சந்தேகத்தை அடிப்படையாகக் கொண்டது. பகுத்தறிவினால் சந்தேகத்தை அழித்து விடமுடியாது ஏனெனில் பகுத்தறிவிற்கு சந்தேகம் தான் உணவாக உள்ளது. பகுத்தறிவானது சந்தேகத்தில் தான் ஆரம்பிக்கிறது. கேள்வி கேட்பதில் தான் பகுத்தறிவு ஆரம்பமாகிறது, பகுத்தறிவு என்பது அடிப்படையில் சந்தேகப்படுவதாகும். எனவே பகுத்தறிவானது

ஒரு முடிவுக்கு வந்தாலும் கூட அது வெறும் ஒரு கொள்கையாக மட்டுமே இருக்கிறது. அந்த நேரத்திற்கு உரியதாக மட்டுமே அது இருக்கிறது. பல புதிய உண்மைகள் வரலாம், புதிய உண்மைகள் வெளிப்படுத்தப்படலாம். அதன் பிறகு அந்த முடிவானது மாற்றப்பட வேண்டும்.

எனவேதான், ''இதுதான் உண்மை'' என்று ஒருபோதும் அறிவியலால் கூற முடியாது. ''இது வரையில், நாங்கள் என்ன அறிந்து கொண்டோமோ அதன்படி, இதுதான் உண்மை என்று தெரிகிறது'' என்று மட்டுமே விஞ்ஞானத்தினால் கூற முடியும். ''இது வரையில், இப்போது வரை, இது தான் உண்மை போன்று தோன்றுகிறது. நாளை என்ன நடக்கும் என்று என்னால் எதுவும் சொல்ல முடியாது. புதிய உண்மைகள் வரும், புதிய உண்மைகள் வெளிப்படுத்தப்படும். அதன் பின்னர் நாங்கள் இதை மாற்றியாக வேண்டும்'' என்று மட்டுமே விஞ்ஞானத்தால் கூற முடியும்.

நியூட்டன் இப்போது காலத்திற்கு பொருந்தாதவர் ஆகிவிட்டார், விரைவில் ஆல்பர்ட் ஐன்ஸ்டீனும் கூட காலத்திற்கு பொருந்தாதவர் ஆகிவிடுவார். ஆனால் புத்தர் ஒருபோதும் காலத்தோடு பொருந்தாதவர் ஆக மாட்டார். லை-குர் ஒருபோதும் காலத்திற்கு பொருந்தாதவர் ஆக மாட்டார். இயேசு ஒருபோதும் காலத்திற்கு பொருந்தாதவர் ஆக மாட்டார். ஏனெனில் அவர்கள் கூறியவை எல்லாம் சந்தேகத்தை அடிப்படையாகக் கொண்டவை அல்ல. அது பகுத்தறிவின் மூலம் வந்ததல்ல; அது இதயத்தின் மூலம் முடிவு செய்யப்பட்டது. இதயத்திற்கு அந்த முடிவில்லாத ஒன்றினைத் தெரியும். ஏனெனில் இதயமானது அந்த முடிவில்லாத ஒன்றோடு தொடர்புடன் உள்ளது. தலை அல்லது மூளையானது தற்காலிகமானதோடு, அந்தத் தருணத்தில் உள்ளதோடு மட்டுமே தொடர்புடன் இருக்கிறது.

எனவேதான் நேசத்தினால் அடையப்படுகின்ற உறுதிப்பாடு அங்கு உள்ளது, தர்க்க அறிவினால் அந்த உறுதிப்பாடு வருவதில்லை, எனவே பாடுகின்ற, நடனமாடுகின்ற ஒரு இதயம் அல்லாமல் உறுதிப்பாடானது தலையினால் அடையப்படுவதில்லை, மூளையின் மூலம் அடையப்படுவதில்லை.

நீங்கள் உங்களது காதலில் ஏதாவது உறுதிப்பாட்டை, நிச்சயத்தன்மையை, முடிவான ஒன்றினை எப்போதாவது உணர்ந்திருக்கிறீர்களா? அப்படி இருந்தால் நீங்கள் இதன் அர்த்தத்தை புரிந்து கொள்வீர்கள். நீங்கள், ''இந்தப் பெண்ணை நான் காதலிக்கிறேன்'' என்று கூறும்போது நீங்கள் உங்களது பகுத்தறிவின் மூலமாகத்தான் இந்த முடிவிற்கு வந்தீர்களா? அப்படி நீங்கள் உங்களது பகுத்தறிவின் மூலம் வந்திருந்தால், அது எந்த நொடிப் பொழுதிலும் மறைந்து போகலாம்.

அதனால்தான் மேலை நாடுகளில் காதல் என்பது ஒரு நொடிப் பொழுது மட்டுமே இருக்கிற ஒரு விஷயமாக ஆகிவிட்டது. காதலும் கூட உங்களது தலையின் மூலம், மூளையின் மூலம் அடையப்படுகிறது. ''இதுவரை நான் பார்த்த பெண்களில் இவள்தான் மிகவும் அழகானவளாகத் தெரிகிறாள்? என்று நீங்கள் முடிவு செய்கிறீர்கள். நாளை என்ன நடக்கும் என்று யாருக்கு தெரியும்? இவளை விட நீண்ட மூக்குடைய ஒரு பெண், அழகான கூந்தல் உள்ள ஒரு பெண், இதை விட ஆழமான பிரகாசம் நிறைந்த கண்கள் உள்ள பெண்ணை நீங்கள் பார்க்க நேரிடலாம். யாருக்கு தெரியும்? நாளை என்ன நடக்கும் என்று எதுவும் சொல்ல முடியாது. இந்த பெண் காலத்திற்கு பொருந்தாதவளாக ஆகிவிடலாம்; எப்போதுமே நீங்கள் இவளை விட சிறந்த ஒரு ஆளை காண முடியும்.''

ஆகவே உங்களது முடிவானது உங்களது மூளையில் இருந்து வந்த ஒன்றாக இருந்தால், அதன் பின்னர் அந்த காதலானது ஆழ்ந்ததாகவும், அன்னியோன்யமானதாகவும் ஒருபோதும் ஆகாது. அதன் பின்னர் அது அந்த தருணத்திற்குரிய தாகவே இருக்கும். அது தான் இந்த உலகில் நடந்துகொண்டு இருக்கிறது. காதல் என்பது போன போக்கில் போவதாக, அந்த தருணத்தில் மட்டுமே உள்ளதாக ஆகிவிட்டது. அந்த தருணத்திற் கான வெறும் ஒரு ஏற்பாடு போல ஆகிவிட்டது. ஆனால் அன்பில் ஆழமாக வளர்வதற்கான வழி இது அல்ல.

காதலுக்கு அன்னியோன்யம் தேவை. காதலுக்கு மூளையில் இருந்து வந்த உறுதிப்பாட்டை விட இதயத்தில் இருந்து வருகின்ற

உறுதிப்பாடுதான் அவசியமாகும். இதயத்தின் மூலம் உறுதிப்பாடு வந்துவிட்டால் அந்த காதல் என்றென்றும், எப்போதைக்கும் இருக்கும். அது மாற்றத்தை அறியாது. தங்களது காதலை இதயத்தின் உறுதிப்பாட்டின் மூலம் இன்னமும் எடுக்கின்ற அந்த ஒரு சில மக்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள். இந்த பூமியில் அவர்கள் மிகவும் அபூர்வமாகவே உள்ளனர். அந்த இனம் அழிந்து கொண்டு இருக்கிறது. மேலும் இது மிகப்பெரிய பேரழிவு.

இப்போது, நீங்கள் என்னிடம் வந்து, நான் பேசுவதைக் கேட்ட பின்னர், நான் தர்க்க அறிவுடன் பேசுவதாகவும், உங்களது பகுத்தறிவு மற்றும் தர்க்க அறிவுக்கு ஒத்து வருவதாகவும், இருந்தால் நீங்கள் ஒரு சீடர் ஆகி விடுகிறீர்கள், அதன் மூலம் நீங்கள் என்னோடு வெகு தொலைவு வரமுடியாது. நாளை நான் முரண்பாடான ஒன்றினைக் கூறும் போது அது உங்களை ஆச்சரியப்படுத்தும். அது உங்களில் சந்தேகத்தை ஏற்படுத்திவிடும்.

ஆனால் அது ஒரு இதயத்துடன் கூடிய உறவாக இருந்தால் அதாவது நான் என்ன கூறுகிறேன் என்பதைக் கேட்காமல் நான் என்னவாக இருக்கிறேன் என்று பார்க்கின்ற, எனது வார்த்தைகளை மட்டுமே கவனிக்காமல் எனது மௌனங்களையும் கவனிக்கின்ற, நான் கற்பிக்கின்ற தத்துவத்தை கேட்காமல், நான் உங்கள் மீது பொழிகின்ற எனது பிரசன்னத்தை நீங்கள் கண்டு கொண்டால் அதன் பிறகு நம்பிக்கை, சிரத்தை என்னும் உறுதிப்பாடு எப்போதைக்கும் அங்கு இருக்கிறது.

நீங்கள் பகுத்தறிவின் மூலம் வந்தடைந்தால் அது வெறுமனே மனம் போன போக்கில் போவதாகும். மேலும் நீங்கள் ஒருபோதும் சகஜமாக இருக்க மாட்டீர்கள், உங்களது கண்களின் ஓரத்தில் கவனித்துக் கொண்டு நீங்கள் எப்போதும் அங்கு இருப்பீர்கள், அப்போது உங்களது மூளைக்கு எதிராக சென்றுவிட்டால் அதன் பின்னர் நான் உங்களுக்குரியவனாக இருக்க மாட்டேன். அதன் பின்னர் நான் உங்களது எதிர்பார்ப்புகளை எப்போதும் நிறைவேற்றிக் கொண்டே இருந்தாக

வேண்டும். அதை என்னால் செய்ய முடியாது, அதை எந்த ஒரு குருவாலும் செய்ய முடியாது. மேலும் நான் என்ன கூறினாலும் அதை நீங்கள் உங்களது சொந்த வழியில் பொருள் விளக்கம் கொண்டு விடுவீர்கள்.

சில தினங்களுக்கு முன்பு ஒரு பெண் இங்கு இருந்தாள். அவள் ஆழ்ந்த யோசனையுடன் இருந்தாள். அவள் என்னிடம், ''எனது இந்த ஆழ்ந்த யோசிப்பு குறித்து நான் என்ன செய்வது?'' என்று கேட்டாள். நான் அவளிடம் பேசினேன். இப்படி விளையாட்டுத்தனம் இல்லாமல் ஆழ்ந்த யோனையுடன் இருப்பது ஒரு வகை நோய் என்று கூறினேன். ''ஆழ்ந்த யோசனையில் இருப்பது மிகவும் மதிப்புள்ளது என்பதால் நீ அதில் இருக்கிறாய். அது அப்படிப்பட்டது அல்ல, அது வெறுமனே முட்டாள் தனமானது. விளையாட்டாக இரு'' என்று கூறினேன்.

ஆனால் அவள் என்ன முடிவு செய்தாள் என்பதை நீங்கள் அறிவீர்கள்? அவள் என்னிடம் சந்நியாசம் வாங்கிக் கொண்டாள். அவளது வீட்டிற்கு திரும்பிச் சென்றாள் மேலும் அங்கிருந்து எனக்கு, ''நீங்கள் சொல்வதை நான் கேட்டேன் எனவே எனது சொந்த வழியில் உங்களைப் பின்பற்றி நடப்பதற்கு நான் முயற்சிக்கிறேன். நான் சந்நியாசத்தை கைவிட்டு விட்டேன். ஏனெனில் என்னால் எதையும் விடமுடியவில்லை என்றாலும் கூட, ஒருவர் விளையாட்டுத்தனத்துடன் இருக்க வேண்டும் என்று நினைக்கிறேன; நான் இன்னமும் கவலையுடன் ஆழ்ந்த யோசனையில் இருக்கிறேன்'' என்று எழுதி இருந்தாள்.

இப்போது பாருங்கள். அவளால் விடமுடிந்தது ஒரே ஒரு விஷயம் தான். அது அவளது சந்நியாசமாக இருந்தது! அவள் தனது கவலையுடன் கூடிய சிந்தனைகளை எல்லாம் கைவிட்டு இருந்தால், அதன் பின்னர் அவள் சந்நியாசத்தை கைவிட்டதும் கூட சரியானதாக இருந்திருக்கும். ஆனால் மனம் மிகவும் வஞ்சகமானது. எனவே இப்போது அவள் சந்நியாசம் குறித்து ஒருவர் ஆழ்ந்த கவலையுடன் இருக்கக் கூடாது என்று அவளது சொந்த வழியில் பொருள் விளக்கம் செய்து கொண்டாள்.

மற்றவை குறித்து அவள் அப்படியே தான் இருக்கிறாள். அவள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. உண்மையில் சந்நியாசியாக இருப்பது என்பதற்கு, நீங்கள் உங்களது ஒட்டுமொத்த வாழ்க்கையையும் விளையாட்டாக எடுத்துக் கொள்ள வேண்டும் என்று தான் அர்த்தமாகும். சந்நியாசத்தை கைவிட்டு விட்டீர்கள் என்றால் நீங்கள் கவலை இல்லாமல் விளையாட்டுத் தனத்துடன் இருக்கின்ற எண்ணத்தை கைவிட்டு விட்டீர்கள் என்று தான் அர்த்தமாகும். ஆனால் மூளையின் மூலம் மட்டுமே தொடர்பு கொள்கின்ற அநேகம் பேர்களுக்கு இது தான் நடக்கப் போகிறது. இது குறித்து ஜாக்கிரதையாக இருங்கள்.

*உங்களது உறுதியினால், கலப்படமற்ற உங்களது*
*தூய்மையான நம்பிக்கையினால் மட்டுமே உங்களது*
*கண்ணாடி பளபளப்பாக ஆகிறது.*

*உங்களைச் சுற்றி நீங்கள் அணிந்துள்ள*
*பொய்விலங்குகளை உடைத்தெறிந்து விடுதலை*
*அடையுங்கள், ஏனெனில் நீங்கள் களி மண்ணில்*
*இருந்து விடுதலை அடைந்துவிடும்போது நீங்கள்*
*சுதந்திரமாக இருப்பீர்கள்.*
*உடல் இருள் நிறைந்து இருக்கிறது*
*இதயம் நன்றாக பிரகாசித்துக் கொண்டிருக்கிறது;*
*உடலானது வெறும் கலப்பு எரு உரம்*
*இதயம் ஒரு மலர் நிறைந்த தோட்டம்.*

உங்களது தலையோடு உங்களை ஐக்கியப்படுத்தாமல் இருங்கள். உங்களது உடலோடும் உங்களை ஐக்கியப் படுத்தாமல் இருங்கள். நீங்கள் உங்களது நிறை கவனம் என்பதைத் தவிர வேறு எதுவாகவும் இல்லை. ஆனால் இதற்கு நீங்கள் உங்களது உடலுக்கு எதிரானவர்களாக இருக்கவேண்டும். என்பது அர்த்தமாகாது. சூஃபிக்கள் உடலுக்கு எதிரானவர்களும் கூட அல்ல, அவர்கள் உடலை நேசிப்பவர்கள். ஏனெனில் உடலானது கலப்பு எரு உரம். அது நறுமணமாக ஆக முடியும், அது உருமாற்றம் செய்யப்பட வேண்டும்.

.......... **இதயம் ஒரு மலர் நிறைந்த தோட்டம்.** இதயம் என்னும் தோட்டத்தில் இருந்த உடலானது ஒரு கலப்பு எரு உரம் போன்று செயல்புரிய வேண்டும். ஒருவர் உடலுக்கு எதிராகவோ அல்லது தலைக்கு எதிராகவோ இருக்கக் கூடாது. வாசல் வரையில் உங்களது தலையை பயன்படுத்துங்கள்; மண்ணாக ஆகிவிடும் படிக்கு உங்களது உடலை பயன்படுத்துங்கள்.

ஆனால் நிறைந்த இதயம் என்னும் மலர், இதயம் விழிப்பு நிறைந்திருத்தல் என்னும் மலர் உங்களுக்குள் மலர வேண்டும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். மேலும் அது எந்த தருணத்திலும் மலரலாம். நீங்கள் செய்ய வேண்டியது எல்லாம் உங்களைச் சுற்றி நீங்கள் இணைத்துள்ள சங்கிலிகளை கைவிட்டு விடுவது மட்டுமேயாகும்; உங்களது பாதுகாப்பு, உங்களது கவசம், உங்களது தற்காப்பு ஆகியவற்றை கைவிட்டு விடுவதே யாகும்.

**உங்களைச் சுற்றி நீங்கள் அணிந்துள்ள பொய் விலங்குகளை உடைத்தெறிந்து விடுதலை அடையுங்கள்; ஏனெனில் களிமண்ணில் இருந்து விடுதலை அடைந்து விடும்போது நீங்கள் சுதந்திரமாக இருப்பீர்கள்.** நாம் மண்ணோடு, இந்த உடலோடு, களி மண்ணோடு, நம்மை அதிகமாக ஐக்கியப் படுத்தி விட்டோம். நாம் பொருளோடு நம்மை அதிகம். ஐக்கியப்படுத்தி விட்டோம், நாம் வெறும் சாட்சி பாவனை என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல என்பதை மறந்து விட்டோம். அந்த சாட்சி பாவனை தான் உங்களது முடிவான உண்மை நிலை. அது உங்களது உடனடி உண்மை நிலையாகவும் ஆகட்டும், அப்போது நீங்கள் உங்களது இதயத்தின் தோட்டமாக ஆகிவிடுவீர்கள். நீங்கள் மலர்ந்து விடுவீர்கள். நீங்கள் மாபெரும் தாமரை மலராக, மாபெரும் தங்கத் தாமரை மலராக மலராத வரையில் உங்களது வாழ்க்கையானது வீணானது.

இதைத்தான் லை-குர் சனாயிடம் கூறினார். ''முட்டாள் அரசர்களுக்கு துதிப்பாடல்கள் பாடிக்கொண்டு உங்களது வாழ்க்கையை வீணாக்காதீர்கள். கடவுள் விரைவில் உங்களை நேருக்கு நேர் எதிர் கொள்வார். அப்போது நீங்கள் பதில் சொல்ல

முடியாமல் இருப்பீர்கள். இனிமேலும் குருடராக இருக்காதீர்கள். ஏதாவது செய்யுங்கள். உங்களது கண்களைத் திறந்து பாருங்கள்'' என்று சனாயிடம் கூறினார்.

சனாய் அதை கவனமாகக் கேட்டார் எனவே அவர் மாற்றம் அடைந்தார். நான் சொல்வதையும் கேளுங்கள். நீங்களும் கூட மாற்றம் அடைந்து விடுவீர்கள்.

இன்று இது போதும்.

*முதல் கேள்வி:*

*ஓஷோ,*

*இன்று நான் உங்களைப் பார்த்தபோது நான் என்னைப்பற்றி பொய்யானவன், போலித்தனமானவன் மற்றும் குறுகியமனதினன் என்பதாக உணர்ந்தேன். எனக்குள் ஆழத்தில் எதுவும் இல்லாதது போன்று தெரிகிறது. நான் இன்னமும் ஒரு மையத்தை பெறவில்லை என்பதைத் தான் இந்த உணர்வுகள் காட்டுகின்றனவா? இந்த நொடிப் பொழுதில் இது தான் எனது முகமாக இருப்பது தெரிந்து என்னை அதிர்ச்சி அடையச் செய்கிறது.*

ஒரு மையம் என்பது இல்லாமல் யாரும் இருப்பதில்லை. மையம் என்பது இல்லாமல் வாழ்க்கை சாத்தியப்படாது. நீ அதுகுறித்து உணராமல் இருக்கலாம் அது வேறு விஷயம். அந்த மையத்தை உருவாக்க வேண்டியது இல்லை. ஆனால் அதை திரும்பவும் கண்டுபிடிக்க வேண்டும். நான் கண்டுபிடிக்க வேண்டும் என்று கூறாமல் திரும்பவும் கண்டு பிடிக்க வேண்டும் என்று கூறுவதை நினைவில் கொள்.

தாயின் கருவறையில் இருக்கின்ற குழந்தையானது அந்த மையம் குறித்து முற்றிலும் விழிப்புணர்வுடன் இருக்கிறது. தாயின் கருவறையில் உள்ள குழந்தையானது மையத்தில் தான் இருக்கிறது. மையத்தில் தான் அதிர்கிறது, மையத்தில் தான் துடிக்கிறது. தாயின் கருவறையில் குழந்தை தான் மையம், அவனுக்கு இன்னமும் சுற்றுப்பரப்பு ஏற்படவில்லை. அவன்

வெறும் சாரமாக மட்டுமே இருக்கிறான், இன்னமும் அவனுக்கு தனிமனிதப் பண்பு இல்லை.

சாரம் தான் மையமாக இருக்கிறது. அது தான் உனது இயல்பாக உள்ளது. அது தான் இந்த பிரபஞ்சத்தால் உனக்கு கொடுக்கப்பட்டது. தனிமனிதப் பண்பு என்பது மையத்தை சுற்றி உள்ள மேற்பரப்பு. அது இந்த சமுதாயத்தினால் பேணி வளர்க்கப்படுகிறது; அது இயற்கையால் கொடுக்கப்படுவது கிடையாது. அது வளர்ப்பினால் வருவது. இயற்கையால் வருவது அல்ல.

ஒரு குழந்தையானது கருவறையை விட்டு வெளியே வரும்போது, அது முதல் முறையாக வெளியே உள்ள ஒன்றோடு தொடர்பு கொள்கிறது. அந்த தொடர்புதான் சுற்றுப்புறத்தை உருவாக்குகிறது. மெதுவாக, மெதுவாக இந்த சமுதாயமானது அந்த குழந்தையை அதன் சொந்த வழிகளில் முதன் முதலில் ஆரம்பித்து வைக்கிறது. கிறிஸ்தவ சமுதாயம் அந்த குழந்தையை ஒரு கிறிஸ்தவனாக ஆக்குகிறது; ஒரு இந்து சமுதாயம் ஒரு இந்துவாக ஆக்குகிறது. இப்படியே எல்லா இடத்திலும் நடக்கிறது. அதன் பின்னர் அந்த குழந்தையின் மீது ஒன்றன் மீது ஒன்றாக சமுதாய கட்டுத்திட்டங்கள் அடுக்கடுக்காக திணிக்கப்படுகின்றன.

அடிப்படையாக, நீ நன்றாக அபிவிருத்தி செய்யப்பட்ட ஒரு தனிமனிதப் பண்பிற்குள் நுழைந்தால், நீ பின்வரும் இந்த மூன்று விஷயங்களையும் காண்பாய். முதலில் மிகவும் மெல்லிய நேர்மறையான ஒரு அடுக்கு. இது நேர்மறையானது ஆனால் போலித்தனமானது. அந்த அடுக்கு தான் ஊடுருவிக் கொண்டே செல்கிறது. அந்த அடுக்கில் தான் உனது முகமூடிகள் எல்லாம் உள்ளன. ஃபிரிட்ஜ் பெர்ல்ஸ், இந்த அடுக்கினை ''எரிக் பெர்னே அடுக்கு'' என்று அழைக்கிறார். இங்கு தான் நீ எல்லா விதமான விளையாட்டுகளையும் விளையாடுகிறாய்.

நீ உள்ளுக்குள் அழுது கொண்டிருப்பாய், ஆனால் அந்த அடுக்கில் நீ புன்முறுவல் பூத்துக் கொண்டு இருப்பாய். நீ முழு

கோபத்தில் இருக்கலாம், நீ அடுத்தவனை கொலை செய்வதற்கு கூட விரும்பலாம், ஆனால் நீ இனிமையானவனாக இருந்து கொண்டு செல்வாய். மேலும், ''நீ வந்தது மிகவும் நல்லது. நான் மிகவும் சந்தோஷமடைகிறேன். உன்னைப் பார்ப்பதில் மிகுந்த மகிழ்ச்சி,'' என்று நீ கூறுவாய். உனது பொய் முகம் சந்தோஷத்தை காட்டுகிறது. அது போலித்தனமானது.

ஆனால் ஒரு போலித்தனமான சமுதாயத்தில் வாழ்வதற்கு உனக்கு ஒரு போலித்தனமான அடுக்கு அவசியம் தேவைப் படுகிறது; அப்படி இல்லையெனில் சாக்ரட்டீஸ் இருந்ததைப் போல, இயேசு இருந்ததைப் போல, நான் இருப்பதைப் போல நீயும் மிகுந்த கஷ்டத்தில் இருப்பாய். அந்த போலித்தனமான அடுக்கானது இந்த போலித்தனமான சமுதாயத்தின் ஒரு அங்கமாக உன்னை வைத்துக்கொண்டு இருக்கிறது. நீ அதை விட்டு விலகி நிற்பதில்லை. அது ஒரு பொய்யான உலகம், கீழைநாடுகளில் நாங்கள் அதை மாயை என்று அழைக்கிறோம். அது கற்பனையானது, அது முழுவதும் பொய்யானது, போலித் தனமானது.

அடுத்த மனிதரும் கூட உங்களைப் போல பொய்யாக புன்முறுவல் பூக்கிறார். யாரும் புன்சிரிப்பு சிரிப்பதில்லை. மக்கள் காயங்களைச் சுமந்து கொண்டு செல்கின்றனர். ஆனால் அவர்கள் தங்களின் காயங்களை மலர்களால் அலங்கரித்துள்ளனர், அவர்கள் தங்களின் காயங்களை மலர்களுக்கு பின்னால் மறைந்து வைத்துள்ளனர்.

இந்த அடுக்கினை குழந்தைகளுக்கு கொடுப்பதற்கு பெற்றோர்கள் அவசரம் காட்டுகின்றனர். அவர்கள் அவசரப்படுகின்றனர் ஏனெனில் ஒரு குழந்தையானது ஒரு பொய்யான சமுதாயத்தில் ஒரு அங்கத்தினராக இருக்க வேண்டும் என்பதை அவர்கள் அறிவார்கள். அது இல்லாமல் ஒரு குழந்தை உயிர் வாழ்வது கடினம், இது சமுதாயத்தோடு உராய்வு ஏற்படாமல் தடுப்பதற்கு ஒரு மசகு எண்ணெய் போன்று செயல்படுகிறது.

இந்த அடுக்கானது மிகவும் மெல்லியது, தோலின் ஆழம் மட்டுமே உள்ளது. யாராவது ஒருவரைக் கொஞ்சம் சுரண்டிப் பார்த்தால் திடீரென்று அங்கிருந்த மலர்கள் மறைந்து விடுவதை நீங்கள் காண்பீர்கள், மேலும் கோபம், வெறுப்பு, இப்படி எல்லா விதமான எதிர்மறையான விஷயங்களை எல்லாம் அதன் பின்னால் மறைத்து வைக்கப்பட்டிருக்கும். இது தான் இரண்டாம் அடுக்கு, எதிர்மறையானது என்றாலும் கூட பொய்யானது.

முதல் அடுக்கினை விடவும் இரண்டாம் அடுக்கு தடிமன் ஆனது. இந்த இரண்டாம் அடுக்கில் தான் நிறைய காரியங்களை நாம் செய்தாக வேண்டும். இதில் தான் உளவியல் சிகிச்சைகள் வருகின்றன. மேலும் நேர்மறையான அடுக்கின் பின்னால் மிகப்பெரிய எதிர்மறை அடுக்கு இருப்பதால், நீ அதனுள் செல்வதற்கு எப்போதும் பயப்படுகிறாய், ஏனெனில் அப்படி நீ உள்ளே செல்வது என்றால் நீ அந்த அசிங்கமான விஷயத்தின் குறுக்கே வந்தாக வேண்டும். வருடம் முழுவதும் உனது ஒட்டு மொத்த வாழ்க்கையில் நீ சேர்த்து வைத்துள்ள அழுக்கடைந்த குப்பைகளை நீ கண்ணால் பார்த்தாக வேண்டியதிருக்கும்.

இந்த இரண்டாம் அடுக்கு எங்கிருந்து வருகிறது? குழந்தையானது எந்த விதமான இரட்டைத்தன்மையும் இல்லாத, கள்ளம் கபடமற்ற, தூய்மையான மையத்துடன் பிறக்கிறது. அவன் ஏகனாக இருக்கிறான். அவன் ஒன்றான புதிர் நிலையில் இருக்கிறான், இந்த பிரபஞ்சத்தில் இருந்து தான் தனியானவன் என்பதை அவன் இன்னமும் அறிந்திருக்கவில்லை. அவன் அதோடு ஒன்றிணைந்து வாழ்கிறான், அவன் எந்த ஒரு பிரிவையும் அறிந்ததில்லை. அவனுக்கு நான் என்றும் தன்முனைப்பு இன்னமும் எழவில்லை.

ஆனால் இந்த சமுதாயமானது உடனடியாக அந்த குழந்தை மீது காரியமாற்ற ஆரம்பிக்கிறது. அது அந்த குழந்தையிடம், ''இதை நீ செய்யாதே. இதை இந்த சமுதாயம் ஏற்றுக் கொள்ளாது. எனவே இதை அடக்கிக்கொள். இதைச் செய் ஏனெனில் இதை இந்த சமுதாயம் ஏற்றுக்கொள்ளும் அப்போது நீ மதிக்கப்

படுவாய், நேசிக்கப்படுவாய், பாராட்டப்படுவாய்,'' என்று கூறுகிறது.

ஆகவே குழந்தையிடம் இரட்டைத்தன்மை உருவாக்கப்படு கிறது; மேற்பரப்பில் இரட்டைத்தன்மை எழுகிறது. முதல் அடுக்கானது நீ மற்றவர்களிடம் காட்ட வேண்டிய நேர்மறையான அடுக்காக இருக்கிறது, மேலும் இரண்டாம் அடுக்கானது நீ உனக்குள் மறைத்து வைத்துக் கொள்ள வேண்டிய எதிர்மறை அடுக்காக இருக்கிறது.

குழந்தை கள்ளம் கபடமற்று இருக்கிறது. அவனது அன்பில் அவன் கள்ளமின்றி இருக்கிறான்; அவன் தனது கோபத்தில் கள்ளம் கபடமின்றி இருக்கிறான். அவன் எந்த ஒரு வேறுபாட் டையும் உண்டாக்குவதில்லை. அவன் அன்பு சொரியும் போது அவன் அன்பில் இருக்கிறான், அவன் அன்பில் முழுமையாக இருக்கிறான். அவன் கோபப்படும் போது அவன் முழுமையாக கோபப்படுகிறான். அவன் வெறும் தூய்மையான கோபமாக இருக்கிறான், அது தான் குழந்தையின் அழகு. அவன் கோபப்படும் போதும் கூட அவன் உயர்ந்த அழகும், அருளும் கொண்டவனாக இருக்கிறான். அவனது கோபத்தில் கூட அப்படி இருக்கிறான் ஏனெனில் அவனது கோபத்தில் முழுமை இருக்கிறது. வளர்ந்தவர்கள் அன்பு செலுத்தும் போதும் கூட அந்த அளவுக்கு அழகானவர்களாக இருப்பதில்லை ஏனெனில் அவர்களிடம் முழுமையானது காணாமல் போய்விடுகிறது.

நாம் குழந்தையிடம், ஒவ்வொரு குழந்தையிடமும், ஒரு பிரிவினையை உருவாக்கி விடுகிறோம். நமது சமுதாயமானது இதுவரை ஒரு வகையான மனப் பிளவினில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. உண்மையான மனித இனம் இன்னமும் பிறக்கவில்லை. ஒட்டு மொத்த கடந்த காலமும் ஒரு பயங்கரமான களவு போன்று இருந்துள்ளது, ஏனெனில் நாம் மனிதர்களை இரண்டாக பிளந்து விட்டோம்; ஆம் மற்றும் கூடாது; அன்பு மற்றும் வெறுப்பு; என்று மனிதனை பிளவுபடுத்தி விட்டோம். நாம் அவனது முழுமையை அழித்து விட்டோம்.

இந்த இரண்டு அடுக்குகளும் நம்மால் பிளவுபடுத்தப் பட்டது. முதல் அடுக்கு நேர்மறையானதாகவும் ஆனால் பொய்யானதாகவும் உள்ளது; இரண்டாம் அடுக்கானது எதிர்மறையானதாகவும் பொய்யானதாகவும் இருக்கிறது. அவை பொய்யானவைகளாக இருக்கின்றன. ஏனெனில் முழுமையானது மட்டுமே உண்மையானதாக இருக்க முடியும். பிளவு பட்டது எப்போதுமே பொய்யானதாகவே இருக்கும். ஏனெனில் அரை குறையாக இருப்பது ஏதோ ஒன்றை ஒதுக்கித் தள்ளுகிறது. ஏதோ ஒன்றை மறுத்து விடுகிறது. எனவே அப்படி மறுக்கப்பட்ட பகுதியானது அதை பொய்யானதாக ஆக்கி விடுகிறது. முழுமை யாக ஏற்றுக் கொள்வதில் மட்டுமே உண்மையானது எழுகிறது.

மையமானது உனக்குள் இருக்கிறது. ஆனால் நீ இந்த இரண்டு அடுக்குகளையும் தோண்டிக் கொண்டு போக வேண்டும். நேர்மையான மற்றும் போலியான, எதிர்மறையான மற்றும் போலியான ஆகிய இரண்டையும் தோண்டிக் கொண்டு செல்ல வேண்டும். ஆனால் அதன் பின்னர் நீ இந்த கடல் போன்ற ஏகத்துவத்தில், முழுமையில், ஒட்டு மொத்தத்தில் வீழ்ந்து விடுவாய். அதன் பின்னர் மாபெரும் பேரானந்தம் எழுகிறது. அதுதான் சட்டோரி என்பதாகும். இதை நீ உருவாக்க வேண்டிய அவசியம் கிடையாது. அது ஏற்கனவே அங்கு உள்ளது. அதை நீ கண்டுபிடிக்கக் கூட வேண்டியதில்லை. அதை நீ திரும்பக் கண்டுபிடிக்க வேண்டியதுதான். நீ அதை ஏற்கனவே அறிவாய், அதனால் தான் இந்த தேடுதல். இல்லையெனில் இந்தத் தேடுதல் சாத்தியப்படாது.

மக்கள் ஏன் பேரானந்தத்தை தேடிப் போகிறார்கள்? ஏனெனில் அவர்கள் அதை அறிந்திருக்க வேண்டும். அவர்களுக்குள் அடி ஆழத்தில் இன்னமும் அந்த ஞாபகம் இருக்கிறது. தாயின் கருவறையில் எல்லாமே அமைதியாக, அசையாமல் இருந்த போது, எல்லாமே ஒன்றாக இருந்த போது, கவலை, பொறுப்பு என்பது இல்லாதபோது, அடுத்தவர் என்பது இல்லாதபோது இருந்த அந்த இனிய தருணங்கள் இன்னமும் நினைவில் இருக்கின்றன. அது ஒரு சொர்க்கமாக இருந்தது.

ஏதேன் தோட்டம் என்று குறிப்பிடுவதற்கு அது தான் அர்த்தம். கருவறை தான் ஏதேன் தோட்டம்.

ஆனால் நீ கருவறைக்குள் எப்போதுமே வாழ முடியாது; கூடிய விரைவில் நீ கருவறையை விட்டு வெளியே வந்தாக வேண்டியதிருக்கும். எனவே நீ கருவறையை விட்டு வெளி வருகின்ற அந்த நொடிப்பொழுதில், இந்த சமுதாயமானது கண்டிப்பாக உனக்கு கற்றுக் கொடுக்க வேண்டும். இந்த சமுதாயம் மற்றும் கல்வி ஆகியவை இன்னமும் மனித இனத்துக்குரியதாக இல்லை. இது நரம்புக் கோளாறு உள்ளதாக இருக்கிறது. இது கற்காலத்தை சார்ந்ததாக உள்ளது. ஏனெனில் இது அந்த குழந்தையானது அவனது மையத்தில் வளர்வதற்கு உதவுவதாக இல்லை. அந்த குழந்தையானது மையத்தில் விழிப்புணர்வுடன் இருக்கும்படி வளர்வதற்கு உதவுவது கிடையாது. ஆனால் அதற்கு நேர்மாறாக, அந்த குழந்தையானது எல்லா வழிகளிலும் அதன் மையத்தை மறந்து விட்டு இந்த சமுதாயம் அந்த குழந்தைக்கு கொடுக்கின்ற பொய்யான தனிமனிதப் பண்போடு தன்னை ஐக்கியப்படுத்திக் கொள்கிறது.

இந்த சமுதாயத்திற்கு குழந்தை மீது ஆர்வம் கிடையாது. இந்த சமுதாயமானது தனது சொந்த சமுதாய அமைப்பை பராமரிப்பதிலேயே ஆர்வத்துடன் இருக்கிறது. இந்த சமுதாயமானது தனிமனிதனிடம் ஆர்வத்துடன் இல்லை; அது தனிமனிதர்களுக்கு எதிரானது, அது ஒன்று சேர்ந்த கூட்டத்திற்கு ஆதரவானது. ஆனால் இந்த ஒன்று சேர்ந்த கூட்டமானது நோயுற்றதாக ஆகிவிட்டது, அது அசிங்கமானதாக ஆகிவிட்டது. இந்த சமுதாயமானது கடந்த காலத்தை நோக்கமாக கொண்டது ஆனால் தனிமனிதன் எதிர்காலத்தை நோக்கமாக கொண்டிருக்கிறான். தனிமனிதன் எதிர்காலம் என்பதில் வாழ்ந்தாக வேண்டியதிருக்கிறது ஆனால் இந்த சமுதாயத்திற்கு தான் வாழ்ந்த அந்த கடந்த காலம் மட்டுமே தெரிகிறது. சமுதாயத்திற்கு எதிர்காலம் என்பதைப் பற்றி கவலை இல்லை; சமுதாயமானது கடந்த காலத்தை மட்டுமே வைத்துள்ளது. அது கடந்த காலத்தை குழந்தை மீது கட்டாயமாகத் திணித்துக் கொண்டே போகிறது.

எனது பார்வையில், ஒரு உண்மையான மனித சமுதாயத்தில், குழந்தையின் மீது எதுவும் திணிக்கப்பட மாட்டாது. திணிக்கப்படவே மாட்டாது. அதற்காக குழந்தையானது அப்படியே தனியாக விடப்பட்டு விடும் என்பதாகாது. அப்படி கிடையாது. அவனுக்கு உதவி செய்யப்படும், ஆனால் எதுவுமே அவன் மீது திணிக்கப்படாது. அவன் முழுமையானவனாக இருப்பதற்கு உதவப்படுவான், இந்த மனித வாழ்க்கையின் சாராம்சத்தில் அவன் வேர் ஊன்றி இருப்பதற்கு அவன் உதவி செய்யப்படுவான். அவன் தனது தன்னுணர்வை தனது சாராம்சத்தில் இருந்து தனது தனிமனிதப் பண்பிற்கு மாற்றுவதற்கு கட்டாயப்படுத்தப்பட மாட்டான். எதிர்கால கல்வியானது தனிமனிதப் பண்புக்கான கல்வியாக இருக்கிறது. அது அவனது சாராம்சம் குறித்த கல்வியாக இருக்கும்.

மேலும் அது தான் சமயம் சார்ந்த கல்வி என்பதற்கான அர்த்தமாகும். இதுவரை சமயக்கல்வி என்பது இங்கு இல்லை. நீங்கள் சமயக்கல்வி என்று அழைப்பது எல்லாம் கிறிஸ்தவம், இந்து அல்லது முகமதியம் என்பதாக இருக்கிறது; அது சமயக்கல்வி அல்ல அது மதக்கோட்பாட்டு கல்வி. சமயக் கல்வியானது அந்த குழந்தையானது அவனுக்கும் ஏற்கனவே அவன் என்னவாக இருக்கிறான் என்பதை நினைவு படுத்துவதாக இருக்கும், அதை மறந்து விடுவதாக இருக்காது.

உண்மையான கல்வியானது அந்த குழந்தையை அதிகம் தியானிப்பவனாக ஆக்கிவிடும். எனவே அவன் ஒருபோதும் அவனது ஆன்மாவுடனான தொடர்பை இழந்து விடமாட்டான். அவன் அந்தத் தொடர்பை இழந்து விடுவதற்கான சாத்தியங்கள் உள்ளன. ஏனெனில் அவன் மற்றவர்களோடு சேர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பான், அவன் மற்றவர்களை பார்த்து அதன்படி அப்படியே வாழ்வதற்கு ஆரம்பிப்பான். அவன் மற்றவர்களிடமிருந்து அநேக விஷயங்களை கற்றுக் கொள்ள வேண்டியதிருக்கும். அப்படி அவன் கற்றுக் கொள்ளட்டும், ஆனால் அவன் யாரையும் போன்று தான் பாசாங்கு செய்து கொண்டு வாழக் கூடாது என்பதையும் குறித்து அவன் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும்.

ஆனால் இதைத்தான் வெறுமனே செய்து வந்திருக்கிறார்கள். காலம் காலமாக மற்றவர்களைப் போன்று பாசாங்கு செய்து வாழ வேண்டும் என்றுதான் சொல்லிக் கொடுக்கப்பட்டுள்ளது. நாம் பாசாங்குக்காரர்கள் ஆகிவிடும்படி குழந்தைகளுக்கு கற்றுக் கொடுக்கிறோம். ''இயேசு போன்று இரு, சாக்ரட்டீஸ் போன்று இரு, புத்தர் போன்று இரு'' என்று சொல்கிறோம். ஒரு குழந்தை யானது எப்போதுமே உண்மையில் அவனாக மட்டுமே இருக்க முடியுமே தவிர அவனால் வேறு யாராகவும் இருக்க முடியாது. அவன் என்ன தான் முயற்சி செய்தாலும் அது பொய்யான தாகவும், போலித்தனமானதாகவும் ஆகிவிடும்.

''இன்று நான் உங்களைப் பார்த்தபோது நான் என்னைப் பற்றி பொய்யானவன், போலித்தனமானவன், குறுகிய மனதினன் என்பதாக உணர்ந்தேன்'' என்று நீ என்னிடம் கூறுகிறாய்.

இது நல்லது. நீ இதை உணர்ந்தது அளவுகடந்த அழகானது. இது தான் ஆரம்பம். இப்படி நீ போலியானதைக் குறித்து விழிப்புணர்வு உள்ளவன் ஆகிவிட்டால், உண்மை நிலை குறித்து உன்னால் நீண்ட காலத்திற்கு விழிப்புணர்வு இல்லாமல் இருக்க முடியாது. நீ போலித்தனமாக இருக்கிறாய் என்பதை தெரிந்து கொண்டதற்கு, உண்மை நிலையை நீ எங்கேயோ தெரிந்து கொள்ள ஆரம்பித்து விட்டாய் என்று அர்த்தமாகும். அது ஒருவேளை தெளிவற்றதாக, மேக மூட்டத்துடன் கூடியதாக, தெளிவாக பார்க்க முடியாததாக, கலங்கியதாக இருக்கலாம். ஆனால் ஆரம்பம் என்பது ஆரம்பித்து விட்டது. (பொய்யை பொய் என்று தெரிந்து கொள்வது தான் உண்மையை உண்மை என்று அறிந்து கொள்வதற்கான ஆரம்பமாகும்.) இது ஒரு நல்ல ஆரம்பம், ஒரு மங்களகரமான ஆரம்பம்.

''எனக்குள் ஆழத்தில் எதுவும் இல்லாதது போன்று தெரிகிறது'' என்று நீ கூறுகிறாய். இப்படி ''எனக்குள் ஆழத்தில் எதுவும் இல்லாதது போன்று தெரிகிறது'' என்று நீ உணர்ந்து கொள்வதானது நீ ஆழத்தை நோக்கி செல்வதற்கான முதல் படியாகும். பல கோடி மக்கள் தங்களது குறுகிய மனப்பான்மை

தான் தங்களது ஆன்மா என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். தங்களது குறுகிய மனப்பான்மைக்கு ஆழம் உள்ளது என்று அவர்கள் நினைக்கிறார்கள். இப்படி அவர்கள் அதை நம்பிக்கொண்டே செல்வதால், அவர்கள் தங்களின் உண்மை நிலையை தவற விட்டுக் கொண்டே செல்கின்றனர்.

எனவே இப்படிப்பட்ட பொய்யான, போலித்தனமான, உண்மையற்ற, மற்றும் மேம்போக்கானவை குறித்து உனக்கு விழிப்புணர்வை உண்டாக்குவது தான் இங்கு எனது வேலை யாகும். நீ போலித்தனமானவன் என்று முதன் முறையாக உணரும் போது அது உன்னைக் காயப்படுத்தும், ஏனெனில் எப்போதுமே நீ இதற்கு நேர் எதிரான ஒன்றாக இருப்பதாகவே நம்பிக் கொண்டு இருந்தாய். நீ மிகமிக ஆழமானவன், உண்மையானவன், உனக்கு உயரமும் ஆழமும் உண்டு என்கிற எண்ணத்தோடு நீ எப்போதும் இருந்து வருகிறாய், ஆனால் நீ எதையும் பெற்றிருக்கவில்லை.

இப்போது நீ இருக்கிற நிலையில், நீ எந்தவிதமான ஆழத்தையும் பெற்றிருக்கவில்லை, நீ எந்த விதமான உயரத்தையும் பெற்றிருக்கவில்லை. நீ ஒரு தனிமனிதனாக இருக்கிறாய்; நீ இன்னமும் உனது சாராம்சம் குறித்து அறியவில்லை. ஆனால் உனது சாரம்சத்திற்கு மட்டுமே உயரங்களும் ஆழங்களும் இருக்க முடியும். ஆனால், ''நான் குறுகிய மனப்பான்மையுடன் இருக்கிறேன்'' என்று நீ உஷார் ஆவது மிகவும் நல்லது, அபரிமிதமான முக்கியத்துவம் வாய்ந்தது, சிறப்பான இயல்புடையது. மீண்டும் இதை மறந்து விடாதே, இதை நினைவில் வைத்துக் கொள். இது உன்னை காயப்படுத்தும், உனது இதயத்தில் ஒரு வலியாக இது இருக்கும், இது ஒரு காயம் போன்று ஆகிவிடும். ஒரு அம்பானது உள்ளே துளைத்துக் கொண்டு மேலும் மேலும் ஆழமாக செல்வது போன்று இருக்கும், இது அதிக வேதனை மிக்கதாகவும் இருக்கும்.

ஆன்மிகத்தை தேடுகின்ற ஒவ்வொருவரும் இந்த பயணத்தில் சென்றாக வேண்டும். நீ மறுபிறவி எடுப்பதற்கு அந்த வேதனை அவசியம் தேவை. இதை நீ மறந்து விடாதே. மீண்டும்

நீ உனது போலித்தமான தனிமனிதப் பண்பினை நம்புவதற்கு ஆரம்பித்து விடாதே.

இது வரை நீ எப்படிப்பட்டவன் என்று நீ நினைத்துக் கொண்டு இருக்கிறாயோ அப்படிப்பட்டவனாக நீ இல்லை. நீ முற்றிலும் வேறுபட்ட ஒருவன். இந்த உடல் நீ அல்ல. நீ உடலினுள் இருக்கிறாய் ஆனால் நீ இந்த உடல் அல்ல. மேலும் நீ இந்த மனமும் கூட அல்ல; மனம் என்பது அங்கு உள்ளது ஆனால் நீ அந்த மனதிற்கு வெகு அப்பால் இருக்கிறாய். நீ சாட்சியாளனாக இருக்கிறாய்.

''நான் என்னை குறுகிய மனதினனாக உணர்கிறேன்'' என்று நீ கூறுகிறாய். அதை உணர்ந்தது யார்? அதை நினைவில் வைத்துக் கொள். அந்த குறுகிய மனமே, தான் குறுகியமனமாக இருக்கிறேன் என்று உணர முடியாது. ஆழம் என்பது குறித்து அதற்கு எந்த எண்ணமும் இருக்காது. இது குறுகியதாக உள்ளது என்று எப்படி அதனால் உணர முடியும்?

துன்பமே, துன்பத்தை உணர முடியாது, வேறு யாரோ ஒருவர் அதற்கு தேவை, இன்பத்தின் நிலையை உணர்ந்த யாரோ ஒருவர் தேவை. அந்த ஒருவரால் மட்டுமே துன்பம் குறித்து தெரிந்து கொள்ள முடியும். நோயே, நோயைப் பற்றி அறிந்து கொள்ள முடியாது. ஆரோக்கியம் மட்டுமே நோயை நோயாக உணர முடியும். இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்.

''நான் குறுகிய மனதினன், நான் போலித்தனமானவன், பொய்யானவன், எனக்குள் எந்த ஒரு ஆழமும் இல்லை'' என்று தெரிந்து கொள்பவன் யார்? இது யார்? இந்த சாட்சியாளன் தான் நீ. இதுதான் உனது மையம்; உனது தனி மனிதப் பண்பில் ஏற்பட்ட குழப்பத்தினால் தான் உனது இந்த மையம் எழுந்துள்ளது. இது ஒரு மாபெரும் தருணம், மாபெரும் வரங்கள் நிறைந்த தருணம். இந்த பாதையை விட்டுவிடாதே. இந்த பயணமானது எவ்வளவு தான் வேதனை மிக்கதாக இருந்தாலும் கூட ஒருவன் இதில் பயணம் செய்தாக வேண்டும் ஏனெனில் அந்த பயணத்தின் முடிவானது முற்றிலும் பேரானந்த மானதாக இருக்கும்.

இந்த தியாகத்தை ஒவ்வொரு சந்நியாசியும் செய்தாக வேண்டும். உண்மை நிலை என்னும் பலி பீடத்தில் போலித் தனத்தை தியாகம் செய்தாக வேண்டும்.

***இரண்டாம் கேள்வி:***

***ஓஷோ,***

> ***அமைதியாக இருப்பது ஏன் கடினமானதாக இருக்கிறது? எனது வார்த்தைகள் இயந்திரத்தனம் ஆனதாகவும் பயன்படுத்தப்பட்டதாகவும் இருக் கின்றன. வரலாறுகளின் ஒரு தொடர் ஒப்பித்தலாக இருக்கிறது: இப்போது இல்லாத அதே பழைய கடந்த காலம் சார்ந்ததாக இருக்கிறது. இருந்தும் நான் எப்படி இதனால் களைப்படையாமல் இருக்கிறேன்?***

அமைதியாக இருப்பது கடினமானது. ஏனெனில் அமைதியில் ஒருவன் மறைந்து போய்விடுகிறான். கூச்சலில் மட்டுமே உன்னால் நான் என்னும் தன்முனைப்போடு இருக்க முடியும். நான் என்னும் தன்முனைப்போடு நீ இருப்பதற்கு கூச்சல் தான் அதற்கு உணவாக உள்ளது. நீ அதில்தான் உயிர்வாழ்கிறாய், நீ அதில் தான் வாழ்கிறாய், எனவேதான் அமைதியாக இருப்பது என்பது கடினமானதாக இருக்கிறது.

அமைதியாக இருக்கவேண்டும் என்று மக்கள் நினைக்க ஆரம்பிக்கும் போது, அந்த அமைதியானது வரும்போது அவர்கள் அங்கு இருந்து கொண்டு அந்த அமைதியை சந்தோஷமாக அனுபவிப்பார்கள் என்கிற எண்ணத்தை பெற்றிருக்கின்றனர். அந்த எண்ணம் முற்றிலும் தவறானது; உண்மை நிலை குறித்த விஷயங்கள் பற்றி எதுவும் உனக்கு தெரியாது, அமைதி வரும் போது நீ அங்கு இருக்கமாட்டாய், நீயும் அமைதியும் ஒன்று சேர்ந்து இருக்க முடியாது. கூச்சல் தான் நீ என்பதாக இருக்கின்றாய், ஆகவே அமைதி வரும் போது அங்கு அமைதி மட்டுமே இருக்கிறது.

அமைதியாக இருப்பவர் என்று யாரும் இல்லை; அந்த அமைதியை சந்தோஷமாக அனுபவிக்கின்றவரும் அங்கு இருக்க முடியாது. அமைதி என்பது ஒரு அனுபவம் அல்ல. ஏனெனில் அங்கு அனுபவிப்பவர் இருப்பதில்லை. அது முற்றிலும் அமைதியாக இருக்கிறது. அங்கு யாரும் இருப்பதில்லை. சூஃபிக்கள் அதை ஃபானா என்று அழைக்கின்றனர், கரைந்து போதல் என்று அழைக்கின்றனர். புத்தர் அதை நிர்வானா அதாவது மெழுகுவர்த்தியை அணைத்துவிடுதல் என்று அழைக்கிறார். எல்லாமே போய்விடுகிறது. அங்கு வெறுமை மட்டுமே உள்ளது. ஒரு வகையான எந்த ஒரு விஷயமும் இல்லாத ஒரு நிலை உள்ளது.

நீங்கள் உங்களை ஒரு ஆன்மாவாக கண்டு கொள்ள முடியாது; அதனால் தான் இந்த கஷ்டம். நீ அமைதியாக இருக்கவேண்டும் என்றால் உனது 'நான்' என்பது மரணமடைய வேண்டும். யார் மரணமடைய விரும்புவார்கள்? அமைதியை நாம் ஒரு அலங்காரப் பொருளாக, ஒரு பதக்கம் போன்று விரும்புகிறோம். அப்போது தான் நாம், "நான் பணத்தை மட்டும் பெற்றிருக் வில்லை, நான் தியானத்தையும் கூட பெற்றிருக் கிறேன்" என்று பெருமையாக பேசிக் கொள்ள முடியும். அப்போது தான் நாம் "வெளி உலகில் மட்டும் நான் பணக்கார னாக இல்லை, நான் அக உலகிலும் கூட பணக்காரன்" என்று தம்பட்டம் அடித்துக் கொள்ள முடியும். அமைதியைத் தேடுவதற்கான முதல் ஆர்வமானது ஆணவத்தில் இருந்து எழுகிறது. ஆனால் அந்த ஆணவம் தான் தடையாக இருக்கிறது.

எனவே நீ ஒரு குருவோடு தொடர்பு கொள்ளும் போது, அல்லது ஒரு சக்தி தளத்திற்குள் வரும் போது உனக்கு பயம் வருகிறது. கூச்சல் மறைந்து போய்விடும் போது நீயும் கூட மறைந்து போய்விடுவாய் என்கிற விஷயம் உனக்கு தெரிகிறது. அந்த அளவுக்கு உயிரைப் பணயம் வைப்பதற்கு நீ தயாராக இருக்கிறாயா?

"அமைதியாக இருப்பது ஏன் கடினமானதாக இருக்கிறது?" என்று நீ கூறுகிறாய், ஏனெனில் நீ கூச்சலில் தான் ஆர்வமுடன்

இருக்கிறாய். ''எனது வார்த்தைகள் இயந்திரத்தனம் ஆனதாகவும், பயன்படுத்தப்பட்டதாகவும் இருக்கின்றன, வரலாறுகளின் ஒரு தொடர் ஒப்புவித்தலாக இருக்கிறது. இப்போது இல்லாத அதே பழைய கடந்த காலம் சார்ந்ததாக இருக்கிறது'' என்றும் நீ கூறுகிறாய். மனம் என்பது கடந்த காலத்தை தவிர வேறு எதுவாகவும் இல்லை. மனம் என்பது எல்லாவற்றையும் பதிவு செய்கின்ற ஒரு இயந்திர நுட்பம். இது தான் உனது வரலாறு, இது தான் இப்போது இல்லாத ஒன்று. இது நினைவு என்பதாக இருக்கிறது. ஆனால் இந்த நினைவு தான் ஒரு ஆணவமாக உன்னை உயிரோடு வைத்துக் கொண்டு இருக்கிறது. எனவே நீ அந்த நினைவை மீண்டும் மீண்டும் திருப்பி ஒப்பிவித்து கொண்டு இருக்கிறாய். இது உனக்கு உதவுகிறது, இது உனக்கு ஆதரவு அளிக்கிறது. உனது நான் என்னும் தன் முனைப்பை உயிர்ப்பிப் பதற்கு நீ மீண்டும் மீண்டும் உனது கடந்த காலத்திற்குள் போக வேண்டும்; இந்த வழியில் தான் நீ அதை பேணி வளர்க்க முடியும்.

(உனது கடந்த காலம் முழுவதும் கைவிடப்பட்டு விட்டால், இந்த நொடிப் பொழுதில் நீ யாராக இருப்பாய்? ஒரு நொடிப் பொழுது கொஞ்சம் யோசித்துப்பார், உனது கடந்த காலம் முழுவதும் ஒரு மந்திரக் கோலினால் முழுவதுமாக அழிக்கப் பட்டுவிட்டால் உன்னால் 'நான்' என்று கூற முடியுமா? கடந்த காலம் மறைந்து விடும் போது, இந்த நான் என்பதும் அதோடு மறைந்து போய்க் கொண்டு இருக்கும். நீ இருப்பாய் ஆனால் 'நான்' என்று சொல்ல முடியாமல் இருப்பாய். நீ வெறுமனே ஒரு அமைதியாக, வெறுமையான ஒவியத்துணியாக, ஒரு தியானமாக, ஒரு அமைதியாக, ஒரு அசைவற்ற நிலையாக இருப்பாய், ஆனால் அங்கு 'நான்' என்பது இருக்காது.)

கொஞ்சம் கொஞ்சமாக ஒரு நிமிடத்தில் உனது கடந்த காலத்தை நீக்கிவிட்டு வெறுமனே சிந்தித்துப்பார். உனது கடந்த காலத்தை கைவிட்டு விட்டு அதன் பின்னர் உனக்குள் யார் இருக்கிறார்கள்? என்று பார். எதுவுமே இருக்காது. அல்லது வெறுமை மட்டுமே இருக்கும். அந்த வெறுமைதான் நீ. அந்த வெறுமைதான் உனது உண்மை நிலை, உனது சாராம்சம்.

ஆகவே உனது நான் என்னும் தன்முனைப்பானது செயல்பட்டுக் கொண்டே இருக்க வைப்பதற்கான ஒரு இயந்திர நுட்பமாக உள்ளது. நீ அதை திரும்பத்திரும்ப செய்ய வேண்டும், நீ மீண்டும் மீண்டும் அதே வார்த்தைகள், அதே நினைவுகள், வீடு திரும்ப வேண்டும் என்கிற அதே பேரவாலுடன் இருந்தாக வேண்டும். நீ அந்த நினைவுகளை அபிவிருத்தி செய்து கொண்டும்,பளபளப்பாக்கிக் கொண்டும் இருக்க வேண்டும். ஒருபோதும் உன்னிடம் இல்லாத விஷயங்களை நீ புதிதாக கண்டு பிடிப்பாய்; உண்மையில் அழகாக இல்லாத உனது கடந்த காலத்தை ஒரு அழகான தோட்டம் போன்று தெரியும்படி உனது கடந்தகாலத்தை ஆக்குவாய். அசிங்கமானவற்றை நீ கைவிட்டு விடுவாய், கடந்தகாலத்தை நீ மீண்டும் மீண்டும் திரையிட்டு பார்த்துக்கொண்டு இருப்பாய்.

மக்கள் தங்களது கடந்த காலத்தையும் கூட புதிதாக கண்டு பிடித்துக்கொண்டே போகிறார்கள். அவர்கள் அதை எந்த அளவுக்கு அழகானதாகவும், செழிப்பானதாகவும் ஆக்க முடியுமோ அந்த அளவுக்கு அதை செய்கிறார்கள் ஏனெனில் அங்குதான் அவர்களின் ஆணவம் இருக்கிறது. ஒவ்வொருவரும் தங்களது குழந்தைப் பருவம், மிகவும் அழகாக இருந்ததாக நினைக்கின்றனர். குழந்தைப்பருவம் மிகவும் அழகாக இருந்தது. ஆனால் அந்த குழந்தைப் பருவத்தை நீ நினைவில் வைத்திருக்கவே இல்லை. பிறந்த பிறகு முதல் இரண்டு, மூன்று வருடங்கள் அழகாக இருந்தாய். ஆனால் அதுவும் கூட உனது ஞாபகத்தில் இல்லை.

நீ ஞாபகத்தில் வைத்திருக்கின்ற குழந்தை பருவத்தின் நான்காம் ஆண்டிற்கு பிறகு அது அழகானதாகவே இல்லை. உனது வாழ்க்கையும் அந்த காலக் கட்டம் தான் மிகவும் கடினமாக ஒன்றாக இருந்தது. ஏனெனில் அப்போதுதான் நீ இந்த சமுதாய அமைப்பிற்குள் வலுக்கட்டாயமாக தள்ளப்பட்டு, அங்கும் இங்கும் இழுக்கப்பட்டாய், இப்படியும் அப்படியும் நீ வெட்டப்பட்டாய், நீ அந்த சமுதாய இயந்திரத்திற்கு தக்கபடி சரி செய்யப்பட்டாய். கிட்டத்தட்ட நீ அப்போது அழிக்கப்பட்டு

விட்டாய். நீ மற்றவர்களால் கையாளப்பட்டாய். எந்த ஒரு குழந்தையும் அதை விரும்புவதில்லை. ஒவ்வொரு குழந்தையும் எதிர்க்கிறது, கோபம் கொள்கிறது, புரட்சி செய்கிறது ஆனால் அது உதவியற்று உள்ளது. இறுதியாக பெற்றோர்கள் ஜெயித்து விடுகின்றனர். இந்த சமுதாயமும் ஜெயித்து விடுகிறது.

அந்த நாட்கள் அசிங்கமானவை என்பதை மீண்டும் ஞாபகத்தில் வைத்திரு. அவற்றில் எந்த பொன்னான நினைவுகளும் இல்லை. ஆனால் பின்னாளில் ஒவ்வொருவரும் அந்த குழந்தை பருவத்து நாட்கள் அழகாக இருந்ததாக நினைக்கிறார்கள். அது உங்களது கண்டு பிடிப்பு. மக்கள் தங்களது எதிர்காலத்தை மட்டும் நீட்டித்துப் பார்ப்பதில்லை, தங்களது கடந்த காலத்தையும் கூட நீட்டித்துப் பார்க்கிறார்கள். அவர்கள் அதற்கு வர்ணம் தீட்டுகிறார்கள், பளபளப்பாக்குகிறார்கள், மீண்டும் மீண்டும் அதை தொட்டுப் பார்க்கிறார்கள். இப்படி மெதுவாக மெதுவாக அவர்கள் தங்களின் கடந்த காலத்தை ஒரு கற்பனை பூமியாக ஆக்கிவிடுகிறார்கள். அதன்பிறகு அவர்கள் நன்றாக இருப்பதாக உணர்கின்றனர். அவர்களது நான் என்னும் தன்முனைப்பானது அவர்களின் அழகான கடந்த காலத்தால் தாங்கிப் பிடிக்கப்படுகிறது. அழகான கடந்த காலத்தினால் அவர்களின் ஆணவம் அழகானதாக ஆகிறது.

மக்கள் எழுதுகின்ற சுயசரிதைகளை வெறுமனே பாருங்கள். அந்த சுயசரிதைகளில் உண்மையான ஒன்றையும் உங்களால் கண்டு கொள்ளமுடியாது. அல்லது அப்படியே நீங்கள் ஏதாவது உண்மையைக் கண்டு கொண்டாலும் கூட அது அடுத்தவர்களைப் பற்றியதாகத்தான் இருக்குமே தவிர அது அந்த சுயசரிதையை எழுதியவரைப் பற்றியதாக இருக்காது. அடுத்தவர்களைப் பற்றியே அது இருக்கும், ஆனால் அவர்களைப் பற்றி இருக்காது.

எல்லா சுயசரிதைகளும் கற்பனை என்னும் இனத்தைச் சார்ந்தவை, மக்கள் அதைக் கண்டு பிடிக்கின்றனர். சுய சரிதைகளை நீங்கள் கற்பனைக் கதைகளில் தான் கணக்கில் கொள்ள வேண்டும். வேறு எதிலும் எடுத்துக் கொள்ள கூடாது. ஏனெனில் நீங்கள் உங்களது குழந்தைப் பருவத்தைப் பற்றி

பின்னாளில் தான் எழுதுகிறீர்கள். குழந்தை பருவம் உங்களது வெறும் கண்டுபிடிப்பு, உங்களது எல்லா அனுபவங்களோடும், உங்களது எல்லா அறிவாற்றலோடும், நீங்கள் வாழ்ந்த ஒட்டு மொத்த வாழ்க்கையோடும், நீங்கள் ஒரு குழந்தைப்பருவத்தை உருவாக்குகிறீர்கள். நீங்கள் வாழ்வதற்கு விரும்பிய ஒரு குழந்தை பருவத்தை நீங்கள் உருவாக்குகிறீர்கள். அது ஒரு அழகாக புதினம்.

அதை ஒருவர் திரும்பத் திரும்ப நினைத்தாக வேண்டும். பொய்கள் எப்போதும் திரும்பத் திரும்ப நினைவுபடுத்தப்பட வேண்டும். அப்படி இல்லை எனில் நீங்கள் அவற்றை மறந்து விடுவீர்கள் என்பதை நீ நினைவில் கொள். அதனால் தான் உனக்கு நல்ல நினைவாற்றல் இருந்தால்தான் நீ பொய் சொல்ல வேண்டும் என்று கூறப்படுகிறது. உண்மை பேசுகின்ற ஒரு மனிதனுக்கு நல்ல நினைவாற்றல் தேவை இல்லை. அதற்கான அவசியம் கிடையாது; உண்மை உண்மை தான், இடைவிடாமல் பொய் கூறுகின்ற ஒரு மனிதனுக்கு உண்மையில் ஒரு நல்ல நினைவாற்றல் தேவை. பொய்கள் மீண்டும் மீண்டும் ஒப்புவிக்கப் பட வேண்டும், அப்போது மட்டுமே அவற்றால் உயிருடன் இருக்க முடியும். இல்லை யெனில் அவை மறைந்துவிடும்.

''நான் அதே கடந்த காலத்தில் மீண்டும் மீண்டும் ஏன் இயந்திரத்தனமாக செல்கிறேன். எனது பழைய பழக்கங்களை மீண்டும் மீண்டும் ஏன் செய்கிறேன்?'' என்று நீ என்னிடம் கேட்கிறாய். ஏனெனில் அவற்றை உயிருடன் வைத்திருப்பதற்கு இது தான் வழியாகும், இல்லையெனில் அது அதற்கே உரித்தான வழியில் மறைந்து விடும்.

இதை நீ புரிந்து கொள்ள வேண்டும். உனது கடந்த கால நினைவுகளில் கலந்து கொள்வதை நீ நிறுத்தி விட்டால், கடந்த காலமானது இயந்திரத்தனமாக திரும்பத் திரும்ப நினைவுக்கு வந்தால், அதை கவனித்துப்பார், அதோடு ஒத்துழைக்காதே. அதிலிருந்து சக்தியை நீ எடுத்துக் கொள்வதை காண்பாய். மெதுவாக மெதுவாக நீ அதை கவனிக்கும் போது அது கீழே விழ

ஆரம்பித்து விடுகிறது. உனது கவனித்தலானது முழுமை யானதாக ஆகிவிடும் போது கடந்த காலம் மறைந்து போகிறது.

இப்படி கடந்த காலம் மறைந்து போவது தான் சட்டோரி அதாவது சமாதி நிலையின் ஒரு சிறிய காட்சி எனப்படுகிறது. ஏனெனில் உனது தனிமனிதப்பண்பு, உனது நான், உனது ஆணவம், உனது ஆன்மா, கடந்தகாலத்தில் தான் இருக்கிறது. கடந்த காலத்தோடு அவையும் மறைந்து விடுகின்றன. அப்போது நீ உனது உயிர் உணர்வின் முக்கிய மையத்தை நோக்கி நீ திரும்பவும் தூக்கி வீசப்படுகிறாய். மீண்டும் நீ கள்ளம் கபடமற்றவனாக ஆகிவிடுகிறாய், மீண்டும் நீ ஒரு குழந்தையாக ஆகிவிடுகிறாய். ''நீங்கள் சிறு குழந்தை களைப் போல இல்லாத வரையில் எனது கடவுளின் ராஜ்ஜியத் திற்குள் உங்களால் நுழைய முடியாது'' என்று இயேசு கூறுவதற்கு இதுதான் அர்த்தம்.

அவர் எந்த ராஜ்ஜியத்தைப் பற்றி பேசுகிறார்? அவர் உனக்குள் உள்ள அந்த ராஜ்ஜியத்தைப்பற்றி, உனக்குள் உள்ள அந்த மையம், அல்லது சாராம்சம் அல்லது அதை நீ என்ன பெயரிட்டு வேண்டுமானாலும் அழைத்துக் கொள் ஆனால் அவர் அதைப் பற்றித் தான் பேசுகிறார்.

ஒரு ரோஜா என்றுமே ரோஜாவாகத்தான் இருக்கிறது. நீங்கள் என்ன பெயரிட்டு அழைத்தாலும் அது அதற்கு ஒரு பொருட் டாகாது.

அந்த குழந்தைப் பருவத்தை திரும்பப் பெற முடியும், திரும்ப கண்டு பிடிக்க முடியும். அந்த வெள்ளை உள்ளம், கள்ளம் கபடமற்ற அழகை நீங்கள் மீண்டும் உங்களுடையதாக ஆக்கிக் கொள்ள முடியும். அது முன்பு இருந்ததை விடவும் இப்போது மிகவும் செழிப்பானதாக இருக்கும், ஏனெனில் இப்போது நீ அது குறித்து முழு விழிப்புணர்வுடன் இருப்பாய், நீ தன்னுணர்வுடன் கூட இருப்பாய். தன்னுணர்வுடன் ஒரு குழந்தை போன்று இருப்பது ஒரு புனிதர் போன்று இருப்பதாகும்.

ஆறு வயதுடைய ஒரு சிறுவன், ஐந்து வயதுடைய தனது தோழிச் சிறுமியோடு தாங்கள் இருவரும் திருமணம் செய்து

கொள்ளப் போகிறோம் என்கிற செய்தியோடு அவனது தாயாரிடம் சென்ற கதை ஒன்று உள்ளது.

அவனது தாயார் அந்தச் சிறுவனிடம், ''சரி பணத்திற்கு நீ என்ன செய்யப் போகிறாய்?'' என்று கேட்டாள்.

அதற்கு அந்தச் சிறுவன், ''எனக்கு வாரத்திற்கு பத்து சென்ட் படி கிடைக்கிறது. மேரிக்கு வாரத்திற்கு 5 சென்ட் படி கிடைக்கிறது'' என்றான்.

''அப்படியானால் நீயும் அவளும் எங்கு வசிப்பீர்கள்?''

''நல்லது, ஒருவாரம் நாங்கள் நம் வீட்டிலும், அடுத்த வாரம் நாங்கள் மேரியின் வீட்டிலும் வசிப்பதாக நாங்கள் நினைக்கிறோம்.''

''உங்களுக்கு குழந்தை பிறந்தால் என்ன செய்வீர்கள்?'' என்றாள் தாய், உடனே அந்த சிறுவன், ''நல்ல வேளை, இதுவரை நாங்கள் அதிர்ஷ்டம் உள்ளவர்களாக இருக்கிறோம்!'' என்றான்.

அந்த கள்ளம் கபடமற்ற தன்மை இன்னமும் உனக்குள் எங்கோ உள்ளது. அந்த முழுமை, அந்த அழகான அறியாமை இன்னமும் உனக்குள் எங்கோ உள்ளது. உனது தனிமனிதப் பண்பின் அநேக அடுக்குகளுக்கு பின்னால் மறைந்து உள்ளது. அந்த அடுக்குகள் மீண்டும் மீண்டும் தங்களை வெளிப் படுத்திக் கொண்டு உள்ளன.

உனது மனம் இப்படி திரும்பத்திரும்ப நினைவுபடுத்துவதை கவனித்துப் பார். சில சமயம் அது வார்த்தைகளை மாற்றினாலும் கூட அது அதே விஷயத்தைத் தான் திரும்பத் திரும்ப கொண்டு வருகிறது. அது சிலசமயம் பழக்க வழக்கங்களை மாற்றினாலும் கூட, அது அதே விஷயத்தை அதே விளையாட்டை வெவ்வேறு பொம்மைகளைக் கொண்டு விளையாடுகிறது. நீ புகைப் பிடிப்பதை விட்டு விடலாம் அதன் பின்னர் நீ சூயிங்கம்மை வாயில் ஆசைபோட ஆரம்பித்து விடுவாய். உனது மனதின் முற்றிலும் அசைவற்ற இயல்பினை கவனித்துப் பார். உனது

தன்னுணர்வு அசலானது, மனம் என்பது அசலற்றது, எப்போதும் திரும்பத் திரும்ப நினைவுக்கு வருவது.

படைவீரர்களின் முகாமிற்கு ஒரு தந்தி வந்தது. படைவீரர் ஜோன்ஸின் தாயார் இறந்து விட்டார். அன்று மாலை சார்ஜென்ட் மேஜர் பயிற்சியில் உள்ள வீரர்களைப் பார்த்து,

''கவனியுங்கள்! ஜோன்ஸ், உனது தாயார் இறந்துவிட்டாள். சரியா?

வீரர்கள் கலைந்து போகலாம்'' என்றார்.

அப்பாவி ஜோன்ஸ் மனம் உடைந்து கவலைப்பட்டான். அடுத்த நாள் அந்த படையின் கமாண்டிங் அதிகாரி, சார்ஜென்ட் மேஜரை அழைத்து, ''இப்போது, மரணம் பற்றி ஒரு வார்த்தை. ஒரு வீரரின் பெற்றோர் இறந்து விட்டால், அவரால் தன்னை உண்டாக்கியவரை சந்திக்க முடியாமல் போகிறார். எனவே நீங்கள் அந்த செய்தியை கொஞ்சம் அதிகக் கனிவுடன் கூறுவது மிகவும் ஒழுக்கமானதாக இருந்திருக்கும். கொஞ்சம் மென்மை யாக இருங்கள். நான் கூறுவது என்ன என்று புரிகிறதா? அணுகு முறையை மாற்றுங்கள். நீங்கள் இப்போது போகலாம்'' என்றார்.

ஒரு மாதம் கழித்து அந்த அப்பாவி ஜோன்ஸின் அப்பா இறந்து விட்டார். தனது அதிகாரி தனக்கு கூறியதை கவனத்தில் வைத்துக் கொண்டு இப்போது வேறு அணுகுமுறையைக் கையாள வேண்டும் என்று நினைத்தார்.

அன்று மாலை அவர் வீரர்களை அழைத்து ''கவனியுங்கள்! அப்பா இருப்பவர்கள் அனைவரும் ஒரு அடி முன்வைத்து வாருங்கள் என்றார். உடனே,'' ஜோன்ஸ், எந்த நரகத்திற்கு நீ போவதாக நினைத்துக் கொண்டிருக்கிறாய்?'' என்றார்.

இது எந்த வேறுபாட்டையும், உண்டாக்காது. மனம் என்பது செய்ததையே செய்யும். மனம் என்பது பழைய கிராம போன் ரிக்கார்டு போன்றது. நீ வார்த்தைகளை மாற்றலாம், நீ பழக்க வழக்கத்தை மாற்றலாம். அது அப்படியே தான் இருக்கும். இந்த

உலகத்தின் மனிதன் ஒருவன் அடுத்த உலகத்தை பற்றி நினைக்கிறான். ஆனால் அது அப்படியே தான் உள்ளது.

உங்களது புனிதர்கள் அநேகம் பேர்களை நான் பார்த்திருக்கிறேன், ஆனால் அவர்களிடம் எந்த வேறுபாட்டையும் நான் கண்டதில்லை. அவர்கள் மடாலயங்களில் வசித்தாலும் கூட அவர்கள் இன்னமும் சந்தைக் கடையில் உள்ளவர்கள் போன்று தான் இருக்கிறார்கள். அவர்கள் உருவத்தை மட்டுமே, மேம்போக்கான உருவத்தை மட்டும் மாற்றி உள்ளனர். ஆனால் மனமானது அப்படியே தான் இருக்கிறது. எந்த வேறுபாடுமே இல்லை. அவர்கள் பழைய அதே விளையாட்டுகளை புதிய பெயர்களோடு விளையாடிக் கொண்டு இருக்கிறார்கள். அதில் அவர்கள் முழு திருப்தியுடன் உள்ளனர்.

உங்களது புனிதர்களுக்காக நான் எப்போதும் ஆழ்ந்த இரக்கம் கொண்டுள்ளேன், அவர்கள் உண்மையிலேயே பரிதாபத்துக்குரியவர்கள். நான் ஒரு புனிதரைப் பார்க்கும் போதெல்லாம், எனக்குள் ஆழத்தில் ''அப்பாவி மனிதன்'' என்று நான் கூறுவதுண்டு. ஏனெனில் தான் மாற்றமடைந்த ஒரு ஆன்மா என்று அவர் நினைத்துக் கொண்டு இருக்கிறார். அவர் மாற்றமடைந்தவர் அல்லர். முதலில் அவர் பணத்தின் பின்னால் ஓடிக் கொண்டிருந்தார், இப்போது அவர் பணத்தைக் கண்டால் ஓடுகிறார். ஆனால் அவரது ஓட்டம் இன்னமும் தொடர்கிறது. முதலில் அவர் இந்தப் பெண் அல்லது அந்தப் பெண் மீது ஆசையோடு இருந்தார், இப்போது அவர் இடைவிடாமல் பெண்களைக் கண்டால் பயப்படுகிறார். ஆனால் இன்னமும் அவர் அதே எண்ணத்தோடு தீவிர உணர்வுடன் இருக்கிறார். அவர் அதற்கு எதிராகவோ அல்லது ஆதரவாகவோ இருப்பது எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தி விடாது. அவர் அதே இலக்கை நோக்கி தான் மனதைக் குவிக்கிறார். முதலில் அவர் காமத்தில் இருந்தார், இப்போது அவர் காமத்திற்கு எதிராக இருக்கிறார், ஆனால் காமம் அல்லது காமம் இல்லாமல் இருப்பதற்கான பொருள் அதே பொருளாகத்தான் இருக்கிறது.

ஆகவே நீ இந்த உலகினை விரும்புகிறாயா அல்லது நீ இந்த உலகினை துறவு கொள்கிறாயா என்பது அதிக வித்தியாசத்தை உருவாக்கி விடாது. உனது மனதின் வழிகளை, அது எப்படி திரும்பத் திரும்ப செயல்புரிகிறது என்பதை நீ புரிந்து கொள்ளாத வரையில் அது அதிக வித்தியாசத்தை உண்டாக்கி விடாது. கவனித்துப் பார். வெறுமனே கவனிப்பதைத் தவிர வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை. பழைய பாதையில் மனமானது நகர்ந்து செல்கின்ற சூட்சுமமான வ:ழிகளை எல்லாம் கவனித்துப்பார். வெறுமனே கவனித்துக் கொண்டே போ. கொஞ்சம் கொஞ்சமாக அந்த கவனிப்பாளன் உயரத்தில் எழுகிறான், அந்த கவனிப்பாளன் மலையின் உச்சியில் இருந்து கவனிக்கிறான், அப்போது மனமானது வெகு தொலைவில் பின்னால் விட்டு விடப் படுகிறது.

ஆழத்தில் உள்ள பள்ளத்தாக்கில் அது தொடர்ந்து இருக்கிறது; அது தனது பழைய பதிவுகளை போட்டு பார்த்துக் கொண்டே உள்ளது. ஆனால் அதன் பின்னர் அது ஒருபோதும் நீயாக இருக்க மாட்டாய். நீ ஒருபோதும் அதில் இருக்கமாட்டாய். உனக்கு தேவைப்படும் போது நீ அதை பயன்படுத்த முடியும். உனக்கு தேவை இல்லாத போது அதைப் பற்றி எல்லாம் நீ மறந்து விடவும் முடியும்.

உங்களிடம் பேசும் போது நான் எனது மனதைப் பயன்படுத்தியாக வேண்டும்; வேறு வழி கிடையாது. ஆனால் எனது அறைக்கு நான் சென்றுவிடும் போது எனது மனதை நான் அமைதியாக்கி விடுகிறேன். எனவே மனதை வேலை செய்ய வைக்கிறீர்களா அல்லது அதை அமைதியாக வைக்கிறீர்களா என்பது தான் கேள்வியாகும். மனம் ஒரு நல்ல இயந்திர நுட்பம், அதை பயனுள்ளதாக பயன்படுத்த முடியும். ஆனால் மனமானது உனக்கு எஜமான் ஆகி அது உன்னைப் பயன்படுத்த ஆரம்பிக்கும் போது மட்டுமே பிரச்சினை எழுகிறது.

அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. மனம் எஜமான் ஆகிவிட்டது. மேலும் தன்னுணர்வு என்பது முற்றிலும் இழக்கப் பட்டு விட்டது. உனது தன்னுணர்வை திரும்பப் பெறு. அதிக

விழிப்புணர்வும், கவனமும் உடையவனாக ஆகிவிடு. செய்யக் கூடியமிகச் சிறந்த விஷயம் உனது சொந்த மனதைக் கவனிப்பதே ஆகும். உனது மனதின் கண்ணுக்கு புலப்படாத, மிகவும் நுட்பமான செயல்பாடுகளையும், அது எப்படி விளையாட்டுகளை விளையாடுகிறது என்பதையும் வெறுமனே கவனித்துப்பார்.

அந்த விளையாட்டுகளை மாற்றிவிடு என்றும் கூட நான் கூறவில்லை, ஏனெனில் நீ அதை மாற்றுவதில் ஆர்வம் உள்ளவனாக ஆகி விட்டால், நீ கவனிப்பதை மறந்து விடுவாய். அதனால் தான் நான் எனது சந்நியாசிகளிடம், "இந்த உலகை விட்டு வெறியேறிவிடுங்கள்," என்று கூறுவதில்லை. "நீங்கள் எங்கு இருக்கிறீர்களோ அங்கேயே வசியுங்கள்" என்று நான் கூறுகிறேன். சில சமயம் அது விநோதமானதாக தெரிகிறது.

சில மாதங்களுக்கு முன்பு இங்கு பிரெஞ்சு நாட்டைச் சேர்ந்த விலை மாது வந்திருந்தாள். அவள் சந்நியாசம் வாங்க விரும்பினாள் ஆனால் கூடவே அவள் பயமும கொண்டாள். அவள் ஒரு விலைமாது என்பதை நான் அறிந்தால் அவளுக்கு நான் சந்நியாசம் கொடுக்க மாட்டேன் என்று நினைத்து பயந்தாள். ஆனால் அவள் உண்மையில் ஒரு நேர்மையான ஆத்மா, அவளால் அதை மறைக்க முடியவில்லை. எனவே இதைத்தான் நான் புனிதத்தன்மை என்று அழைக்கிறேன். அவள் என்னிடம், "நான் இதை உங்களிடம் இருந்து மறைக்கக் கூடாது. நான் ஒரு விலைமாது என்பதை உங்களிடம் சொல்லியாக வேண்டும். அப்படி இருந்தும் கூட நீங்கள் எனக்கு சந்நியாச தீட்சை கொடுப்பீர்களா?" என்று கேட்டாள்.

அதற்கு நான், "இதற்கு முன்பு நான் மறுத்திருக்கலாம், ஆனால் இப்போது உன்னை என்னால் மறுக்க முடியாது. உனது கள்ளம் கபடமற்ற உள்ளம், உனது நேர்மை என்னை மறுக்க முடியாமல் செய்துவிட்டது. இதைப்பற்றி யாரும் உன்னிடம் கேட்கவில்லை, நீயாகவே முன்வந்து இதைச் சொல்லி இருக்கிறாய். இது மிகவும் அழகான விஷயம். நான் உனக்கு தீட்சை அளிக்கிறேன்" என்று கூறினேன்.

அதன் பின்னர் அவளது மனதில் வேறு ஒரு பிரச்சினை எழுந்து விட்டது. சில மாதங்களுக்கு பிறகு அவள் தனது நாட்டிற்கு திருப்பி போகும் போது என்னிடம், ''இப்போது நான் என்ன செய்ய வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? நான் ஒரு விலைமாது. அதுதான் எனது தொழில். அது மட்டுமே எனக்கு தெரிந்த தொழில். இப்போது நான் என்ன செய்யப் போகிறேன்? நீங்கள் எனக்கு ஏதாவது குறிப்புகளைக் கொடுக்க முடியுமா?'' என்று கேட்டாள்.

உடனே நான் அவளிடம், ''உனக்கு குறிப்புகளை கொடுப்பதற்கு நான் யார்? வெறுமனே போ, போய் நீ என்ன செய்து வந்தாயோ அதையே செய். இப்போதிருந்து வெறுமனே அதைக் கவனித்துப் பார்?'' என்று கூறினேன்.

அதற்கு அவள், ''அப்படியானால் நான் எனது விலைமாது தொழிலை தொடரலாம் என்று அர்த்தம் கொள்கிறீர்களா?'' என்று கேட்டாள்.

உடனே நான், ''அது முக்கியமல்ல, விலை மாதுவாக தொடர்வதா அல்லது விலை மாதுவாக தொடராமல் இருப்பதா என்பது ஒரு பொருட்டல்ல, நீ இந்த தொழிலை விட்டுவிட்டு ஒரு கன்னியாஸ்திரி ஆனாலும் உனது மனமானது அதே விலைமாது மனமாகத்தான் இருக்கும். நீ எங்கு இருக்கிறாய் என்பது கேள்வி அல்ல. ஒரு மடத்தில் கன்னியாஸ்திரியாக இருக்கிறாயா அல்லது வெளி உலகில் ஒரு விலைமாதாக இருக்கிறாயா, என்பது ஒரு விஷயமே அல்ல. இதில் உள்ள விஷயம், ஒட்டு மொத்த விஷயம் ஒன்றே ஒன்றைத் தான் கொண்டுள்ளது அதாவது நீ எங்கு இருந்தாலும் உனது மனதை நீ கவனித்துப் பார். இப்போது விழிப்புணர்வுடன் இரு. கவனித்தல் என்னும் ஒளி எப்போதும் அங்கே இருக்கட்டும். ஆனால் அப்படி நீ கவனித்து பார்ப்பதால் உன்னிடம் ஏதாவது சில மாற்றங்கள் நடந்தால் அது வேறு விஷயம். அது நடக்கத்தான் போகிறது'' என்று கூறினேன்.

அது நடக்கவும் செய்தது. ஆனால் அது துறவறம் அல்ல; அது எதையும் துறவறம் கொள்ளுதல் அல்ல. உன்னிடம் உள்ள

ஒன்று தானாகவே உதிர்ந்து கொள்கிறது. ஏதோ ஒன்று அர்த்தமற்றதாகி தானாகவே கீழே விழுந்து விடுகிறது. உன்னால் அதை மேலும் பிடித்து வைத்துக் கொண்டு இருக்க முடியாது. ஏனெனில் அது அந்த அளவுக்கு அர்த்தமற்றதாக தெரியும்.

எனது சந்நியாசிகள் இந்த உலகில் அவர்கள் எப்படி இருக்கிறார்களோ அப்படியே இருக்க வேண்டும். நான் கற்பிப்பது எல்லாம் அதிக உஷாராக, விழிப்புணர்வுடன், முழு கவனத்துடன் இருக்க வேண்டும் என்பது தான். மேலும் அப்படி முழு கவனத்துடன் இருப்பதன் மூலம் ஏதாவது மாற்றம் உன்னிடம் ஏற்பட்டால் அது நல்லது. அது நீ தேர்ந்தெடுத்தது அல்ல, உனது தேர்ந்தெடுத்தல் இல்லாமல் அந்த மாற்றம் தானாகவே நிகழ்கிறது.

''அமைதியாக இருப்பது ஏன் கடினமாக இருக்கிறது?'' என்று நீ கேட்கிறாய். ஏனெனில் நீ இன்னமும் உனது நான் என்னும் தன்முனைப்பை பிடித்து தொங்கிக் கொண்டு இருக்கிறாய், நீ மரணடைய பயப்படுகிறாய். ''எனது வார்த்தைகள் இயந்திரத்தன மானதாகவும், பயன்படுத்தப்பட்டதாகவும் இருக்கிறது'' என்று நீ கூறுகிறாய். எல்லாருடைய வார்த்தைகளும் இயந்திரத்தன மாகவும், பயன்படுத்தப்பட்டதாகவும் உள்ளது. ''எனது வார்த்தைகள் வரலாறுகளின் ஒரு தொடர் ஒப்பித்தலாகவும், இப்போது இல்லாத அதே பழைய கடந்த காலம் சார்ந்ததாகவும் இருப்பதாக,'' நீ கூறுகிறாய். ஆம். அதே கதை தான் எல்லாரிடமும் உள்ளது. அதைப்பற்றி கவலைப் படாதே. ஏதோ தனியாக உள்ள ஒன்றினால் நீ கஷ்டப்படவில்லை. இது வெறுமனே மனிதனின் சாதாரண நோய் தான், மனம் என்று அழைக்கப்படுகின்ற சாதாரண நோய் தான், இது மிகவும் சாதாரணமானது, சகஜமானது.

''இருந்தும் எப்படி நான் இதனால் களைப்படையாமல் இருக்கிறேன்?'' என்று கேட்கிறாய். ஏனெனில் நீ இன்னமும் அதை கண்டுபிடித்துக் கொண்டு இருக்கிறாய். உன்னால் எப்படி களைப்படைய முடியும்? நீ அதை இன்னமும் அபிவிருத்தி செய்து கொண்டே இருக்கிறாய், நீ இன்னமும் அங்கும் இங்கும்

கொஞ்சம் வர்ணம் தீட்டிக் கொண்டு இருக்கிறாய். நீ இன்னமும் அதில் காரியமாற்றிக் கொண்டு இருக்கிறாய். இது உனது படைப்பு. வர்ணம் பூசுதல் இன்னமும் முடிவடைய வில்லை. அது நடந்துகொண்டு இருக்கிறது. அதனால்தான் உனக்கு சலிப்பு ஏற்படவில்லை. நீ அதை இன்னும் அதிகமாக தொடர்ந்து அபிவிருத்தி செய்து கொண்டும், நேர்த்தியாக்கிக் கொண்டும், அதை மென்மையானதாகவும் அழகானதாகவும் ஆக்கிக் கொண்டு இருந்தால் உனக்கு சலிப்பு ஏற்படாது. நீ ஒருபோதும் சலிப்படைய மாட்டாய்.

அதோடு ஒத்துழைப்பதை விட்டுவிடு, அதோடு ஒத்துழைப்பு கொடுக்காமல் இருப்பதற்கு நீ விழிப்புணர்வு உள்ளவனாக ஆகிவிடுவது மட்டுமே வழியாகும். அதன் பின்னர் உடனடியாக ஒத்துழைப்பு மறைந்து விடும். வெறுமனே இதை முயற்சி செய்து பார். உனக்கு கோபம் வருகிறது. அந்த கோபம் குறித்து விழிப்புணர்வு கொள். அந்த கோபத்தை நிறுத்தும் படியோ அல்லது அந்த கோபத்தை கைவிடும் படியோ நான் கூற வில்லை. வெறுமனே அது குறித்து விழிப்புணர்வு கொள். கோபம் அங்கு இருப்பதைப் பார். அது அங்கு எழுந்து கொண் டிருப்பதை கவனி, நீ அதனால் சூழப்பட்டு இருப்பதையும், கோபமானது ஒரு மேகம் போன்று உன்னைச் சூழ்ந்து கொண்டு ஆனால் நீ மூச்சு திணறுவதையும் கவனித்து பார். அதை கவனித்துக் கொண்டே செல். வேறு எதையும் செய்யாதே.

நீ ஏதாவது செய்கின்ற அந்த நொடிப் பொழுதிலேயே நீ உனது முழு கவனத்தை இழந்து விடுகிறாய். செய்தல் என்றால் நீ அதில் ஈடுபடுகிறாய் என்று அர்த்தம், செய்தல் என்றால் நீ அதோடு ஒத்துழைப்பு கொடுக்கிறாய் என்று அர்த்தம். மேலும் இரண்டு விதமான ஒத்துழைப்புகள் உள்ளன. ஒன்று அதற்கு ஆதரவான ஒத்துழைப்பாக இருக்கலாம் அல்லது அதற்கு எதிரான ஒத்துழைப்பாக இருக்கலாம். இரண்டுமே ஒத்துழைப்பு தான். இரண்டு வழிகளில் நீ மாட்டிக் கொள்கிறாய்.

ஆதரவாகவும், எதிராகவும் இருப்பதை தவிர்த்துவிடு. கோபத்திற்கு ஆதரவாகவும் இருக்காதே. கோபத்திற்கு

எதிராகவும் இருக்காதே. அது அங்கு உள்ளது. அது உண்மை. வெறுமனே எந்த விதமான தீர்ப்புகளும் இல்லாமல் அதைக் கவனி, அப்போது நீயே ஆச்சிரியப்படுவாய், விரைவில் நீ ஒரு தங்கச் சாவியை கண்டு பிடித்து விடுவாய். கவனித்துக் கொண்டே வந்தால், மெதுவாக மெதுவாக அது மறைந்து போகிறது. மேலும் அது உன்னிடம் எந்த ஒரு காலடித் தடத்தையும் விட்டுவிடாமல் மறைந்து போகிறது. அதன் பின்னர் உன்னிடம் சாவி உள்ளது; அதன் பிறகு அதை எல்லா விதமான எண்ணங்களுக்கும் பயன்படுத்து.

இப்படி கவனித்தல் குறித்த ரகசிய செயல்பாட்டை குறித்து விழிப்புணர்வு உள்ளவன் ஆகிவிடும் போது ஒரு நாள் அந்த கவனித்தலானது மனதை அழிப்பதை, மனதோடு உனக்கு உள்ள தொடர்பை அறுத்து விடுவதை நீ கண்டு கொள்வாய். கவனித்தல் உனது மனதை அமைதியாக்கி விடுகிறது. மேலும் நீ உனது மனதிற்கு மேலே எழுந்து நின்று ஒரு இமயமலைச் சிகரம் போன்று ஆகிவிடும் போது நீ தான் எஜமான் ஆகிவிடுகிறாய். ஒரு சந்நியாசியாக இருப்பதன் குறிக்கோள் அது தான்.

***மூன்றாம் கேள்வி:***

***ஓஷோ,***

***சந்நியாசம் நல்லது என்று ஒருவன் அறிந்து கொள்வது எப்படி?***

நீ நல்லதா என்று பார்ப்பதற்கான நிரூபணம் அதை ருசித்துப் பார்ப்பதில் தான் உள்ளது. ஒரு சந்நியாசி ஆகிவிடு. இங்கு வேறு ஒரு வழி இல்லை. இது ஒரு அனுபவம், நீ உனது சொந்த அனுபவத்தில் தான் அதை அறிந்து கொள்ள வேண்டும். அது உள்ளுக்குள் நடக்கின்ற ஒரு அனுபவம் என்பதால் வெளியில் இருந்து அதைப்பற்றி எதுவும் சொல்ல முடியாது. எந்த ஒரு வார்த்தையாலும் வெளிப்படுத்த முடியாத அளவுக்கு அது ஆழமானது.

அது உனது இதயத்தின் வலி போன்றது. நீ மட்டுமே அதை அறிவாய். அல்லது உனக்கு தலைவலிக்கிறது. அதை நீ மட்டுமே

அறிவாய். தலைவலி என்கிற அனுபவமே இல்லாத மக்களை நீ காணலாம். எனக்கு ஒரு மனிதரைத் தெரியும். அவருக்கு அறுபது வயதாகிறது. அவருக்கு ஒருபோதும் தலைவலி வந்ததில்லை. அந்த மனிதரிடம் தலைவலி என்றால் என்ன என்று விளக்குவது சாத்தியப்படாது. நீ அதைப்பற்றி அதிகமாக விளக்கினால், அவர் மேலும் ஆச்சரியமடைவதைத்தான் காணமுடியும். அவருக்கு அந்த அனுபவம் ஒருபோதும் ஏற்பட்டதில்லை. உன்னால் எப்படி அதை அவருக்கு தெரிவிக்க முடியும்?

சந்நியாசம் என்பது ஒரு ஆழ்ந்த அனுபவம். அது உனது வேர்களுக்கு செல்கிறது. அது உன்னை உனது தூக்கத்தில் இருந்து உலுக்கி எழுப்புகிறது. அது உனக்கு உள்ளே இருந்து கொண்டு உன்னை மாற்றுவதற்கு ஆரம்பிக்கிறது. அது வெளியே உள்ள ஒன்று அல்ல. இந்த ஆரஞ்சு நிற ஆடைகளும், மாலையும், புதிய பெயரும் சந்நியாசம் அல்ல. இது வெறும் குறியீடு, ஒரு தெரிவிப்பு, இது வெறும் ஒரு ஆரம்பம் மட்டுமேயாகும், முதல் படியாகும். அதன் பின்னர் நடப்பவை எல்லாம் உனக்கு உள்ளே நடக்கின்றன.

ஆனால், ''சந்நியாசம் நல்லது என்று ஒருவன் அறிந்து கொள்வது எப்படி?'' என்று நீ கூறுகிறாய்.

தனது ஐந்து வயது மகனின் அலறல் சத்தம் கேட்டு அவனது தாயார் மழலையர் பள்ளிக்குள் ஓடினாள். அங்கு அந்த சிறுவனின் தங்கை அவனது தலைமுடியை பிடித்து இழுத்துக் கொண்டு இருந்தாள்.

உடனே தாயார் அவனிடம், ''அவள் சின்னப் பெண். உனக்கு வலிக்கும் என்று அவளுக்கு தெரியாது. எனவே அதை மனதில் வைத்துக் கொள்ளாதே,'' என்றார்.

ஒரு சில வினாடி கழித்து அந்த தாயார் மீண்டும் பள்ளிக்குள் ஓடினாள். இந்த முறை அந்த சிறிய குழந்தை அலறிக்கொண்டு இருந்தது.

"குழந்தைக்கு என்ன ஆயிற்று?" என்று தாயார் கேட்டாள். அப்போது அவளது ஐந்து வயது மகன், "அதிகம் இல்லை ஆனால் இப்போது வலி என்றால் என்ன என்று அவளுக்கு தெரியும்" என்றான்.

ஆனால் அறிந்து கொள்வதற்கு அதுதான் ஒரே வழியாகும். எனவே உனது தலைமுடியைப் பிடித்து இழுப்பதற்கு தயவு செய்து என்னை அனுமதி! ஒரு சந்நியாசியாக ஆகிவிடு அப்போது நீ அறிந்து கொள்வாய். அது நல்லது. அது அளவுக்கு அதிகமாக நல்லது. அதைப் போன்று வேறு எதுவும் கிடையாது.

***நான்காம் கேள்வி :***

***ஓஷோ,***

> *பூனே வருவதற்காக நான் எனது அரசியல் நிருபர் வேலையை விட்ட போது, ஜனநாயக விடு தலையை குலைத்தல், சுற்றுச்சூழலை அழித்தல், அணுசக்தி, அணுசக்தி போருக்கு எதிரான போராட்டம். ஆகியவற்றில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டுள்ள எனது நண்பர்கள் சிலர் என்னை இப்படிப்பட்ட உலக விஷயங்களில் இருந்து தப்பித்து இருப்பவன் என்று அழைத்தார்கள்.*
>
> *சில சமயம் அவர்கள் சொல்வது சரிதானோ என்று ஆச்சரியப்படுகிறேன். அவர்கள் சொல்வது சரிதானா?*

அவர்கள் கூறுவது சரிதான். ஆனால் அவர்கள் முற்றிலும் வேறுபட்ட ஒரு அர்த்தத்தில் சரியாகக் கூறுகின்றனர். அது குறித்து அவர்களுக்கு விழிப்புணர்வு கிடையாது. உண்மை நிலையில் இருந்து ஒருவர் தப்பி ஓடலாம். மேலும் ஒருவர் உண்மை நிலைக்காகவும் ஒருவர் தப்பித்து ஓடலாம். ஆனால் இரண்டாம் தான் உனது கதை. நீ தியானம் அல்லது சந்நியாசத்திற்குள் நகர்ந்து செல்வது நீ உண்மை நிலைக்குள் நகர்ந்து செல்வதாகிறது. உண்மை நிலையில் இருந்து தப்பித்து ஓடுவதாக இல்லை. ஏனெனில் உண்மையான விஷயம் உனது சொந்த மையம் தான்.

நீ அந்த மையத்தில் இருந்து எவ்வளவு தூரம் விலகி இருக்கிறாயோ அவ்வளவு தூரம் நீ உண்மை நிலையில் இருந்தும் விலகி இருக்கிறாய்)

''அணுசக்தி, சுற்றுச்சூழலை அழித்தல், ஜனநாயக விடுதலையைக் குலைத்தல், இன்னும் பலவற்றிற்கு எதிராக அவர்கள் தொடர்ந்து கொண்டிருக்கிற போராட்டமானது அவர்களது வழியில் வெற்றி பெறப் போவது கிடையாது. அந்த வழியில் அது சாத்தியப்படாது.''

இங்கு நாம் அதைப் போன்று எதையும் எதிர்த்து போராடிக் கொண்டு இருக்கவில்லை ஏனெனில் நாம் அவற்றின் வேரையே வெட்டிக் கொண்டு இருக்கிறோம். அவர்கள் இலைகளுக்கு எதிராக மட்டுமே போராடிக் கொண்டு இருக்கிறார்கள். அணுசக்தி எங்கிருந்து வந்தது? யார் அதை உருவாக்கினார்கள். ஏன் உருவாக்கினார்கள்? போர் என்பது எங்கிருந்து வருகிறது, ஏன் வருகிறது? சுற்றுச்சூழலை சீரழித்தது யார் ஏன் சீரழித்தார்கள்? இப்படிப்பட்ட அழிக்கும் செயல்கள் எல்லாம் எங்கிருந்து வந்தன? இந்த உலகில் ஜனநாயகம் ஏன் இல்லை? இந்த உலகில் ஏன் தனிமனித சுதந்திரம் இல்லை? இதை எல்லாம் செய்தது யார்? இதற்கு பொறுப்பானவர்கள் என்று நீ ஒரு கட்சியையோ, சில வகுப்பினரையோ, சமுதாயத்தின் சில பிரிவினரையோ நீ நினைக்கிறாயா? அப்படியானால் நீ முற்றிலும் தவறாக இருப்பாய்.

மனித மனம் தான் இதற்கெல்லாம் பொறுப்பு. இதுவரை இருந்து வந்துள்ள மனித மனமானது எப்படியோ தவறானதாக இருந்து விட்டது. படைப்பாற்றலோடு இருப்பது எப்படி என்று இன்னமும் இந்த மனித மனமானது கற்றுக் கொள்ளவில்லை. அதனால் தான் இங்கு அழிக்கும் செயல்கள் எல்லாம் இருக்கின்றன. இந்த மனித மனதின் அஸ்திவாரத்தையே நாம் மாற்றாத வரையில் இங்கு அழிக்கும் செயல்கள் இருந்து கொண்டு தான் இருக்கும்.

போருக்கு எதிராக போராடுதல் என்பது எந்த விதத்திலும் உதவாது. ஏனெனில் அது மீண்டும் ஒரு அடுத்த போர் போன்று

உள்ளது. அமைதியாளர்களின் ஊர்வலங்களை நீ பார்த்த தில்லையா, அப்போது அவர்கள் அலறி, கத்துகிறார்கள் அவர்கள் எப்படி கோபப்படுகிறார்கள்? ஆனால் அவர்கள் அமைதியாளர்கள் எனப்படுகிறன்றனர்! ஒவ்வொரு அமைதி ஊர்வலமும் அழிப்பதில் தான் முடிகிறது. அவர்கள் கடைகளை கொள்ளை அடிக்கின்றனர், பஸ்களை எரிக்கின்றனர், போலீஸ் மீது கற்களை எறிகின்றனர். ஆனால் அவர்கள் அமைதியைப் பரப்ப வந்தவர்கள். இது ஒரு பழைய முட்டாள்தனம். எல்லாம் போர்களும் அமைதியின் பெயரால் தான் நடக்கின்றன; எல்லாம் போர்களும் அமைதியின் பெயரால் தான் போர் புரியப் படுகின்றன. இதில் உள்ள குறிப்பை உன்னால் பார்க்க முடியவில்லையா? மனிதன் சண்டை போட விரும்புகிறான். அதற்கு எதாவது சாக்கு போக்கு இருந்தால் போதும், அமைதி என்பது ஒரு அழகான சாக்கு போக்கு.

எல்லா அரசியல்வாதிகளும் சமாதானம் பற்றி பேசுகின்றனர். ஆனால் போருக்குத் தயாராகின்றனர். அவர்களிடம் நீ ஏன் என்று கேட்டால், அதற்கு அவர்கள், "நாங்கள் சமாதானத்தை எப்படி பாதுகாப்பது? நாம் பலம் பொருந்தியவராக இருக்க வேண்டும். இல்லையெனில் சமாதானம் அழிக்கப்பட்டு விடும். ஆகவே ஒரு அமைதியான உலகினை பெறுவதற்கு நாம் போருக்கு தயாராக இருந்தாக வேண்டும்" என்று கூறுவார்கள். இப்படி தயார் செய்து கொள்வது நீண்ட தூரம் போய்விடும் போது, நீங்கள் ஏதாவது செய்தாக வேண்டும். இல்லையெனில் இந்த தயார்படுத்துதல் என்பது மிகவும் சுமையானதாக ஆகி விடுகிறது.

உதாரணமாக, ஒரு மனிதன் சண்டை போடுவதற்கு, வெறுமனே தன்னை தயார் செய்து கொள்வதற்கு இடைவிடாமல் உடற்பயிற்சிகள் செய்து கொண்டு தயாராகிக் கொண்டு இருக்கிறான். அதன் பின்னர் அவன் தயாராகி விடுகிறான். இப்போது அவன் சண்டை போட ஆசைப்படுகிறான்; இப்போது அவனது ஒட்டுமொத்த தயார்படுத்துதலும் அவனை சண்டை போடுவதற்கு கட்டாயப்படுத்துகிறது. அவன் மட்டும் தனியாக உடற்பயிற்சி கூடத்திற்கு சென்று தன்னைத் தயார்

செய்யவில்லை. அவனது பக்கத்து வீட்டுக்காரனும் கூட உடற்பயிற்சி கூடத்திற்கு சென்று தசைகளை முறுக்கேற்றிக் கொண்டு ஒரு முகமது அலி போன்று ஆகிவிடுகிறான். அந்த இருவரும் அடுத்தவரின் வீட்டின் முன்னால் மிகவும் ஆக்ரோஷத்துடன் நடந்து செல்கின்றனர் ஆனால் இருவரும், ஒருவரைப் பார்த்து அடுத்தவர் பயப்படுகின்றனர். அதன்பின்னர் இறுதியில் யாராவது சண்டையை ஆரம்பிக்க வேண்டிய திருக்கிறது.

தாக்குதலுக்கு தயாராக இருப்பதே பாதுகாப்பிற்கான சிறந்த வழி என்று மச்சியவெல்லி கூறினார். அதன் பின்னர் யாராவது ஒருவர் தாக்குதலை தொடங்கியாக வேண்டும் ஏனெனில் அது ஒரு சுமையாக, ஆகிவிடுகிறது, அது ஒரு மன இறுக்கமாக, பதற்றமாக ஆகிவிடுகிறது, அந்த பதற்றமானது தணிக்கப்பட வேண்டும்.

இப்போது, நீங்கள் ஆயுதங்களையும், அணுகுண்டுகளையும் குவித்துக் கொண்டே போகிறீர்கள். இப்படி எத்தனை நாள்தான் அவற்றை குவித்துக் கொண்டே போக முடியும்? ஒரு நாள் அவற்றை நீங்கள் விற்பதற்கு ஆரம்பித்தாக வேண்டும்; அவற்றை குவித்து வைத்துக் கொண்டே போவது மிகவும் ஆபத்தானது. அதன் பின்னர் எங்கேயாவது போர் நடந்தாக வேண்டும்; இது ஒரு பொருளாதாரத் தேவை போன்று ஆகிவிடுகிறது.

மிகப்பெரிய உலகப் போர்கள் எப்போதாவது நடக்கின்றன, ஆனால் இரண்டு பெரிய போர்களுக்கு இடையில் சிறிய போர்கள் நடக்கின்றன. சிலசமயம் இஸ்ரேலில், சிலசமயம் கொரியாவில், சிலசமயம் வியட்நாமில், சிலசமயம் பங்களாதேஷ், காஷ்மீரில் நடக்கிறது. அவை நடந்து கொண்டே இருக்கின்றன ஏனெனில் மாபெரும் சக்திகள் குண்டுகளை உற்பத்தி செய்து கொண்டே இருக்கும்போது அவற்றுக்கு ஒரு சந்தை அவசியமாகிறது. ஆகவே முட்டாள்தனமாக இந்தியர்களும், பாகிஸ்தானியர் களும் சண்டை போடுவார்கள், அவர்கள் அந்த ஆயுதங்களை உற்பத்தி

செய்பவர்களுக்கு சந்தையாக ஆகிவிடுவார்கள். அதன்பின்னர் இஸ்ரேலியர்களும் அரேபியர்களும் சண்டை போடுவார்கள். அப்போது அவர்கள் சந்தை ஆகிவிடுவார்கள்.

வெறுமனே இதில் உள்ள விஷயத்தை பார். இஸ்ரேலியர்கள் அமெரிக்காவிடம் இருந்து ஆயுதங்களைப் பெற்றால், அதன்பின்னர் அரேபியர்கள் ரஷ்யாவிடம் இருந்து ஆயுதங்களை வாங்குவார்கள். இரண்டுக்குமே ஒரு சந்தை தேவைப்படுகிறது. இந்தியாவானது ரஷ்யாவிடம் இருந்து ஆயுதங்களை வாங்கினால் அதன் பின்னர் பாகிஸ்தான் அமெரிக்காவிடம் இருந்து ஆயுதங்களை வாங்குகிறது. அவை இரண்டிற்கு தேவைப்படுகிறது. அவர்கள் தங்களின் ஆயுதங்களை ஒவ்வொரு நாளும் அபிவிருத்தி செய்து கொண்டு இருக்கின்றனர். ஆகவே காலம் கடந்து விட்ட இந்த ஆயுதங்களை வைத்துக் கொண்டு அந்த நாடுகள் என்ன செய்ய முடியும்? அவை பயனற்றவை ஆகிவிடும். ஒன்று நீங்கள் அவற்றை அழிக்க வேண்டும். அவற்றை கடலில் தூக்கிப் போட்டு குவிக்க வேண்டும். ஆனால் அதில் போட்ட பணம் எல்லாம் இழக்கப் பட்டுவிடுகிறது. எனவே பின்தங்கிய நாடுகளுக்கு அவற்றை விற்று விடுங்கள். அந்த நாடுகளுக்கு இவை மிகப்பெரிய விஷயங்கள்.

அமெரிக்காவிற்கும், ரஷ்யாவிற்கும் அந்த ஆயுதங்கள் காலம் கடந்தவை, பயனற்றவை, ஆனால் இந்தியா மற்றும் பாகிஸ்தானுக்கு அவை தான் இறுதிவார்த்தைகள். அமெரிக்க தொழில் நுட்பம் மற்றும் ரஷ்ய தொழில் நுட்பத்தை பொருத்த மட்டில் அவை கற்காலத்தைவை; அவற்றால் பயன் ஏதும் இல்லை. ரஷ்யாவும், அமெரிக்காவும் போர் புரிந்தால் அந்த ஆயுதங்களால் எந்த பயனும் இருக்காது. அவற்றை அப்படியே வைத்துக் கொண்டு இருந்தாலும் அதில் எந்த அர்த்தமும் இருக்காது. எனவே அவற்றை அந்த நாடுகள் விற்பனை செய்கின்றன. இப்படியாக இந்த ஒட்டு மொத்த விளையாட்டும் தொடர்கிறது. நாம் சமாதானம் பற்றி பேசிக் கொண்டு இருக்கிறோம் ஆனால் நாம் போர்களை உருவாக்கிக் கொண்டு இருக்கிறோம்.

எனவே நாம் மனித மனதைப் புரிந்து கொள்ள வேண்டும். மனித மனமானது அதன் வேர்களில் இருந்து மாற்றப்பட வேண்டும். மனித மனமானது பேராசையோடு இருந்தால் அதன்பின்னர் போர் இல்லாத ஒரு உலகம் என்பது சாத்தியப்படாது. பேராசைதான் போர். அதே போன்று மனித மனமானது பிரிவினையோடு இருந்தால், அதாவது கிறிஸ்தவன், இந்து, முகமதியன், என்று பிரிவினையோடு இருந்தால், அமைதி என்பதற்கு சாத்தியங்கள் கிடையாது ஏனெனில் அந்த பிரிவினைகள் மக்களைப் பிரித்து விடுகிறது. எந்த ஒரு பிரிவினையும் போருக்கான ஆரம்பமாக ஆகிவிடுகிறது.

ஆகவே நீ உண்மை நிலையில் இருந்து தப்பித்து வரவில்லை, நீ உண்மை நிலைக்கு தப்பித்து வந்திருக்கிறாய். நாங்கள் சமாதானம் பற்றி பேசுவதில்லை. அதைப் பற்றி பேசுவதில் எந்த அர்த்தமும் இல்லை. நாம் அதற்கான அஸ்திவாரத்தை உருவாக்கி கொண்டு இருக்கிறோம். நாம் அமைதியாளர்கள் அல்ல மேலும் நாம் தெருக்களில் பேரணியாக சென்று கொண்டு, தலைநகர் நோக்கி நீண்ட நடைப்பயணம் செல்லவில்லை. அமைதிக்கான ஊர்வலம், மற்றும் கோஷங்களை சத்தம் போட்டு கூறிக்கொண்டு செல்லவில்லை. நாங்கள் அதை எல்லாம் செய்யப் போவதில்லை. அது அர்த்தமற்றது. அது வெறுமனே ஒரு சில மக்களுக்கு மட்டும் தங்களின் அழிக்கும் செயலை வெளியே தூக்கி எறிவதற்கும் வெளிக் காட்டுவதற்கும் மட்டுமே உதவுகிறது. அவ்வளவுதான். அவர்கள் அதை சந்தோஷமாக அனுபவிக்கின்றனர். நான் இந்த மக்களை அறிவேன், அவர்கள் எப்போதும் ஒவ்வொரு எதிர்ப்பு ஊர்வலத்திலும் இருக்கின்றனர்.

நான் ஜபல்பூரில் அநேக வருடங்கள் இருந்தேன். அப்போது சுற்றிலும் என்ன நடக்கிறது என்பதை நான் கவனித்துக் கொண்டே இருப்பேன். எனவே ஏதாவது போராட்ட ஊர்வலம் அல்லது வேறு ஏதாவது இருந்தால் நான் போய் அதைக் கவனிப்பேன். நான் அப்போது ஆச்சரியமடைந்தேன். நான் ஒரு ஆளை மட்டும் எல்லா விதமான எதிர்ப்பு ஊர்வலங்களிலும் கண்டேன். கம்யூனிஸ்ட், சோசியலிஸ்ட், ஜனசங்கம், இந்து, ஆர்ய சமாஜம்

இப்படி யாருடைய ஊர்வலமாக இருந்தாலும் சரி. அவன் எப்போதும் அதில் இருப்பான். நான் ஆச்சரியமடைந்தேன். அவன் காங்கிரஸ்காரனாக இருக்கிறான், அவன் ஒரு கம்யூனிஸ்டாகவும் இருக்கிறான், அவன் ஒரு சோசலிஸ்டாகவும் இருக்கிறான், அவன் ஜன சங்கத்தை சார்ந்தவனாகவும் இருக்கிறான்.

ஒருநாள் நான் அவனைப் பிடித்து அவனிடம், ''நீ என்னை ஆச்சரியப்பட வைக்கிறாய். நான் உன்னை எல்லா ஊர்வலத்திலும், எல்லா எதிர்ப்பு பேரணியிலும் பார்க்கிறேன். நீதான் மிகவும் சிறப்பாக சத்தம் போடுகிறாய்'' என்று கூறினேன்.

உடனே அவன், ''நானும் கூட ஆச்சரியப்படுகிறேன் ஏனெனில் நீங்கள் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு இருப்பதையும் நான் கவனிக்கிறேன் ஆனால் நீங்கள் ஒருபோதும் கலந்து கொள்வதில்லை! நீங்கள் எப்படி சமாளிக்கிறீர்கள்? இப்படி நீங்கள் என்றாவது ஒரு நாள் கேட்டு விடுவீர்கள் என்று பயந்து விட்டேன் ஏனெனில் எல்லா எதிர்ப்பு ஊர்வலத்திலும் நீங்கள் என்னை பார்ப்பீர்கள். நான் கத்துவதை சந்தோஷமாக செய்கிறேன். நான் யாருக்கு ஆதரவாக கத்துகிறேன் அல்லது யாருக்கு எதிராக கத்துகிறேன் என்பதைப் பற்றி நான் கவலைப் படுவதில்லை. கத்துவதை நான் சந்தோஷமாக அனுபவிக்கிறேன்! அது அப்படிப்பட்டதொரு நல்ல உடற் பயிற்சியாக இருக்கிறது. அதில் நான் பரபரப்பும், சிலிர்ப்பும், உத்வேகமும் அடைகிறேன். அது எனக்கு நல்ல பசியைக் கொடுக்கிறது. அது எனக்கு சில பரபரப்பை கொண்டு வருகிறது; இல்லையெனில் வாழ்க்கை என்பது சலிப்பானதாக ஆகிவிடும்'' என்று கூறினான்.

நீ இதை நம்பவில்லை என்றால், நீ ஆஸ்தாவிடம் இதைக் கேட்டுப்பார். அவனது அப்பா மற்றும் அம்மா ஆகிய இருவரும் இந்த வகையைச் சார்ந்தவர்கள். அவர்கள் வாழ்நாள் முழுவதும் எதிர்ப்பாளர்களாகவேஇருந்தார்கள். யாருக்கு எதிராக என்பது ஒரு விஷயமே அல்ல. யார் அதைப்பற்றி கவலைப்படுவார்கள்? அவை வெறும் சாக்கு போக்குகள்.

இங்கு அதைப் போன்று நாங்கள் எதையும் செய்யவில்லை. ஆகவே இந்த காரியங்களை எல்லாம் செய்து கொண்டு இருப்பவர்கள் இது உண்மை நிலையில் இருந்து தப்பி ஓடுதல் என்று நினைப்பார்கள். ஏனெனில் அவர்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறார்களோ அதைத் தான் உண்மை நிலை என்று நினைக்கின்றனர். அது அப்படி அல்ல.

இயற்கையாகவே, இங்கு அமைதியாக உட்கார்ந்து கொண்டு, தியானம் செய்து கொண்டு, நடனமாடிக்கொண்டு, கண்களை மூடிக்கொண்டு விபூாசனா தியானம் செய்து கொண்டு, எல்லாவற்றையும் கவனித்துக்கொண்டு, விழிப்புணர்வுடன் இருப்பது அவர்களைப் பொருத்தமட்டில் நிச்சயம் ஒரு தப்பித்தல் போன்று தான் இருக்கும். இது ஒருவகை தப்பித்தல் தான் ஆனால் ஒரு வேறுபட்ட அர்த்தத்தில்.

நீ எல்லா நோய்களின் வேரை நோக்கி போய்க் கொண்டு இருக்கிறாய். ஆனால் நாங்கள் அந்த வேரையே வெட்டி விடுவதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறோம். எந்த விதமான ஆணவமும் இல்லாத, லட்சியங்கள் இல்லாத, இந்த உலகில் வெற்றி பெற வேண்டும் என்கிற எந்த ஆசையும் இல்லாத ஒரு புதிய வகையான மனித உயிரை உருவாக்குவதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறோம். ஆடிப்பாடி அன்பு செலுத்த விரும்புகின்ற ஒரு மனிதனை உருவாக்குவதற்கு நாங்கள் முயற்சித்துக் கொண்டு இருக்கிறோம்; வாழ்க்கையை கொண்டாட விரும்புகிறவர்களை உருவாக்கி கொண்டு இருக்கிறோம். நாங்கள் படைப்பாற்றல் மிக்க ஒருமனித மனதை உருவாக்க முயற்சி செய்கிறோம்.

மனம் அற்ற நிலை தான் ஒரு படைப்பாற்றல் மனமாக இருக்கமுடியும் என்பதை நினைவில் கொள். மனம் என்று அழைக்கப்படுகின்ற அந்த ஒன்று மறைந்து விடும்போது அங்கே வெறும் தூய்மையான வெறுமை, மாசுபடாத வெறுமை, அப்படிப்பட்ட மாசுபடாத வெறுமையில் இருந்து படைப்பாற்றல் எழுகிறது. அந்த வெறுமையில் ஆயிரத்தோரு மலர்கள் மலர்கின்றன.

அது தான் ஹக்கிம் சனாய் பேசுகின்ற அந்த ஹடிகா, அந்த தோட்டம். அந்த தோட்டத்தை நாங்கள் உருவாக்க முயற்சிக்கிறோம். நாங்கள் உங்களது உடலை ஒரு கலப்பு உரமாக ஆக்குவோம், நாங்கள் எங்களது மனங்களை கலப்பு எருவாக ஆக்குவோம். அப்போது உன்னுள் பொன்மலரானது மலரும். இது உண்மை நிலையில் இருந்து தப்பி ஓடுதல் அல்ல. இது உண்மை நிலைக்குள் தப்பித்து வருதல்.

***ஐந்தாம் கேள்வி:***

***ஓஷோ,***

> ***அநேக வழிகளில் நீங்கள் எங்களை புரிந்து கொள்ளும் படி செய்கிறீர்கள், ஆனாலும் கூட நாங்கள் புரிந்து கொள்வதில்லை. நாங்கள் ஏன் புரிந்து கொள்வதில்லை? நாங்கள் எப்போது புரிந்து கொள்வோம்? நாங்கள் எப்படி புரிந்து கொள்வோம்?***

புரிதல் என்பது எப்போது என்பதை அறியாதது. அது காலம் சார்ந்தது அல்ல, எனவே அதை நீ முன்கூட்டியே தீர்மானிக்க முடியாது. இன்றா அல்லது நாளையா அல்லது நாளை மறுநாளா என்று என்னால் கூற முடியாது. இந்த நொடிப் பொழுதில் கூட அது நடக்கலாம். அதே போன்று பல பிறவிகளாக நடக்காமலும் போகலாம். அது முன் கூட்டியே தீர்மானிக்க முடியாதது. ஏனெனில் அது எந்த ஒரு காரணத்தினாலும் ஏற்படக்கூடிய ஒன்று அல்ல. அது நடக்கும் போது நடக்கும், புரிதல் உன்னை நோக்கி வருகிறது. நீ செய்ய வேண்டியதெல்லாம் அதை உருவாக்காமல் இருப்பது மட்டுமேயாகும். உன்னால் அதை உருவாக்க முடியாது. உன்னால் உருவாக்கப்பட்ட அந்த புரிதலானது அதிகம் புரிந்த ஒன்றாகவும் கூட இருக்க முடியாது. எனவே 'எப்படி' என்று கேட்காதே, அதற்கு 'எப்படி' என்று கிடையாது.

'எப்படி' என்றால் ஏதாவது செயல் நுணுக்கம் அல்லது செய்முறை என்று அர்த்தம். புரிதலை உருவாக்க ஏதாவது செய்தல் என்று அர்த்தம். அப்படியானால் புரிதல் என்பது தான்

என்ன? அது ஏற்கனவே உன்னிடம் உள்ளது, நீ புரிந்து கொள்கிறாய். ஆனால் அந்த புரிதலானது உனது முதலீடுகளுக்கு எதிரானதாக போகிறது. நான் உன்னிடம் கூறுவதெல்லாம் மிகவும் எளிமையான விஷயங்கள், எனவே அதைப் புரிந்து கொள்ளாமல் இருப்பது என்பது சாத்தியப்படாது. நான் கடினமான விஷயங்களைப் பற்றி பேசவில்லை, நான் தத்துவம் பேசவில்லை. ''இரண்டும் இரண்டும் நான்கு'' என்பது போன்ற எளிமையான வாக்கு மூலங்களைத் தான் நான் கொடுக்கிறேன். இதைப் புரிந்து கொள்வதற்கு நீ ஒரு மாபெரும் அறிவு ஜீவியாக இருக்க வேண்டிய அவசியம் கிடையாது.

நீ அதை முற்றிலும் நன்றாக புரிந்து கொள்ளவும் செய்கிறாய். நீ புரிந்து கொள்ளவில்லை என்பது கிடையாது, அதில் உள்ள கேள்வியானது வேறு ஏதோ ஒன்றாகும். நீ அதைப் புரிந்து கொள்ள விரும்பவில்லை. நீ அதைப் புரிந்து கொள்கிறாய் ஆனால் நீ அதைப் புரிந்து கொள்ள விரும்பவில்லை. நீ அதை தவிர்த்து விடுவதற்கு விரும்புகிறாய், நீ அதை ஒத்திப் போடுவதற்கு விரும்புகிறாய், அதனால் தான் நீ ''எப்படி?'' என்று கேட்கிறாய். இவை நாளைக்கு ஒத்தி போடுவதற்கான தந்திரங்கள், யுத்திகள்.

''இப்போதே'' என்று நான் கூறுகிறேன். எப்போது என்று கேட்காதே. 'எப்படி' என்றும் கேட்காதே. ஏனெனில் 'எப்படி' என்பது எதிர்காலத்தை உள்ளே கொண்டு வருகிறது. அதன் பின்னர் நீ, ''நான் அதை பயிற்சி செய்வேன், அது இப்போது நடக்காது. நான் அதை நாளை பயிற்சி செய்வேன் அல்லது நாளை மறுநாள் பயிற்சி செய்வேன். மெதுவாக மெதுவாக படிப்படியாக ஒரு நாள் அது நடக்கும்,'' என்று கூறுகிறாய். ஆனால் இதற்கிடையில் நீ அப்படியே தான் இருப்பாய். இது ஒரு தந்திரம்.

நான் என்ன கூறுகிறேனோ அது வெளிப்படையாக தெரியக் கூடியது, ஆனால் அது உனது சொந்த முதலீடுகளுக்கு எதிரானதாகச் செல்கிறது. நீ உனது அறியாமையில் அதிகம் முதலீடு செய்து விட்டாய். இது வரை உனது வாழ்க்கையானது

முற்றிலும் தவறான வகையான மனதினால் வாழப்பட்டுள்ளது. உன்னிடம் உள்ளவற்றை எல்லாம் நீ அதில் முதலீடு செய்து விட்டாய், உனது ஒட்டு மொத்த வாழ்க்கையையும் முதலீடு செய்துவிட்டாய், இப்போது திடீரென்று நீ உண்மை நிலையைப் பார்க்கிறாய், நீ பயப்படுகிறாய். பார்க்கிறாய் என்பதற்கு இதுவரை நீ ஒரு முட்டாளாக இருந்திருக்கிறாய் என்று அர்த்தம், பார்த்தல் என்பதற்கு இதுவரை எல்லாமே பயனற்று போய் விட்டது. இதுவரை நீ வாழவே இல்லை என்று அர்த்தமாகும். இது மிகவும் அதிகமாக இருக்கிறது, உன்னால் இதை விழுங்க முடியாது. எனவே நீ ஒரு புதிய தந்திரத்தை உருவாக்குகிறாய், ''நான் புரிந்து கொள்ள முயற்சி செய்வேன்'' என்று நீ கூறுகிறாய்.

நீ புரிந்து கொண்டு விட்டாய். அந்த புரிதல் ஏற்கனவே அங்கு உள்ளது. எனவே இப்போது தயவு செய்து நீ விளையாட்டுகளை விளையாடாதே. இன்று உனக்கு நிகழ்கின்ற இந்த புரிதலுடன் உன்னால் வாழ முடியவில்லை. எனில், நாளையும் கூட உன்னால் வாழமுடியாது. ஏனெனில் நாளை உனது முதலீடுகள் மேலும் அதிகமாக ஆகியிருக்கும் என்பதையும் நினைவில் கொள். உனது தவறான நோக்கங்களில், உனது தவறான அமைப்புகளில் நீ மேலும் ஒரு நாளை முதலீடு செய்து விடுகிறாய், எனவே அது மேலும் மேலும் கடினமானதாக ஆகிவிடும். அதனால் தான் அது கடினமானதாக ஆகிறது. உனது வயது ஆக ஆக அது மேலும் கடினமானதாக ஆகிறது.

என்னிடம் அநேக இளைஞர்கள் வருவதை நீ ஏன் காண்கிறாய்? அதற்கான காரணம் அவர்களின் முதலீடுகள் அந்த அளவுக்கு மிகவும் பெரியதாக இல்லை. அவர்களால் இன்னமும் கூட தங்களது வாழ்க்கையை மாற்றி அதன்படி வாழ முடியும். வயதானவர்கள் வரும்போது அவர்களின் முதலீடானது மிகவும் பெரிய அளவில் உள்ளது. அவர்கள் உண்மையிலேயே தைரியமானவர்களாக இல்லை என்றால், உண்மையில் தங்களுக்குள் இளைமையுடன் இல்லை என்றால், அவர்களால் புரிதலுக்குள் குதிக்க முடியாது. அவர்கள் தங்களின் வாழ்நாள் முழுவதும் ஒரு வழியில் வாழ்ந்து விட்டனர்; இப்போது

திடீரென்று நான் அவர்கள் பின்பற்றுவதற்கு ஒரு வேறுபட்ட வழியைக் காட்டுகிறேன். இது அந்த அளவுக்கு புதியதாக இருக்கிறது; அது அசௌகரியமானதாக இருக்கிறது, பாதுகாப்பற்றதாக உள்ளது. மேலும் இப்போது அவர்களுக்கு இன்னமும் காலம் வேறு இல்லை. அவர்களுக்கு வயதாகிக் கொண்டு இருக்கிறது. மரணம் வந்து கெண்டிருக்கிறது. இந்த தருணத்தில் ஆபத்தை எதிர் கொள்வது கடினமானதாக உள்ளது. அவர்கள் முற்றிலும் நன்றாக புரிந்து கொள்கிறார்கள். ஆனால் அவர்கள் புரிந்து கொள்ள விரும்புவதில்லை. அவர்கள் கனவு கண்டு கொண்டே போவதற்கு விரும்புகின்றனர், அவர்கள் தங்களின் கனவுகளை தொடர்வதற்கு விரும்புகின்றனர்.

மறைந்து வாழும் சூஃபி குருவான கிடிர், முல்லாவின் கனவில் தோன்றி, ''நஸ்ருதீன் உனக்கு என்ன வேண்டும்?'' என்று கேட்பது போன்று ஒரு நாள் இரவு முல்லா நஸ்ருதீன் கனவு கண்டார்.

ஒன்றுமறியாத நஸ்ருதீனால் அதிகம் கேட்க முடியவில்லை. மக்கள் அப்படித்தான் உள்ளனர். கடவுள் திடீரென்று உன் முன் தோன்றி, ''உனக்கு என்ன வேண்டும்'' என்று கேட்டால் உனது மனதில் என்ன வருகிறது? என்று வெறுமனே நினைத்துப்பார். ஒரு வீடு, ஒரு கார், வங்கியில் பணம் இப்படி ஏதாவது தான் கேட்பாய். மதிப்பு மிக்க ஒன்றினை உன்னால் கேட்கக் கூட முடியாது.

அப்பாவி மனிதனாகிய முல்லா அந்த குருவிடம், ''ஒரு நூறு ரூபாய் வேண்டும்'' என்றான். அந்த அளவு பணத்தை தான் அவரால் இறுதியாக கற்பனை செய்யமுடிந்தது.

ஆனால் கிடிர் குருவும் ஒரு மாதிரிப்பட்டவர் போலும், எனவே அவர், ''நான் உனக்கு ஒரு ரூபாய் நோட்டு, இரண்டு கொடுக்கிறேன்'' என்றார்.

அதற்கு முல்லா, ''முடியாது நூறு ரூபாய் வேண்டும்?'' என்றார்.

உடனே குரு, ''மூன்று ஒரு ரூபாய் நோட்டு தருகிறேன்'' என்றார்.

இப்படிப்பட்ட விதமாக, இந்த பேரம் கனவில் தொடர்ந்தது. பணத்தை உயர்த்திக் கொண்டே போய் இறுதியில் தொண்ணூற்றி ஒன்பது ஒரு ரூபாய் நோட்டு தருவதாக கூறி விட்டு கிடிர் பிடிவாதமாக இருந்தார். அவர் முல்லாவிடம், ''நான் ஒரு பைசா கூட அதிகம் தரமாட்டேன் 99 ரூபாய் தருவேன். வேண்டுமானால் எடுத்துக் கொள் அல்லது விட்டுவிடு!'' என்றார்.

அப்போது முல்லா, ''எனக்கு நூறு ரூபாய் தான் வேண்டும்! நீங்கள் எப்படி இவ்வளவு கஞ்சனாக இருக்கிறீர்கள்! ஒரே ஒரு ரூபாய் தானே? அதை ஏன் நூறாக ஆக்கக் கூடாது?'' என்று கேட்டான்.

இந்தச் சண்டை மிகவும் சூடு பிடித்ததால் முல்லா விழித்தெழுந்து தனது கண்களைத் திறந்தார். கிடிர் மறைந்து விட்டார். ரூபாய் நோட்டுக்களும் மறைந்து விட்டன. முல்லாவின் மனைவி அவனது அருகிலேயே உட்கார்ந்திருந்தார் ஏனெனில் அவன் அந்த அளவுக்கு மிகவும் சத்தமாக பேசியதால் அவள் விழித்தெழுந்து அவன் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தாள். மிகப்பெரிய கூச்சல் எழுந்தது. அதுவும் பணம் பற்றி இருந்தது எனவே அவளும் கூட அதில் ஆர்வத்துடன் இருந்தாள். அவள் முல்லாவைத் தொந்தரவு செய்யவும் விரும்பவில்லை. மாபெரும் விஷயம் ஒன்று நடந்து கொண்டிருப்பதாக அவள் நினைத்தாள். எண்பது, எண்பத்து ஒன்று, எண்பத்து இரண்டு இப்படியே போய் அது 99 வரை போனது. அப்போது முல்லா 99ஆக முடியாது. நூறு! நான் நூறு ரூபாய் மட்டுமே பெற்றுக் கொள்வேன் என்றார்.

அப்போது அவன் திடீரென்று விழித்தெழுந்து கண்களைத் திறந்த போது அவரது மனைவி ''என்ன நடக்கிறது?'' என்று கேட்டாள். அப்போது முல்லா, ''நீ பேசாமல் இரு'' என்று கூறினார்.

அவர் திரும்பவும் கண்களை மூடிக் கொண்டு, ''சரி, 99 ரூபாய் கொடுங்கள்,'' என்றார். ஆனால் இப்போது கனவு போய்விட்டது. இப்போது அங்கு கிடிர் இல்லை, யாரும் இல்லை.

ஆனால் முல்லா, ''சரி நான் 99 என்று கூறுகிறேன்! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? 98 அல்லது 97 ரூபாயா!'' என்று கேட்டான். இப்படி அவர் இறங்கி வந்து கொண்டே இருந்தார். ஆனால் அங்கு யாரும் இல்லை. அங்கு ஒரு ரூபாய் கூட இல்லை. அப்போது அவன் மிகவும் கோபமடைந்து ''என்ன முட்டாள் நான்! நான் 99 ரூபாயை ஏற்றுக் கொண்டிருக்க வேண்டும். வெறும் ஒரு ரூபாய். இந்த கிடிர் ஒரு கஞ்சன். நானும் கூட ஒரு முட்டாள்; இப்போது அவரை என்னால் கண்டு பிடிக்க முடியாதே'' என்றார்.

இந்த சூழ்நிலை தான் உள்ளது. நீ என்னைப் புரிந்து கொண்டால் உனது கனவுகள் கலைந்து விடும். ஆனால் நீ எப்போதும் தொண்ணூற்றி ஒன்பதின் பக்கத்திலேயே இருக்கிறாய். அது வெறுமனே நாளைக்கு நடக்கப்போகிறது. இன்னும் ஒரே ஒரு நாள் தான். இன்னும் கொஞ்சம் முயற்சி செய்தல் நூறு ரூபாய் கிடைத்துவிடும். ஒரு நூறு ரூபாய் நோட்டானது உனக்கு முன்னால் ஒரு காரட் போன்று தொங்கிக் கொண்டு இருக்கிறது.

''ஓஷோ கொஞ்சம் காத்திருங்கள். நான் இன்னும் கொஞ்சம் அதிகம் முயற்சி செய்கிறேன். ஆனால் நீங்கள் சொல்லிக் கொண்டே போகிறீர்கள், நீங்கள் கற்பித்துக் கொண்டே போகிறீர்கள். ஆனால் எப்போது மற்றும் எப்படி என்று எனக்கு கூறுங்கள்'' என்கிறாய். எப்போதும் உள்ள அந்த நூறு ரூபாய் நோட்டை பெறுவதற்கு நீ கடினமாக உழைத்துக் கொண்டு இருக்கிறாய். ஆனால் அது ஒருபோதும் உனது கைகளில் கிடைக்கவில்லை. அது ஒருபோதும் உனது கைகளுக்கு கிடைக்காது. மேலும் நீ உனது இனிய கனவில் இருந்து விழித்து எழுவதற்கும் தயாராக இல்லை.

இதில் புரிதல் என்கிற கேள்விக்கே இடமில்லை. இது அந்த அளவுக்கு எளிமையானது. ஆனால் நீ ஒரு குறிப்பிட்ட வாழ்க்

கையை வாழ்ந்து கொண்டிருக்கிறாய், உனது பழக்கவழக்கங்கள் நிலையானவை ஆகிவிட்டன, உனது அமைப்பு உறைந்து போய் விட்டது. நீ புரிந்து கொண்டாலும் கூட, உனது மனமானது அதைக் கலைப்பதற்காக வஞ்சகத்துடன் உள்ளது. இல்லாத அர்த்தங்களை அது உருவாக்கிக் கொண்டு இருக்கிறது. அது தனது சொந்த கருத்துகளை அதன் மீது திரையிட்டுக் கொண்டு இருக்கிறது."

நான் அது எளிமையானது என்று கூறும் போது, அது முற்றிலும் எளிமையானது என்கிறேன். கள்ளம் கபடமற்ற மனதோடு இருக்கிற யாராலும் அதை புரிந்து கொள்ள முடியும். ஆனால் பிரச்சினை என்னவெனில் நீ தப்பான அபிப்பிராயங் களைக் கொண்டிருக்கிறாய், நீ உனது சொந்த கருத்துகளைக் கொண்டிருக்கிறாய். அதற்கு தகுந்தாற் போல, உனது தப்பான எண்ணங்களுக்கு தகுந்தாற் போல அதைப் புரிந்து கொள்வதற்கு நீ விரும்புகிறாய்.

ஒரு நல்ல குடும்பம் மற்றும் நல்ல சமுதாயம் அந்தஸ்தில் உள்ள ஸ்காட்லாந்து இளைஞன் மது அருந்துவதில் அதிக ஆர்வத்துடன் இருந்தான். அவனது அந்த பழக்கத்தை மாற்றுவதற்கு அவனது குடும்பத்தினரும் நண்பர்களும் கிட்டத்தட்ட எல்லா முயற்சிகளும் செய்து விட்டனர் ஆனால் வெற்றி பெற முடியவில்லை. அவனுக்கு நாம் சரியான ஒரு அதிர்ச்சி வைத்தியம் செய்ய வேண்டும் என்று அவனது நண்பன் ஒருவன் கூறினான். அந்த முடிவின் படி அவர்கள் ஒரு சவப்பெட்டியை தயார் செய்தனர். அடுத்த நாள் அவன் குடித்துவிட்டு வந்ததும், அவனை ஒரு பிணத்தை அலங்கரிப்பது போல அலங்கரித்தனர். அந்த அறையை இருட்டாக்கிவிட்டு, சவப்பெட்டியை சுற்றிலும் சில மெழுகுவர்த்திகளை ஏற்றி வைத்தனர். அங்கு என்ன நடக்கிறது என்பதைக் கவனிப்பதற்கு ஒரு நண்பனையும் அமர்த்தினார்கள்.

அந்த இளைஞன் கொஞ்ச நேரத்தில் விழித்தெழுந்தான். சூழ்நிலைகளைப் பார்த்து ஆச்சரியமடைந்தான். அந்த அறையில் யாரோ ஒருவர் இருப்பதைப் பார்த்துவிட்டு அவன், ''நான் எங்கு இருக்கிறேன்?'' என்றான்.

''நீ இறந்து விட்டாய்'', என்று அமைதியாக பதில் வந்தது.

''இறந்து விட்டேனா? நான் இறந்து எவ்வளவு நாளாகிறது?'' என்றான்.

''மூன்று நாட்கள்''

''நல்லது நல்லது'' என்று கூறிவிட்டு அவன், ''நீயும் கூட இறந்தவன் தானா? என்று கேட்டான்.''

''ஆம், நானும் கூட இறந்தவன் தான்'' என்றான் அவனது தோழன்.

உடனே அவன், ''வேடிக்கையாக உள்ளது. நீ இறந்து எவ்வளவு நாள் ஆகிறது?'' என்று கேட்டான்.

''மூன்று வாரங்கள்'' என்றான் அடுத்தவன்.

உடனே அந்த இளைஞன் பிரகாசமடைந்து, ''நல்லது, நீ இறந்து மூன்று வாரங்கள் ஆகிறது, நான் இறந்து மூன்று நாட்கள் தான் ஆகிறது, எனவே என்னை விட உனக்கு இந்த இடம் நன்றாக தெரியும். எங்கு சென்றால் நாம் மது குடிக்க முடியும்?'' என்று கேட்டான்.

எனவே உனது பழைய மனம், பழைய அமைப்பு, பழைய பழக்கவழக்கம் அப்படியே நிலைத்து இருக்கிறது. அவை உனது மரணத்திலும் கூட உன்னைப் பின் தொடர்ந்து வரும். மிகச் சரியாக அதுதான் நடக்கவும் செய்கிறது. மரணம் அடைந்து விடும் போது நீ உனது உடலை மற்றுமே மாற்றுகிறாய், உனது மனம் உன்னோடு தொடர்கிறது. உனது மனம் வேறு ஒரு கருவிற்குள் அதன் நாற்றமடிக்கும் பழைய கடந்த காலத்தோடு நுழைகிறது. எனவே மீண்டும் நீ திரும்பத் திரும்ப அதே வாழ்க்கையை வாழ்ந்து வருகிறாய்.

நான் எப்போது புரிந்து கொள்ளப் போகிறேன் என்று நீ என்னிடம் கேட்காதே. நீ என்னைப் புரிந்து கொண்டு விட்டாய். இப்போது தயவு செய்து இன்னமும் நீ அதை ஒத்திப் போடாதே. அது ஏற்கனவே நடந்து விட்டது. அது அப்படிப்பட்ட ஒரு

எளிமையான விஷயம். நான் உனக்கு புதிர் போன்ற விஷயங்களைக் கூறவில்லை, நான் உனக்கு ஒளிவு மறைவற்ற, வெறும் உண்மைகளைக் கொடுக்கிறேன். எனவே இதில் எப்படி என்னும் கேள்விக்கே இடமில்லை.

நான் கூறுவதை நீ கேட்கும்போது, நான் என்ன கூறு கிறேனோ அதில் நீ குறுக்கிடாமல், நான் என்ன கூறுகிறேனோ அதை நீ கலைத்து விடாமல், இருந்தால், புரிதல் என்பது தானாகவே வந்துவிடும். நீ தைரியத்தை பெறாதவரையில் உனது பழைய கடந்த காலத்தில் இருந்து உன்னால் வெளியே வரமுடியாது. நீ உனது பழைய ஆணவத்தில் இருந்து வெளியே வரமுடியாது.

மிகப்பெரிய தைரியம் தேவை; புரிதல் அல்ல. புரிதல் என்பது ஏற்கனவே நடந்து கொண்டிருக்கிறது. தைரியம் தான் தேவை. தைரியம் என்பது என்ன? தைரியம் என்பதற்கு நீ அறிந்த ஒன்றினை, நீ அறியாத ஒன்றிற்காக பணயமாக கொடுப்பதற்கு தயாராக இருத்தல் என்று அர்த்தமாகும். நீ இதுவரை அறிந்த ஒன்றானது உனக்கு எதையுமே கொடுக்க வில்லை என்னும் போது, அறியாத ஒன்றைப் பற்றி நீ ஏன் பயப்படுகிறாய்? அதை முயற்சி செய்து பார். நீ எதையும் இழந்து விடமாட்டாய். ஏனெனில் உன்னிடம் எதுவுமே இல்லை. ஏன் முயற்சி செய்து பார்க்கக் கூடாது? ஒன்று நீ எதாவது ஒன்றைப் பெறலாம் அல்லது நீ எதையும் இழக்க மாட்டாய், எப்படிப் பார்த்தாலும் நீ இழந்தவன் ஆக மாட்டாய்.

மக்கள் தாங்கள் எல்லாவற்றையும் பெற்றிருப்பதாக நினைக்கின்றனர். தாங்கள் ஒரு அழகான வாழ்க்கையையும், செழிப்பான வாழ்க்கையையும் வாழ்வதாக அவர்கள் நினைக் கிறார்கள். இவை எல்லாம் உனது நம்பிக்கைகள். நீ வெறுமனே வாழ்க்கையை இழுத்துக் கொண்டிருந்தாய். உனது வாழ்க்கையில் கவிதை இல்லை. நடனம் இல்லை. இந்த பிரபஞ்சத்தின் அழகையும், கம்பீரத்தையும் நீ அறிந்திருக்க வில்லை. இந்த பிரபஞ்சத்தின் தெய்விகத்தன்மையை ஒரு நொடிப்பொழுது கூட நீ தொட்டதில்லை.

கடவுள் தன்மை பற்றி உனக்கு எதுவும் தெரியாது. அது மட்டுமே உனது வாழ்க்கைக்கு முக்கியம். அது தான் செழிப்பைக் கொடுக்கிறது. அது மட்டுமே வாழ்க்கை என்ற அர்த்தத்தை கொடுக்கிறது. நீ தெய்விகத்தால் தொடப்படவில்லை என்றால், நீ தெய்விகத்தால் நகர்த்தப்படவில்லை என்றால், நீ தெய்விகத்தால் ஊடுருவப்படவில்லை என்றால், உனக்கு கடவுள் தன்மை நிகழ்வதற்கு நீ அனுமதிக்கவில்லை என்றால், உனக்கு நிகழ்ந்தது எல்லாமே வெறும் ஒரு கனவு மட்டுமேயாகும்.

இதைக் கண்டவுடன், ஒருவன் கனவுகளில் இருந்து குதித்து எழுந்தான். இது தான் தைரியம். அறிந்த கனவில் இருந்து அறியாத ஒன்றினுள் குதிப்பது தான் தைரியம். இது ஒரு ஆபத்து. அறியாத ஒன்றினுள் என்ன நடக்கப்போகிறது என்பதை யார் அறிவார்? ஆனால் ஒரு விஷயம் மட்டும் நிச்சயமானது; அறிதலில் இருந்து நீ அறியாததற்கு மாறும் போது நீ வளர்ச்சி அடைவாய். நீ செழிப்பானவனாக ஆகிவிடுவாய்.

***கடைசி கேள்வி :***

***ஓஷோ,***

> ***விதியின் பைத்தியக்கார திருப்பத்தினால் நீங்கள் இந்தியாவின் பிரதம மந்திரியாக ஆகிவிட்டால், நீங்கள் என்ன செய்வீர்கள்?***

நான் உடனடியாக ராஜினாமா செய்து விடுவேன்.

இன்று இது போதும்.

அவன் தனது சொந்த ஆன்மாவையே அறியவில்லை:
அவன் அடுத்தவரின் ஆன்மாவை எப்படி அறிவான்?
அவன் தனது கைகள் மற்றும் கால்களை மட்டுமே
அறிவான்,
அவன் கடவுளைப் பற்றி எப்படி அறிவான்?
இது முனிவரின் கிரகித்தலுக்கு அப்பாற்பட்டது:
நீ அதை அறிந்து கொண்டதாக நினைத்தால்,
நீ ஒரு முட்டாளாக இருக்க வேண்டும்.
இதை நம்மால் விவரிக்க முடியும் போது
நீங்கள் திட நம்பிக்கையின் தூய சாராம்சத்தை அறிவீர்கள்;
அது வரையில்
உங்களுக்கும், திட நம்பிக்கைக்கும் பொதுவில் என்ன
உள்ளது?
அறிவாளி ஒருவனைப் போன்று
முட்டாள்தனமாக பேசுவதை விடவும்
மௌனமாக இருப்பது சிறந்தது.
திடநம்பிக்கை என்பது ஒவ்வொரு ஆடையிலும்
நெசவு செய்யப்படவில்லை.

காரியமாற்றவே நீ உண்டாக்கப்பட்டு இருக்கிறாய்:
மரியாதையினால் ஆன ஒரு மேல் அங்கி உனக்கு
காத்திருக்கிறது.
வெறும் கந்தைத் துணியோடு எப்படி நீ திருப்தியடைந்து
இருக்க முடிகிறது?
ஒரு மாதத்தில் அறுபது நாட்களும் நீ சோம்பேறியாக
இருந்தால், நீ செல்வச் செழிப்பை எப்படி பெறுவாய்?

*நீ என்ன தெரிந்து கொண்டாய் என்பதை அறிந்து*
*ஒரு மலையைப் போல அமைதியாகவும் இரு ;*
*அதிர்ஷ்டம் இல்லாமையால் கவலைப்படாதே.*
*அமைதி இல்லாத அறிவானது*
*கொளுத்தப்படாத மெழுகுவர்த்தியாக இருக்கிறது;*
*ஒன்றாக இருக்கும் போது அவர்கள் தேன்கூடு*
*போன்றவர்கள்;*
*மெழுகு இல்லாமல் தேன் என்பது ஒரு உயர்ந்த விஷயம்;*
*தேன் இல்லாத மெழுகு எரிப்பதற்கு மட்டுமே தகுதியானது.*

*பிறப்பும், அழிவும் நிறைந்த இந்த*
*இருப்பிடத்தை விட்டு வெளியேறு ;*
*இந்தக் குழியை விட்டு வெளியேறு,*
*உனக்கு நிர்ணயிக்கப்பட்ட வீட்டிற்கு தயாராகு.*
*இந்த தூசிக் குவியல் ஒரு கானல் நீர்,*
*அங்கே நெருப்பு, நீர் போன்று தெரிகிறது.*

ஒரு சூஃபி கதை :

தத்துவமேதைகள், தர்க்க அறிவாளிகள் மற்றும் சட்டத்தில் டாக்டர் பட்டம் பெற்றவர்கள் அனைவரும் முல்லாவை பரிசோதிப்பதற்காக அரச சபைக்கு அழைக்கப்பட்டனர். இது மிகவும் ஆபத்தான வழக்காக இருந்தது. ஏனெனில் முல்லா, ''ஞானிகள் என்று அழைக்கப்படுபவர் எல்லாம் அறியாமையில் இருப்பவர்களாகவும், தீர்மானம் செய்ய இயலாதவர்களாகவும், குழப்பமடைந்தவர்களாகவும் இருக்கின்றனர்'' என்று கிராமம் கிராமமாக சென்று கூறிக் கொண்டு இருந்தார். நாட்டின் பாதுகாப்பிற்கே அவர் குழிதோண்டுவதாக அவர்மீது குற்றச்சாட்டு.

''முதலில் நீ பேசு'' என்றார் அவர்.

உடனே முல்லா, ''தாள் மற்றும் பேனாக்களைக் கொண்டு வாருங்கள்'' என்றார். தாளும், பேனாவும் கொண்டு வரப்பட்டது. ''முதல் ஏழு பண்டிதர்களுக்கு இதைக் கொடுங்கள்'' என்றார். அவர்களுக்கு கொடுக்கப்பட்டது. ''ரொட்டி என்றால் என்ன?'' என்று அவர்கள் தனித்தனியாக பதில் எழுதட்டும் என்றார்.

அதுவும் நடந்தது. அந்தத் தாள்கள் அனைத்தும் ராஜாவிடம் கொடுக்கப்பட்டது. ராஜா அதைப் படித்தார்.

முதலாமவர், ''ரொட்டி என்பது ஒரு உணவு'' என்று கூறினார்.

இரண்டாமவர், ''அது மாவும் தண்ணீரும்'' என்றார்.

மூன்றாமவர், ''அது கடவுளின் பரிசு'' என்றார்.

நான்காமவர், ''சுடப்பட்ட பிசைந்த மாவு'' என்றார்.

ஐந்தாமவர், ''ரொட்டி என்றால் என்ன என்று நீங்கள் அர்த்தம் கொள்கிறீர்களோ அதற்கு தக்கபடி மாறக்கூடியது'' என்றார்.

ஆறாமவர்: அது ஒரு சத்துள்ள பொருள் என்றார்.

ஏழாமவர்: உண்மையில் யாருக்கும் தெரியாது என்றார்.

உடனே முல்லா, ''ரொட்டி என்றால் என்ன என்று அவர்கள் முடிவு செய்த போது அவர்களால் வேறு விஷயங்களைப் பற்றி முடிவு செய்வது சாத்தியப்படாமல் போய்விட்டது. உதாரணமாக நான் சரியானவனா அல்லது தவறானவனா என்று அவர்களால் எப்படி முடிவு செய்யமுடியும்?'' இப்படிப் பட்ட மக்களிடம் தீர்மானித்து தீர்ப்பு சொல்ல வேண்டிய இப்படிப்பட்ட விஷயங்களை எப்படி ஒப்படைக்க முடியும்? அவர்கள் தினமும் சாப்பிடுகின்ற ஒரு பொருளைப் பற்றி அவர்கள் அனைவரும் ஒத்துப் போகாதது விநோதமாக இருக்கிறதா அல்லது இல்லையா? என்றாலும் கூட நான் மதபேதமுள்ளவன் என்று அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து கூறுகிறார்களே அது எப்படி? என்று கேட்டான்.

ஆம், உங்களது தத்துவமேதைகள், தர்க்க அறிவாளிகள், சட்ட மேதைகள் போன்ற கற்றறிந்த மக்களின் நிலை இப்படித்தான் உள்ளது. அவர்கள் கிளிப்பிள்ளைகள். அவர்கள் இன்னமும் தங்களைப் பற்றியே கூட தெரிந்து கொள்ளவில்லை. அப்படி யிருக்கும் போது அவர்களால் எப்படி மற்றவர்களிடம் பழக்க முள்ளவர்களாக இருக்க முடியும். தாங்களின் புதிர்களையே கூட இன்னமும் அவர்கள் விடுவிக்கவில்லை.

உங்களுக்கு மிகவும் அருகாமையில் இருப்பது உங்களைப் பற்றிய புதிர் தான். அதையும் கூட நீங்கள் அறிந்து கொள்ள வில்லை என்றார்.உங்களால் எப்படி மற்றவர்களின் புதிர்களை அறிந்து கொள்ள முடியும்? அந்த புதிர்கள் உங்களிடமிருந்து வெகு தொலைவில் உள்ளது. அவை தூரத்தில் உள்ளன. எளிதில் அணுகக்கூடியது, மிகவும் சுலபமாக அணுகக்கூடியது. உங்களது சொந்தப் புதிர் தான். எனவே நீங்கள் உங்களது பயணத்தை அதில் இருந்து தான் ஆரம்பிக்க வேண்டும்.

கற்றறிந்தவர்கள், பண்டிதர்கள், அறிஞர்கள், பேராசிரியர்கள் ஆகிய அனைவரும் கொஞ்சம் நன்றாக கற்றுக் கொடுக்க மட்டுமே செய்யப்பட்டுள்ளனர். ஆனால் அந்த தகவல்கள் யாரையும் ஞானவான் ஆக்கிவிடாது. ஆம், நீங்கள் ஞானவான் போன்று பாசாங்கு செய்வதற்கு அது உதவுகிறது. அது ஒரு புகைமூட்டம், உங்களது அறியாமையை நீங்கள் அதற்குப் பின்னால் மறைத்து கொள்ள முடியும். ஆனால் உங்களது அறியாமை அதனால் அழிக்கப்பட்டு விடாது. நேர் மாறாக அது பாதுகாக்கப்படுகிறது.

உங்களது கல்வி அறிவானது ஒரு பாதுகாப்பு போன்று ஆகிவிடுகிறது; அது உங்களது அறியாமைக்கு ஒரு பாதுகாப்பு. அது ஒரு ஊட்டச்சத்து. நீங்கள் அறியாதவர்கள் என்பதை முழுவதும் உங்களுக்கு தெரியாதபடிக்கு செய்துவிடுகிறது; அது தான் நீங்கள் அறிவு என்று அழைக்கின்றதன் நோக்கமாகும். மேலும் இது ஆபத்தானது. நீங்கள் நோய்வாய்ப்பட்டிருக் கிறீர்கள் என்பது உங்களுக்கு தெரியாமல் இருந்தால், அதன் பின்னர் நீங்கள் ஆரோக்கியத்தை தேடுவதற்கான சாத்தியங்கள் இருக்காது. உங்களது அடிப்படை அறியாமை குறித்த உண்மையை நீங்கள் தெரிந்து கொள்ளாத போது நீங்கள் எப்படி எப்போதாவது மெய்ஞ்ஞானம் அடைந்தவராக ஆகப் போகிறீர்கள்?

உங்களின் உள்பகுதியானது முழுவதும் இருள் நிறைந்து இருக்கிறது என்பதை நீங்கள் மறந்து விட்டால், நீங்கள் வெளிச்சத்தை தேட மாட்டீர்கள்! நீங்கள் ஒளியை உருவாக்கும் காரியத்தை செய்ய மாட்டீர்கள். உங்களுக்கு ஏற்கனவே தெரியும்

என்கிற விஷயத்தை நீங்கள் ஏற்றுக்கொண்டுவிட்டால், அதன் பின்னர் அறிந்து கொள்வதற்கான வீரதீரப் பயணம் போவதற்கு என்ன அவசியம் உள்ளது?

மேலும் இதைத்தான் உங்களது கல்வி அறிவானது செய்து கொண்டே போகிறது. அது அறியாத ஒருவனை அறிந்த ஒருவனாக ஆக்காது. அது அறிவு என்னும் மாயத் தோற்றத்தை மட்டுமே கொடுக்கிறது. அது ஒரு கானல் நீர், நீங்கள் ஞானமுள்ளவர் என்கிற கனவை அது உங்களுக்கு கொடுக்கிறது. ஆனால் உண்மை நிலையில் நீங்கள் அப்படியே தான் இருக்கிறீர்கள்.

அறியாதவனுக்கும், எல்லாம் கற்றவர் என்று அழைக்கப்படுபவர்களுக்கும் இடையே அளவில் மட்டுமே வேறுபாடு உள்ளது. அவர்களுக்கு இடையில் தன்மையில் வேறுபாடே கிடையாது. அறியாதவன் குறைவான தகவல்களை பெற்றிருக்கிறான், குறைவாக பளபளப்பாக்கப்பட்டு இருக்கிறான், குறைவாக கல்வி கற்பிக்கப்பட்டு இருக்கிறான். கற்றறிந்தவன் அதிக தகவல்களை அறிந்து வைத்திருக்கிறான், அதிகம் படித்திருக்கிறான், அதிகம் வாசித்து இருக்கிறான், அநேக மக்களின் பேச்சைக் கேட்டிருக்கிறான். வேறுபாடு மொழிகுறித்ததாக மட்டுமே உள்ளது. கற்றறிந்தவன் அதிகம் பேசக் கூடியவனாக இருக்கிறான், அநேக வார்த்தைகளை அறிந்திருக்கிறான். ஆனால் அவை வெறும் வார்த்தைகள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவற்றில் எந்த விதமான அர்த்தமும் இருக்காது. அவற்றில் எந்த விதமான அர்த்தமும் இருக்க முடியாது. ஏனெனில் அர்த்தம் என்பது அனுபவத்தின் மூலம் வருகிறது.

அகராதியில் உள்ள மிகப்பெரிய வார்த்தைகளை எல்லாம் நீங்கள் கற்றுக் கொள்ள முடியும். அப்படித்தான் நீங்கள் வார்த்தைகளைப் பயன்படுத்திக் கொண்டு இருக்கிறீர்கள். கடவுள் போன்ற வார்த்தையைப் பயன்படுத்தும் போது நீங்கள் என்ன கூறுகிறீர்கள் என்பதை நீங்கள் அறிவீர்களா? நீங்கள் என்ன அர்த்தம் கொள்கிறீர்கள் என்பதை அறிவீர்களா? கடவுள் என்றால் என்ன? உங்களைப் பொருத்த மட்டில் அது வெறும் வார்த்தையாக

மட்டுமே இருக்கிறது. மேலும் அது வார்த்தையாகவே இருக்கும். ஆனால் அந்த வார்த்தைக்கு பின்னர் தான் ஆபத்து உள்ளது. உங்களுக்கு அந்த வார்த்தை தெரிவதால் உங்களுக்கு கடவுளைத் தெரியும் என்று நீங்கள் நம்பிக் கொண்டு இருக்கிறீர்கள்.

கடவுள் என்னும் வார்த்தையைத் தெரிந்து கொள்வது கடவுளைத் தெரிந்து கொள்வதாகாது. அன்பு என்னும் வார்த்தையை அறிந்து கொள்வது என்பது அன்பைப் பற்றி அறிந்து கொள்வதாகாது. நெருப்பு என்னும் வார்த்தைகளால் தெரிந்து கொள்வது என்பது நெருப்பைப் பற்றி அறிந்து கொள்வதாகாது. வார்த்தைகள் வெறும் குறியீடுகள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் அந்த வார்த்தைகளுக்கு இருப்புநிலை அர்த்தத்தை ஊற்றாத வரையில் அவை வெறுமையானவையாகவே இருக்கும். வார்த்தைகளில் அர்த்தம் என்பது இல்லை. அர்த்தம் என்பது தனி மனிதன் மற்றும் அவனது அனுபவத்தில் இருக்கிறது.

கிருஷ்ணர், கடவுள் என்னும் வார்த்தையை பயன்படுத்தும் போது அது வெறும் வார்த்தை அல்ல. அது அர்த்தம் நிறைந்தது. அதற்கு சிறப்பான இயல்பு உண்டு. கிருஷ்ணரின் வாழ்க்கை யினால் அந்த சிறப்பு இயல்பு வந்துள்ளது. கிருஷ்ணரின் தன்னுணர்வில் இருந்து சிறப்பியல்பானது அந்த வார்த்தையில் ஊற்றப்பட்டுள்ளது.

இயேசுவானவர் கடவுள் என்னும் வார்த்தையை பயன் படுத்தும் போது அது மிகவும் சக்தி வாய்ந்தது, அது அதிக அர்த்தத்தை சூல் கொண்டுள்ளது. அர்த்தம் என்பது இயேசுவிடம் உள்ளது, கடவுள் என்ற வார்த்தையில் இல்லை ஏனெனில் கடவுள் என்னும் வார்த்தையானது காலம் காலமாக எந்த அர்த்தமும் இல்லாமல் யூதமத குருக்களால் பயன்படுத்தப்பட்டுள்ளது. இயேசு தான் அதற்குள் அர்த்தத்தை ஊற்றினார். வெறுமையான அந்த வார்த்தையை அவர் தான் சிறப்புள்ளதாக, அர்த்தமுள்ள தாக, உயிருள்ள விஷயமாக உருமாற்றம் செய்தார். அந்த வார்த்தை உயிர்த்துடிக்க ஆரம்பித்தது. புத்தர் எந்த ஒரு வார்த்தையைத் தொடும் போதும் அது உயிர்த்துடிப்புள்ளதாக

ஆகிவிடுகிறது. அதற்கு சிறகுகள் முளைத்து விடுகின்றன. திடீரென்று அங்கு ஒரு உருமாற்றம் வருகிறது.

ஆனால் கல்வி அறிவாளர் வெறும் தூசிகள் நிறைந்து மட்டுமே இருக்கிறார். புத்தகங்கள் மற்றும் புனித நூல்களில் இருந்து தூசிகளை சேகரித்து வைத்திருக்கிறார். இப்படிப்பட்ட கல்வி அறிவு குறித்து ஜாக்கிரதையாக இருங்கள், எளிமையான அறியாமையை விடவும் இது அதிக ஆபத்தானது. அறியாமையைவிட இது ஏன் அதிக ஆபத்தானது? ஏனெனில் அறியாமையில் ஒரு தூய்மை இருக்கிறது. அதில் கள்ளம் கபடமற்ற தன்மை மற்றும் அதில் உண்மை உள்ளது. அது உண்மையானது. எனவே உண்மையில் இருந்து அதற்கு மேல் செல்வதற்கான சாத்தியங்கள் உள்ளது. கல்வி அறிவு உண்மையற்றது. உண்மையற்றதில் இருந்து உங்களால் உண்மையை நோக்கி பயணம் செய்ய முடியாது.

கற்றறிந்தவருக்கும் 'அறியாதவருக்கும் இடையே உண்மையில் எந்த வேறுபாடும் இல்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். கற்றறிந்தவர் தனக்கு எல்லாம் தெரியும் என்று நம்புகிறார். அறியாதவர் தனக்கு ஏதுவும் தெரியாது என்று அறிகிறார். ஆனால், அதன்பிறகு அறியாதவர்தான் ஒரு சிறந்த நிலையில் இருக்கிறார்.'

பாரிஸில் உள்ள ஒரு மிருகக் காட்சி சாலைக்கு, பிரஞ்சு மொழி தெரியாத ஒரு அமெரிக்க பெண்மணி அவளது சிறிய மகளை அழைத்து சென்றாள். முள்ளம் பற்றிகள் இருந்த ஒரு கூண்டின் முன்பு நின்றபோது அதில் ஆப்பிரிக்க முள்ளம்பன்றி மற்றும் ஆஸ்திரேலிய முள்ளம் பன்றி என்று எழுதப்பட்டு இருந்தது.

முள்ளம் பன்றிகள் எல்லாம் கிட்டத்தட்ட ஒரே மாதிரிதான் இருப்பதால் இந்த வாசகம் அவரை ஆச்சரியப்படுத்தியது. எனவே அந்த அமெரிக்க பெண்மணி அருகில் நின்று கொண்டிருந்த பாதுகாவலரிடம் சென்று, ''ஐயா உங்களுக்கு ஆங்கிலம் தெரியுமா?'' என்று கேட்டாள்.

அந்த பாதுகாவலர் தனது தொப்பியைத் தொட்டுக் கொண்டு, அம்மணி எனக்கு ஆங்கிலம் கொஞ்சம் தான் தெரியும். தாங்கள் என்ன அறிந்து கொள்ள விரும்புகிறீர்கள்? என்று கேட்டார்.

உடனே அந்த பெண்மணி, ''ஆப்பிரிக்க முள்ளம் பன்றிக்கும், ஆஸ்திரேலிய முள்ளம் பன்றிக்கும் உள்ள வித்தியாசம் என்ன?'' என்று கேட்டாள்.

அதற்கு அந்த பாதுகாவலர், ''அம்மணி வித்தியாசம் இதுதான். ஆஸ்திரேலிய முள்ளம் பன்றியின் ஆண்குறியை விட ஆப்பிரிக்க முள்ளம் பன்றியின் ஆண் குறி மிகவும் நீளமானது'' என்று கூறினார்.

இதனால் பயந்து போன அந்த பெண்மணி தனது சிறிய மகளுடன் அந்த மிருகக்காட்சி சாலையின் கண்காணிப்பாளரை நோக்கி ஓடினாள்.

அவள், ''ஐயா, தாங்கள் ஆங்கிலம் பேசுவீர்களா?'' என்று கேட்டார்.

உடனே கண்காணிப்பாளர், ''அம்மணி நான் அநேக வருடங்களாக ஆங்கிலம் பேசி வருகிறேன். நான் ஆக்ஸ்போர்டில் படித்தவன் உண்மையில் உங்களைப் போன்று என்னால் நன்றாக ஆங்கிலம் பேச முடியும். அம்மணி என்ன தெரிந்து கொள்ள விரும்புகிறீர்கள்?'' என்று கேட்டான்.

உடனே, சற்று நேரத்திற்கு முன்பு அந்த பாதுகாவலர். தனக்கும் தனது மகளுக்கும் முன்பாக கூறிய அந்த ஆபாசமான விஷயத்தை கூறினாள்.

அதற்கு அந்த கண்காணிப்பாளர், ''அம்மா அதற்காக வருத்தப்படக்கூடாது. ஆஸ்திரேலிய முள்ளம் பன்றியின் இறகை விடவும் ஆப்பிரிக்க முள்ளம் பன்றியின் இறகானது நீளமானது என்று கூறுவதற்கு அவன் அப்படி சொல்லி விட்டான். உண்மை என்னவென்றால் அவற்றின் ஆண்குறிகள் ஒரே அளவானவை தான்'' என்று கூறினார்.

கற்றவர்களுக்கும் கல்லாதவர்க்கும் இடையே அதிக வேறுபாடு கிடையாது. அந்த வேறுபாடானது வார்த்தைகள் அல்லது மொழி குறித்து இருக்கலாமே தவிர, ஆனால் எந்த ஒரு தன்மை குறித்தும் இருக்காது. அவர்களின் அகத்தன்மை அப்படியே தான் இருக்கிறது.

சூஃபியிஸத்தின் அடிப்படைகளில் இது புரிந்துகொள்ள வேண்டிய ஒன்றாகும். அதாவது அறிவு என்பது உங்களது சொந்த அனுபவத்தில் எழவில்லை என்றால் அது பயனற்றது. கல்வி அறிவு என்பது உங்களது சொந்த வாழ்க்கையின் ஒரு அங்கமாக இல்லாவிட்டால், அது முற்றிலும் தேவையற்ற ஒரு சுமையாக இருக்கிறது. அது வெளியில் இருந்து உங்களிடம் சேர்க்கப் பட்டது. அதை கைவிட்டு விடுங்கள். தேவை இல்லாமல் அதைச் சுமந்து கொண்டு செல்லாதீர்கள். அது பயனற்றது. அது தீங்கானது. அது விஷம் போன்றது. அது ஒரு சுமை. அது உங்களை விரைவாகவும், வேகமாகவும் நகர்வதற்கு அனுமதிக்காது. நீங்கள் அதிகம் கல்வி அறிவை சேர்த்து வைத்தால், உங்களது நகர்தலுக்கான சாத்தியங்கள் மிகவும் குறைவாக இருக்கும்.

எனவேதான் உங்களது கற்றறிந்தவர்கள் தேங்கி கிடக்கும் குட்டை போன்றவர்கள். அவர்கள் ஒருபோதும் நதிகள் போன்று இருப்பதில்லை. கல்வி அறிவு நிறைந்த மக்கள் அழகான வார்த்தைகளைப் பேசிக் கொண்டும், மாபெரும் தத்துவங்களை நூலாக்கி நெய்து கொண்டும் இருப்பார்கள். ஆனால் அவர்களது வார்தைகளுக்குள் நீங்கள் சென்று அதில் ஆழமாக ஊடுருவிச் சென்றால், நீங்கள் அதில் எப்போதும் வெறுமையைத் தவிர வேறு எதையும் காண முடியாது.

தெளிவற்ற எண்ணம் இல்லாதவர்களால் கடவுள் பற்றி மிகப்பெரிய புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன. சொர்க்கம், நரகம் பற்றி மிகப் பெரிய புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன. சொர்க்கம் மற்றும் நரகம் பற்றிய வரைபடங்களும் கூட மக்களால் வரையப்பட்டுள்ளன. ஆனால் அவர்களுக்கு ஒரு விஷயமும் தெரியாது. அவர்கள் தங்களது சொந்த வளர்ச்சிகள் மற்றும்

மனஎழுச்சி உலகினைக் கூட ஊடுருவிச் செல்லதவர்கள், அவர்கள் தங்களின் சொந்த அக தன்னுணர்வோடு தொடர்பு கொள்ளாதவர்கள். ஆனால் அவர்கள் மறுபிறவி, மரணத்தின் பிறகு வாழ்க்கை ஆகிய தூரத்து விஷயங்களைப் பற்றி பேசுகின்றனர். அவர்கள் கெட்டிக்கார மனிதர்கள், எப்படி பேசுவது என்பதை அவர்கள் அறிந்தவர்கள், எப்படி நிரூபிப்பது என்பதை அவர்கள் அறிந்தவர்கள், எப்படி விவாதிப்பது என்பதை அறிந்தவர்கள். யாரும் ஏமாந்து போகிற வழியில் அவர்கள் மிகவும் அழகாக விவாதம் செய்வார்கள்.

அவர்களின் விவாதங்களுக்குள் நீங்கள் சென்றால், அவை மிகவும் செல்லத்தக்கவை என்பதை கண்டு கொள்வீர்கள். ஆனால் வாதத்தின் செல்லத்தக்க தன்மை சம்பந்தம் இல்லாதது. அந்த மனிதர் அதை அறிந்து கொண்டு உள்ளாரா அல்லது இல்லையா என்பது தான் கேள்வியாகும். சில சமயம் ஒரு மனிதர் அதை அறிந்திருப்பார் ஆனால் அவரால் வாதம் பண்ணமுடியாது அல்லது தவறாக வாதம் செய்து விடுவார். ஒரு மனிதன் சில சமயம் அறிந்தவராக இருக்கலாம் ஆனால் அதை வெளிப்படுத்து வதற்கான மொழி அவரிடம் இருக்காது அல்லது தவறான மொழியைப் பயன்படுத்துகிறார், ஆனாலும் கூட அவர் என்ன கூறுகிறாரோ அது உண்மையானது. அவரது வாதம் தவறாக இருக்கலாம். அவரது மொழி வளம் குறைவானதாக இருக்கலாம். ஆனால் அவர் கூறுவது உண்மையானதாகும்.

அடுத்த பக்கம் பார்த்தால், சிலரின் மொழிவளத்தில் உங்களால் எந்த குறைபாட்டையும் காண முடியாது. அவர்களது வாதங்கள் நிறைவானதாக இருக்கும். அவர்கள் திறமைவாய்ந்த தர்க்க அறிவுள்ளவர்கள். அவர்களோடு உங்களால் விவாதம் செய்ய முடியாது. அவர்கள் உடனடியாக அமைதியாகி விடுவார்கள். என்றாலும் கூட அவர்கள் என்ன கூறுகிறார்களோ அது முட்டாள் தனமானது. அது எந்த அர்த்தத்தையும் உண்டாக்காது. அது வெறுமனே அவர்களின் மனதில் மட்டுமே உள்ளது. அவர்களது இதயமானது அதனால் தொடப்படவில்லை. அவர்கள் என்ன கூறுகிறார்களோ அதனால் அவர்கள் கொஞ்சம்

கூட நகர்ந்து சென்றதில்லை. அவர்கள் கடவுளைப் பற்றி பேசும் போது அவர்களின் ஆன்மாவின் எந்தவிதமான ரசமும் வழிந்தோடுவதில்லை, அவர்கள் அன்பைப் பற்றி பேசும்போது அவர்களின் கண்களில் அதற்கான அறிகுறியை உங்களால் காண முடியாது. மேலும் அவர்கள் கவிதை பற்றி பேசும் போது அவர்களின் பிரசன்னத்தில் எந்த ஒரு கவிதையும் இருக்காது. அவர்கள் அருள் பற்றி பேசுவார்கள். ஆனால் அவர்களிடம் எங்குமே அருளை உங்களால் காணமுடியாது.

ஆனால் அவர்களால் மாபெரும் வார்த்தை குழப்பத்தை உண்டாக்க முடியும், வார்த்தைகளின் புகைமண்டலத்தை அவர்களால் உருவாக்க முடியும். நீங்களும் கூட வார்த்தைகளில் வாழ்ந்து வந்தால், நீங்களும் கூட ஏமாற்றப்படுவதற்கான எல்லா சாத்தியங்களும் இருக்கிறது. அப்படித்தான் பல கோடி மக்கள் காணாமல் போய்விடுகிறார்கள். குருடர்கள் மற்ற குருடர்களை வழிநடத்தி செல்கிறார்கள். சொல்வன்மை அறிந்த குருடர்கள், சொல்வன்மை இல்லாத குருடர்களை வழிநடத்தி செல்கின்றனர். தகவல்களை அறிந்த குருடர்கள் தகவல்கள் அறியாத குருடர்களை வழிநடத்து கின்றனர்.

ஒரு இயேசு, ஒரு புத்தர், ஒரு பகாவுதீன், ஒரு ஹக்கிம் சனாய் போன்ற கண்கள் உள்ள மக்கள் பிறக்கும் போது கற்றறிந்த மக்களும் பண்டிதர்களும் இயேசு கூறுவது தவறு என்கிற ஒரே விஷயத்தில் உடனடியாக ஒத்துப் போகின்றனர். ரொட்டி என்றால் என்ன என்பதில் அவர்கள் ஒருவரோடு ஒருவர் ஒத்துப் போகமாட்டார்கள். வேறு எந்த விஷயத்திலும் கூட ஒத்துப் போக மாட்டார்கள். ஆனால் இயேசு தவறாக கூறுகின்றார் என்பதில் மட்டும் உடனடியாக அவர்கள் ஒத்துப் போவார்கள்.

அவர்கள் இந்துவாக இருக்கலாம், அவர்கள் முகமதியர் களாக இருக்கலாம், அவர்கள் யூதர்களாக இருக்கலாம், அவர்கள் வேறு யாராகவும் இருக்கலாம். ஆனால் இயேசு போன்ற ஒரு மனிதர் வரும் போது அவர்கள் அனைவரும் உடனடியாக ஒன்று சேர்ந்து விடுகின்றனர். ஏனெனில் அவர்கள் அதில் உள்ள

ஆபத்தை பார்க்கிறார்கள். இயேசு கூறுவது சரி என்றால் அதன் பின்னர் அவர்கள் கூறுவது தவறானதாக ஆகிவிடும். இயேசு கூறுவது தவறு என்று நிரூபிக்கப்பட வேண்டும். அப்படி அவர்களால் அது தவறு என்று நிரூபிக்க முடியவில்லை என்றால் அதன்பின்னர் இயேசுவை அழித்து விடவேண்டும். அவர்களால் தாங்கள் கூறுவதை நிரூபிக்க முடியவில்லை என்றால் அதன் பின்னர் மக்களின் வாழ்க்கையில்; இருந்து இயேசுவை நீக்கி விடுவது மட்டுமே ஒரே வழியாகும்.

இயேசு கொலை செய்யப்பட்டு விடும் போது, அதே மக்கள், இயேசுவைக் கொன்ற அதே மக்கள், இயேசுவைப் பின்பற்று பவர்களாக, போப்கள், பிஷப்கள் மற்றும் பாதிரியார் களாக ஆகி விடுவார்கள். தத்துவார்த்தம் பேசுவதற்கு மீண்டும் அவர்கள் அங்கு வந்து விடுவார்கள். உயிருள்ள இயேசுவோடு சிக்கல்கள் இருக்கும் ஆனால் இயேசுவின் வார்த்தைகளில் எந்த ஒரு பிரச்சினையும் இருக்காது. எந்த வார்த்தையையும் கொண்டு அவர்கள் நூல் நூற்று நெசவு செய்து விடுவார்கள். அது மோசஸிடம் இருந்து வந்ததா அல்லது அது இயேசுவிடம் இருந்து வந்ததா என்பது அவர்களுக்கு எந்த ஒரு வேறு பாட்டையும் உண்டாக்கி விடாது. இப்போது அவர்களது தத்துவார்த்தத்தின் மையமாக இயேசு ஆகிவிடுகிறார்.

தத்துவ மேதைகளுக்கு ஒரு மிகப்பெரிய மூலமாக புத்தர் ஆகிவிட்டார். இது நம்பமுடியாத, விநோதமான விஷயம் ஏனெனில் புத்தர் முற்றிலும் தத்துவத்திற்கு எதிரானவர். அவர் தனது வாழ்நாள் முழுவதிலும் தத்துவத்திற்கு எதிரானவராக இருந்தார். அவர் ஒருபோதும் எந்த ஒரு தத்துவார்த்த பொருள் பற்றியும், பேசியது கிடையாது. அவர் இந்த பூமி சார்ந்தவராக இருந்தார். நடைமுறைக்கு சாத்தியப்படுபவராக அவர் இருந்தார். அவர் ஒரு செயல் முறை மனிதர். நீங்கள் அவரிடம் கடவுள் பற்றி கேள்வி கேட்டால், உடனே அவர் அந்த கேள்வியைப் புறம் தள்ளி விட்டு, ''அது எப்படி உங்களது வாழ்க்கையை உருமாற்றப் போகிறது?'' கடவுள் பற்றி பேசுவது அர்த்தமற்றது. அதில் காலத்தை வீணாக்காதீர்கள். தியானம் பற்றி சிந்தியுங்கள், கருணை

பற்றி சிந்தியுங்கள், உங்களை மாற்றம் அடையச் செய்கின்ற விஷயங்கள் பற்றி சிந்தியுங்கள், கடவுளால் என்ன செய்ய முடியும்? என்று உங்களிடம் கூறுவார்.

நீங்கள் அவரிடம் மறுபிறவி பற்றி கேட்டால் உடனடியாக ''முட்டாள்தனமானவற்றை பேசாதே'' என்று உங்களை நிறுத்திவிடுவார். இப்போது நீங்கள் உயிரோடு இருக்கிறீர்கள் மேலும் வாழ்க்கை என்றால் என்ன என்று கூட உங்களுக்கு தெரியாது. ஆனால் நீங்களோ, ''மரணத்திற்கு பிறகு நான் என்னவாக இருப்பேன்?'' என்று கேட்கிறீர்கள். இது முழுமையான முட்டாள் தனம். இதற்கு மாறாக நீங்கள் உங்களுக்குள் சென்று நீங்கள் யார் என்று பாருங்கள். உங்களை நீங்கள் அறிந்து கொண்டால், அதன் பின்னர் இங்கு எந்த பிரச்சினையும் வராது. நீங்கள் இறந்து விடும்போது நீங்கள் உயிர் பிழைப்பீர்களா அல்லது மாட்டீர்களா என்பதை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அதைப்பற்றி இப்போது அதிக குழப்பத்தை ஏன் உருவாக்குகிறீர்கள் என்று கூறிவிடுவார்.

அதை எப்படி இப்போதே முடிவு செய்ய முடியும்? முடிவு செய்வதற்கு வழியே கிடையாது. உடலானது மரணம் அடைந்தாலும் நீ உயிர் வாழ்வாய் என்று இந்த ஒட்டு மொத்த உலகும் கூறினாலும் கூட இன்னமும் சந்தேகம் இருக்கும். யாருக்குத் தெரியும்? எல்லார் கூறுவதும் தவறாகத் தான் இருக்கும். இந்த பூமியானது தட்டையானது என்று இந்த ஒட்டு மொத்த உலகமும் நம்பிக் கொண்டு இருந்தது. ஆனால் இந்த ஒட்டு மொத்த உலகின் நம்பிக்கையும் தவறாகிவிட்டது. பூமி தட்டையானது அல்ல என்பதை இப்போது நாம் அறிவோம். காலம் காலமாக சூரியன் பூமியைச் சுற்றி வருகிறது என்று இந்த ஒட்டு மொத்த உலகமும் நம்பியது. இப்போது பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது என்பதை நாம் அறிவோம்.

ஆகவே எத்தனை மக்கள் இதை நம்புகிறார்கள் என்பது ஒரு கேள்வி அல்ல. உண்மை என்பது பெரும்பான்மையினரால் முடிவு செய்யப்படுவது கிடையாது. இது வாக்களிக்கும் கேள்வி

அல்ல. ஒரு தனி மனிதன் உண்மையை அறிந்து கொண்டாலும் கூட.இந்த ஒட்டு மொத்த உலகமும் அவனுக்கு எதிராக ஆகிவிடுகிறது. ஆனால் கூட அவர் கூறுவது உண்மைதான். இந்த ஒட்டு மொத்த உலகமும் இன்னமும் தவறான தாகவே இருக்கிறது.

நீங்கள் இறந்தபோதும் நீங்கள் இருப்பீர்கள் என்று உங்களை சமாதானப்படுத்த முடியாது. உங்களை சமாதானப்படுத்துவதற்கு எந்த ஒரு வழியும் கிடையாது. நீங்கள் நம்புவதற்கு விரும்பினால் உங்களால் எதையும் நம்ப முடியும். ஆனால் நீங்கள் விரும்பியதால் மட்டுமே அதை நம்புகிறீர்களே தவிர நீங்கள் அவர்கள் கூறுவதால் சமாதானம் அடைந்து நம்பவில்லை. மரணத்தை கண்டு நீங்கள் பயப்படுகிறீர்கள். மரணத்தின் பிறகும் நீங்கள் இருப்பதற்கு விரும்புகிறீர்கள். எனவே அதை நம்புவதற்கு நீங்கள் விரும்புகிறீர்கள், ஆகவே அதை நீங்கள் நம்புகிறீர்கள். ஆனால் அது உங்களது வெறும் நம்பிக்கை மட்டுமே என்பதை நீங்கள் அறிவீர்கள், அது இல்லாமலும் கூட போகலாம். உங்களுக்குள் அடி ஆழத்தில் உங்களது சந்தேகம் இன்னமும் இருக்கும்.

தத்துவம் சார்ந்தது என்று நீங்கள் நினைக்கின்ற எந்த ஒரு கேள்விக்கும் புத்தர் பதில் கூறமாட்டார். ''நான் ஏதாவது கூறினாலும் கூட, நீங்கள் அதை தவறாக புரிந்து கொள்வீர்கள். அப்பால் உள்ள ஒன்றினைக் குறித்து உங்களுக்கு எந்த ஒரு அனுபவமும் இல்லை, தகவல் தொடர்பானது சாத்தியப்படாது'' என்று புத்தர் கூறுவது வழக்கம். அந்த தகவலை தெரிவிப்பது எப்படி கடினமானது என்பதையும் உங்களால் பார்க்கமுடியும். நான் ஒரு விஷயத்தை கூறுகிறேன். நீங்கள் வேறு ஒன்றினைப் புரிதலின் மட்டத்திற்கு தக்கபடி மட்டுமே புரிந்து கொள்கிறார்கள்.

விளையாட்டுப் பிள்ளை ஒருவனுக்கு அதிர்ஷ்டம் அடித்ததில் நிறைய பணம் கிடைத்தது. அவனிடம் அந்த பணத்தை எல்லாம் நீ என்ன செய்தாய் என்று கேட்கப்பட்டது. அதற்கு அவன், ''கொஞ்சம் மதுபானத்திற்கு போனது, கொஞ்சம்

அதிவேக கார்களுக்கு சென்றது. அதிகமான பணம் பெண்கள் விஷயத்தில் செலவானது. மீது உள்ள பணத்தை நான் முட்டாள்தனமாக செலவழித்தேன்.'' என்று கூறினான்.

வார்த்தைகள் எல்லாருக்கும் அதே அர்த்தத்தை கொடுப்பதில்லை. அது உங்களது புரிதலுக்கு தக்கபடிதான் இருக்கும்.

பத்தாவது முறை தனது மனைவி வேறு ஒருவனிடம் இருக்கும் போது கையும்களவுமாக பிடித்த ஒருவன் ''நீங்கள் இப்படி தொடர்ந்து விசுவாசம் இல்லாமல் இருப்பது நீ முற்றிலும் தகுதியற்றவள் என்பதைத் தான் காட்டுகிறது'' என்று கத்தினான்.

அதற்கு மாறாக அவனது மனைவியிடம் இருந்து, ''இது நான் உண்மையானவனாக இருப்பதில் மிகவும் நல்லவனாக இருப்பதையே நிரூபிக்கிறது,'' என்று அமைதியாக பதில் வந்தது.

இது எல்லாம் உங்களைப் பொறுத்து தான் உள்ளது.

வியாபார விஷயமாக வெளிநாட்டு பயணம் செய்த ஒருவன் பல மணி நேரம் உழைத்துவிட்டு, தனக்கு அந்த நாட்டின் மொழி தெரியாது என்கிற உண்மையினால் அவன் வெளிப்படையாக பேச முடியாமல் தவித்தான். அப்போது அவன் சாப்பிடுவதற்கு சென்ற உணவு விடுதியில் இவனது மேஜைக்கு அருகில் ஒரு தாராள மனப்பாங்குடன் கூடிய ஒரு பெண்மணி வந்து அமர்ந்ததைப் பார்த்து மகிழ்ச்சி அடைந்தான்.

எனவே நம்பிக்கையோடு அவன், '' உங்களுக்கு ஆங்கிலம் தெரியுமா?'' என்று கேட்டான்.

உடனே அவள், ''கொஞ்சம் தெரியும்,'' என்று புன்சிரிப்புடன் கூறினாள்.

அதற்கு அவன், ''கொஞ்சமா, அப்படியானால் எவ்வளவு?'' என்றான்.

உடனே அவளிடம் இருந்து, ''இருபத்து ஐந்து டாலர்'' என்று உடனடியாக பதில் வந்தது.

இந்த உலகில் தகவல் தொடர்பு என்பது மிகவும் கடினமான பிரச்சினைகளில் ஒன்றாகும். நீங்கள் ஒரு வார்த்தையைப் பயன்படுத்தும் போது நீங்கள் தான் அதற்கு ஒரு அர்த்தத்தைக் கொடுக்கிறீர்கள். அந்த வார்த்தை அடுத்த மனிதரை அடையும் போது அது அவருடைய அர்த்தத்தை தான் எடுத்துக் கொள்கிறது. எனவே இப்படி வார்த்தையை மாற்றும் போது எல்லாமே இழக்கப்பட்டு விடுகிறது.

எனவே தான் புத்தர், ''அப்பால் உள்ள ஒன்றினைப் பற்றி நான் பேச மாட்டேன். அப்பால் உள்ள ஒன்றினைப் பற்றி என்னிடம் நீங்கள் எந்த ஒரு கேள்வியையும் கேட்காதீர்கள். அதிக அறிவியல் பூர்வமாகவும், உண்மையானவர்களாகவும் இருங்கள், எது உள்ளதோ அதனுடன் செல்லுங்கள். உண்மையைப் பற்றி பேசாதீர்கள், எது உள்ளதோ அதனுள் செல்லுங்கள், நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அதனுள் செல்லுங்கள். அதுதான் உண்மை நிலையை அறிந்து கொள்வதற்கான வழியாகும்.''

ஆனால் புத்தர் இறந்த உடன் மிகப்பெரிய தத்துவப் பள்ளிக் கூடங்கள் எழுந்தன. புத்தருக்கு பிறகு இந்தியாவில் நடந்தது போன்று உலகில் வேறு எங்குமே இப்படி நடந்தது கிடையாது. தனது வாழ்நாள் முழுவதும் தத்துவத்திற்கு எதிராக இருந்த ஒரு மனிதர் இதுவரை இல்லாத அளவுக்கு தத்துவத்தின் மூலகாரணமாக ஆகிவிட்டார். புத்தர் இறந்த உடன் முப்பத்து ஆறு தத்துவப் பள்ளிக் கூடங்கள் உண்டாயின. அவர் எப்போதும் கண்டனம் செய்து வந்த மக்கள் அனைவரும் இப்போது ஒன்று சேர்ந்து அவரைப் பற்றி தத்துவம் பேச ஆரம்பித்து விட்டனர்.

இதில் உள்ள அழகையும், முரண்பாட்டையும் பாருங்கள். புத்தர் ஏன் மௌனமாக இருந்தார் என்று அவர்கள் தத்துவம் பேச ஆரம்பித்து விட்டனர். அப்பால் உள்ள ஒன்றினைப் பற்றி அவர் ஏன் எதுவுமே கூறவில்லை? அது தான் அவர்களது தத்துவமாக ஆகிவிட்டது! அப்பால் உள்ள ஒன்றினைக் குறித்து அவர் ஏன் மௌனமாக இருந்தார் என்பதைப்பற்றி அவர்கள் பேச ஆரம்பித்து விட்டனர். மேலும் அதற்கு அநேக பதில்கள் சாத்தியப்பட்டன.

''ஏனெனில் அப்பால் என்று ஒன்று கிடையாது'' என்று சிலர் கூறினார்கள். இப்போது ஒரு தத்துவம் வேர் ஊன்றி விட்டது. அடுத்தவர், ''அப்பால் உள்ள ஒன்று இருக்கிறது. ஆனால் அதை வார்த்தைகளில் வெளிப்படுத்த முடியாது. அதனால் தான் புத்தர் மௌனமாக இருந்தார்,'' என்று கூறினார். இப்போது மற்றும் ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. இப்படி தத்துவங்கள் போய் கொண்டே இருந்தது.

புத்தரின் மௌனம் கூட ஒரு பிரச்சினை ஆகி விட்டது. மக்கள் மௌனத்தை பற்றி விவாதிக்க ஆரம்பித்தனர். ஆனால் யாரும் அமைதியாக இருப்பதற்கு முயற்சி செய்ய வில்லை. மக்கள் மௌனத்தைப் பற்றி பேசுவதற்கு ஆரம்பித்து விட்டனர். இந்த கண்ணிவலை குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். மனம் மிகவும் வஞ்சகமானது. நான் தியானத்தைப் பற்றி ஏதாவது கூறினால், நீங்கள் தியானம் செய்ய வேண்டும் என்பதற்காக நான் அதைக் கூறுகிறேன். ஆனால் நீங்களோ தியானம் பற்றி, தியானம் என்றால் என்ன என்று சிந்திக்க ஆரம்பித்து விடுகிறீர்கள். தியானத்தில் எத்தனை வகைகள் உள்ளன? அவற்றுக்குள் உள்ள வேறுபாடு என்ன? ஏன் அவை ஒன்றுக்கொன்று எதிரானதாக உள்ளன? என்று சிந்திக்க ஆரம்பித்து விடுகிறார்கள்.

இப்படியே நீங்கள் முடிவில்லாமல் போய்க் கொண்டே இருப்பீர்கள். நீங்கள் தியானம் செய்வதற்கு எதுவும் நேரம் இருக்காது. நீங்கள் மேலும் மேலும் குழப்பமடைந்து விடுவீர்கள். இறுதியாக எப்படி தியானத்தை ஆரம்பிப்பது என்று தெரியாத அளவுக்கு நீங்கள் குழப்பம் அடைந்து விடுவீர்கள். ஏனெனில் அதில் அநேக திசைகள் திறந்திருக்கும். எங்கு போவது? எதைத் தேர்வு செய்வது? நீங்கள் வெறுமனே முடங்கிப் போவீர்கள்.

மனமானது எப்பொழுதும் அதைச் செய்கிறது. மனதின் இந்த கண்ணி வலைக்குள்ளிருந்து ஒரு சில மக்கள் மட்டுமே வெளியே தப்பித்து வரும் அளவுக்கு உண்மையிலேயே உஷாராக இருக்கிறார்கள். மனம் என்பது ஒரு மாபெரும் தத்துவமேதை. ஆனால் வாழ்க்கை என்பது தத்துவமல்ல, வாழ்க்கை என்பது

உண்மை நிலை. தத்துவம் என்பது உண்மை நிலையில் இருந்து தப்பித்து செல்லுதல், தத்துவம் என்றால் சிந்தித்தல். வாழ்க்கை என்பது வெறுமனே இருக்கிறது. அதில் சிந்தனை என்ற கேள்விக்கே இடமில்லை. நீங்கள் அதனுள் வெறுமனே குதித்து விடமுடியும்.

*பழங்கால குட்டை*
*ஒரு தவளை அதில் குதிக்கிறது*
*அந்த சப்தம்.........*

இதைப் போன்று நீங்கள் வாழ்க்கை என்னும் பழங்கால குட்டையில் குதித்து விட முடியும். அதனுள் குதிப்பதன் மூலமே உங்களால் அதைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். வாழ்க்கையைப் பற்றி அறிந்து கொள்வதற்கு வேறு எந்த வழியும் கிடையாது. அதைப் பற்றி நினைத்துக் கொண்டே இருப்பது அதைத் தவற விட்டு விடுவதற்கான நிச்சயமானதொரு வழியாக இருக்கும்.

இனி சூத்திரங்கள்:

*அவன் தனது சொந்த ஆன்மாவையே அறியவில்லை:*
*அவன் அடுத்தவரின் ஆன்மாவை எப்படி அறிவான்?*

ஆனால் இதைத்தான் நாம் ஒவ்வொருவரும் செய்து கொண்டு இருக்கிறோம். நீங்கள் நேசிக்கின்ற பெண்மணியை நீங்கள் அறிவதாக நினைக்கிறீர்கள். உங்களது கணவனை நீங்கள் அறிவீர்கள் என்று நீங்கள் நினைக்கிறீர்கள். வெறுமனே குழந்தையை உங்களது கருவறையில் ஒன்பது மாதங்கள் சுமந்து கொண்டு இருந்ததால் உங்களது குழந்தையை நீங்கள் அறிவதாக நினைக்கிறீர்கள். நீங்கள் அறிந்து கொண்டு விட்டீர்களா? நீங்கள் அறிந்து கொண்டதாக வெறுமனே நம்ப மட்டுமே செய்கிறீர்கள். ஒரு குழந்தையானது ஒரு புதிர் போன்று உள்ளது. ஒரு குழந்தை பற்றி உங்களுக்கு ஒரு விஷயம் கூட தெரியாது. இந்த முழு பிரபஞ்சத்தைப் போன்று ஒரு குழந்தையும் கூட அந்த அளவுக்கு புதிர் நிறைந்ததாக இருக்கிறது.

நீங்கள் நேசிக்கின்ற உங்களது பெண்மணியை உங்களுக்கு தெரியாது. அந்த பெண்மணியை நீங்கள் எப்படி அறிந்து கொள்ள முடியும்? ஏனெனில் நீங்கள் இன்னமும் உங்களைப் பற்றியே அறிந்து கொள்ளவில்லை. அந்த பெண்மணி உங்களுக்கு நெருக்கமானவளாக இருக்கலாம். ஆனால் நீங்கள் உங்களுக்கு நெருக்கமாக இருப்பதைப் போல் அந்தப் பெண்மணி ஒரு போதும் உங்களுக்கு நெருக்கமானதாக இருக்க முடியாது.

அதனால் தான், உங்களை நீங்களே நேசிக்காதவரையில் இந்த உலகில் வேறு யாரையும் உங்களால் நேசிக்க முடியாது உங்களை நீங்களே அறிந்து கொள்ளாத வரையில் இந்த உலகில் வேறு யாரையும் உங்களால் அறிந்து கொள்ள முடியாது என்று நான் கூறுகிறேன். நேசமும், அறிவும், எல்லாமும் உங்களது சொந்த மையத்தில் இருந்து தான் ஆரம்பிக்கின்றன. முதல் நீர்வட்டம் அங்கிருந்துதான் எழவேண்டும். அதன் பின்னர் அது பரவிக் கொண்டே போகும். அதன்பின்னர் அது இந்த பிரபஞ்சத்தின் எல்லையற்ற எல்லைகள் வரையில் பரவிக் கொண்டே போகும். ஆனால் முதலில் அது உங்களது ஆன்மாவின் மையத்தில் ஆரம்பிக்கப்படவேண்டும். **அவன் தனது சொந்த ஆன்மாவையே அறியவில்லை: அவன் அடுத்தவரின் ஆன்மாவை எப்படி அறிவான்?**

இதில் உள்ள பிரச்சினை என்ன? நீங்கள் ஏன் உங்களை அறிந்து கொள்வதில்லை? இது தான் இந்த உலகில் மிகவும் சுலபமான ஒன்றாக இருந்திருக்க பேண்டும் ஆனால் இது தான் கடினமானதாக மிகவும் கடினமானதாக ஆகிவிட்டது. ஒருவர் தன்னைப் பற்றி அறிந்து கொள்வது என்பது கிட்டத்தட்ட சாத்தியமில்லாத ஒன்றாக ஆகிவிட்டது. எது தவறாகிப் போனது? உங்களுக்கு அறிந்து கொள்ளும் திறன் உள்ளது. நீங்கள் இங்கு இருக்கிறீர்கள், உங்களைப் பற்றி அறிந்து கொள்ளும் திறன் இங்கு உள்ளது, அதன் பிறகு அது தவறாகிப் போய்விட்டது? **அறிகின்ற திறனானது ஏன் தன் மீதே திரும்ப மாட்டேன் என்கிறது?**

ஒரே ஒரு விஷயம் மட்டுமே தவறாகிப் போய்விட்டது. எனவே அதை நீங்கள் சரி செய்யவில்லை என்றால் நீங்கள் உங்களைப் பற்றி அறியாமலேயே இருந்து விடுவீர்கள். எது தவறாகிப் போனது என்றால் உங்களுக்குள் ஒரு பிளவு உருவாக்கப்பட்டு விட்டது. நீங்கள் உங்களது ஒருங்கிணைப்பை இழந்து விட்டீர்கள். இந்த சமூதாயமானது உங்களுக்கு எதிராக உங்களது வீட்டையே இரண்டாக்கி விட்டது.

இந்த தந்திரம் மிகவும் எளிமையானது; ஒருமுறை புரிந்து கொண்டால், அதை நீங்கள் நீக்கிவிடலாம். அந்த தந்திரம் என்ன வென்றால் இந்த சமுதாயமானது நீங்கள் எப்படி இருக்க வேண்டும் என்கிற லட்சியங்களை உங்களுக்கு கொடுத்து விட்டது. இந்த சமுதாயம் அந்த லட்சியங்களை உங்களுக்குள் திணித்து விட்டது. அந்த லட்சியங்களை உங்களுக்குள் ஆழமாக நட்டு விட்டது. எனவே நீங்கள் எப்போதும் அந்த லட்சியங்கள் மீது ஆர்வத்துடன் இருக்கிறீர்கள். நீங்கள் யார் என்பதை மறந்து விட்டீர்கள் ஆனால் நீங்கள் எப்படி இருக்கவேண்டும் என்று சிந்திக்கிறீர்கள். நீங்கள் எதிர்கால லட்சியத்தின் மீது அதீத ஆசையோடு இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் உங்களது தற்போதைய உண்மை நிலையை மறந்து விட்டீர்கள்.

உங்களது கண்கள் தூரத்து எதிர்காலத்தில் குவிக்கப்பட்டு உள்ளது; எனவே அவற்றால் உள் பக்கமாக திரும்ப முடியாது. நீங்கள் இடைவிடாமல் என்ன செய்வது, எப்படி செய்வது, இதுவாக இருப்பது எப்படி என்று நினைத்துக் கொண்டே இருக் கிறீர்கள். உங்களது மொழியானது அப்படி இருக்க வேண்டும், இப்படி இருக்க வேண்டும் என்பதைக் கொண்டுள்ளது ஆனால் உண்மை நிலையானது இருக்கிறது என்பதை மட்டுமே கொண்டுள்ளது. உண்மை நிலையானது அப்படி இருக்க வேண்டும், இப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதை அறியாது.

ஒரு ரோஜா மலர், ரோஜா மலர்தான், அது வேறு எதுவாகவும் இருக்க வேண்டும் என்கிற கேள்வியே இல்லை. ஒரு தாமரை மலர் தாமரை மலர்தான். இதில் ரோஜா மலர் ஒருபோதும் ஒரு

தாமரையாக மாறுவதற்கு முயற்சிப்பது கிடையாது அல்லது தாமரை மலரும் கூட ஒரு போதும் ரோஜாவாக மாறுவதற்கு முயற்சிப்பது கிடையாது. அதனால்தான் அவை மனநோயால் பாதிக்கப்படுவதில்லை. அவற்றுக்கு மனநல மருத்துவர் தேவை இல்லை; அவற்றுக்கு மனப்பகுப்பாய்வு சிகிச்சை தேவை இல்லை. ரோஜா மலர் ஆரோக்கியமாக இருக்கிறது ஏனெனில் அந்த ரோஜா மலர் வெறுமனே அதன் உண்மை நிலையில் வாழ்கிறது.

மனிதனைத்தவிர இந்த ஒட்டுமொத்த உலகில் உள்ளவை எல்லாம் அது போன்று தான் உள்ளன. மனிதன் மட்டுமே லட்சியங்களோடு இருக்கிறான். ''நீ இப்படி இருக்க வேண்டும், அப்படி இருக்க வேண்டும்'' என்று இருக்கிறான். அப்போது நீங்கள் இருக்கின்ற சொந்த நிலைக்கு எதிராக பிரிக்கப்பட்டு விடுகிறீர்கள். இருக்கவேண்டும் என்பதும் இருக்கிறது என்பதும் பகைவர்களாக இருக்கின்றன.

மேலும் நீங்கள் இருக்கின்றதைத் தவிர வேறு எதுவாகவும் உங்களால் இருக்க முடியாது. இது உங்களது உள்ளத்தில் ஆழமாக மூழ்கிவிடட்டும். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படித்தான் இருக்க முடியுமே தவிர உங்களால் ஒருபோதும் வேறு எதுவாகவும் இருக்க முடியாது. ''நான் நானாகவே இருப்பேன்'' என்கிற உண்மை உங்களுக்குள் ஆழத்தில் மூழ்கிவிடும் போது, எல்லா லட்சியங்களும் மறைந்து விடுகிறது. அவை தானாகவே தவிர்க்கப்பட்டு விடுகின்றன. லட்சியங்கள் இல்லாத போது உண்மை நிலையானது நேருக்கு நேர் எதிர் கொள்ளப்படுகிறது. அதன்பின்னர் உங்களது கண்கள் இங்கேயே இந்தப் பொழுதி லேயே நோக்குகின்றன, அதன்பின்னர் நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அதிலேயே நீங்கள் இருக்கிறீர்கள். உங்களுள் ஏற்படுத்தப்பட்ட பிளவு, பிரிவு மறைந்து விட்டது. நீங்கள் ஏகனாக இருக்கிறீர்கள்.

இதுதான் இந்த பிரபஞ்சத்தோடு ஒன்றாக இருப்பதற்கான ஆரம்பம். முதலில் நீங்கள் உங்களோடு ஒன்றுபட்டு இருங்கள். புதிரோடு ஒன்றாக இருப்பதற்கான முதல்படி இதுதான். அதன்

பின்னர் இரண்டாவதும், கடைசியுமான படியானது இந்த பிரபஞ்சத்தோடு ஒன்றாக இருப்பதாகும். இரண்டாம் படி மிகவும் சுலபமானது. அதிக கட்டுத்திட்டங்களாலும், அதிக கல்வியினாலும், அநேக நாகரிக முயற்சிகளாலும் முதல் படியானது கடினமானதாக ஆகிவிட்டது.

நொடிக்கு நொடி நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே உங்களை ஏற்றுக் கொண்டு, உங்களை நேசித்துக் கொண்டு வெறுமனே இருந்து விட்டால் முதல் அடியானது எடுத்துவைக்கப் படுகிறது. உதாரணமாக இந்த நொடிப் பொழுதில் நீங்கள் சோகமாக இருக்கிறீர்கள். இந்த ஒட்டு மொத்த கட்டுத்திட்டமானது, ''நீங்கள் சோகமாக இருக்கக் கூடாது இது நல்லதல்ல. நீங்கள் கவலையுடன் இருக்கக் கூடாது. நீங்கள் சந்தோஷமாக இருக்க வேண்டும்'' என்று உங்களுக்கு கூறுகிறது. இப்போது இதுதான் பிரிவினை, இப்போது இதுதான் பிரச்சினை. நீங்கள் சோகமாக இருப்பது இந்த நொடிப் பொழுதில் உள்ள உண்மை நிலை. ஆனால் உங்களது கட்டுத் திட்டம், உங்களது மனமானது, ''நீங்கள் இப்படி இருக்கக் கூடாது; நீங்கள் சந்தோஷமாக இருக்க வேண்டும், புன்சிரிப்போடு இருங்கள்! மக்கள் உங்களைப் பற்றி என்ன நினைப்பார்கள்?'' என்று கூறுகிறது.

நீங்கள் இப்படி அதிக சோகத்தோடு இருந்தால், உங்களது மனைவி கூட உங்களை விட்டு போய் விடலாம், நீங்கள் இப்படி அதிக சோகத்தோடு இருந்தால் உங்களது நண்பர்கள் உங்களை பாலைவனமாக ஆக்கிவிடலாம், நீங்கள் இப்படி சோகமாக இருந்தால் உங்களது தொழில் அழிந்து போகலாம். நீங்கள் சிரிக்கவேண்டும். நீங்கள் புன்சிரிப்போடு இருக்க வேண்டும். நீங்கள் சந்தோஷமாக இருப்பது போன்று பாசாங்காவது செய்ய வேண்டும். நீங்கள் ஒரு மருத்துவர் என்றால், நீங்கள் இப்படி அதிக சோகத்துடன் இருந்தால் உங்களது நோயாளிகள் உங்களைப் பற்றி நல்லபடியாக உணர மாட்டார்கள். ஒரு சந்தோஷமான, மகிழ்ச்சியான, ஆரோக்கியமான மருத்துவரையே அவர்கள் விரும்புகிறார்கள். ஆனால் நீங்களோ இப்படி

சோகமாக இருக்கிறீர்கள். சிரியுங்கள். உங்களால் உண்மையான புன்சிரிப்பை கொண்டுவர, முடியவில்லை என்றால் ஒரு பொய் யான புன்சிரிப்பை கொண்டு வாருங்கள், ஆனால் எப்படியாது புன்சிரிப்புடன் இருங்கள். குறைந்தபட்சம் நடியுங்கள், பாசாங்கு செய்யுங்கள்! இப்படித்தான் உங்களுக்கு கூறப்படுகிறது.

இதுதான் பிரச்சினை, நீங்கள் நடக்கலாம், பாசாங்கு செய்யலாம், புன்சிரிப்பு சிரிக்கலாம், உங்களால் சமாளிக்க முடியும், ஆனால் இப்போது நீங்கள் இரண்டாக ஆகிவிட்டீர்கள். நீங்கள் உண்மை நிலையை அடக்கி வைத்து விட்டீர்கள்; நீங்கள் போலித்தனமானவராக ஆகிவிட்டீர்கள். இந்த போலித்தனம் தான் இந்த சமுதாயத்தினால் பாராட்டப்படுகிறது. போலியானவர் புனிதமானவர் ஆகிவிடுகிறார், போலியானவர் மாபெரும் தலைவராக ஆகி விடுகிறார். போலியானவர் மகாத்மா ஆகி விடுகிறார். எனவே எல்லாரும் போலியானவரையே பின்பற்ற ஆரம்பிக்கிறார்கள். போலித்தனமாக இருப்பது தான் உங்களது லட்சியமாக இருக்கிறது.

அதனால் தான் உங்களைப் பற்றி அறிந்து கொள்ள உங்க ளால் முடியவில்லை. உங்களை நீங்கள் ஏற்றுக் கொள்ளாத வரையில் எப்படி உங்களால் உங்களைப் பற்றி அறிந்து கொள்ள முடியும்? நீங்கள் எப்போதும் உங்களது உயிர் உணர்வுகளை அடக்கிக் கொண்டே இருக்கிறீர்கள். அப்படியானால் என்ன செய்ய வேண்டும்? நீங்கள் சோகமாக இருக்கும்போது அந்த சோகத்தை ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போது அந்த சோகம் தான் நீங்கள். ''நான் சோகமாக இருக்கிறேன்'' என்று சொல்லாதீர்கள். சோகம் என்பது உங்களிடம் இருந்து தனியாக இருக்கின்ற ஒன்று என்று சொல்லாதீர்கள். ''சோகம்தான் நான். இந்த நொடிப் பொழுதில் சோகம் தான் நான்'' என்று வெறுமனே கூறுங்கள். உங்களது சோகத்தை அதன் முழு உண்மையுடன் வாழுங்கள்.

அப்போது உங்களது ஆன்மாவில் ஒரு அதிசயக் கதவு ஒன்று திறப்பதைக்கண்டு நீங்கள் ஆச்சரியமடைவீர்கள். சந்தோஷமாக இருக்க வேண்டும் என்கிற கற்பனையோடு இல்லாமல் உங்களது சோகத்தை உங்களால் வாழ முடியும்

என்றால் நீங்கள் உடனடியாக சந்தோஷம் அடைந்து விடுகிறீர்கள் ஏனெனில் உங்களுக்குள் இருந்த பிரிவு மறைந்துவிட்டது. அங்கு வேறு எந்த லட்சியமும் கிடையாது. ''சோகமே நானாக இருக்கிறேன்'' வேறு எதுவாகவும் இருக்க வேண்டும் என்கிற எந்த ஒரு லட்சியமும் இல்லை. எனவே அங்கு எந்த முயற்சியும் இல்லை, எந்த சண்டையும் இல்லை. ''நான் வெறுமனே இதுவாகவே இருக்கிறேன்'' அப்போது அங்கு ஓய்வு நிலை வந்து விடுகிறது. அந்த ஓய்வு நிலையில் தான் அருள் இருக்கிறது, அந்த ஓய்வு நிலையில் தான் மகிழ்ச்சி இருக்கிறது.

இப்படி நீங்கள் பிளவுபட்டு இருப்பதன் காரணமாக மட்டுமே உங்களது எல்லா மனவேதனைகளும் இருக்கின்றன. வேதனை என்றால் பிளவுபட்டு இருக்கிறீர்கள் என்று அர்த்தம். பேரானந்தம் என்றால் பிளவு இல்லாமல் இருக்கிறீர்கள் என்று அர்த்தம். ஒருவன் சோகமாக இருக்கும்போது அவன் சோகத்தை ஏற்றுக் கொண்டுவிட்டால், அவனால் எப்படி மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்று உங்களுக்கு முரண்பாடானதாக தோன்றும். அது அப்படித்தான் இருக்கிறது. அதை முயற்சி செய்யுங்கள்.

ஆனால், சந்தோஷமாக இருக்க முயற்சி செய்யுங்கள் என்று நான் கூறவில்லை. ''உங்களது சோகத்தை ஏற்றுக் கொண்டால் அப்போது நீங்கள் சந்தோஷமாக ஆகிவிடுவீர்கள்'' என்று நான் கூறவில்லை. அப்படி நான் கூறவில்லை. அதுதான் உங்களது மனதின் நோக்கமாக இருந்தால் அதன் பின்னர் எதுவுமே நடக்காது; அப்போது நீங்கள் இன்னமும் போராடிக் கொண்டு இருக்கிறீர்கள். ''நான் எனது சோகத்தை கூட ஏற்றுக்கொண்டு விட்டேன், அதன் பிறகு இவ்வளவு நேரம் ஆகிவிட்டது,'' ''சோகமே நானாக இருக்கிறேன்'' என்றும் கூட சொல்லிவிட்டேன் ஆனால் மகிழ்ச்சியானது இன்னமும் வரவில்லை என்று உங்களது ஓரக்கண்ணால் நீங்கள் கவனித்துக் கொண்டு இருந்தால் மகிழ்ச்சி வராது. அப்படிப்பட்ட வழியில் அது வராது.

மகிழ்ச்சி என்பது ஒரு லட்சியம் அல்லது இலக்கு அல்ல. அது ஒரு காரியத்தை செய்வதால் விளைகின்ற ஒரு உப பொருள் போன்றது. அது இயற்கையாக ஒன்று படுதல், மற்றும் ஒற்றுமை

யின் விளைவாக ஏற்படுகிறது. எந்த விதமான உள் நோக்கமும், இல்லாமல், எந்த ஒரு குறிப்பிட்ட நோக்கமும் இல்லாமல் வெறுமனே உங்களது சோகத்தோடு ஒன்றுபட்டு இருங்கள். ஏதாவது நோக்கத்தோடு இருத்தல் என்கிற கேள்விக்கே அங்கு இடமில்லை. இப்படித்தான் நீங்கள் இந்த நொடிப் பொழுதில் இருக்கிறீர்கள்; இது தான் இந்த நொடிப் பொழுதின் உண்மை நிலை. மேலும் அடுத்த நொடிப் பொழுதில் நீங்கள் கோபம் கூட அடையலாம். அதையும் கூட ஏற்றுக் கொள்ளுங்கள். அதற்கு அடுத்த நொடிப் பொழுதில் நீங்கள் வேறு எதுவாகவும் ஆகலாம். அதையும் கூட ஏற்றுக் கொள்ளுங்கள்.

அபரிமிதமாக ஏற்றுக்கொள்வதோடு, எந்த ஒரு பிரிவினையையும் ஏற்படுத்தாமல், நொடிக்கு நொடி வாழ்ந்தால், நீங்கள் ஆன்ம அறிவினை நோக்கிய பாதையில் இருப்பீர்கள். ஆன்ம அறிவு என்றால் உபநிடதங்களைப் படித்துக்கொண்டு, அமைதியாக உட்கார்ந்து கொண்டு ''அகம் பிரம்மாஸ்மி'' ''நான் கடவுள்'' என்று திரும்ப திரும்ப கூறிக்கொண்டு இருப்பது என்கிற கேள்வியே அல்ல. இவை எல்லாம் முட்டாள் தனமான முயற்சிகள். ஒன்று கடவுள்தன்மை உள்ளவர் என்று நீங்கள் அறிவீர்கள் அல்லது அதை நீங்கள் அறியாமல் இருப்பீர்கள். '' அகம் பிரம்மாஸ்மி, நான் கடவுள்'' என்று உங்களது வாழ்நாள் முழுவதிலும் நீங்கள் திரும்பத் திரும்ப கூறிக் கொண்டே போகலாம். அதில் நீங்கள் உங்களது ஒட்டு மொத்த வாழ்க் கையையும் வீணாக்கலாம், அதை நீங்கள் அறிந்து கொள்ள மாட்டீர்கள்.

நீங்கள் அதை அறிந்து கொண்டால், அதை திரும்பத் திரும்ப கூறுவதில் எந்த அர்த்தமும் இல்லை. ஏன் அதை திரும்பத் திரும்ப கூறுகிறீர்கள்? நீங்கள் அறிந்து கொண்டால், அதை நீங்கள் அறிந்து கொண்டு விட்டீர்கள். நீங்கள் அதை அறிந்து கொள்ளவில்லை என்றால், அதை திரும்பத் திரும்ப கூறுவதன் மூலம் உங்களால் எப்படி அதை அறிந்து கொள்ள முடியும்? இதில் உள்ள ஒட்டு மொத்த முட்டாள்தனத்தையும் பாருங்கள். ஆனால் இந்த நாட்டிலும், வேறு நாடுகளிலும் கூட மடாலயங்களிலும்,

ஆஸ்ரமங்களிலும் இது தான் நடந்து கொண்டிருக்கிறது. அங்கு மக்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள்? கிளிப்பிள்ளை போன்று திரும்பத் திரும்ப கூறிக் கொண்டு இருக்கிறார்கள்.

நான் முற்றிலும் வேறுபட்ட ஒரு அணுகுமுறையை உங்களுக்கு கொடுக்கிறேன். குர் ஆன் அல்லது பைபிள் அல்லது வேதத்தை திரும்பத் திரும்ப கூறுவதால் நீங்கள் அறிந்தவர் ஆகிவிட மாட்டீர்கள். முடியாது. நீங்கள் அறிவு மிக்கவராக மட்டுமே ஆகிவிடுவீர்கள். அதன் பின்னர் ஒருவர் தன்னை அறிந்து கொள்வது எப்படி? உங்களிடம் உள்ள பிரிவினையை கைவிட்டு விடுங்கள்.

அந்த பிரிவினை தான் ஒட்டு மொத்த பிரச்சினையாக உள்ளது. நீங்களே உங்களுக்கு எதிராக இருக்கிறீர்கள். உங்களுக்குள் இப்படி எதிரான ஒன்றை உருவாக்குகின்ற லட்சியங்களை எல்லாம் கைவிட்டு விடுங்கள். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அதுதான் உங்களது வழியாகும். அதை மகிழ்ச்சியோடு, நன்றியுணர்வோடு ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போது திடீரென்று ஒரு ஒத்திசைவு உணரப்படும். உங்களுக்கள் உள்ள இரண்டு ஆன்மாக்கள்; உண்மை ஆன்மா மற்றும் லட்சிய ஆன்மா ஆகிய இரண்டும் அதன்பின்னர் ஒருபோதும் சண்டை போட்டுக் கொள்ளாது. அவை சந்தித்து, ஒன்று கலந்து ஒன்றாகி விடும்.

உண்மையில் சோகம் உங்களுக்கு வேதனையைக் கொடுப்பது கிடையாது. சோகம் தவறானது என்கின்ற தப்பான அபிப்பிராயம் தான் உங்களுக்கு வேதனையைக் கொடுக்கிறது. அது ஒரு மனஇயல் பிரச்சினையாக ஆகிவிடுகிறது. கோபம் என்பது வேதனையானது அல்ல; கோபம் தவறானது என்கிற அந்த எண்ணம் தான் மனரீதியான கவலையை ஏற்படுத்துகிறது. அது உங்களது தப்பான எண்ணமே தவிர அது உண்மை அல்ல. உண்மை எப்போதும் விடுதலை அளிக்கக் கூடியது.

''உண்மை விடுதலையளிக்கும்'' என்று இயேசு கூறுகிறார், அது அபரிமிதமான முக்கியத்துவம் வாய்ந்தது. ஆம், உண்மை

விடுவிக்கிறது. ஆனால் உண்மையைப் பற்றி அறிந்து கொள்ளுதல் ஒருபோதும் விடுவிக்காது. உண்மை நிலையில் இருங்கள், அப்போது அது விடுவிக்கும். உண்மையாக இருங்கள் அப்போது அங்கு விடுதலை இருக்கும். நீங்கள் அதைக் கொண்டு வரவேண்டியதில்லை. நீங்கள் அதற்காகக் காத்துக்கொண்டு இருக்கவேண்டிய தில்லை; அது உடனடியாக நடக்கிறது.

உண்மை நிலையில் இருப்பது எப்படி? நீங்கள் ஏற்கனவே உண்மை நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் பொய்யான லட்சியங்களை சுமந்து கொண்டு இருக்கிறீர்கள். அவை தான் சிக்கலை உருவாக்குகிறது. லட்சியங்களைக் கைவிடுங்கள். சில நாட்களுக்கு ஒரு இயற்கையான ஆன்மாவாக இருங்கள். வெறுமனே மரங்களைப் போல, மற்றும் விலங்குகள், பறவைகள் போல இருங்கள். நீங்கள் எப்படி இருக்கின்றீர்களோ அப்படியே உங்களது உயிர் உணர்வை ஏற்றுக் கொள்ளுங்கள். அப்போது ஒரு மாபெரும் அமைதி எழுகிறது. அதைவிட வேறு என்னவாக அது இருக்கமுடியும்? அங்கு தப்பெண்ணமே இருக்காது. அதன் பின்னர் சோகம் அழகானதாக இருக்கிறது. அதில் ஆழம் இருக்கிறது. அதன் பிறகு கோபமும் கூட அழகானது தான், அதில் உயிர்த்துடிப்பு உள்ளது. அதன் பின்னர் காமமும் கூட அழகானதுதான் ஏனெனில் அதில் படைப்பாற்றல் இருக்கிறது.

'தப்பான எண்ணங்கள்' இல்லாத போது எல்லாமே அழகானதாக இருக்கிறது. எல்லாமே அழகானதாக இருக்கும் போது நீங்கள் ஓய்வுடன் இருக்கிறீர்கள். அந்த ஓய்வினில் நீங்கள் உங்களது சொந்த ஆரம்ப இடத்தில்; வீழ்ந்து விடுகிறீர்கள். அது உங்களுக்கு ஆன்மிக அறிவைக் கொண்டு வருகிறது. ''உன்னையே நீ அறிந்து கொள்'' என்பதற்கு நீங்கள் உங்களது சொந்த மூலத்தில் வீழ்ந்து விடுதல் என்று அர்த்தமாகும். அதில் அறிவு என்னும் கேள்விக்கே இடமில்லை, அது உங்களுக்குள் ஏற்படுகின்ற உருமாற்றம் சம்பந்தமான கேள்வியாகும்.

எனவே என்ன உருமாற்றம் பற்றி நான் பேசுகிறேன்? எது போன்றும் இருக்கவேண்டும் என்று நான் உங்களுக்கு எந்த ஒரு லட்சியத்தையும் கொடுக்கவில்லை. நீங்கள் என்னவாக இருக்

கிறீர்களோ அதிலிருந்து நீங்கள் வேறு ஒருவராக உருமாற்றம் அடைய வேண்டும் என்று நான் கூறவில்லை. நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அதில் நீங்கள் வெறுமனே இளைப்பாறிக் கொண்டு, வெறுமனே பாருங்கள்.

நான் என்ன சொல்கிறேன் என்பதைக் கேட்டீர்களா? வெறுமனே அதில் உள்ள கருத்தை பாருங்கள். அது உங்களை விடுவித்துவிடும். ஒரு மாபெரும் ஒத்திசைவு, ஒரு மாபெரும் இசை கேட்கப்படும். அந்த இசையானது ஆன்ம அறிவினுடைய தாகும். அப்போது உங்களது வாழ்க்கை மாற ஆரம்பித்து விடும். அதன்பின்னர் எல்லாப் பூட்டுகளையும் திறக்கின்ற ஒரு மந்திர சாவியை நீங்கள் பெற்று விடுவீர்கள்.

நீங்கள் சோகத்தை ஏற்றுக் கொண்டால், சோகம் மறைந்து விடும். சோகத்தை நீங்கள் ஏற்று கொண்ட பின்னர் உங்களால் எவ்வளவு காலம் தான் சோகத்தோடு இருக்க முடியும்? நீங்கள் சோகத்தை ஏற்றுக் கொண்டால், சோகமான உங்களது உயிர் உணர்வில் உள்வாங்கப்பட்டுவிடும், அது உங்களது ஆழமாக ஆகிவிடும்.

உங்களது கோபத்தை நீங்கள் ஏற்றுக் கொள்ளும் போது உங்களால் எவ்வளவு காலம் தான் கோபத்தில் இருக்க முடியும்? நீங்கள் அதை மறுப்பது தான் கோபத்திற்கு உணவளிப்பதாகும். நீங்கள் அதை ஏற்றுக் கொண்டால், நீங்கள் அந்த கோபம் என்னும் சக்தியை உங்களுக்குள் வாங்கிக் கொள்கிறீர்கள். கோபத்தில் மாபெரும் சக்தி உள்ளது. எனவே அந்த சக்தியானது உங்களால் உள்வாங்கப்படும் போது நீங்கள் அதிக சக்தி மிக்கவராக ஆகிவிடுகிறீர்கள். உங்களது வாழ்க்கையானது அதன் பிறகு அதன் மீது ஒரு தீராத ஆசை கொண்டு விடும், அது ஒரு ஒளிச்சுடர். அது ஒரு சுறுசுறுபற்ற வாழ்க்கையாக இருக்காது, அது புத்திசாலித்தனம், கூர்மை மற்றும் தீராத ஆசையைக் கொண்டதாக இருக்கும்.

நீங்கள் காமத்தை ஏற்றுக் கொண்டு விட்டால், ஒரு நாள் காமமும் கூட மறைந்து விடுகிறது. அது உங்களுக்குள் மாபெரும்

படைப்பாற்றலை வெளியிட்டு விடும். ஏனெனில் காமம் என்பது படைப்பாற்றலுக்கான சக்தி ஆகும். அதன் பின்னர் நீங்கள் ஒரு படைப்பாளி ஆகி விடுவீர்கள். உங்கள் மூலமாக மாபெரும் ஓவியங்கள் எழலாம், மாபெரும் கவிதைகள் எழலாம். மாபெரும் பாடல்கள் மற்று இசை பிறக்கலாம். அதன்பின்னர் எதுவும், எல்லாமும் சாத்தியப்படும். நீங்கள் இந்த பிரபஞ்சத்தோடு கலந்து விடுவீர்கள்.

காமம் என்பது படைப்பாற்றலின் கீழ்நிலையில் உள்ள வடிவம், படைப்பாற்றலின் வெறும் விதையாகும். அந்த விதையானது உடைக்கப்பட்டு விடும் போது, அது கரைந்து விடும்போது, அது உள்வாங்கப்படும் போது, உங்களது ஒட்டு மொத்த உயிர் உணர்வும் படைப்பாற்றல் மிக்கதாக ஆகிறது. படைப்பாற்றலுடன் இருப்பதுதான் பேரானந்த நிலையில் இருப்பதாகும், படைப்பாற்றலுடன் இருப்பது தான் கடவுளோடு ஒன்றுபட்டு இருப்பதாகும். நீங்கள் ஒரு படைப்பாளி ஆகிவிடும் போது நீங்கள் கடவுளுடன் கலந்து விடுகிறீர்கள்.

நீங்கள் ஓவியம் வரையவோ அல்லது கவிதை எழுதவோ இல்லை என்றால் நீங்கள் ஒரு படைப்பாளி அல்ல என்று நான் கூறவில்லை. புத்தர் ஓவியம் தீட்ட வில்லை, எந்த ஒரு கவிதையும் எழுதவில்லை. ஆனால் அவரது வாழ்நாள் முழு வதும் படைப்பாற்றலாக இருந்தது. அவர் எதைத் தொட்டாலும் அது உருமாற்றம் அடைந்தது. அவரிடம் நெருங்கி வருவதற்கு யாருக்கெல்லாம் தைரியம் இருந்ததோ அவர் மறுபிறவி அடைந்தார். அவர் ஒரு மிகப்பெரிய சக்தி தளத்தை, ஒரு புத்த தளத்தை உருவாக்கினார். யாரெல்லாம் அந்த தளத்திற்குள் நுழைந்தார்களோ அவர்கள் எல்லாம் ஒருபோதும் பழையவர் களாக இருந்தது இல்லை. அது தான் அவரது படைப்பாற்றல்.

கண்ணுக்குத் தெரிகின்ற கவிதைகளை அவர் எழுதவில்லை. ஆனால் அவர் நடக்கின்ற விதமே ஒரு கவிதையாக இருக்கும். அவர் மக்களை பார்க்கின்ற விதமே ஒரு கவிதையாக இருக்கும். அவர் ஒருபோதும் நடனமாடியது இல்லை. ஆனால் நீங்கள் கவனித்தால், போதி மரத்தின் கீழ் அமைதியாக உட்கார்ந்து

கொண்டு கவனித்தால், அங்கு அவரிடம் மாபெரும் நடனம் நடப்பதை காணலாம். அது கண்ணுக்கு தெரியாத நடனம். அது சூட்சுமமானது, அது கண்களுக்கு தெரியாதது. அது பௌதீக நடனம் அல்லர், அது ஆன்மிக நடனம். அவர் இந்த பிரபஞ்சத்தி னின்று வேறானவர் அல்ல. அவர் மரங்களில் நடனமாடுகிறார். காற்றில், நட்சத்திரங்களில் நடனமாடுகிறார். அவர் இந்த முழுமையோடு நடனமாடுகிறார். அவர் இனிமேல் தனியானவர் அல்லர்.

வேறுபாட்டை நீங்கள் புரிந்து கெண்டீர்களா? நீங்கள் காமத்தை விட்டுவிட முயற்சி செய்தால், உங்களது வாழ்க்கையில் இருந்து எல்லா படைப்பாற்றலும் மறைந்து விடும். அது தான் இந்த துரதிருஷ்ட நாட்டில் நடந்து விட்டது. மக்கள் காமத்தை கைவிட முயற்சி செய்தனர், மக்கள் எப்படியோ பிரம்மசரியத்தை தம்மீது திணித்துக் கொண்டனர். எனவே ஆண்கள் எல்லாம் படைப்பாற்றல் இல்லாதவர்களாக ஆகிவிட்டனர். அவர்கள் சுறுசுறுப்பற்றவர்களாக ஆகிவிட்டனர். அவர்கள் புத்திசாலித் தனத்தை இழந்து விட்டனர். நீங்கள் இந்தியா முழுவதும் சுற்றி வந்து இந்திய மகாத்மாக்களைப் பார்க்கலாம், அப்போது இந்த உலகில் எங்கேயும் இப்படிப்பட்ட சுறுசுறுப்பற்ற, முட்டாள் மக்களைக் காண முடியாது. படைப்பாற்றல் இல்லாத வழியில் அவர்களின் ஒட்டு மொத்த வாழ்க்கையும் இருக்கிறது. படைப் பாற்றல் இல்லாத விஷயங்களுக்காக அவர்கள் பாராட்டப்படு கின்றனர்.

யாரோ ஒருவர் உண்ணா நோன்பு இருக்கிறார். அதனால் அவர் பாராட்டப்படுகிறார். நடனமாடுவதற்காக பாராட்டப்பட வில்லை. சிலர் முள்ளில் ஆன படுக்கையில் தூங்குகிறார்கள். அதனால்தான் அவர் பாராட்டப் படுகிறார். இப்போது இவர் இந்த உலகில் படைப்பாற்றல் மிகுந்த எதையும் செய்யவில்லை. அவர் கண்டு கொண்டதைவிடவும் இந்த உலகினை மேலும் கொஞ்சம் அதிகமாக அழகானதாக ஆக்கவில்லை.; இந்த உலகம் முன்பு எப்படி அசிங்கமாக இருந்ததோ அப்படியே இதை விட்டு விடுவார் அல்லது இன்னமும் கூட அதிக அசிங்கமானதாக

ஆக்கிவிடுவார். ஆனால் அவர் பாராட்டப்படுகிறார். ஏனெனில் அவர் முள் படுக்கையில் படுத்து கிடக்கிறார். இதில் என்ன கருத்து உள்ளது?

நீங்கள் காமத்தை அடக்கி வைத்தால், படைப்பாற்றல் மறைந்து போகிறது. நீங்கள் காமத்தை ஏற்றுக் கொண்டால், காமமானது படைப்பாற்றலாக மாற்ற மடைகிறது. நீங்கள் கோபத்தை ஏற்றுக் கொண்டால், அது உங்களுக்குள் மிகப் பெரிய சக்தியை வெளியிடுகிறது. மேலும் அது உங்களுக்குள் பெருவிருப்பம் ஆகிறது. உங்களது வாழ்க்கையானது உணர்வு ததும்பியதாக ஆகிறது. அதன் பின்னர் அது ஈடுபாடு, அர்ப்பணிப்பு, பங்கு பெறுதலுடன் கூடிய ஒரு வாழ்க்கையாக இருக்கிறது. அதன் பின்னர் நீங்கள் வெறுமனே ஒரு பார்வை யாளராக, இருக்க மாட்டீர்கள். நீங்கள் வாழ்க்கையில் அடர்த்தியில், அதன் நடனத்தில், அதன் ஒரு அங்கமாக இருப் பீர்கள். ஒவ்வொரு நொடிப் பொழுதில் நீங்கள் ஈடுபாட்டுடன் இருப்பீர்கள். அதன் பின்னர் நீங்கள் வாழ்க்கையில் இருந்து தப்பித்து ஓட மாட்டீர்கள். நீங்கள் மகிழ்ச்சியாகவும், முழுமை யாகவும் வாழ்வீர்கள். அப்போது நீங்கள் இந்த பிரபஞ்சத்திற்கு ஏதோ ஒன்றை பங்களிப்பு செய்வீர்கள். அதன் பின்னர் நீங்கள் பயனற்றவர் அல்ல, அதன் பின்னர் நீங்கள் கொஞ்சம் அர்த்தமுள்ளவராக இருக்கிறீர்கள். ஆனால் கோபமானது ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். அதன் பிறகு அந்த கோபத்தின் சக்தியானது உள்வாங்கபடுகிறது.

ஏதாவது ஒன்றை நீங்கள் வெறுத்து ஒதுக்கும் போது நீங்கள் கொஞ்சம் சக்தியை ஒதுக்கி விடுகிறீர்கள். ''இந்த சக்தியை ஏற்றுக் கொள்ள நான் விரும்பவில்லை'' என்று நீங்கள் கூறி விட்டீர்கள். ஆனால் இது உங்களது சக்தி. இப்படி சக்தியை நீங்கள் வெறுத்து ஒதுக்கிவிட்டால் அது உங்களை ஏழை ஆக்கிவிடும். கோபத்தை வெறுத்து ஒதுக்கினால், நீங்கள் சக்தியுடன் இருக்கக் கூடிய ஒரு சாத்தியத்தை ஒதுக்கி விட்டீர்கள். இப்போது நீங்கள் படைப் பாற்றல் மிக்கவராக இருப்பதற்கான சாத்தியங்களை வெறுத்து ஒதுக்கிவிடுகிறீர்கள். இப்போது உங்களது வாழ்க்கை யில் எந்த

கவிதையும், எந்த பாடலும், எந்த ஒரு நடனமும் நடக்கப் போவது கிடையாது. நீங்கள் ஒரு நடைப்பிணமாக இருப்பீர்கள் உங்களது வாழ்க்கை சக்தியற்ற ஒரு வெறும் அசைவாக இருக்கும்.

நீங்கள் சோகத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டால் அதன் பிறகு நீங்கள் வாழ்க்கையில் எந்த ஒரு ஆழத்தையும் பெற மாட்டீர்கள். நீங்கள் குறுகியவராக இருப்பீர்கள். உங்களது சிரிப்பும் கூட குறுகியதாக இருக்கும் ஏனெனில் அதில் எந்த ஆழமும் இருக்காது. அதை ஏற்றுக் கொள்வதன் மூலமாக மட்டுமே அந்த சோகம் வெளியேற்றப்படும். உங்களது சிரிப்பு வெறுமனே மேற்பரப்பில் மட்டுமே இருக்கும்.

நான் மக்களைப் பார்த்து அவர்களை போலிகள் என்று அழைக்கும் போது அந்த அர்த்தத்தில் தான் நான் அழைக்கிறேன். எவன் ஒருவன் வாழ்க்கையைக் கண்டு பயந்து கொண்டு, உண்மையாக வாழாமல், வாழ்வது போன்று பாசாங்கு மட்டுமே செய்து கொண்டு இருக்கிறானோ அவன் தான் போலிமனிதன். இந்த போலித்தனம் அவன் வெறுத்து ஒதுக்குவதன் மூலம் வருகிறது. அவன் எல்லாவ்றையும் வெறுத்து ஒதுக்கிக் கொண்டே போகிறான். நீங்கள் ஒரு புத்தர் ஆகவேண்டும், நீங்கள் ஒரு இயேசு ஆகவேண்டும் என்கிற லட்சியத்தை உங்களது மனதில் வைத்திருக்கிறீர்கள். நீங்கள் ஒருபோதும் அப்படிப்பட்ட ஒருவராக ஆக மாட்டீர்கள். அதற்கு மாறாக ஏதாவது ஒன்றாக எப்போதாவது ஆகின்ற சாத்தியங்களையும் கூட நீங்கள் இழந்து விடுவீர்கள்.

புத்தர்கள், கிருஷ்ணர்கள், கிறிஸ்துகள் எல்லாரையும் மறந்து விடுங்கள், அவர்களைப் போன்று நீங்கள் பாசாங்கு செய்வதற்கான லட்சியங்கள் அல்ல அவர்கள். லட்சியங்களை அழிப்பவராக இருங்கள். இது தான் எழுச்சி மற்றும் இதுதான் மதமும் கூட. எனவே நீங்கள் எந்த ஒரு லட்சியத்தாலும் ஆட்கொள்ளபடாமல், உங்களை துன்புறுத்தாமல் இருக்கும் போது, நீங்கள் உங்களோடு ஒத்திசைந்து கொள்வீர்கள். மேலும் நீங்கள் எதையும் வெறுத்து ஒதுக்காத போது எல்லா சக்திகளும் உங்களுடையது தான், நீங்கள் செழிப்பாக்கப்படுகிறீர்கள். அதன்

பின்னர் உங்களிடம் அபரிமிதமான சக்தி இருக்கும் மேலும் அந்த அபரிமிதமான சக்தி மகிழ்ச்சியாக இருக்கிறது, அந்த சக்தி கொண்டாட்டமாக இருக்கிறது.

எனவே உங்களது ஆரம்ப இடத்தில் நீங்கள் வீழ்ந்து விடும் போது நீங்கள் ஒரு அறிந்தவர் ஆகிவிடுகிறீர்கள். மேலும் நீங்கள் உங்களை அறிந்து கொண்ட அந்த நொடிப் பொழுதே, நீங்கள் எல்லாவற்றையும் அறிந்து விடுகிறீர்கள், ஏனெனில் அது ஒரே மாதிரியானது. எனக்குள் இருப்பது தான் எல்லாருக்குள்ளும் இருக்கிறது. உருவங்கள் மட்டுமே வேறுபட்டு உள்ளன, வீடுகள் மட்டுமே வேறுபட்டு உள்ளன. அதே தன்னுணர்வுதான் இருக்கிறது.

என்னுள் இருந்து கொண்டு ''நான் இருக்கிறேன்'' என்று கூறுகின்ற அதே ஒன்று தான் உங்களுக்குள் இருந்து கொண்டும், ''நான் இருக்கிறேன்'' என்று கூறுகிறது. இந்த நான் இருக்கிறேன் என்பது ஒன்றுதான். இதுதான் மரங்களிலும் இருக்கிறது ஆனால் பேசாமல் இருக்கிறது. பாறைகளிலும் இதே தான் இருக்கிறது. ஆனால் அது ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறது. ஆனால் அதுவும் நான் இருக்கிறேன் என்கிற தன்மைதான். எனவே இதை அறிந்து கொள்வது தான் ''அகம் பிரம்மாஸ்மி, நான் கடவுள்'' என்பதன் அர்த்தத்தை அறிந்து கொள்வதாகும்.

*அவன் தனது சொந்த ஆன்மாவையே அறியவில்லை ;*
*அவன் அடுத்தவரின் ஆன்மாவை எப்படி அறிவான்?*
*அவன் தனது கைகள் மற்றும் கால்களை மட்டுமே அறிவான்,*
*அவன் கடவுளைப் பற்றி எப்படி அறிவான்?*

நீங்கள் உங்களது கைகள் மற்றும் கால்களை மட்டுமே அறிவீர்கள். இது தான் உங்களது இருப்பிடம், இதுதான் உங்களது வீடு, இந்த கோயிலோடு தான் நீங்கள் பரிச்சயமாகி இருக்கிறீர்கள். இந்த கோயிலில் உள்ள இறைவனிடம் நீங்கள் எப்போது பரிச்சயமாகப் போகிறீர்கள்? இந்த வீட்டில் வசிப்பவர் யார்? இந்த உடலில் இருப்பவர் யார்? இந்த தன்னுணர்வு என்பது என்ன?

நான் பேசுவதை நீங்கள் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் காதுகளின் மூலம் கேட்டுக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் என்னைப் பார்க்கிறீர்கள், உங்களது கண்களின் மூலம் என்னைப் பார்க்கிறீர்கள். நிச்சயமாக நீங்கள் இந்த காதுகள் அல்ல மற்றும் நீங்கள் இந்த கண்களும் அல்ல. இந்த கண்களும் காதுகளும் வெறும் ஜன்னல்கள். யாரோ ஒருவர் பின்னால் மறைந்து கொண்டு, ஜன்னல்களுக்கு பின்னால் நின்று கொண்டு இருக்கிறார்.

வெறுமனே கவனித்துப் பாருங்கள். உங்களது கண்கள் ஜன்னல்களாக இருக்கின்றன. நீங்கள் என்னைப் பார்க்கும் போது நீங்கள் கண்கள் மூலமாக பார்க்கிறீர்கள். ஆனால் நீங்கள் யார்? என்னைப் பார்க்கின்ற அவர் யார்? நான் பேசுவதைக் கேட்கின்ற அவர் யார்? இந்த தன்னுணர்வு என்பது என்ன?

எதையும் வெறுத்து ஒதுக்காதீர்கள், அப்படி செய்தால் உங்களால் ஒருபோதும் இந்த தன்னுணர்வை அறிந்து கொள்ள முடியாது. நீங்கள் என்னவாகவெல்லாம் இருக்கிறீர்களோ அதையெல்லாம் ஏற்றுக் கொள்ளுங்கள். ஏதாவது ஒன்றினை நீங்கள் வெறுத்து ஒதுக்கினால், நீங்கள் உங்களது சொந்த சக்தியில் இருந்து வெளியேறி விடுகிறீர்கள். நீங்கள் பிரிவுகளை உருவாக்கி விடுகிறீர்கள். உங்களது சக்திகளில் இருந்து வெளியேறாதீர்கள். கோபம் இருக்கும் போது, அதை ஏற்றுக் கொள்ளுங்கள். சோகம் இருக்கும்போதும் அதை ஏற்றுக் கொள்ளுங்கள். இது உங்களது சக்தி. இது பிரபஞ்சத்தின் பரிசு. அதை உள்வாங்கி கொள்ளுங்கள், ஜீரணித்து விடுங்கள், அது தான் நீங்கள்.

நீங்கள் எதில் இருந்தும் வெளியேறாத போது, உங்களிடம் நல்லது கெட்டது என்கிற பொருள் விளக்கங்கள் இல்லாத போது, நீங்கள் எதையும் கண்டனம் செய்யாத போது, தீர்ப்புகளை எல்லாம் நீங்கள் மறந்து விடும் போது, இடைவிடாமல் எதையாவது தீர்மானிப்பவராக, மதிப்பீடு செய்பவரா்க, கண்டனம் செய்பவராக இல்லாதபோது, இந்த விஷயங்கள் எல்லாம் மறைந்து விடும் போது, இருக்கின்ற எல்லாவற்றையும்,

வெறுமனே அபரிமிதமாக ஏற்றுக் கொள்பவராக நீங்கள் இருக்கும் போது, அறிதல் என்பது நிகழ்கிறது. அந்த அறிதலில் கடவுள் அறியப்படுகிறார்.

*இது முனிவரின் கிரசித்தலுக்கு அப்பாற்பட்டது:*
*நீ அதை அறிந்து கொண்டதாக நினைத்தால்,*
*நீ ஒரு முட்டாளாக இருக்க வேண்டும்,*

முனிவர்களும் கூட இதை தங்களது கிரகத்தலுக்கு அப்பால் இருப்பதாக கண்டு கொள்கின்றனர். ஆகவே மெத்தப் படித்தவர்கள், பண்டிதர்கள், அறிவாளிகள், தாங்கள் கடவுளை அறிந்து கொண்டு விட்டோம் என்று நினைத்தால், அவர்கள் தங்களை அறிந்து கொண்டு விட்டோம் என்று நினைத்தால் அவர்கள் கண்டிப்பாக முட்டாள்களாக இருக்க வேண்டும்.

கடவுள் கிரகித்தலுக்கு எல்லாம் அப்பால் இருக்கிறார். ஒரு முனிவரின் கிரகித்தலும் கூட கடவுளை இரண்டு கைகளினால் பிடிக்க முடியாததாக இருக்கிறது ஏனெனில் கடவுள் என்பவர் ஒருபோதும் தேடப்படும் பொருள் அல்ல. ஆனால் கடவுள் என்பவர் தேடுபவராக இருக்கிறார். கடவுள் உங்களால் கிரகிக்கத் கூடிவராக இல்லை. கிரகிப்பதற்கு முயற்சி செய்து கொண்டிருப்பவர் தான் கடவுளாக இருக்கிறார். கிரகிப்பவரை உங்களால் எப்படி கிரகிக்க முடியும்? அது அர்த்தமற்றதாக இருக்கும்.

அதனால் தான் உங்களது சொந்த முகத்தையே உங்களால் பார்க்க முடிவதில்லை. உங்ள்து சொந்த கண்களை உங்களால் பார்க்க முடிவதில்லை. உங்களால் ஒரு முகம்பார்க்கும் கண்ணாடியில் மட்டுமே பார்க்க முடியும். ஆனால் அதில் நீங்கள் உங்களது கண்களின் பிரதிபலிப்பைத்தான் பார்க்கிறீர்கள், உங்களது கண்களைப் பார்ப்பதில்லை. கண்கள் தங்களைத் தாங்களே பார்க்க முடியாது.

கடவுள் எப்படி தன்னையே கிரகிக்க முடியும்? நான் எனது ஒரு கையை அதே கையினால் பிடிக்க முயற்சி செய்தால் அது பைத்தியக் காரத்தனமாகிவிடும். அது உங்களை பைத்தியமாக்கி

விடும். அது ஒரு நாயானது தனது வாலினை துரத்துவதற்கு முயற்சிப்பது போன்றதாக இருக்கிறது.

**இது முனிவரின் கிரகித்தலுக்கு அப்பாற்பட்டது.** ஏனெனில் அது கிரகித்தலுக்கு அப்பாற்பட்டது. அது ஏன் கிரகித்தலுக்கு அப்பாற்பட்டது? அது வெகு தொலைவில் இருக்கிறது என்பதல்ல, ஆனால் அதே சக்திதான் அதையே பிடித்துக் கொள்ள முயற்சி செய்தால் அது முடிவதில்லை. அறிபவர் தான் அறியப்பட்டதாக இருக்கிறார். அறிவு என்பது வேறு ஏதோ ஒன்றாக இருக்கப்போவதில்லை; அது தன்னையே அறிந்து கொள்வதாக இருக்கிறது. நீங்கள் கிரகிக்கின்ற எந்த ஒரு அறிவுப் பொருளாகவும் அது இருக்கப் போவதில்லை. நீங்கள்தான் அகப்பொருள், நீங்களே தான் புறப்பொருள் இருப்பது எல்லாம் நீங்கள். எல்லாமே தன்னுணர்வு.

*இதை நம்மால் விவரிக்க முடியம் போது*
*நீங்கள் திட நம்பிக்கையின் தூய சாராம்சத்தை அறிவீர்கள்,*
*அது வரையில்*
*உங்களுக்கும், திட நம்பிக்கைக்கும் பொதுவில் என்ன*
*உள்ளது?*

திட நம்பிக்கை என்பது என்ன என்று உங்களால் அறிந்து கொள்ள முடியாது; நீங்கள் திடநம்பிக்கை என்று அழைப்பது வெறும் நம்பிக்கை மட்டுமே. இந்த நம்பிக்கையானது உங்களது தலையின், உங்களது அறிவின் ஒரு அங்கமாக உள்ளது. நம்பிக்கை என்பது பொய்யானது, போலியானது, நம்பிக்கை என்றால் யாரோ ஒருவர் எதைப்பற்றியோ கூறினார். அதை நீங்கள் நம்பி விட்டீர்கள் என்று அர்த்தமாகும். அது நீங்கள் அடுத்தவரிடம் இருந்து பெற்றது. நம்பிக்கை என்பது ஒருபோதும் அசலானது அல்ல. திடநம்பிக்கை தான் எப்போதும் அசலானதாக இருக்கிறது. அது உங்களுக்குள் எழுகிறது. அது உங்களது சொந்த தன்னுணர்வின் வளர்ச்சியாக இருக்கிறது.

நீங்கள் உங்களை அறிந்து கொள்ளும் போது மட்டுமே **நீங்கள் திட நம்பிக்கையின் தூய சாராம்சத்தை அறிவீர்கள்.**

**அதுவரையில் உங்களுக்கும் திட நம்பிக்கைக்கும் பொதுவில் என்ன உள்ளது?**

ஆகவே நீங்கள் ஒரு நம்பிக்கையாளர் என்று உங்களை நீங்கள் ஏமாற்றி கொள்ளாதீர்கள். நீங்கள் அறிந்தவர் என்று நினைத்து நீங்கள் பாசாங்கு செய்யாதீர்கள்; நீங்கள் அசல் சிந்தனைகளை நினைப்பதாக நினைக்காதீர்கள். எந்த ஒரு சிந்தனையும் எப்போதும் அசல் அல்ல. அனுபவம் மட்டுமே அசலானது.

சிறுமி லோரி தனது பக்கத்து வீட்டு சிறுமியுடன் சண்டை போட்ட பிறகு அந்த சிறுமியின் தாயார், "நீ அந்த சின்னப் பெண் அலீஸின் தலை முடியைப் பிடித்து இழுக்கச் சொன்னது சாத்தானின் அறிவுரை என்பதை நினைவில் கொள்" என்று திட்டினாள்.

உடனே லோரி தனது தாயிடம், "அப்படித்தான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன் ஏனெனில் அவளைக் கன்னத்தில் குத்த வேண்டும் என்பது தான் எனது சொந்த எண்ணமாக இருந்தது" என்றாள்.

"இது தான் எனது சொந்த எண்ணம்" என்று மக்கள் எதையோ எண்ணிக்கொண்டு இருக்கிறார்கள். அது உங்களுக்கு ஆணவத்திற்கான நல்ல உணர்வைக் கொடுக்கிறது. ஆனால் எந்த ஒரு எண்ணமும் உங்களுடையது அல்ல. தன்னுணர்வு மட்டுமே உங்களுடையது.

ஆல்ப்ரட் டென்னிசன் கூறுகிறார்.

ஆனால் நான் என்னவாக இருக்கிறேன்?

இரவில் அழுகின்ற சிறுகுழந்தையா?

வெளிச்சத்திற்காக அழுகின்ற சிறு குழந்தையா?

ஆனால் வெறும் அழுகையைத் தவிர

வேறு எந்த ஒரு மொழியும் இல்லையே!

அறிவு உங்களுக்கு உதவாது. ஒரு அழுகை அதைவிட அதிகம் உதவும். அழுதல், கதறுதல், கண்ணீர், பாசம், இப்படி உண்மையான ஏதோ ஒன்று, இந்த நொடிப் பொழுதில் உங்களுக்குள் எழுகின்ற ஏதோ ஒன்று உங்களுக்கு அதிகம் உதவுவதாக இருக்கலாம். அது உண்மை நிலையின் ருசியை கொஞ்சம் உங்களுக்கு கொடுக்கும். மற்றபடி உங்களது நம்பிக்கை, வெறுமனே அடுத்தவரிடம் இருந்து பெற்றதாக, உயிரற்றதாகவே இருக்கும்.

அப்படித்தான் இங்கு அநேக முகமதியர்கள் மற்றும் இந்துக்கள் மற்றும் கிறிஸ்தவர்கள், யூதர்கள் இருக்கின்றனர். ஆனால் நீங்கள் மதப்பற்றுள்ள மக்களை எங்குமே காண்ப தில்லை. மதப்பற்றுள்ளவர்கள் இந்த பூமியில் இருந்து மறைந்து விட்டனர். ஆம், இங்கு கிறிஸ்தவர்கள் இந்துகள், இருக்கிறார்கள் ஆனால் மதப்பற்றுள்ள மக்கள் எங்கு உள்ளனர்?

மதமானது திடநம்பிக்கையில் உள்ளது. வெறும் நம்பிக்கையில் இல்லை. வெறும் நம்பிக்கையின் பின்னால் எப்போதுமே சந்தேகம் இருக்கிறது. வெறும் நம்பிக்கை சந்தேகத்தில் வேர் ஊன்றி உள்ளது. அந்த சந்தேகத்தினால் தான் அந்த சந்தேகத்தை அடக்கி வைப்பதற்காகத் தான் நீங்கள் உங்கள் மீது ஒரு வெறும் நம்பிக்கையை போட்டு வைக்கிறீர்கள். இது உங்களுக்கு உள்ள ஒரு காயத்தை ஒரு ரோஜா மலரின் பின்னால் மறைத்து வைப்பது போன்று உள்ளது ஆனால் அந்தக் காயம் அங்கு தான் இருக்கிறது.

திரு மற்றும் திருமதி மாண்டல்பாம் தங்களின் மண வாழ்க்கைப் பிரச்சினைக்கு விவாகரத்து ஒன்று மட்டுமே வழி என்று முடிவு செய்தனர். எனவே அவர்கள் யூத மதகுருவிடம் சென்றனர்.

யூத மத குரு அவர்களின் மூன்று குழந்தைகள் பற்றி கவலைப் பட்டார். எனவே அந்த குடும்பம் பிரிந்து விடக்கூடாது என்று உறுதியாக நினைத்தார். அந்த தம்பதிகளை தடுத்து நிறுத்திவிட்டால் ஒருவேளை அவர்கள் ஒன்று சேர்ந்து இருப்பார்கள் என்று அவர் நினைத்தார்.

எனவே அந்த மதகுரு அவர்களிடம், ''நல்லது, உங்களது மூன்று குழந்தைகளை இருவருக்கும் பிரித்து கொடுப்பதற்கு வழி இல்லை. எனவே நீங்கள் என்ன செய்ய வேண்டும் என்றால் நீங்கள் இன்னமும் ஓர் ஆண்டு சேர்ந்து வாழ வேண்டும் அப்போது உங்களுக்கு நான்காம் குழந்தை பிறக்கும். எனவே அதன்பின்னர் முறையான விவாக ரத்து கொடுப்பதற்கு சுலபமாக இருக்கும். நீ இரண்டு குழந்தைகளை எடுத்துக் கொள்ளலாம், அவர் இரண்டு குழந்தைகளை எடுத்துக் கொள்ளலாம்'' என்று கூறினார்.

உடனே திருமதி மாண்டல் பாம் மதகுருவிடம், ''அது போன்று எதையும் செய்யமுடியாது. நான் அவரை நம்பி இருந்தால் இந்த மூன்று குழந்தைகளையும் கூட நான் பெற்றிருக்க முடியாது'' என்று கூறினாள்.

எனவே மேற்பரப்பில் விஷயங்கள் ஒருவிதமாக தெரி கின்றன. அடி ஆழத்தில் அவை முற்றிலும் வேறுபட்டு உள்ளன. மேற்பரப்பில் மக்கள் திடநம்பிக்கை, ஒருவருக்கொருவர் நம்பிக்கையை காட்டுகின்றனர். அடி ஆழத்தில் சந்தேகம் உள்ளது. மேற்பரப்பில் அன்பு உள்ளது. அடி ஆழத்தில் வெறுப்பு உள்ளது. மேற்பரப்பில் மக்கள் உண்மையிலேயே அருமையானவர்களாக உள்ளனர். ஆனால் அடி ஆழத்தில் அவர்கள் உண்மையிலேயே கசப்பானவர்களாக, விவாதம் நிறைந்தவர்களாக இருக்கின்றனர். இந்த இரட்டைத் தன்மையானது கைவிடப்பட வேண்டும். நீங்கள் ஒன்று படும் போது தான் திட நம்பிக்கை எழுகிறது. ஒன்றுபடுதல், ஒருங்கிணைதல், பிரிக்கமுடியாமல் இருத்தல் ஆகியவை திட நம்பிக்கையின் நறுமணங்களாக உள்ளது.

*அறிவாளி ஒருவனைப் போன்று*
*முட்டாள் தனமாக பேசுவதை விடவும்*
*மௌனமாக இருப்பது சிறந்தது;*
*திட நம்பிக்கை என்பது ஒவ்வொரு ஆடையிலும்*
*நெசவு செய்யப்படவில்லை.*

மௌனமாக இருப்பது சிறந்தது என்று ஹக்கிம் சனாய் கூறுகிறார் ஏனெனில் மௌனமாக இருக்கும் போது

குறைந்தபட்சமாக நீங்கள் யாரிடமும் பொய் சொல்ல மாட்டீர்கள். மேலும் உங்களுக்கும் நீங்கள் பொய் சொல்ல மாட்டீர்கள். மௌனமாக இருக்கும் போது குறைந்தபட்சமாக நீங்கள் அறியாமையில் இருப்பீர்கள்; நீங்கள் அறிவுள்ளவர் போன்று பாசாங்கு செய்ய மாட்டீர்கள்.

ஒரு மனிதர் ஒவ்வொரு நாளும் சில மணி நேரமாவது மௌனமாக இருக்க முடிந்தால் அவர் தனது போலித்தனம் முழுவதையும் தெரிந்து கொள்வார். ஏனெனில் அவர் தனது அசல் முகத்தை மீண்டும் மீண்டும் பார்ப்பார். நீங்கள் இடைவிடாமல் பேசிக் கொண்டும், இடைவிடாமல் மக்களோடு தொடர்புடனும் இருந்தால் நீங்கள் உங்களது அசல் முகத்தை மறந்து விடுவீர்கள் ஏனெனில் நீங்கள் தொடர்ந்து முகமூடிகளை அணிய வேண்டியதிருக்கும். இருபத்து நான்கு மணி நேரமும் நீங்கள் பேசிக் கொண்டு இருக்கிறீர்கள். வார்த்தைகளைப் பயன்படுத்து கிறீர்கள், எனவே நீங்கள் இடைவிடாமல் வார்த்தைகளைப் பயன்படுத்தும் போது மெதுவாக மெதுவாக நீங்கள் அந்த வார்த்தைகளை நம்புவதற்கு ஆரம்பிக்கிறீர்கள். அந்த வார்த்தைகளில் நம்பிக்கை கொள்கிறீர்கள்.

வார்த்தைகளுக்கு ஒரு மனோவசிய சக்தி உள்ளது. நீங்கள் ஒரு குறிப்பிட்ட வார்த்தையை மீண்டும் மீண்டும் பயன் படுத்தினால் அது உங்களை மனோவசியம் செய்து விடுகிறது. நீங்கள் கடவுள் என்கிற வார்த்தையை மீண்டும் மீண்டும் பயன்படுத்தினால் அது உங்களை மனோவசியம் செய்து விடுகிறது. நீங்கள் கடவுள் என்கிற வார்த்தையை மீண்டும் மீண்டும் பயன்படுத்தும் போது, மெதுவாக மெதுவாக நீங்கள் என்ன அர்த்தகதில் கூறுகிறீர்கள் என்பதை அறிந்து கொள்வதாக நினைப்பதற்கு ஆரம்பித்து விடுகிறீர்கள். கடவுள் என்றால் என்ன என்று நீங்கள் அறிந்து விட்டதாக நினைத்துக் கொள்கிறீர்கள். எனவே வார்த்தைகளை திரும்பத்திரும்ப கூறுவது ஆபத்தானது.

ஆனால் மக்கள் பேசிக்கொண்டே போகிறார்கள். அவர்கள் கொஞ்சம் கூட இடைவெளி விடாமல் இருக்கிறார்கள். அந்த

இடைவெளியில் அவர்கள் வெறுமனே அமைதியாக இருக்கமுடியும். நீங்கள் தினமும் ஒரு மணி நேரம் மௌனமாக இருந்தால், நீங்கள் இடைவிடாமல் என்ன கூறி வருகிறீர்களோ அது முட்டாள்தனமானது என்பதை நீங்கள் உணர்வீர்கள். அப்போது உங்களது பேச்சில் தொண்ணூற்று ஒன்பது சதவீதம் மறைந்துவிட ஆரம்பித்து விடும். முட்டாள்தனமானவற்றை பேசுவதில் என்ன உள்ளது?

ஆனால் மக்கள் ஏன் பேசுகிறார்கள்? அந்த சப்தத்திற்கு பின்னால் தாங்கள் ஒளிந்து கொள்வதற்காகவே மக்கள் பேசுகின்றனர். நீங்கள் பயத்தில் இருக்கும் போது எல்லாம் பேச ஆரம்பிக்கிறீர்கள். இப்போது இது கண்டறியப்பட்ட ஒரு உண்மை ஆகிவிட்டது. மக்களை நீங்கள் தனிமையில் இருக்கும் படி நிர்ப்பந்தப்படுத்தினால், மூன்று வாரங்களுக்கு பிறகு அவர்கள் தங்களுக்கு தாங்களே பேசிக்கொள்ள ஆரம்பிக்கின்றனர். அவர்களால் மௌனமாக இருப்பதை தாங்கிக் கொள்ள முடியாது. அது சகிக்க முடியாததாக ஆகிவிடுகிறது, எனவே அவர்கள் தங்களுக்கு தாங்களே பேசிக்கொள்கின்றனர். அவர்கள் பேசியே தீர வேண்டும், வார்த்தைகளானது எப்படியாவது அவர்களை தங்களின் தனிமனிதப் பண்போடு பிடிப்போடு இருக்கும்படி செய்து விடுகின்றன. வார்த்தைகள் மறைந்து விடும் போது, அவர்கள் தனிமனிதப்பண்பு அல்லாத ஒன்றினுள் விழுந்து விடுகின்றனர். எனவே அவர்கள் அந்த தனிமனித ரல்லாத பண்பினைப் பார்த்து பயந்து விடுகின்றனர். ஆனால் அந்த தனிமனிதரல்லாத பண்புதான் உங்களது உண்மை நிலை, ஆனால் அதைக் கண்டு நீங்கள் பயப்படுகிறீர்கள், வார்த்தைகள் உருவாக்குகின்ற மாயைகளை நீங்கள் பிடித்து தொங்கிக் கொண்டு இருக்கிறீர்கள்.

*காரியமாற்றவே நீ உண்டாக்கப்பட்டு இருக்கிறாய்.*
*மரியாதையினால் ஆன ஒரு மேல் அங்கி உனக்காக*
*காத்திருக்கிறது.*
*வெறும் கந்தைத் துணியோடு எப்படி நீ திருப்தியடைந்து*
*இருக்க முடிகிறது?*

*ஒரு மாதத்தில் அறுபது நாட்களும் நீ சோம்பேறியாக இருந்தால், நீ செல்வச் செழிப்பை எப்படி பெறுவாய்?*

இது மிகவும் விநோதமான ஒரு வெளிப்பாடு. **ஒரு மாதத்தில் அறுபது நாட்களும்** என்பது விநோதமான வாக்கியம். அது மிகப்பெரிய அகப்பார்வையைக் கொண்டுள்ளது. தன்னைப் பற்றி நினைவில் வைத்திருக்கிற ஒரு மனிதனுக்கு ஒரு மாதத்தில் அறுபது நாட்கள் உள்ளது; முப்பது நாட்கள் அவனது உள் பகுதிக்கு, மேலும் முப்பது நாட்கள் அவனது வெளிப்பகுதிக்கு. அவன் இரட்டைப் பாதையில் வாழ்கிறான். அவனது வாழ்க்கையானது, ஒரே ஒரு பரிமாணத்தை மட்டுமே அதாவது நேர்கோட்டு பரிமாணத்தை மட்டுமே கொண்டதல்ல; அவனது வாழ்க்கை இரண்டு பரிமாணங்களைக் கொண்டது. செங்குத்து கோட்டு பரிமாணமும் கூட அங்கு உள்ளது.

அவன் தனது புலன்களின் மூலம் இந்த உலகில் முப்பது நாட்கள் வெளியில் வாழ்கிறான். அவனுக்குள் உள்ள உள் மையத்தில், அமைதியில், அவனுக்குள்ளாகவே அவன் முப்பது நாட்கள் வாழ்கிறான். அவனுக்கு அறுபது நாட்கள் உள்ளன. இது ஒரு அழகான வெளிப்படுத்துதல். உண்மையிலேயே செழிப்பான ஒரு வாழ்க்கையானது நேர்கோட்டு வசமாக மட்டுமே இருக்க முடியாது. ஏனெனில் அந்த நேர் கோட்டு வாழ்க்கையானது எந்த விதமான உயரத்தையும், ஆழத்தையும் பெற்றிருக்க முடியாது. உண்மையான வாழ்க்கையில் இரண்டும் இருக்க வேண்டும். நேர்கோடு மற்றும் செங்குத்துக் கோடு இரண்டும் இருந்தாக வேண்டும். அதன் பின்னர் அந்த வாழ்க்கையில் தேவையானவை எல்லாம் இருக்கிறது.

அப்போது நீங்கள் கடவுளை வெளியிலும் சந்திக்கிறீர்கள், நீங்கள் கடவுளை உள்ளேயும் சந்திக்கிறீர்கள். நீங்கள் வெளியே உள்ள கடவுளுக்கும், உள்ளே உள்ள கடவுளுக்கும் இடையே நகர்ந்து கொண்டு இருப்பீர்கள். அந்த நகர்தல் தான் உண்மையான செழிப்பு. நீங்கள் எங்கு சென்றாலும் கடவுளைக் காண்பீர்கள்.

நீங்கள் கண்களைத் திறந்து பார்த்தால் அங்கு மரம் ஒன்று உள்ளது. அதில் உள்ள பசுமைதான் கடவுள், அதில் உள்ள பொன் நிறம் தான் கடவுள். அதில் உள்ள சிவப்பு நிறம் தான் கடவுள். நீங்கள் உங்களது கண்களை மூடிக் கொள்ளும் போது உங்களுக்குள் உள்ள தூய்மையான தன்னுணர்வு, அமைதி தெரிகிறது, எனவே கடவுள் அங்கு அமைதியாக இருக்கிறார். கடவுள் உங்களுக் குள்ளும் இருக்கிறார். மேலும் அடுத்தவருக்குள்ளும் இருக்கிறார். வாழ்க்கையானது பல பரிமாணங்களைக் கொண்டதாக ஆகிறது.

ஒருமுறை எமர்சன் அவர்களிடம் ஒருவர், ''உங்களது வயது என்ன?'' என்று கேட்டார். எமர்சனுக்கு அறுபது வயது இருக்கும், ஆனால் அவர், ''எனது வயது முன்னூற்று அறுபது வயது'' என்று கூறினார்;.

கேள்வி கேட்ட மனிதர் ஆச்சரியமடைந்தார், அவரால் தனது சொந்த காதுகளை நட்ப முடியவில்லை. முன்னூற்று அறுபது வயதா? அவர் தனக்கு சரியாக கேட்கவில்லை என்று நினைத்து மீண்டும் எமர்சனிடம், ''ஐயா, மன்னிக்கவும், நீங்கள் அதை திரும்பவும் கூறமுடியுமா?'' உங்களது வயது என்ன? என்று கேட்டார்.

எமர்சன் மறுபடியும், ''முன்னூற்று அறுபது வயது'' என்றார்.

உடனே அந்த மனிதர், ''நீங்கள் வேடிக்கைக்காக சொல்கிறீர்கள்'' என்றார்.

அதற்கு எமர்சன் அந்த மனிதரிடம், ''இல்லை, ஒப்பிட்டு பார்த்து பேசும்போது மற்றவர்களை விடவும் இந்த அறுபது வயதில் நான் ஆறு மடங்கு அதிகமாக வாழ்ந்து இருக்கிறேன். அறுபது வயதில் ஆறு மடங்கு அதிகம் வாழ்ந்து இருக்கிறேன். எனவே எனது வயதை முன்னூற்று அறுபது என்று கணக்கிடுகிறேன்'' என்றார்.

இப்படிப்பட்ட மக்கள் இருந்துள்ளனர், இப்படிப் பட்ட மக்கள் இன்னமும் இருக்கின்றனர். அவர்களின் ஒரு நொடிப் பொழுது வாழ்க்கையானது முடிவில்லாத காலத்திற்கு சமமானது.

*நீ என்ன தெரிந்து கொண்டாய் என்பதை அறிந்து*
*ஒரு மலையைப் போல் அமைதியாய் இரு;*
*அதிர்ஷ்டம் இல்லாமையால் கவலைப்படாதே.*
*அமைதி இல்லாத அறிவானது*
*கொளுத்தப்படாத மெழுகுவர்த்தியாக இருக்கிறது;*
*ஒன்றாக இருக்கும் போது அவர்கள் தேன் கூடு*
*போன்றவர்கள்;*
*மெழுகு இல்லாமல் தேன் என்பது ஒரு உயர்ந்த விஷயம்*
*தேன் இல்லாத மெழுகு எரிப்பதற்கு மட்டுமே தகுதியானது.*

**நீ என்ன அறிந்து கொண்டாய் என்பதை அறிந்து அமைதியாகவும் கூட இரு....** உண்மையான பரிசோதனை அமைதியில் தான் இருக்கிறது. வெறுமனே அறிவாளியாக இருக்கின்ற ஒருமனிதன் அமைதியாக இருப்பதில்லை. அது ஒன்றைத் தான் நீங்கள் அடிப்படைப் பண்பாக பயன்படுத்த வேண்டும். அறிவுபடைந்த ஒரு மனிதன் மௌனமாகவும், அமைதியாகவும், இருப்பதில்லை. அவனது உள்ளம் ஓயாமல் கொதிக்கிறது; அவனது தலை இடைவிடாது ஒரு விதமான பைத்தியம் பிடித்தது போல் இருக்கிறது. அவனுக்குள் அடி ஆழத்தில் இடைவிடாத எண்ணங்களின் போக்குவரத்து உள்ளது. அவனுக்குள் அமைதி, அசைவற்ற நிலை இல்லை.

இப்படிப்பட்ட ஒரு மெத்தப்படித்த, ஒரு பண்டிதர் ஒரு அறிவாளி மனிதரின் அருகில் நீங்கள் அமர்ந்திருந்தால், உங்களுக்குள் ஒரு விதமான அசௌகரியத்தை நீங்கள் உணர்வீர்கள். அவரது அமைதியினால் நீங்கள் சூழப்பட மாட்டீர்கள். நீங்கள் அவரது அருளின் ருசியைப் பெறமாட்டீர்கள். அவரிடம் ஒன்றும் இருக்காது.

**நீ என்ன அறிந்து கொண்டாய் என்பதை அறிந்து அமைதியாய் இரு...** என்று சனாய் கூறுகிறார். அறிவு மட்டுமே போதாது. உண்மையில் அமைதி இல்லாத அறிவு உண்மையான அறிவு அல்ல. உண்மையான அறிவானது அமைதியில், மௌனத்தில், தியானத்தில் தான் பிறக்கிறது. முதலில் ஒருவர் ஆழ்ந்த அமைதியில் வீழ்ந்து விடுகிறார். அதன் பின்னர் அந்த

ஆழ்ந்த அமைதியில் இருந்து அறிதல் பிறக்கிறது. அதன்பின்னர் அது உண்மையான அறிதலாகும். அது புனித நூல்களின் மூலம் எழுந்த அறிவல்ல; அது உங்களது சொந்த ஆன்மா என்னும் புத்தகத்தை திறக்கும் போது எழுகின்ற அறிவாகும்.

**ஒரு மலையைப் போல அமைதியாக இரு: மேலும் அதிர்ஷ்டம் இல்லாமையால் கவலைப்படாதே.** அமைதி நிறைந்த ஒரு மனிதர் எதனாலும் கலக்க மடையமாட்டார் ஏனெனில் அவர் ஏற்றுக் கொள்கிறார். சோகம் வருகிறது, அதை அவர் ஏற்றுக் கொள்கிறார். மகிழ்ச்சி வருகிறது. அவர் அதை ஏற்றுக் கொள்கிறார். அவர் எதற்கும் முன்னுரிமை கொடுப்ப தில்லை. அவர் எதையும் தேர்வு செய்வதில்லை. அவர் எதையும் தேர்வு செய்யாத தன்னுணர்வில் வாழ்கிறார். எது நடக்கிறதோ அது நடக்கிறது. எது இருக்கிறதோ அது இருக்கிறது. அதற்கு அவர் முழுவதும் திறந்த உள்ளத்துடன் இருக்கிறார். அவர் அதை பருகுகிறார், அவர் அதை உள்வாங்கி கொள்கிறார். அவருக்கு விருப்பு வெறுப்புகள் கிடையாது. எந்த முன்னுரிமைகளும், எந்த தேர்ந்தெடுத்தலும் கிடையாது. அவர் சோகத்திற்கு எதிராக இருப்பதில்லை, அவர் கோபத்திற்கு எதிராக இருப்பதில்லை, அவர் காமத்திற்கு எதிராக இருப்பதில்லை, அவர் காதலுக்கு எதிராக இருப்பதில்லை. அவர் எதற்கும் ஆதரவாகவும், எதிர்ப்புடனும் இருப்பதில்லை, அவர் வெறுமனே அமைதியாக இருக்கிறார்.

நீங்கள் இரண்டில் ஒன்றை தேர்வு செய்தால் உடனடியாக நீங்கள் கலக்கமடைகிறீர்கள். தேர்வு செய்யும் போதெல்லாம் நீங்கள் கலக்கமடைகிறீர்கள். தேர்வு செய்தல் கலக்கத்தை கொண்டு வருகிறது ஏனெனில் தேர்வு செய்தல் என்பது மாற்று ஏற்பாடுகள் உள்ளது என்று அர்த்தமாகிறது. இதுவாக இருப்பது அல்லது அதுவாக இருப்பது, இருப்பது அல்லது இல்லாமல் போவது இப்படி மாற்று வழிகளுடன் உள்ளது. தேர்வு செய்தல் என்றால் இப்போது, நீங்கள் நான்கு சாலைகளின் சந்திப்பில் நின்று கொண்டு இருக்கிறீர்கள் என்று அர்த்தம். இப்போது எந்த சாலையில் நடப்பது? நீங்கள் வலது பக்கம் போனால் என்ன நடக்கும் என்று யாருக்கும் தெரியும்? அதற்குமேல் பாதை

இல்லாத ஒரு இடத்திற்கு அது உங்களை கொண்டு போகலாம். ஒருவேளை இடது பக்கம் செல்வது தான் சரியான தேர்வாக இருக்கலாம். யாருக்கு தெரியும்? எப்படி முடிவெடுப்பது? எனவே தேர்வு செய்ய வேண்டும் என்கிற அந்த நொடிப் பொழுதில் நீங்கள் கலக்க மடைவீர்கள்.

நீங்கள் எப்போதும் உங்களுக்கு எதிராக, உங்களது ஒரு பகுதிக்கு எதிராகவே தேர்வு செய்கிறீர்கள். உங்களில் ஒரு பகுதியானது, ''இதைத் தேர்ந்தெடு'' என்கிறது. அடுத்த பகுதியானது, ''அதைத் தேர்ந்தெடு'' என்கிறது. இப்போது நீங்கள் முடிவெடுத்தாக வேண்டும், அந்த முடிவில் நீங்கள் பிரிவுபட்டு விடுவீர்கள். ''இதைத் தேர்வு செய்யாதே'' என்று கூறிய அந்த பகுதி உங்களால் மறுக்கப்பட்டுள்ளது, ஒதுக்கப்பட்டுள்ளது. அப்படி ஒதுக்கப்பட்ட, மறுக்கப்பட்ட அந்த பகுதியானது பழிவாங்கும். கூடிய விரைவில் அது, ''இப்போது என்ன நடந்துள்ளது என்று பார். இப்போது மனம் வருந்து. இதைத் தேர்வு செய்ய வேண்டாம் என்று நான் முன் கூட்டியே உனக்கு கூறினேன். இது தவறானது என்று கூறினேன். ஆனால் நான் சொன்னதை நீ காது கொடுத்து கேட்கவில்லை,'' என்று கூறும். மேலும் நீங்கள் அடுத்ததை தேர்வு செய்திருந்தாலும் கூட இதே கதை தான் நடந்திருக்கும். எனவே ஏதாவது ஒன்றை தேர்வு செய்கிற மனிதன் கலக்கத்தில் இருக்கிறான்.

அமைதி என்றால் எதையும் தேர்வுசெய்யாமல் இருக்கின்ற ஒரு நிலை என்று அர்த்தம். அது ஒரு முகம்பார்க்;கும் கண்ணாடி போன்றது. அது வெறுமனே பிரதிபலிக்கிறது. அது எதையும் தேர்ந்தெடுத்து பிரதிபலிப்பதில்லை ஒரு அசிங்கமான மனிதன் வருகிறான். அவனை அது பிரதிபலிக்கிறது. ஒரு அழகான மனிதன் வருகிறான் அவனை அது பிரதிபலிக்கிறது. அதற்கு எந்த விதமாக தேர்ந்தெடுத்தலும் கிடையாது. தேர்ந்தெடுத்தல் என்கிற கேள்வியே கிடையாது. வெறுமனே பிறதி பலிக்கிறது.

சோகம் வருகிறது, அப்போது அமைதியான ஒரு மனிதன், ''நான் சோகமாக இருக்கிறேன். இந்த நொடிப் பொழுதில் இப்படித்தான் நான் இருக்கிறேன். இந்த நொடிப் பொழுதில் இதுதான் உனது உண்மை நிலை'' என்று கூறுகிறான். அவன்

ஒப்பிட்டு பார்ப்பதும் கூட கிடையாது. ''கடந்து சென்ற நொடிப் பொழுது சிறந்ததாக இருந்தது, நான் மகிழ்ச்சியாக இருந்தேன். இப்போது நான் சோகமாக இருக்கிறேன்'' என்று ஒப்பிட்டு பார்ப்பதும் கூட கிடையாது. அவன் ஒருபோதும் இரண்டு நொடிப் பொழுதுகளை ஒப்பிட்டு பார்ப்பது கிடையாது. எதிர்காலத்தில் ஏதோ ஒன்றிற்கு அவன் ஏங்குவதில்லை. என்ன இருக்கிறதோ அதில் அவன் முற்றிலும் இளைப்பாறுதலுடன் இருக்கிறான். இதுதான் அமைதி. மேலும் அந்த அமைதியில் இருந்து தான் உண்மையான அறிதல் வருகிறது. **அமைதி யில்லாத அறிவானது கொளுத்தப்படாத மெழுகுவத்தி போன்றது.....**

கொளுத்தப்படாத மெழுகுவர்த்தியால் என்ன பயன்? அதில் வெளிச்சம் இருக்காது. அறிவு நிறைந்த மக்கள் எல்லாம் அப்படித் தான் இருக்கிறார்கள். மாபெரும் அறிவு, மெழுகுவர்த்திக்கு மேல் மெழுகுவர்த்தி நிறைந்து இருக்கின்றனர். ஆனால் எல்லா மெழுகு வர்த்திகளும் கொளுத்தப் படவில்லை. அவை மெழுகின் வாசத்தால் துற்நாற்றம் வீசுகின்றன. ஆனால் அவற்றில் இருந்து வெளிச்சம் வருவதில்லை.

**அமைதி இல்லாத அறிவானது கொளுத்தப்படாத மெழுகுவத்தி போன்றது. ஒன்று சேர்ந்து இருக்கும் போது அவர்கள் தேன்கூடு போன்று இருக்கின்றனர்.** ஒன்று சேர்ந்து இருக்கும் போது அவை அழகாக உள்ளன. **மெழுகு இல்லாத தேன் ஒரு உயர்ந்த விஷயம்....**

அங்கு அமைதி மட்டுமே இருந்தாலும் கூட அது சிறந்தது. அறிவு இல்லாமல், அமைதி மட்டும் இருப்பது சிறந்தது. இன்னமும் கூட அது ஒரு உயர்ந்த நல்ல விஷயம். **தேன் இல்லாத மெழுகு எரிப்பதற்கு மட்டுமே தகுதி உள்ளது.**

ஆனால், அமைதி இல்லாத அறிவானது பயனற்றது, அது மதிப்பற்றது.

*பிறப்பும், அழிவும் நிறைந்த இந்த*
*இருப்பிடத்தை விட்டு வெளியேறு;*

*இந்த குழியை விட்டு வெளியேறு,*
*மேலும் உனக்கு நிர்ணயிக்கப்பட்ட வீட்டிற்கு தயாராகு*
*இந்த தூசிக் குவியல் ஒரு கானல் நீர்,*
*அங்கே நெருப்பு, நீர் போன்று தெரிகிறது.*

இங்கு நீங்கள் பலவழிகளில் மயக்கபடுகிறீர்கள். அறியாமை யானது அறிவு போன்று பாசாங்கு செய்கிறது. நெருப்பு நீர்போன்று தோன்றுகிறது. விஷம், அமுது என்று பெயர் ஒட்டப்பட்டு இருக்கிறது. நீங்கள் மிகமிக மாயை நிறைந்த உலகில் வாழ்ந்து கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் உங்களை விழிப்படையச் செய்யவில்லை என்றால், நீங்கள் ஒரு கானல் நீரில் இருந்து அடுத்த கானல் நீருக்கு ஒரு கனவில் இருந்து அடுத்த கனவிற்கு தொடர்ந்து நகர்ந்து கொண்டே இருப்பீர்கள்.

**இந்த இருப்பிடத்தை விட்டு வெளியேறு.** மாயை மற்றும் கானல் நீர் போன்ற இருப்பிடத்தை விட்டு வெளியேறு. கடந்தகாலம் எதிர்காலமும், கற்பனையும் நினைவாற்றலும், பிறப்பும் அழிவும் நிறைந்த இந்த இருப்பிடத்தை விட்டு வெளியேறு. காலம் மற்றும் ஆரம்பங்களும் முடிவுகளும் உள்ள இந்த இருப்பிடத்தை விட்டு வெளியேறுங்கள்.

**இந்த குழியை விட்டு வெளியேறு, மேலும் உனக்கு நிர்ணயிக்கப்பட்ட வீட்டிற்கு தயாராகு.** உங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட வீடு எங்கு இருக்கிறது? அது உங்களுக்குள் இருக்கிறது. இதைத்தான் நான் உங்களது ஆரம்ப இடத்தில் விழுதல், உங்களது சொந்த ஆன்மாவில் இளைப்பாறுதல் என்று அழைக்கிறேன்.

நீங்கள் இருக்கின்ற உண்மை நிலையில் இருங்கள் அப்போது நீங்கள் முக்தி அடைவீர்கள், எல்லா மாயை, எல்லா கானல் நீரில் இருந்தும் விடுதலை அடைவீர்கள். நீங்கள் இருக்கின்ற ஒவ்வொரு நொடிப்பொழுதும் உண்மை நிலையோடு இருங்கள். இதுதான் எல்லா புத்தர்கள் மற்றும் சூஃபிக்களின் போதனையாக உள்ளது. வேறு எதற்கும் ஆசைப்படாதீர்கள். பேறு எதற்காகவும் ஏக்கம் கொள்ளாதீர்கள். வேறு ஒன்றாக ஆக

முயற்சி செய்யாதீர்கள். நீங்கள் இருக்கின்ற அந்த நொடிப் பொழுதில் வெறுமனே இருங்கள். உங்களது வீட்டில் முற்றிலும், அமைதியாக இளைப்பாறுங்கள். இதுதான் உங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட வீடு.

**இந்த தூசிக் குவியல் ஒரு கானல் நீர், அங்கே நெருப்பு நீர்போன்று தெரிகிறது.** ஜாக்கிரதை! உங்களைச் சுற்றி உள்ள பொருள்கள் எப்படி தோன்றுகின்றனவோ அப்படிப்பட்டதாக அவை இல்லை. தோற்றங்களால் ஏமாற்றமடைந்து போய் விடாதீர்கள். மேலும் காலம் நழுவிக்கொண்டே இருக்கிறது. ஒவ்வொரு நொடிப் பொழுதிலும் ஒரு சந்தர்ப்பம் வீணாகிக் கொண்டு இருக்கிறது.

ஒரு ஸூஃபி கூற்று ஒன்று உள்ளது.

*உங்களது நேசத்துக்குரியவளை கவனிக்காமல்*
*இருக்காதீர்கள்,*
*கண் இமைக்கும் நேரம் கூட கவனிக்காமல்*
*விட்டுவிடாதீர்கள்,*
*ஏனெனில் ஒருவேளை அந்த நொடிப்பொழுதில் அவள்*
*உங்களைப் பார்க்கலாம் அப்போது நீங்கள் அவளை*
*தவறவிட்டு விடுவீர்கள்.*

ஸூஃபிக்கள் கடவுளை, நேசத்துக்குரியவளாக, காதலியாக அழைக்கின்றனர். அவர்கள் கடவுளை ''அவள்'' என்பதாக, தங்களின் நேசத்துக்குரிய பெண்ணாக நினைக்கின்றனர்.

''கண் இமைக்கும் நேரம் கூட கவனிக்காமல் இருந்து விடாதீர்கள்....'' எந்த ஒரு நொடிப் பொழுதும் தவற விடக் கூடாது. ஏனெனில் எந்த நொடிப் பொழுதில் நமக்கு நிர்ணயிக்கப்பட்ட வீடு பேறு வரும் என்று யாருக்கு தெரியும்? எந்த நொடிப் பொழுதில் அவள் உங்களைப் பார்ப்பாள் என்பதை யார் அறிவார்? எனவே நீங்கள் என்னவாக இருக்கவேண்டும், எப்படி இருக்க வேண்டும் என்கிற உங்களது எதிர்கால கற்பனைகளில் கவனத்தை இழந்து விட்டால் மேலும் கடந்த கால நினைவுகளில் காணாமல் போய்விட்டால் நீங்கள் தவறவிட்டுக் கொண்டே தான் இருப்பீர்கள்.

இந்த நிகழ் காலத்தில், இந்த நொடிப்பொழுதில் இங்கேயே இப்போது மட்டுமே கடவுளை உங்களால் தொடர்பு கொள்ள முடியும். மேலும் காலம் வேகமாக நழுவிக் கொண்டு உள்ளது. ஒவ்வொரு நொடிப் பொழுதும் நீங்கள் அபரிமிதமாக மதிப்பு மிக்க சந்தர்ப்பத்தை இழந்து கொண்டு இருக்கிறீர்கள்.

ஒரு பிரமசாரி இளைஞன் தனது நண்பனின் மனைவி யோடு அமர்ந்து காபி குடித்துக் கொண்டிருந்தான். அப்போது அவள், '' நான் உன்னை எச்சரித்தால் நல்லது என்று நினைக் கிறேன். எனது கணவர் இன்னும் ஒரு மணி நேரத்தில் வீட்டிற்கு வந்து விடுவார்'' என்றாள்.

அதற்கு அந்த இளைஞன், ''ஆனால் நான் தவறு ஏதும் செய்ய வில்லையே'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

உடனே அவள், ''அது எனக்கு தெரியும். உனக்கு இன்னும் எவ்வளவு நேரம் உள்ளது என்பதை நீ அறிந்து கொள்ள விரும்புகிறயோ என்று நான் நினைத்தேன்'' என்றாள்.

காலம் அதிகம் இல்லை, உங்களுக்கு அதிக காலம் இல்லை. ஒத்தி போடாதீர்கள். இது தான் தருணம். நாளை என்று கூறாதீர்கள். நாளை என்பது கானல் நீர் இப்போது உஷாராக இருங்கள், இப்போது விழிப்புடன் இருங்கள். இங்கு அமைதி உள்ளது, மௌனம் உள்ளது. ஒருவர் திடீரென்று ஓய்வாக இருக்கும் போது அவரது ஆரம்ப இடத்தோடு தொடர்பு ஏற்படுகிறது. அப்போது அவர் வீட்டினை வந்தடைந்து விடுகிறார்.

இந்த வீட்டினைத் தான் நீங்கள் அநேக பிறவிகளாக தேடிக் கொண்டு இருந்தீர்கள். ஆனால் நீங்கள் தேடிய அந்த முறையானது தவறானதாக இருந்து விட்டது. நீங்கள் இதை ஒரு இலக்காக ஆக்கவிட்டீர்கள். அது ஒரு இலக்கு அல்ல; அது தான் மூலம், அது தான் ஆரம்ப இடம்.

நாம் எங்கு போய்க் கொண்டு இருக்கிறோமோ அங்கு கடவுள் இல்லை. நாம் எங்கிருந்து வருகிறோமோ அங்குதான் கடவுள் இருக்கிறார். கடவுள் அங்கு இல்லை; கடவுள் இங்கு

இருக்கிறார். கடவுள் அதன்பின்பு என்பதில் இல்லை, கடவுள் இந்தப் பொழுதிலேயே இருக்கிறார்.

இன்று காலை நான் உங்களுக்கு கூறியவை அளவுகடந்த மதிப்புள்ளது. அபரிமிதமான நன்றி உணர்வோடு உங்களை ஏற்றுக் கொள்ளுங்கள் என்பது தான் எனது சந்நியாசிகளுக்கு, எனது சூஃபிக்களுக்கு எனது செ;யதியாகும். என்ன இருக்கிறதோ அது இருக்கிறது. அது வேறு எதுவாகவும் இருக்கவும் முடியாது. எனவே அதோடு சண்டை போடாதீர்கள்.

எந்த ஒரு உண்மையும் ஒருபோதும் எந்த ஒரு மன வேதனைகளையும் உருவாக்குவதில்லை. அதை தவறாக பொருள் விளங்கிக் கொள்வது தான் உங்களுக்கு வேதனையைக் கொண்டு வருகிறது. வேதனை என்பது உங்களது படைப்பு ஏனெனில் அது உங்களது பொருள் விளக்கம். உங்களது பொருள் விளக்கத்தை மாற்றுங்கள் அப்போது அதே உண்மையானது ஆனந்த அனுபவமாக ஆகிவிடுகிறது. எல்லா பொருள் விளக்கங் களையும் கைவிட்டு விடுங்கள். உண்மை என்பது வெறுமனே உண்மை தான். அது வேதனை நிறைந்ததாகவும் இருப்பதில்லை. அது சுகமானதாகவும் இருப்பதில்லை. எதையும் தேர்வு செய்யாதீர்கள். எந்த முன்னுரிமையும் கொடுக்காதீர்கள். வெறுமனே முழு கவனத்துடன் இருங்கள். ஏற்றுக் கொண்டு முழு கவனத்துடன் இருங்கள் அப்போது உங்களது கைகளில் ரகசிய திளவுகோலை பெற்றுக் கொள்வீர்கள்.

இது உங்களுக்குள் முதல் ஒன்றுபடுதலை உருவாக்கும், அதாவது நீங்கள் உங்களோடு ஒன்றுபடுதலை உருவாக்கும். அதன் பின்னர் இரண்டாம் ஒன்றுபடுதல் தானாகவே நடக்கும், அதைப்பற்றி நீங்கள் கவலைப்படவேண்டாம். நீங்கள் முதல் அடி எடுத்து வையுங்கள். அடுத்த அடி கடவுளினால் எடுத்து வைக்கப்படும். நீங்கள் பாதி நகர்ந்து செல்லுங்கள். அவர் பாதி நகர்ந்து வருவார்.

இன்று இது போதும்.

*முதல் கேள்வி:*

*ஓஷோ,*

> *புத்தருக்கு குரு கிடையாது. இயேசுவிற்கு குரு கிடையாது. உங்களுக்கும் ஒரு குரு கிடையாது. எங்களுக்கு ஏன் ஒரு குரு தேவைப்படுகிறார்?*

ஏனெனில் இன்னமும் நீ உனது வாழ்க்கையை உனது குருவாக இருப்பதற்கு அனுமதிக்கின்ற தகுதி இல்லாதவளாக இருக்கிறாய்; ஏனெனில் எப்படி கவனிப்பது. எப்படி கற்றுக் கொள்வது என்று உனக்கு தெரியவில்லை. கற்றுக் கொள்கின்ற திறன் இல்லாமல் நீ இருக்கிறாய், அதனால் தான் உனக்கு ஒரு குரு தேவைப்படுகிறார்.

உனது புலன் உணர்ச்சி இல்லாத நிலையால், உனது புத்திக் கூர்மை இல்லாத நிலையால் இந்த தேவை எழுகிறது. நீ புத்திசாலியாக இருந்தால் அதன் பின்னர் வாழ்க்கையே போதுமானது. அதன் பின்னர் கற்களிலும் கூட பிரசங்கங்கள் உள்ளன. மேலும் ஒரு மரத்தின் ஒவ்வொரு இலையும் ஒரு போதனை தான், மேலும் கடலை நோக்கி செல்கின்ற ஆறானது எல்லா புனித நூல்களையும், கொண்டுள்ளது. நீ வேதங்களை நோக்கி போக வேண்டியதில்லை, குர் ஆர் மற்றும் பைபிளை தேடிப் போக வேண்டியதில்லை. அதற்கு அவசியம் இல்லை. இந்த ஒட்டுமொத்த இயற்கையும் ஒவ்வொரு நொடிப் பொழுதும் தெய்விகத்தின் பாடலைப் பாடிக் கொண்டு இருக்கிறது. ஆனால் அந்த பாடலை உன்னால் காது கொடுத்து கேட்க முடியவில்லை. அதற்கு உன்னை திறந்து வைத்துக் கொள்கின்றன திறமை

உனக்கு இன்னமும் வரவில்லை. அதனால் தான் ஒரு குரு தேவைப்படுகிறார்.

குரு என்பவர் ஒரு ஆரம்பம் மட்டுமேயாகும். எப்படி கவனிப்பது என்பதை அவர் உனக்கு கற்றுக் கொடுப்பார், நீ எப்படி திறந்து கொண்டு இருப்பது என்பதை அவர் உனக்கு கற்றுக் கொடுப்பார். அவர் உனக்கு கற்றுக் கொடுப்பார், அவர் உனக்கு அன்பைக் கொடுப்பார், அப்போது நீ உன்னை கதகதப்பாக்கிக் கொள்ளலாம். நீ மிகவும் குளிர்ந்து போய் விட்டாய். நீ கொஞ்சம் கதகதப்பு அடைந்த உடன், ஒரு குருவின் அவசியம் கிடையாது. அதன் பிறகு ஒட்டு மொத்த வாழ்க்கையும், குருவாக இருக்கிறது. நீ வாழ்க்கையினுள் குதிப்பதற்கான ஒரு உந்து பலகையாக குரு இருக்கிறார்.

''புத்தருக்கு குரு கிடையாது'' என்று நீ கூறுகிறாய். அது தவறு. புத்தருக்கு அநேக குருமார்கள் இருந்தனர். அலர் கலாம் என்பவர் தான் அவரது கடைசி குரு, மிகவும் அபூர்வமான ஒரு மனிதர்.

''இயேசுவிற்கு குரு கிடையாது '' என்றும் நீ கூறுகிறாய். உனக்கு தெரியாது. யோவான் என்னும் ஞானஸ்தாளகர் என்பவரின் சீடராக அவர் இருந்தார். அவரால் அவர் ஞானஸ்தாளம் பெற்றார். புத்தர் அநேகம்குருமார்களை பெற்றிருந்தார், இயேசு ஒரு குருவை பெற்றிருந்தார். ஆனால் நானோ பல லட்சம் குரு மார்களைப் பெற்றிருக்கிறேன். சாத்தியப்படுகின்ற எல்லா இடங்களில் இருந்தும் நான் கற்றுக் கொண்டு இருக்கிறேன். ஆண்களிடமிருந்து, பெண்களிட மிருந்து, மரங்களிடமிருந்து, மலைகளிடமிருந்து கற்றுக் கொண்டே இருக்கிறேன். எந்த ஒரு குருவையும் உனக்கு குறிப்பிட்டு காட்ட முடியாது. ஏனெனில் எனக்கு அநேக குருமார்கள் இருந்துள்ளனர். நான் தொடர்ந்து கற்றக் கொண்டும், கவனித்துக் கொண்டும் இருக்கின்றனர்.

மேலும் ''எங்களுக்கு ஏன் ஒரு குரு தேவைப்படுகிறார்?'' என்று நீ கேட்கிறாய். உனது கேள்வியே அதற்கான அவசி யத்தைக் காட்டுகிறது. இந்த எளிய கேள்விக்கு கூட உன்னால்

பதில் அளிக்க முடியவில்லை என்றால் உனக்கு ஒரு குரு தேவை. என்னை ஏன் நீ கேட்கிறாய்? நீயே அதற்கு ஏன் பதில் கூறமுடியவில்லை? இந்த கேள்வி கூட வேறு யார் மூலமாவது பதில் அளிக்கப்பட வேண்டும் என்றால் அங்கு தேவை இருக்கிறது.

ஆனால் இந்தக் கேள்வி ஏன் எழுந்தது? நிச்சயம் அதற்கான தேவை இருக்கிறது. இல்லையெனில் நீ ஏன் இங்கு இருக்கிறாய்? தேவை இருக்கிறது. ஆனால் சரணாகதி அடைவதற்கான பிரிய மின்மையும் கூடவே இருக்கிறது. நீ ஒரு சந்நியாசியாக ஆகி இருந்தாலும் கூட அது இன்னமும் இருக்கிறது. ஆனால் அடி ஆழத்தில் நீ இன்னமும் சரணாகதி அடையவில்லை. அதனால் தான் இந்தக் கேள்வி. ஒரு சீடனாக இருப்பதற்கு நீ விரும்பாமல் இருக்கலாம். அது உனது ஆணவத்தை காயப்படுத்துகிறது. அது அவமானப்படுத்துவதாக உள்ளது. நீயே ஒரு குருவாக இருக்க விரும்புகிறாய், அது ஆணவத்தை திருப்திப்படுத்தும்,உனக்கு ஒரு கரு தேவை இல்லை என்பதால் தான் இந்த கேள்வி எழுந்துள்ளது. அதற்கான தேவை இங்கு உள்ளது. இந்த கேள்வியே அதற்கான தேவையைக் கூறுகிறது. ஆனால் உனக்குள் அடி ஆழத்தில் எங்கோ எதிர்ப்பு இருக்கிறது. நீ அதை விரும்பவில்லை. சரணாகதி அடைவதற்கு நீ விரும்பவில்லை. திட நம்பிக்கையோடு ஒருவருக்கு தலைவணங்க நீ விரும்ப வில்லை. அது உன்னைக் காயப்படுத்துகிறது. அது வேதனை நிறைந்து இருக்கிறது.

ஒரு சீடராக இருப்பதற்கு தைரியம் தேவை. சீடராக இருப்பது என்பதற்கு ஒருவன் தன்னைக் கரைத்துக் கொள்வதற்கு போதுமான தைரியத்துடன் இருக்கிறான் என்று அர்த்தம் அது சாதாரண விஷயம் அல்ல. மேலும் நீ ஒரு சீடனாக ஆகாதவரையில் நீ ஒரு குருவாக ஆகமுடியாது.

சீடன் என்பதற்கான ஆங்கில வார்த்தையாகிய DISCIPLE என்பது அழகானது. அது கற்றுக் கொள்தல் என்னும் அர்த்தம் உள்ள மூலவார்த்தையில் இருந்து வருகிறது. அதன் பின்னர் எங்கிருந்தெல்லாம் வெளிச்சம் வருகிறதோ அங்கு நான்

என்னைத் திறந்து வைப்பேன். நான் எனது கதவுகளையும், நன்னூல்களையும் மூடி வைக்கமாட்டேன். நான் சூரியனையும், காற்றையும், மழையையும் உள்ளே வர அனுமதிப்பேன். அறியாத ஒன்றிற்கான இந்த பயணத்திற்கு நான் போவதற்கு தயாராக இருக்கிறேன். அது எனக்கு தெரியாத ஒரு எல்லை என்ற உண்மையை ஏற்றுக் கொள்வதற்கு போதுமான தைரியத்துடன் இருக்கின்ற ஒருவன் தான் சீடனாக இருக்கிறான்.

சீடன் என்பதற்கு கற்றுக் கொள்ள முடிவெடுத்து விட்ட ஒருவன் என்று வெறுமனே அர்த்தமாகிறது. அது கற்றுக் கொள்வதற்கான மாபெரும் அர்ப்பணிப்பு மேலும் ஒருவர் எங்கிருந்தாவது ஆரம்பிக்க வேண்டியது இயற்கையானது; பயணத்தை ஏதாவது ஒரு இடத்தில், 'A'ல் இருந்து, 'B'ல் இருந்து, 'C'ல் இருந்து, இப்படி ஏதாவது ஒன்றில் இருந்து ஆரம்பித்தாக வேண்டும்.

அந்த பயணம் ஆரம்பிக்கின்ற இடம் நானாக இருந்துவிட்டு போகட்டும். குரு என்பவர் நமது பயணத்தில் முடிவில் இருப்பவர் அல்ல; அறியாத ஒன்றினுள் உனது பயணத்தை நீ ஆரம்பிப்பதற்கு குரு தான் ஆரம்ப இடமாக இருக்கிறார். உன்னால் இனி தனியாகப் போகமுடியும் என்கிற உணர்வு அவருக்கு வரும் வரையில் அவர் உன்னோடு வருவார். அதன் பின்னர் அவர் உன்னை தனியே விட்டுவிடுவார்.

மேலும் அது தான் ஒரு உண்மையான குருவிற்குரிய அடிப்படை பண்பாகும். நீ அவரை விட்டு விலக வேண்டியதில்லை. அவர் தானாகவே உன்னை விட்டு விலகி விடுவார். நீ அவரை விட்டு விலகினால் அது தவறாக அடி எடுத்து வைப்பதாகும். அப்படி விலகிச் செல்வதற்கான ஆசை உனக்குள் எழுந்தால் நீ இன்னமும் கற்றுக் கொள்ள வில்லை என்று தான் வெறுமனே அர்த்தமாகிறது. நீ குருவை இன்னமும் அறிந்து கொள்ளவில்லை என்றாகிறது. நீ குருவை அறிந்து கொண்டால் அவரை விலக வேண்டும் என்கிற கேள்விக்கே இடமிருக்காது ஏனெனில் விட்டு விலகுவதற்கு உன்னால் அங்கு

யாரையும் பார்க்கமுடியாது ஆரம்பத்திலிருந்து அங்கு ஒருபோதும் யாரும் இருந்ததில்லை.

நீ ஒரு குருவின் உயிர் உணர்விற்குள் நுழையும் போது நீ முழு வெறுமையை, ஒரு பிரசன்னத்தை நிச்சயமாக காண்பாய், ஆனால் விட்டு விலகுவதற்கான ஒரு மனிதரைக் காணமாட்டாய். ஒரு சீடன் குருவைவிட்டு ஒருபோதும் விலக முடியாது. முதலில், அவனால் விலக முடியாது ஏனெனில் இன்னமும் அவன் தான் சொந்தமாக நடப்பதற்கு தெரியாமல் இருக்கிறான். இரண்டாவதாக அவன் அப்படி சொந்தமாக நடப்பதற்கு திறமை பெற்று விட்டாலும் கூட அவனால் குருவை விட்டு விலக முடியாது ஏனெனில் விலகிச் செல்வதற்கு அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். இப்போது அவன் அறிந்து கொள்கிறான்.

ஆனால் குரு தானாகவே விலகி விடுகிறார். உனது இருப்பில் இருந்து வெளியேற ஆரம்பித்து விடுகிறார். அவர் மேலும் மேலும் மறைந்து கொண்டே போவார். ஏனெனில் இப்போது நீ உனது சொந்த பலத்தில் போவதற்கு தயாராக இருக்கிறாய்.

தனது ஆதரவு இல்லாமல் குழந்தை நடக்கும்போது தாய் மிகவும் சந்தோஷப்படுகிறாள். தாய் தனது குழந்தைக்கு எப்போதும் ஆதரவாக பிடித்துக் கொண்டு செயல் முயற்சித்தால், அதன் பின்னர் அவள் அந்த குழந்தையை நேசிக்க மாட்டாள். அதன் பின் அவள் நோயுற்றவளாக, பயம் நிறைந்தவளாக ஆகிவிடுவாள். அப்படி செய்தால் அவள் அந்த குழந்தையை முடமாக்குகிறாள், அவள் அந்த குழந்தைக்கு ஒரு பக்கவாதம் போல் ஆகிவிடுவாள்.

அதே கதை தான் ஒரு குருவிடமும் நடக்கிறது. ஒரு குருவானவர் தனது சீடன் எப்போதும் தன்னைச் சார்ந்தே இருக்கவேண்டும் என்று விரும்பினால் அதன் பிறகு அவர் ஒரு உண்மையான குரு அல்ல; அவர் பொய்யானவர், போலி யானவர். ஏதோ ஒரு வகையில் நீ அந்த குருவுக்கு தேவைப்படு கிறாய். நீ அவரைச் சார்ந்தே இருக்க வேண்டும் என்று அவர்

விரும்பினால் நீ அவருக்கு தேவைப்படுகிறாய் என்று அர்த்தம். எங்கோ ஒரு இடத்தில் உனது சார்பு நிலையானது அவரது ஆணவத்தை நிறைவு செய்கிறது என்று அர்த்தம். அவர் ஒன்றாக இருப்பதாக உணர்கிறார். ''இங்கே பாருங்கள் நான் எத்தனை சீடர்களைப் பெற்றிருக்கிறேன்'' என்கிறார். அவர் சீடர்களை எண்ணிக்கொண்டு போகிறார். ''நான் தான் அநேக சீடர்களை வைத்திருக்கிறேன். நான்தான் மிகப் பெரிய குரு'' என்று கூறுகிறார்.

நிச்சயமாக அவர் உன்னை வெளியேற அனுமதிக்க மாட்டார். நீ வெளியேறுவதை அவர் தடுப்பார். ஏனெனில் நீ போவது என்பது அவரது ஆணவத்திற்கான ஆதாரக் கம்பு ஒன்று மறைந்து விடுகிறது என்று அர்த்தம். அவர் உன்னைச் சார்ந்து இருப்பார். எனவே உன்னைச் சார்ந்து இருக்கின்ற ஒரு குருவினால் உனக்கு எப்படி உதவ முடியும்? அவருக்கே உதவி தேவைப்படுகிறது. அவரே குழப்பத்தில் இருக்கிறார். இருளில் இருக்கிறார். அவர் இன்னமும் வீடுபேறினை அடையவில்லை.

ஆனால், உண்மையான குரு எப்போதும் உன்னை எப்போது வெளியேற்றுவது என்று கவனித்துக் கொண்டு இருப்பார். நீ உனது சொந்தக் காலில் நிற்பதற்கு எப்போது தயாராக இருக்கிறாயோ அப்போது அவர் உன்னை வெளியேற்றுவதற்கு தயாராக இருப்பார். நீ தயாராக இருப்பதற்கு முன்பு அவர் உன்னை வெளியே விடமாட்டார். அது உண்மை. நீ எப்போது தயாராக இருக்கிறாய்; என்பதை அவரால் மட்டுமே அறிந்து கொள்ளமுடியும், உன்னால் அதை அறிந்த கொள்ள முடியாது.

முந்தைய தினம் சந்நியாசி ஒருவர் தான் தனது சொந்த வழியில் செல்கின்ற திறமை பெற்று விட்டதாகவும், இப்போது அவரால் தனியாகப் போக முடியும் என்றும், எனவே அவர் சந்நியாசத்தை கைவிட விரும்புவதாகவும் கூறி எனக்கு ஒரு கடிதம் எழுதி இருந்தார். உடனே நான் ''அது முற்றிலும் சரியானது'' என்று கூறினேன்.

இப்போது அவர் என்னைப் பார்க்க விரும்புகின்றார். நான் ''ஏன்?'' என்று கேட்டேன். என்னிடம் இருந்த இறுதியான கட்டளைகளை பெறுவதற்கு அவர் ஒரு கடிதம் எழுதினார். இப்போது இது எந்த விதத்தில் தயாராக இருப்பதாகும்? இன்னமும் என்னிடம் இருந்து கட்டளைகளைப் பெறவேண்டும் என்றால், அதன் பிறகு நீ உனது சொந்தவழியில் செல்வதற்கு எந்த விதத்தில் தயாராக இருக்கிறாய்?

நீ தயாராகிவிடும் போது, நீ தயாராகி விட்டாய் என்று நானே உனக்கு கூறுவேன். இதில் உள்ள முரண்பாடு என்ன வென்றால், நான் உன்னிடம் ''இப்போது சந்நியாசத்தை கைவிடு!'' என்று கூறுவேன். ஆனால் நீ அதை கைவிட மாட்டாய். உன்னால் எப்படி கைவிட முடியும்? சந்நியாசம் தான் உன்னை இதுவரை கொண்டு வந்துள்ளது.

சாரி புத்ரா மெய்ஞ்ஞானம் அடைந்த போது, தனது சொந்த உரிமையில் மெய்ஞ்ஞானம் அடைந்த போது, புத்தர் அவரிடம், ''இப்போது நீ எனக்கு தலை வணங்க வேண்டியதில்லை. நான் இருக்கின்ற அதே உயர்நிலையில் நீயும் இருக்கிறாய்'' என்று கூறினார். ஆனால் சாரிபுத்ரா முன்பு போல தலை வணங்கினார். எந்த வேறுபாடும் இல்லை. பல வருடங்களுக்கு முன்பு அவர் வந்த முதல் நாளில் எப்படி புத்தரின் பாதத்தை தொட்டு வணங்கினாரோ அதே போன்று இப்போதும் புத்தரின் பாதத்தை தொட்டு வணங்குவதை தொடர்ந்து செய்து வந்தார். ஆனால் புத்தர் அவரிடம் மீண்டும் மீண்டும், ''சாரிபுத்ரா, இப்போது இது தேவை இல்லை!'' என்று கூறுவார். ஆனால் அவர் கேட்கமாட்டார்.

ஒரு நாள் புத்தர் அவரிடம் ''நான் சொல்வதை நீ ஏன் கேட்க மறுக்கிறாய்?'' என்று கேட்டார். அப்போது சாரிபுத்ரா அவரிடம், ''நான் இப்போது எனது சொந்த உரிமையில் புத்தராக இருக்கிறேன். நீங்கள் சொல்வதை நான் ஏன் கேட்க வேண்டும்? இது மிகவும் அழகான ஒன்று. என்னால் உங்களது பாதம் தொட்டு தலை வணங்காமல் எப்படி இருக்கமுடியும்? இது ஒரு இனிய பழைய பழக்கம், இது ஒரு இனிய நினைவு. இந்தக் கால்களின்

மூலம் தான் நான் இந்த நிலைக்கு வநதேன், இது வெறுமனே நன்றி தெரிவித்தல்'' என்றார்.

புத்தர் சாரிபுத்ராவை வெளியே அனுப்பினார். அவர் அவரிடம் ''இப்போது நீ போகலாம். இங்கு பல கோடி மக்கள் இருளில் தடுமாறிக் கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு உதவி செய்'' என்றார். சாரிபுத்ரா அழுது கொண்டே புத்தரிடம், ''வேண்டாம், என்னை எங்கும் போகச் சொல்லாதீர்கள்'' என்று கூறினார்.

அதற்கு புத்தர், ''இப்போது நீ உனது சொந்த உரிமையில் ஒரு புத்தராக இருக்கிறாய், ஒரு புத்தர் அழுவது பொருத்தமாகாது. உனது சொந்த திறமையில் உன்னால் செல்ல முடியும்'' என்று கூறினார்.

உடனே சாரிபுத்ரா, ''புத்தர்களுக்கு எந்த ஒரு நிபந்தனையும் கிடையாது; அவரால் அழுவதற்கு முடியும், அவரால் சிரிக்க முடியும் ஒரு புத்தருக்கு எந்த நிபந்தனைகளும் கிடையாது, அவரது இருப்பு நிலையானது நிபந்தனைகள் இல்லாதது'' என்று கூறினார்.

ஆனால் அவர் போகவேண்டியதாயிற்று, குரு அவரை மிகவும் வலியுறுத்தினார். அவர் போய் விட்டார். ஆனால் ஒவ்வொரு நாளும் அவர் எங்கு இருந்தாலும், புத்தர் எந்த திசையில் இருந்தாரோ அந்த திசையை நோக்கி தலை வணங்கினார் ஒவ்வொரு நாளும் காலையிலும், மாலையிலும் அவரது சீடர்கள் அவரிடம் ''நீங்கள் யாருக்கு தலை வணங்குகிறீர்கள்?'' என்று கேட்பார்கள்.

அதற்கு சாரிபுத்ரா, ''புத்தர் இப்போது கிழக்கு திசையில் தான் கண்டிப்பாக இருப்பார். இன்று அவர் ஒரு குறிப்பிட்ட நகரத்தில் இருப்பதாக எனக்கு தகவல் வந்துள்ளது. எனவே நான் அவரது திசையில் தலைவணங்குகிறேன்'' என்று கூறினார்.

இதுதான் உனது சொந்த உரிமையில் புத்தர் ஆதல் என்பதாகும். இப்போது நீ இங்கு இருக்கிறாய். ''நான் வீடு பேறு

அடைந்து விட்டேன். இப்போது நான் சொந்தமாக செல்ல முடியும்'' என்று எழுதினாய்.

எனவே நானும், ''சரி சென்றுவா!'' என்று கூறினேன். இப்போது என்னிடமிருந்து இறுதி உத்தரவுகளை ஏன் பெற வேண்டும்? எனவே உனக்கு இன்னமும் உத்தரவுகள் தேவைப் படுகிறது என்றால், அதன் பின்னர் நீ தயாராகி விட்டதாய் சந்நியாசத்தை கைவிடவில்லை. ஆனால் நீ திரும்பி போவதால் தான் சந்நியாசத்தை கைவிடுகிறாய். நான்கு மாதங்கள் நீ இங்கு இருந்தாய், இங்கு ஆரஞ்சு வண்ண ஆடைகளில் இருப்பது மிகவும் சுலபம்.

இப்போது இந்த சந்நியாசி ஜெர்மனிக்கு திரும்பி போகப் போகிறார், அங்கு இது கொஞ்சம் கடினமாக இருக்கும். எனவே இதற்கு பின்னால் கண்டிப்பாக ஒரு வஞ்சகமான தந்திரம் இருந்தாக வேண்டும். நீ சந்நியாசம் எடுப்பதற்கு முன்பே ஏற்கனவே நீ திட்டம் போட்டிருக்க வேண்டும். இங்கு இருக்கின்ற நான்கு மாதமும் சந்நியாசியாய் இருப்பது என்று திட்டம் போட்டிருப்பாய். எனவே நீ இந்தியாவை விட்டு வெளியேறும் போது, ''இப்போது நான் என் சொந்தக் காலில் நிற்பதற்கு தயாராகி விட்டேன் எனவே நான் வெளியேறுகிறேன்'' என்று உன்னால் எப்போதும் சொல்ல முடியும்.

அதன் பின்னர் இந்த கடைசி உத்தரவுகளுக்கான தேவை ஏன்? சீடன் தயாராக இருக்கும் போது நான் உன்னிடம், ''இப்போது நீ உனது சொந்த வழியில் செல்லலாம்'' என்று நான் கூறிவிடுவேன். நீ என்னிடம் சொல்ல வேண்டியதில்லை, நீ என்னிடம் சொல்வது அர்த்தமற்றது.

''எங்களுக்கு ஏன் ஒரு குரு தேவைப்படுகிறார்?'' என்று நீ என்னிடம் கேட்கிறாய். உனக்குள் ஏதோ வேதனை இருக்க வேண்டும். நீ ஒரு சீடனாக இருக்கிறாய் என்கிற எண்ணம், முற்றிலும் சரணாகதி அடைந்து நீ மற்றவர்களின் கைகளில் இருக்கிறாய் என்பது உனது ஆணவத்திற்கு எதிரானதாக இருக்கிறது. குரு என்பது ஒரு விதமான தந்திர யுக்தி. ஒரு

சூழ்நிலை நீயாகவே உனது ஆணவத்தை கைவிடுவது மிகவும் கடினமானதாக இருக்கும். யார் யாரைக் கைவிடுவது? நீயாகவே உனது ஆணவத்தை எப்படி கைவிடுவாய்? அது கிட்டத்தட்ட சாத்தியபடாத ஒன்றாகும்.

குரு ஒரு உபாயம். ஆழ்ந்த அன்பில் நீ குருவை திடமாக நம்பலாம் மேலும் உனது ஆணவத்தை தூக்கி பக்கத்தில் வைத்து விடலாம். மற்றபடி உன்னிடம் அந்த ஆணவத்தை தவிர வேறு எதுவும் இல்லை. நீ அதை அருகில் தூக்கி வைத்துவிட்டாய். நீ முழுமையான வெற்றிடத்தில் விழுந்து விடுவாய். உன்னால் அந்த பள்ளத்தில், அடிப்பாகம் இல்லாத வெற்றிடத்தில் விழமுடியாது. நீ மிகவும் பயந்து விடுவாய். உன்னைச் சுற்றி உள்ள ஏதாவது ஒன்றினை நீ மீண்டும் பிடித்து தொங்கிக் கொள்ளலாம். மேலும் உனது ஆணவம் தான் உனக்கு மிகவும் அருகில் இருக்கிறது.

அந்த வெற்றிடத்தில் இருந்து யாராவது உன்னை அழைக்க வில்லை என்றால் உன்னால் போகமுடியாது. அந்த வெறுமையில் இருந்து யாராவது ஒருவர் ''பயப்படாதே, வா'' என்று அழைக்காமல் உன்னால் போக முடியாது.

உனது ஆணவத்தை கைவிடுவது மரணம் ஆகாது என்று நீ கற்றுக் கொண்ட பிறகு, ஆணவத்தை கைவிடுவதான் உண்மையான வாழ்க்கை என்பதை கற்றுக் கொண்ட பிறகு, அதை ருசித்த பிறகு மட்டுமே உண்மையான வாழ்க்கை ஆரம்பிக்கிறது. நீ அதை ருசித்துப் பார்த்து விட்டால் அதன் பின்னர் ஒரு குரு தேவை இல்லை. ஆனால் குருவை விட்டு விலகிச் செல்வது அந்த அளவுக்கு சுலபமானதாக இருக்காது.

உன்னை இந்த அளவுக்கு மாற்றமடையச் செய்தவரை விட்டு உன்னால் எப்படி விலகிச் செல்லமுடியும்? அந்த எண்ணமே முட்டாள்தனமானது. மேலும் விலகிச் செல்வதற்கு யாரும் இல்லை, யாரும் உன்னைப் பிடித்து தொங்கிக் கொண்டு இருக்க வில்லை. உண்மையில் ஒரு குருவுக்கும் சீடனுக்கும் இடையே உள்ள உறவானது ஒருவழிப்பாதையாக உள்ளது. குரு உனக்கு

எந்த உறவாகவும் இல்லை. நன்றாக கேள். அதிர்ச்சி அடைந்து விடாதே. குருவுக்கு உன்னோடு எந்த ஒரு உறவும் கிடையாது.

உனக்கு மட்டுமே உறவு தேவைப்படுகிறது. குரு இருக்கிறார் என்பது வெறுமனே உனது மனதில் மட்டுமே உள்ளது. மற்றபடி அங்கு வேறு யாரும் இல்லை. நீ உண்மையை அறிந்து கொள்கின்ற அந்த ஒரு நாளில், குரு மறைந்து போய் இருப்பார்.

ஒரு குருவிடம் சீடன் சரனாகதி அடையும் போது சீடன் மறைந்து போகிறான். மேலும் அவன் வெறுமையை அறிந்து கொள்ளும் போது குரு மறைந்து போகிறார். விட்டு விடுவதற்கும் யாரும் இல்லை விலகுபவர் யாரும் இல்லை. அந்த முழுமையான தூய்மையில் முக்தி, மெய்ஞ்ஞானம் இருக்கிறது. ஆனால் அது வேதனை நிறைந்தது, வளர்ச்சி வேதனையானது. மேலும் நீ உனது ஆன்மாவை கைவிட வேண்டும் என்கிற எண்ணம் வரும்போது மிகப்பெரிய வேதனை வருகிறது.

ஒரு குட்டிக்கதை:

ஒரு சிப்பி அருகில் இருந்த சிப்பியிடம், ''நான் எனக்குள் இருப்பது பெரிய வேத்னையாக உள்ளது. அது மிகவும் கனமானதாகவும், வட்ட மானதாகவும் இருப்பதால் நான் துன்பத்தில் இருக்கிறேன்'' என்று கூறியது.

இதைக் கேட்ட அடுத்த சிப்பியானது, ''சொர்க்கத்திற்கும், கடலுக்கும் பாராட்டுக்கள். எனக்குள் எந்த ஒரு வேதனையும் இல்லை. எனக்குள்ளும், எனக்கு வெளியேயும் நான் ஒன்றாகவும் முழுமையுடனும் இருக்கிறேன்'' என்று கூறியது.

அந்த நேரத்தில் அங்கு ஒரு நண்டு ஒன்று கடந்து சென்றது. அது இந்த இரண்டு சி;ப்பிகளின் பேச்சைக் கேட்டது. உடனே அது உள்ளேயும், வெளியேயும் ஒன்றாகவும் முழுமையாகவும் இருக்கிறேன் என்று கூறிய சிப்பியைப் பார்த்து நீ சந்தோஷம் அடையாதே. உனக்கு அருகில் உள்ள சிப்பிக்கு இருக்கின்ற வேதனையானது மிஞ்சும் அழகுடைய ஒரு முத்தாக இருக்கிறது என்று கூறியது.

சீடன் ஆழ்ந்த வேதனையோடு இருக்கிறான். ஏனெனில் அவன் தனது நான் என்று ஆணவத்தை கைவிடவேண்டும். மேலும் அது சுலபமானது அல்ல. ஆணவம் என்பது நீ சுலபமாக கழற்றி எறிகிற உனது ஆடை அல்ல. ஆணவம் என்பது உனது தோல் போன்றது. அதை உறித்து எடுக்கும் போது உனக்கு வேதனை நிறைய இருக்கும்.

நீ அநேக, அநேக பிறவிகள் இந்த நான் என்றும் தன் முனைப்போடு வாழ்ந்து விட்டாய். நீ உடலை அநேக முறை மாற்றிவிட்டாய், ஆனால் உனது நான் என்றும் ஆணவம் அப்படியே இருக்கிறது. உனக்குள் ஒரு தொடர்ந்திருக்கும் விஷயமாக அது உள்ளது. அது மிகவும் பழங்காலத்தை சேர்ந்தது. அதைக் கைவிடுவது சுலபம் அல்ல. அது கடினமானது. அது மிகப்பெரிய வேதனை. ஆனால் இந்த வேதனையில் இருந்து தான் பேரானந்தம் பிறக்கிறது. இதிலிருந்து தான் மிஞ்சும் அழகுடைய ஒரு முத்து. முழுமையான வரங்கள் நிறைந்த ஒரு தன்னுணர்வு நிலை பிறக்கிறது. ஆனால் ஆரம்பத்தில் நீ உனக்குள், ''நான் எனக்குள் மிகப்பெரிய வேதனையோடு இருக்கிறேன். அது கனமானதாகவும்வட்டமானதாகவும் இருப்ப தால் நான் துன்பத்தில் இருக்கிறேன்'' என்று தான் உணர்வாய்.

ஆனால் சீடனாக இருப்பதன் வேதனையை அறியாதவர்கள் உன்னிடம், ''சொர்க்கத்திற்கும், கடலுக்கும் பாராட்டுக்கள் எனக்குள் வேதனை இல்லை. எனக்குள்ளேயும், எனக்கு வெளியேயும் நான் நன்றாகவும், முழுமையுடனும் இருக்கிறேன்'' என்று தான் கூறுவார்கள்.

நீ சுற்றிலும் போய்ப் பார். சீடனாக இருப்பது என்பதற்கு என்ன அர்த்தம் என்று எதுவுமே தெரியாத பல கோடி மக்கள் உள்ளனர். அவர்கள் சீடனாக இருப்பதன் சுவையை ஒருபோதும் ருசித்ததில்லை. அவர்கள் யாருக்கும், ஒருபோதும் சரணாகதி அடைந்ததில்லை. அவருக்காக நாங்கள் சாகவும் தயார் என்னும் அளவுக்கு அவர்கள் யாரையும் நேசித்தது கிடையாது. அவர்கள் அந்த அளவுக்கு அன்னியோன்யமாக யாரையும் நேசித்தது இல்லை ஏனெனில் அந்த நெருக்கத்தில் அவர்கள் மறைந்து

போய்விடுவார்கள். அந்த அன்னியோன்யத்தில் அவர்கள் உருகிப் போய் விடுவார்கள்.

அவர்கள் உன்னிடம், ''நீ கொஞ்சம் சாதாரண நிலையில் இருக்கிறாய் இங்கு சீடனாக இருக்கவேண்டிய அவசியம் கிடையாது மேலும் ஒரு குருவாக இருக்கவேண்டிய அவசியமும் கிடையாது. எங்களைப் பார்! நாங்கள் உள்ளேயும் வெளியேயும் முழுமையாக இருக்கிறோம். எங்களுக்கு ஒரு குரு தேவை இல்லை. எனவே உனக்கு ஒரு குரு தேவை என நீ ஏன் நினைக்கிறாய்?'' என்று கேட்பார்கள்.

ஆம், அவர்கள் உள்ளேயும் வெளியேயும் முழுமையாகவும், ஆரோக்கியமாகவும் இருக்கின்றனர். ஆனால் அவர்களது ஆரோக்கியமானது, அவர்களது முழுமையானது மிகவும் கீழ்நிலையில் உள்ளது; அவர்களின் முழுமை சாதாரணமானது. மேலும் புனிதமான பகுதியை அடைய விரும்புகிற ஒவ்வொருவரும் இந்த வேதனையைக் கடந்து சென்றாக வேண்டும்; சாதாரணமானவற்ற இழக்கின்ற இந்த வேதனையை, எங்கு இருக்கிறோம் என்று தெரியாத வேதனையை, புறக்கணிக்கப்பட்ட இடத்தில் இருக்கின்ற வேதனையை, நீ அறிந்தவற்றையும் இழந்துவிட்டு அதே சமயம் நீ அறிவதற்கு ஆசைப்பட்டதையும் அடையாத ஒரு வேதனையைக் கடந்தாக வேண்டும். நீ வெறுமனே இரண்டிற்கும் மத்தியில் இருக்கிற நிலைதான் ஒரு சீடன் இருக்கின்ற நிலையாகும். தான் அறிந்த, முழுவதுமாக அறிந்தவற்றை அவன் கைவிட்டு விடுகிறான், மேலும் அது எப்படி இருக்கும் என்று மிகச்சரியாக தெரியாத ஒன்றினுள் நுழைவதற்கு முயற்சிக்கிறான்.

அவன் அறியாத ஒன்றினுள் போகிறான். பாதுகாப்பற்ற நிலைக்கு பாதுகாப்பை கைவிடுகிறான். தனது புத்தி சுவாதீனத்தை விட்டுவிட்டு புத்தி சுவாதீனம் இல்லாதவன் ஆகிறான். அதைத்தான் சூஃபிக்களும் கூறுகிறார்கள். கடவுள் மீது நீ பைத்தியம் பிடித்தவன் போன்று ஆகாத வரையில் உன்னால் அவரை அடைய முடியாது, கண்டிப்பாக பைத்தியக்காரனாக இருந்தாக வேண்டும் என்று கூறுகின்றனர்.

சீடன் பைத்தியக்காரனாக இருக்கிறான். அவன் குருவிடம் காதலில் விழுந்து விட்டான். மேலும் காதல் ஒருவனை பைத்தியமாக்கி விடுகிறது. அப்போது யாரும் உன்னைப் புரிந்து கொள்ளப் போவதில்லை. நீ என்ன செய்கிறாய் என்பதை தர்க்க அறிவோடு யாருக்கும் நிரூபிக்கிற திறன் உன்னிடம் முழுமையாக இல்லாமல் போய் விடும். அதற்காக உனக்கு தர்க்க அறிவு கிடையாது என்று அர்த்தமல்ல.

எனது சந்நியாசிகள் இந்த உலகிலேயே அதிகம் படித்தவர்களாக இருக்கின்றனர். இங்கு எல்லாவகையான மக்களையும் நாங்கள் பெற்றிருக்கிறோம். கலைஞர்கள், ஓவியர்கள், பேராசிரியர்கள், விஞ்ஞானிகள், மனோதத்துவ மேதைகள், மருத்துவர்கள், பொறியாளர்கள், இப்படி அனைவரும் நன்கு படித்தவர்கள். அவர்களுக்கு விவாதம் செய்யத் தெரியாது என்று அர்த்தமாகாது. வாதம் செய்வதில் அவர்கள் கெட்டிக்காரர்கள், ஆனால் இப்போது அவர்களுக்கு வாதத்திற்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்று நடந்து விட்டது.

உனது குருவைப் பற்றி பேசுதும், அவர் மீது உனக்கு எழுந்துள்ள அன்பைப் பற்றி பேசுவதும் மற்றவர்கள் முன்னால் கிட்டத்தட்ட உன்னை ஒரு முட்டாள் போன்று தோன்றச் செய்யும். இது மிகவும் வேதனை நிறைந்தது, ஆனால் வேதனை மூலமாகத்தான் வளர்ச்சி நிகழ்கிறது. இது வளர்ச்சிக்கான வேதனை, வளர்ச்சியை அனுமதிக்காத ஆரோக்கியத்தை விடவும் இந்த வளர்ச்சிக்கான வேதனை மிகவும் மதிப்புள்ளது. சாதாரணமாகவும், புத்தி சுவாதீனத்துடனும் இருந்து கொண்டு வளர்ச்சி அடையாமல் இருப்பதை விடவும் வளர்ச்சி ஏற்பட்டால் அதற்கு பைத்தியமாகவும் அசாதாரணமாகவும் இருப்பது சிறந்தது.

இதில் உள்ள ஒட்டு மொத்த விஷயமும் வளர்ச்சி என்பதாக மட்டுமே உள்ளது. நீ என்னவாக இருக்கிறாயோ அப்படியே இருந்து விடக்கூடாது. நீ ஒரு விதையாக இருந்து விடக் கூடாது. நீ ஆயிரம் மலர்களாக வெடித்து கிளம்பவேண்டும். ஆனால் அதற்கு முன்பு விதையானது மண்ணில் மரணமடைய வேண்டும்.

குரு என்பவர் வெறும் சீதோஷ்ண நிலை, ஒரு மண் சீடன் அதில் மரணமடைகிறான். திட நம்பிக்கையோடு அவன் அந்த மண்ணில் விழுந்து மரணமடைகிறான். என்ன நடக்கும் என்று உனது எதிர்காலத்திற்கான உத்தரவாதத்திற்கான வழிகள் ஏதும் கிடையாது. ''ஒரு விதையானது நிச்சயமாக முளைவிடும், அதில் மாபெரும் கிளைகளும், பசுமையும் தோன்றும். அதில் சிவப்பு நிற பூக்கள் மலர்ந்து மகிழ்ச்சி நிறைந்து இருக்கும்,'' என்று எப்படி நீ ஒரு விதைக்கு உத்திரவிதம் கொடுக்க முடியும்.

ஆனால் அந்த விதையும் கூட, ''இது குறித்து நான் எப்படி சமாதானம் அடைவது? இதைப் பார்ப்பதற்கு நான் அங்கு இருக்க மாட்டேன் அல்லவா. அதற்கான உத்தரவாதம் என்ன? யாருக்கு தெரியும், நான் வெறுமனே அப்படியே மரணமடைந்து எதுவுமே நடக்காமல் போகலாம்,'' என்று கூறும்.

அந்த விதையிடம் என்ன கூறமுடியும்? அந்த விதையை சமாதானம் செய்வது சாத்தியப்படாது. ஆனால் அந்த விதையானது ஏற்கனவே மரமாக ஆகிவிட்ட அந்த ஒன்றின் மீது அன்பு வசப்படுகிறது. மறைந்து இருந்த ஒன்று இப்போது வெளிப்படுத்தப்பட்டுள்ளது. விதையானது மரத்தின் மலர்களோடும், அதன் நறுமணத்தோடும் காதல் வசப்படுகிறது. எனவே அந்த விதையானது, ''உன்னைப் போன்று நானும் ஆவதற்கு என்னவழி?'' என்று கேட்கிறது.

சீடனாக இருத்தல் என்பதற்கு இதுதான் அர்த்தம். நீ ஒரு புத்தரிடம் வருகிறாய், அப்போது அவரிடம் மலர்களையும் நறுமணத்தையும் நீ பார்க்கிறாய், எனவே நீ புத்தரிடம், ''உங்களைப் போன்று நான் எப்படி ஆக முடியும்?'' என்று கேட்கிறாய். அப்போது புத்தர், ''நான் மரணமடைந்தேன், அப்படித்தான் நான் இது போன்று ஆனேன். நீயும் கூட மரணமடை'' என்று கூறுகிறார். எனவே அந்த புத்தரையும், அந்த நறுமனத்தையும், அந்த அமைதி மற்றும் மௌனத்தையும் பார்த்தவுடன் ஒரு திடநம்பிக்கை எழுகிறது, ஒரு காதல் எழுகிறது. எனவே அந்த விதையானது அந்த மாபெரும் மரத்தின் அருகில் மரணம் என்றும் ஆபத்தை எடுக்கிறது. மேலும் ஒரு நாள் அங்கு

முளை ஒன்று விடுகிறது. ஆனால் உனது அன்பின் மூலம் நீ ஏற்கனவே சமாதானம் அடையவில்லை என்றால், தர்க்க அறிவோடு என்னை சமாதானம் செய்வதற்கு வேறு எந்த ஒரு வழியும் கிடையாது.

எனவே சீடர்கள் ஆவதற்கு நான் உங்களை சமாதானப் படுத்த வேண்டும் என்பது கேள்வி அல்ல ; அப்படிச் செய்வதற்கு வழி ஏதும் இல்லை. உனது சொந்த அன்பின் மூலம் நீ சமாதானம் அடைந்துதான் நீ ஒரு சீடன் ஆகிறாய். ஆம், அது வேதனை நிறைந்தது. ஆனால் எல்லா வளர்ச்சியும் வேதனை நிறைந்தது தான்.

இந்த வேதனையை அனுபவி. அது எவ்வளவுதான் வலி மிக்கதாக இருந்தாலும் உனது இந்த நான் என்னும் தன்முனைப் பானது முற்றிலும் போகட்டும். பாதுகாப்புடன் இருந்து கொண்டு அவஸ்த்தைப்படுவதை விடவும் பாதுகாப்பு இல்லாமல் அவஸ்த்தைப்படுவது நல்லது ஏனெனில் பாதுகாப்புடன் அவஸ்தை படுகிறவர் வளர்ச்சி அடையமாட்டார். மேலும் அங்கு வளர்ச்சி என்பது தான் மிகவுயர்ந்த மதிப்புள்ளது ஏனெனில் மனிதன் தனக்குள் கடவுள் என்னும் சக்தியைக் கொண்டிருக் கிறான். அந்த கடவுள்தன்மை அறியப்பட வேண்டும்.

அதற்கு உன்னிடம் உள்ள அதிக விஷயங்கள் கைவிடப்பட வேண்டும். அதிக சுமைகளை நீ இறக்கி வைக்க வேண்டும். அதன் பின்னர் மட்டுமேஉன்னால் சூரிய ஒளியில் பிரகாசிக்கும் அந்த மலைச் சிகரத்தை அடைய முடியும். உயரத்தில் போகப் போக, நீ அதிக சுமைகளை கீழே போடவேண்டும் ஏனெனில் எல்லாமே உனது பயணத்தில் உனக்கு ஒரு சுமையாகவும், ஒரு இடையூறாகவும் இருக்கும், நீ செல்லும் வழியில் உன்னிடம் உள்ள எல்லாவற்றையும் கைவிட்டு விடும் போது மட்டுமே உன்னால் அந்த மலைச் சிகரத்தை அடைய முடியும்.

ஒன்றுமில்லாதவனாக, ஒரு வெறுமையாகவே நீ அந்த சிகரத்தை சென்றடைவாய். இது வேதனை நிறைந்தது தான். அதை நான் அறிவேன். ஆனால் நான் இங்கு ஒரு நல்ல சீதோஷ்ண

நிலையை, ஒரு சக்தி தளத்தை உருவாக்க முயற்சிக்கிறேன் அப்போது நீ வேதனையில் இருந்து உன்னால் சாத்தியப்படும் அளவுக்கு மகிழ்ச்சியாக போக முடியும்.

***இரண்டாம் கேள்வி :***

***ஓஷோ,***

> ***காமத்திலிருந்து அன்புக்கு செல்கின்ற வழியை எனக்கு கூறுங்கள்.***

காமம் அழகானது, காமகமனம் அசிங்கமானது, மேலும் இதில் உள்ள வேறுபாட்டை புரிந்து கொள்ள வேண்டும். காமம் என்பது இயற்கையான விஷயம். காமகமனம் என்பது செயற்கையானது, இயற்கைக்கு எதிரானது. ஒரு வியாதி போன்றது. காமம் உனது மூளையின் விஷயமாக ஆகிவிடும் போது, காமம் உனது தலைக்குள் நுழைந்து விடும் போது அது காமகமனம் ஆகிறது.

இப்போது, தலை என்பது காமத்திற்கான மையம் அல்ல. அது குழப்பத்திற்குள் மாட்டிக் கொள்கிறது. அது தலைகீழாக ஆகிவிடுகிறது. அது தாறுமாறாக்கி விடுகிறது. காமம் என்பது தலையின் செயல் அல்ல, ஆனால் காமமானது தலையின் மூலமாக நுழையும் போது காமகமனம் ஆகிவிடுகிறது. அதன் பின்னர் நீ காமத்தைப் பற்றி நினைக்கிறாய். அதன் பிறகு நீ உடலுறவைப் பற்றி கற்பனை செய்கிறாய். அதைப்பற்றி நீ அதிகம் நினைக்கும் போது, அதைப் பற்றி நீ அதிகம் கற்பனை செய்யும் போது, நீ அதிகம் சிக்கலில் மாட்டிக் கொள்வாய் ஏனெனில் அதன் பின்னர் உண்மையான எதுவும் எப்போதும் உன்னைத் திருப்திப்படுத்தாது ஏனெனில் கற்பனைக்கு எல்லைகள் கிடையாது. ஆனால் உண்மைக்கு எல்லைகள் உண்டு.

உதாரணமாக, நீ காமத்தைப் பற்றி அதிகம் சிந்தித்தால் உன்னால் ஒரு அழகான பெண்ணை உருவாக்க முடியும் அதாவது உனது கற்பனையில் மட்டுமே உள்ள பெண்ணை உருவாக்க முடியும், இந்த உலகில் எங்கும் அவர்கள் போன்று உன்னால் ஒருபோதும் காணமுடியாது. அல்லது ஆண்களைப்

பற்றி கற்பனையினால் எந்த ஒரு உண்மையான ஆணோ அல்லது பெண்ணோ உன்னை எப்போதும் திருப்திப்படுத்த முடியாது. உனது கற்பனை எதிர்பார்ப்புகளை எந்த ஒரு உண்மையான ஆணோ அல்லது பெண்ணோ நிறைவேற்ற முடியாது. கற்பனை கற்பனைதான். அது ஒரு கனவு.

வியர்வை வராத ஒரு பெண்ணை, உடலில் நாற்றம் இல்லாத ஒரு பெண்ணை உன்னால் கற்பனை செய்ய முடியும். எப்போதும் இனிக்கிற ஒரு போதும் கசக்காத ஒரு பெண்ணை கற்பனை செய்ய முடியும். உன்னை ஒரு போதும் அடிக்காத, ஒருபோதும் கோபப்படாத, உன்மீது தலையணைகளை வீசி எறியாத எப்போதும் அன்புடன், கதகதப்புடன், வரவேற்கிற ஒரு பெண்ணை உன்னால் கற்பனை செய்ய முடியும். ஒருபோதும் வயதே ஏறாத, எப்போதுமே பதினெட்டு வயதில் இருக்கிற, பெண்ணை கற்பனை செய்ய முடியும். எப்போதும் புத்துணர்வுடன், எப்போதும் இளமையாக, எப்போதும் அழகாக இருக்கிற, ஒருபோதும் நோய்வாய்ப் படாத, உன்னிடம் எதையும் கேட்காத, உனக்கு துரோகம் இழைக்காத, ஏக்கத்தோடு எந்த ஒரு அடுத்த ஆணையும் ஒருபோதும் பார்க்காத, ஒரு பெண்ணை உன்னால் கற்பனை செய்ய முடியும். எல்லை இல்லாத அளவுக்கு உன்னால் கற்பனை செய்ய முடியும். ஆனால் இந்த பெண்மணியை உன்னால் எங்கும் காணமுடியாது. இப்போது நீ ஒரு பிரச்சினையை உருவாக்கி விட்டாய். இதன் பின்னர் காமத்திற்கு உன்னை இயல்பாக தயார் செய்து கொள்ள வில்லை.

இயற்கையானது எப்போதும் நிறைவேறக் கூடியது. ஆனால் கற்பனை நிறைவேற்றப்படமுடியாது. நீ உனது பெண்மணியை பெண்கள் பத்திரிக்கைகளிலும், ஆபாசப் புத்தகங்களிலும் மட்டுமே காணமுடியும். ஆனால் உண்மையில் உன்னால் அவளைக் காண முடியாது. எனவே நீ உண்மையில் யாரைக் கண்டாலும் அவர்கள் உனது கற்பனையை விட குறைந்தவர் களாகவே இருப்பார்கள்.

மேலை நாடுகள் அந்த பிரச்சினையை தான் சந்தித்துக் கொண்டு இருக்கின்றன. அது காமத்தைப் பற்றி மிக அதிகமாக

கற்பனை செய்து விட்டது. கற்பனையின் மூலம் மேலை நாடுகள் காமகமனம் கொண்டதாக ஆகிவிட்டது. கீழை நாடுகள் காமத்தை அடக்கி வைத்ததன் மூலம் காமகமனம் கொண்டதாக ஆகிவிட்டது. இரண்டுமே காம வெறி மிக்கதாக ஆகிவிட்டன. காமத்தை இயற்கையாக அனுபவிக்கின்ற திறமையை இரண்டுமே இழந்து விட்டன. வெவ்வேறு பாதைகளில் இரண்டுமே நோய்வாய்பட்டதாக ஆகிவிட்டன. காமம் தான் வாழ்க்கையின் இறுதி இலக்கு என்று கற்பனை செய்ததால் மேலைநாடுகள் நோயுற்றதாக ஆகிவிட்டன. காமம் தான் மனிதனுக்கும் கடவுளுக்கும் இடையே உள்ள இறுதித் தடை என்று நினைத்துக் கொண்டு கீழைநாடுகள் நோயுற்று விட்டன.

காமம் இரண்டுமல்ல, அது இறுதியான இலக்கும் அல்ல அல்லது இறுதியான தடையும் அல்ல. பசி, தாகம் போன்று காமம் ஒரு இயற்கையான விஷயம். அதில் வேறு எதுவும் அதிகம் இல்லை. கீழை நாடுகள் அது என்ன என்று அதைப்பற்றி சிந்தித்துக் கொண்டு இருக்கிறதோ அதுவும் அல்ல. கீழைநாட்டு மனமானது காமத்தைக் கண்டு அதிகம் பயப்படுகிறது. பயத்தினால் காமம் தலைக்கு ஏறிவிட்டது. பயம் என்னும் வாசல் வழியாக அது தலைக்குள் நுழைந்து விட்டது.

ஆகவே கீழைநாட்டில் தங்களை புனிதர்கள் என்று அழைத்துக் கொண்டு இருப்பவர்கள் எல்லாம் காமத்தை வெறுமனே கற்பனை செய்து கொண்டு இருக்கிறார்கள் ஏனெனில் அவர்கள் காமத்தை அடக்கி வைத்துள்ளனர். மேலும் நீ எதை அடக்கி வைத்திருக்கிறாயோ அது மீண்டும் மீண்டும் மேலே வந்து கொண்டு இருக்கிறது. அதை அழிக்கமுடியாது, அடக்கி வைப்பதன் மூலம் எதையும் எப்போதும் அழித்து விட முடியாது. அடக்கி வைத்தல் காமத்தை காமக மனநோயாக ஆக்கிவிடுகிறது. இது ஒரு பக்கத்தில் உள்ள எல்லை.

மேலை நாடுகள் அடுத்த எல்லைக்கு நகர்ந்து விட்டன. காமத்தைப் பற்றி கற்பனை செய்தல் அடுத்த எல்லையாக இருக் கிறது. எல்லாமே காமம் தான், மற்றவை எல்லாம் இரண்டாம் பட்சம் தான், எனவே உங்களால் எவ்வளவு முடியுமோ அந்த

அளவுக்கு காமத்தை அனுபவி என்கின்றன. ஆனால் உன்னால் அதிக காமத்தை அனுபவிக்க முடியாது. உனது உடலுக்கு எல்லைகள் உள்ளன. ஆனால் உன்னால் எவ்வளவு முடியுமோ அந்த அளவுக்கு காமத்தை கற்பனை செய்ய முடியும், அதற்கு எல்லைகள் கிடையாது. எனவே தான் ஆபாசப் படங்கள் இருக்கிறது, நீல திரைப்படங்கள் இருக்கின்றன, பெண்களின் ஆபாசப்படம் நிறைந்த பத்திரிகைகள் உள்ளன மேலும் கற்பனையான இந்த கானல் நீரானது மக்களுக்கு ஊட்டப் படுகிறது. அதன்பின்னர் எந்த ஒரு உண்மையான பெண்ணோ அல்லது ஆணோ உன்னை திருப்திப்படுத்த முடியாது.

இந்த இரண்டுமே நோயுற்ற நிலைகள். காமக மனம் ஒரு நோய். நீ அந்த நிலைக்கு பேராசையால் வருகிறாயா அல்லது பயத்தால் வருகிறாயா என்பது முக்கியமல்ல. கீழைநாடுகள் பயத்தினால் நோயுற்று விட்டன. மேலை நாடுகள் பேராசை மூலம் நோயுற்று விட்டன. பேராசையும், பயமும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள், ஆகவே மேற்பரப்பில் பார்க்கும் போது அவை வேறுபட்டது போல தோன்றுகிறது. கிழக்கும் மேற்கும் எதிர் எதிர் துருவங்களில் இருப்பது போல தோன்றுகிறது. அவை அப்படி இல்லை. அறிந்து கொள்பவர்கள், கண்டு கொள்ளக் கூடியவர்கள் அதே முட்டாள்தனத்தையும், அதே அர்த்தமற்ற தன்மையையும் தான் காண்பார்கள். அவர்கள் வெவ்வேறு வாசல்கள் வழியாக அதே முட்டாள் தனத்திற்கு வந்திருக் கிறார்கள். அது தான் உண்மை, ஆனால் அவர்கள் ஒரே இடத்தில் தான் நுழைந்து இருக்கிறார்கள். எனவே இருவரையுமே விழிப்படையச் செய்ய வேண்டும், மேலும் காமத்தைப் பற்றி இருவருக்குமே அதிக மெய்ஞ்ஞானம் உண்டாக்கப்பட வேண்டும்.

எந்த ஒரு வழியிலும் காமத்தைப் பற்றி அதிக குழப்பத்தை உண்டாக்காதே. அது தான் முதல் அடிப்படை. நீ காமத்தை அன்பாக மாற்ற விரும்பினால், காமத்தை முற்றிலும் இயற்கையான ஒரு விஷயமாக ஏற்றுக் கொள்வது தான் முதல் அடிப்படையாக உள்ளது. உனது மதத்தை உள்ளே கொண்டு வராதே. உனது இயல்பு கடந்த ஆய்வை உள்ளே கொண்டு

வராதே. காமம் என்பது வாழ்க்கையில் உள்ள எளிய உண்மை. அப்படித்தான் உயிரானது தன்னையே உற்பத்தி செய்கிறது. அது மரமானது பூக்களையும், பழங்களையும் கொண்டுவருவது போன்று எளிமையானது. நீ மலர்களை கண்டனம் செய்வ தில்லை. மலர்கள் காமம் நிறைந்து இருக்கின்றன, மலர்கள் மூலமாகத்தான் மரமானது விதைகளை அனுப்பிக் கொண்டு இருக்கிறது. அதன் சக்தியை, அடுத்த மரங்களுக்கு அனுப்பிக் கொண்டு இருக்கிறது.

ஒரு மயில் ஆடும் போது நீ அதை கண்டனம் செய்வது கிடையாது. ஆனால் அந்த நடனம் காமம் நிறைந்தது. அது தனது பெண் மயிலை கவர்வதற்காகவே அப்படி ஆடுகிறது. குயில் கூவுகிறது. நீ அதைத் கண்டனம் செய்வதில்லை; அது காமம் நிறைந்தது. அந்த குயிலானது ''நான் தயார்'', என்று வெறுமனே அறிவிக்கிறது. அந்த குயில் பெண்ணுக்கு அழைப்பு விடுக்கிறது. அந்த ஒலி, அழகான சப்தம், வெறுமனே ஒரு துண்டுதல், அது உறவுக்கு அழைத்தல்.

நீ வாழ்க்கையை கவனித்தால் நீ ஆச்சரியப்படுவாய். வாழ்க்கையில் எல்லாமே காமத்தின் மூலமே வருகிறது. உயிர் காமத்தின் மூலம் தன்னையே உற்பத்தி செய்கிறது. இது ஒரு இயற்கையான விஷயம், அதனுள் தேவையற்ற பகுத்தறிவு வாதங்களைக் கொண்டு வராதே.

காம சக்தியை நீ எப்போதாவது மாற்ற விரும்பினால், இது தான் நீ புரிந்து கொள்ள வேண்டிய முதல் விஷயம். முதல் விஷயம் என்னவென்றால், அதை மறுக்காதே, அதை ஒதுக்காதே, அதை அடக்காதே, அது குறித்து பேராசை கொள்ளாதே, அது தான் எல்லாம் என்று நினைக்காதே. அது அப்படி அல்ல. வாழ்க்கையில் இன்னும் அதிகம் உள்ளது. மேலும் காமம் அழகானது, இன்னமும் அதனால் வாழ்க்கைக்கு அதிகம் கிடைக்க உள்ளது, காமம் வெறும் அஸ்திவாரம் மட்டுமேயாகும். அது முழுக் கோவில் அல்ல.

அடக்கி வைத்தால் அது காமகமனம் ஆகிறது. கற்பனை செய்தல் அது காமாந்தகம் ஆகிறது. ஒன்று காமத்தை ஒரு நோயாக

ஆக்குவதற்குரிய கீழை நாட்டின்வழி, அடுத்தது மேலை நாட்டின் வழி. ஆனால் யாரும், கீழை நாட்டிலும் சரி அல்லது மேலை நாட்டிலும் சரி காமத்தை எளிய இயற்கையான விஷயமாக ஏற்றுக் கொள்வதில்லை. புனிதர்களும், அல்லது பாவிகளும் ஆகிய யாரும் காமத்தை ஒரு எளிய இயற்கையான விஷயமாக ஏற்றுக் கொள்வதில்லை. இருவருமே அதீத உணர்ச்சியோடு இருக் கிறார்கள். எனவே இரண்டுமே வேறுபட்டதல்ல என்று நான் கூறுகிறேன். ஏற்றுக் கொள்ளப்பட்ட, மரியாதை அளிக்கப்பட்ட, வாழ்ந்து பார்த்த காமமானது அன்பாக ஆகிறது.

முந்தைய தினம் நான் உனக்கு கூறினேன் அல்லவா அதைப் போன்றது. உன்னிடம் சோகம் இருந்தால் அதை ஏற்றுக் கொள். அது தான் நீ என்று கூறினேன். ''நான் சோகமாக இருக்கிறேன்'' என்று கூறாதே. ''சோகம் தான் நான்'' என்று கூறினேன். ''நான் சோகத்தில் இருக்கிறேன்'' என்று கூறாதே. வெறுமனே, ''சோகமே நானாக இருக்கிறேன்'' என்று கூறு. ''நான் சோகமாக இருக்கிறேன்'' என்று கூறும் போது நீ ஏதோ தனிப் பட்டவன் போன்றும், சோகம் என்பது நீ பெற்றுள்ள ஏதோ ஒன்று என்றும் தெரிகிறது. ''சோகமே நானாக இருக்கிறேன்'' என்று வெறுமனே கூறு. அந்த தருணத்தில் உனக்கும் நீ சோகம் என்று அழைப்பதற்கும் இடையில் எந்த ஒரு பிரிவினையும் கிடையாது. அந்த தருணத்தில் சோகமே நீயாக இருக்கிறாய். அடுத்த நொடி நீ அமைதியில் இருக்கலாம், இன்னமும் அடுத்த நொடியில் நீ மகிழ்ச்சியாக இருக்கலாம்.

வாழ்க்கை மாறிக் கொண்டே இருக்கிறது. வாழ்க்கையானது ஒரே ஒரு விஷயத்தை மட்டுமே நிரந்தரமானதாக அறிகிறது. மேலும் அந்த நிரந்தரமானது மாற்றம் என்பது தானாகும். மாற்றம் மட்டுமே மாறாமல் உள்ளது; மாற்றத்தை தவிர வேறு எல்லாம் மாறிக் கொண்டே இருக்கின்றன. அப்படி என்றால் மாற்றம் ஒன்று தான் முடிவற்றது என்று அர்த்தம். அது ஒரு தொடர், நீ ஒரு நிலையான விஷயம் அல்ல. நீ ஒரு நிலையான விஷயமாக இல்லாதது நல்லது, அப்படி இருந்தால் நீ ஒரு பொருளாக, சந்தையில் விற்பனைப் பொருளாக இருந்திருப்பாய். நீ பொருள்

இல்லாமல் இருக்கிறாய். நீ நிலையான ஒரு விஷயம் அல்ல. நீ இடைவிடாமல் திறந்து இருப்பவன், நீ மாற்றமாக இருக்கிறாய்.

ஒரு தருணத்தில் உன்னிடம் சோகம் இருக்கிறது. அப்போது நதியானது ஒரு திருப்பம் திரும்புகிறது. அடுத்த தருணத்தில் அங்கு மகிழ்ச்சி இருக்கிறது. மேலும் நதியானது இன்னும் ஒரு திருப்பம் திரும்புகிறது. அப்போது அங்கு அமைதி இருக்கிறது. இப்படி அது போய்க் கொண்டே இருக்கிறது. அந்த தருணம் உன்னால் முழுமையாக ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். அது தான் நீ. காமம் உன்னிடம் இருக்கும் போது, அங்கே காமம் இருக்கிறது. அது தான் நீ, ''எனக்கு காம ஆசை இருக்கிறது'' என்று கூறாதே. அது உன்னைப் பிரித்துக் கொள்வதாகும். அது தான் பிரிவினையை உருவாக்கும் வழியாகும்.

உனக்கு காம ஆசை வந்தால், அதன் பின்னர் இரண்டு சாத்தியங்கள் உள்ளன. நீ அதற்கு எதிராக இருந்தால், அதை அடக்குகிறாய். இது தான் நோயுற்று, புத்தி சுவாதீனம் இல்லாமல், பைத்தியமாகின்ற கீழைநாட்டு வழியாகும். அடுத்த வழியானது, ''எனக்கு காம ஆசை உள்ளது. அதை அதிகரிப்பது எப்படி? அதை அதிக தீவிரமானதாக ஆக்குவது எப்படி? அதை அதிகபட்சமாக அனுபவிப்பது எப்படி? என்பதாக உள்ளது. அது பேராசையின் வழி, மேலை நாட்டு வழி, ஆனால் முடிவு அதே போன்று தான் உள்ளது. இறுதியான விஷயம் ஒரே மாதிரிதான் இருக்கிறது. இருவருமே அதோடு அதீத உணர்ச்சி கொள்கிறீர்கள்.''

என்னவாக இருந்தாலும் வெறுமனே அது அப்படியே இருந்து விட்டு போகட்டும். அது தான் நீ. உனக்கு காம ஆசை இல்லை; உனக்கு காம ஆசை இருந்தால் அந்த காம ஆசைக்கு ஏதாவது செய்ய முடியும். அதுவாகவே நீ இருந்துவிட்டால், எதுவுமே செய்ய முடியாது ஏனெனில் செய்வதற்கு வேறு யாரும் இல்லை. அதுவே நீ யாக இருக்கிறாய்.

அதுவே நீ என்பது தான் எனது எல்லா சந்நியாசிகளின் தியானமாக இருக்க வேண்டும். அதில் பிரிவினை இல்லை.

வெறுமனே அதன் அழகைப் பார். பிரிவினை இல்லாத போது அங்கு சண்டை இல்லை. பிரிவினை இல்லாத போது அங்கு பயம் இல்லை. அங்கு பேராசை இல்லை. பிரிவினைதான் பயத்தையும், பேராசையையும் கொண்டு வருகிறது. பேராசையும், பயமும் பிரிவினையின் உங்களது பொருள் விளக்கங்கள். ஆனால் பிரிவினைதான் முதலில் வருகிறது அதன் பிறகு உங்களது பொருள் விளக்கப்படுகிறது.

காம ஆசை இருக்கும் போது, உனக்கு தனியாக நடக்கின்ற ஏதோ ஒன்று என்று நீ எடுத்துக் கொள்கிறாய். அது உனது கையில் உள்ள பொருள் போன்றது. இப்போது அது அதிகமாகவோ அல்லது குறைவாகவோ பெறமுடிகின்ற ஏதோ ஒன்று போல் இருக்கிறது. இப்போது அதிகம் வேண்டுமா அல்லது குறைவாக வேண்டுமா என்று நீ முடிவெடுக்க வேண்டும். அது அப்படியே அங்கு இருக்கிறது. அதில் அதிகமும் இல்லை குறைவும் இல்லை.

வெறுமனே அதை வாழ்ந்து பார், அதுவாக இருந்துபார், அதை நேசித்துப்பார். இது உனது தருணம், இந்த தருணத்தில் இதுதான் உண்மை. மேலும் ஒருபோதும் ஒப்பிட்டு பார்க்காதே, ஏனெனில் ஒரு நொடிப் பொழுதிற்கு முன்பு அது அங்கு இல்லை. ஆகவே ஒப்பிடுதலைக் கொண்டு வராதே ஏனெனில் ஒப்பிட்டு பார்த்தல் மீண்டும் ஒரு பிரிவினையை கொண்டு வருகிறது. அடுத்த நொடி அது மீண்டும் போய்விடலாம். எனவே ஒப்பிட்டு பார்க்காதே. வாழ்க்கை மாறிக் கொண்டே இருப்பது. அதைத்தான் புத்தர் ''வாழ்க்கை என்பது மாறுவது'' என்றார். அதைத்தான் ஹெராக்லிட்டஸ் ''அதே நதியில் உன்னால் இரண்டு முறை காலடி எடுத்து வைக்க முடியாது'' என்று கூறினார். வாழ்க்கை என்பது ஒரு நதி. அது இடைவிடாமல் நகர்ந்து கொண்டே இருக்கிறது.

உனக்குள் அடி ஆழத்தில் வாழ்க்கையானது நிலையானதாக இருக்க வேண்டும் என்று நீ நினைக்கிறாய். இது ஏன்? ஏனெனில் நிலையான, அசைவற்ற ஒரு வாழ்க்கையில் நீ அதிக பத்திர மாகவும், அதிக பாதுகாப்பாகவும் இருப்பாய். ஆனால் வாழ்க்கை அசைவற்றது அல்ல. மரணம் மட்டுமே அசைவற்றது. வாழ்க்கை உயிர்துடிப்புள்ளது, ஓடிக் கொண்டு இருப்பது.எந்த அளவுக்கு

அதிகம் ஓடுகிறதோ அந்த அளவுக்கு நீ உயிர்த்துடிப்புடன் இருப்பாய். வாழ்க்கை ஒரு தேங்கிய குட்டை அல்ல. அது ஒரு நதி. அது கங்கை, இமயமலையில் இருந்து கடலை நோக்கி போகிறது. உயரத்தில் இருந்து வந்து ஆழத்திற்கு போகிறது. மேலும் கடலின் ஆழத்தில் இருந்து மீண்டும் கங்கையானது நீராவி ஆகி மீண்டும் உச்சி சென்று, இமயத்தில் மீண்டும் மேகமாக கூடுகிறது. எனவே மீண்டும் நதியானது பிறக்கிறது. இது ஒரு அழகான, நிறைவான வட்டம். இப்படித்தான் நீ நகர்கின்றாய்.

எந்த கண்டனமும் இல்லாமல், எந்த மதிப்பீடும் இல்லாமல் ஒவ்வொரு நொடிப் பொழுதும் அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட வேண்டும். மேலும் நீ காமத்தை இயற்கையானதாக ஏற்றுக் கொண்டு விட்டால், அது உனது மூளைக்கு செல்வதை நிறுத்தி விடுகிறது. அது தலையில் இருந்து கீழே விழுகிறது. அது தனக்கு சொந்தமான காம மையத்திற்கு போய் விடுகிறது. காமம் எனது காமத்தின் மையத்தில் இருந்தால் அது அழகானது. அது தலைக்கு ஏறிவிட்டால் அது அசிங்கமானது.

சாப்பிடுதல் அழகானது. உனக்கு பசி எடுக்கிறது எனவே நீ சாப்பிடுகிறாய் மேலும் அது தேவையானது. அது ஊட்டமளிக் கிறது. ஆனால் இங்கு இரண்டு வகையான மக்கள் இருக்கின்றனர். ஒரு சில மக்கள் அளவுக்கு அதிகமாக சாப்பிடுகிறார்கள். அளவுக்கு அதிகமாக சாப்பிடுகிறார்கள் என்றால் தலையானது உள்ளே நுழைந்து விட்டது என்று அர்த்தம். நீ சாப்பிடும் போது உடலானது எப்போதும் புத்தி சுவாதீனத்துடன் இருக்கிறது. ''இப்போது நிறுத்திவிடு'' என்று உடல் எப்போதும் உன்னிடம் கூறுகிறது. உடல் உடனடியாக ஒரு குறிப்பை, ஒரு அடையாளத்தை கொடுக்கிறது ''போதும் இப்போது நிறுத்திவிடு! இதற்கு மேல் அதிகமாக தேவை இல்லை எனது தேவைகள் நிறை வேற்றப்பட்டு விட்டன'' என்று உடல் கூறுகிறது. ஆனால் தலையோ, ''இது மிகவும் ருசியாக உள்ளது, நாவுக்கு ருசியாக உள்ளது, எனவே இன்னும் ஒரு தட்டு சாப்பிடு'' என்று கூறுகிறது. தலைதான் இப்படி கூறுகிறது. உடல் அல்ல. உடல் பின் வாங்கிக் கொள்கிறது. உடலானது ''வேண்டாம்'' என்று சொல்கிறது. உடல் எப்போதும் புத்தி சுவாதீனத்துடன் இருக்கிறது.

நான் உனக்கு கூறவிரும்புகிற அடிப்படைகளில் இதுவும் ஒன்றாகும். காலம் காலமாக உனது துறவிகள் உனது உடல் தான் உனக்கு எதிரி என்று கூறி வந்திருக்கின்றனர். அது அப்படி அல்ல, உடல் எப்போதும் உனது நண்பன், அப்படி யாராவது எதிரி என்று இருந்தால் அது தலையே தவிர, ஒருபோதும் உடல் அல்ல. உடல் எப்போதும் புத்தி சுவாதீனத்துடன் இருக்கிறது.

கவனித்துப்பார், நான் தத்துவம் பேசவில்லை, நான் வெறுமனே உண்மையைக் கூறுகிறேன். உன்னைக் கவனித்துப் பார். நீ நோயுற்று இருந்தால் உனது உடல், ''சாப்பிடாதே'' என்கிறது. ஆனால் தலையோ, ''இப்படி நீ சாப்பிடாமல் இருந்தால் நீ பலவீனமடந்து விடுவாய். அநேக வைட்டமின்கள் முற்றிலும் தேவை, நீ வெளிறிப் போய் விடுவாய். நீ பலசாலியாக இருக்கமாட்டாய்'' என்று கூறுகிறது. இது தலையின் செயல். உனது உடலானது, ''நீ நோயுற்று இருக்கிறாய், எனவே தேவை இல்லாமல் சாப்பிடுவது உனது உடல் உறுப்புகளை சுமை ஏற்றுவதாகும். இப்போது உடல் உறுப்புகளுக்கு ஓய்வு தேவை, சாப்பிடாமல் இருப்பது நல்லது'' என்கிறது.

விலங்குகள் இதைத்தான் செய்கின்றன. எந்த ஒரு விலங்கும் நோயுற்று இருக்கும் போது சாப்பிடாது; அது வெறுமனே சாப்பிடுவதை நிறுத்தி விடுகிறது. குழந்தைகளும் கூட அதைத் தான் செய்கின்றன. அப்போது எந்த ஒரு குழந்தையும் சாப்பிடாது. ஆனால் பெரியவர்கள் அவர்களைக் கட்டாயப்படுத்துவார்கள். அவர்கள் குழந்தையிடம், ''சாப்பிடு, இல்லையெனில் நீ நோயுற்று விடுவாய். நீ பலவீனம் அடைந்து விடுவாய், உனக்கு சாப்பாடு தேவை'' என்று கூறிகின்றனர். அவர்கள் குழந்தை களைக் கட்டாயப் படுத்துகிறார்கள். குழந்தைகள் அழுவதையும் அவர்களின் தாய்மார்கள் '' இன்னும் கொஞ்சம் சாப்பிடு'' என்று கட்டாயம் படுத்துவதையும் உன்னால் பார்க்க முடியும். தலை தான் இந்த சிக்கலை உருவாக்குகிறது.

உண்ணா நோன்பு அவசியம் இல்லாத நேரத்தில் பட்டினி கிடக்கின்ற மக்களும் இங்கு உள்ளனர். உடல் பசியோடு இருக்கிறது. ஆனால் நீ சமணனாக இருந்து, உனது மதம்

சம்பந்தப்பட்ட நாட்கள் வந்து விட்டால் நீ உண்ணா நோன்பு இருந்தாக வேண்டும். உடல் பசியோடு இருக்கிறது, உடல் உணவை விரும்புகிறது. ஆனால் உன்னால் சாப்பிடமுடியாது. ஏனெனில் துரதிருஷ்டவசமாக நீ ஒரு சமணனாக பிறந்து விட்டாய் மேலும் மதம் சம்பந்தப்பட்ட நாட்கள் வந்து விட்டன எனவே அப்போது நீ சாப்பிட்டால் நீ நரகத்தின் நெருப்பில் தூக்கி எறியப்படுவாய். இது தலையின் குறுக்கீடு. உடலானது "சாப்பிடு" என்று கூறுகிறது. ஆனால் துரதிருஷ்டவசமாக நீ ஒரு முகமதியனாக இருந்து விட்டால், மேலும் அது ரமலான் மாதமாக இருந்து விட்டால், நீ உண்ணா நோன்பு இருந்தாக வேண்டும். இப்போது இதில் தலை தான் குறுக்கிடுகிறது.

தலையானது இரண்டு வழிகளில் குறுக்கிடுகிறது. ஒன்று அது அதை அனுபவிக்கும் படி செய்கிறது அல்லது அது உன்னை அடக்கி வைக்கும்படி செய்கிறது. மீண்டும் ஒன்று கீழைநாட்டு வழியாகவும், அடுத்தது மேலை நாட்டு வழியாகவும் இருக்கிறது. தேவைக்கு அதிகமாக சாப்பிடுதல் என்பது அனுபவித்தல் ஆகிறது. உடலுக்கு உணவு தேவைப்பட்டாலும் கூட சாப்பிடாதே என்பது உண்ணாநேன்பாகிறது. இது அடக்கி வைத்தல். எப்போதுமே தலை தான் குறுக்கிடுகிறது. அது உனது சாப் பாட்டில் தலையிடுகிறது. அது உனது காமத்தில் தலையிடுகிறது. அது உனது தூக்கத்தில் தலையிடுகிறது. அது எல்லாவற்றிலும் தலையிட்டுக் கொண்டே செல்கிறது.

மாபெரும் ஜென் குருவாகிய போகுஜூவை நினைவில் வைத்திரு. யாரோ ஒருவர் அவரிடம் "உங்களது நல் ஒழுக்க கட்டுப்பாடு என்ன?" என்று கேட்டார்.

அதற்கு அவர், "எந்த நல் ஒழுக்க கட்டுப்பாடு கிடையாது. நான் பசித்தால் சாப்பிடுகிறேன். எனக்கு தூக்கம் வந்தால் தூங்குகிறேன் எனவே வேறு எந்த நல்ஒழுக்க கட்டுப்பாடும் கிடையாது?" என்றார்.

உடனே அந்த மனிதர், "ஆனால் இதைத்தானே நாங்கள் எல்லாரும் செய்கிறோம்? என்றார்."

அதற்கு போகுஜூ, '' இல்லை, அப்படி செய்கின்ற ஒரு மனிதரைப் பார்ப்பது மிகவும் அபூர்வம் ஏனெனில் யார் அப்படி செய்கிறாரோ அவர் ஒரு புத்தராக ஆகி விடுகிறார். ஒரு புத்தர் மட்டுமே அதை உண்மையுடன் செய்ய முடியும்'' என்று பதிலளித்தார்.

உனது உடலின் தேவைக்கு ஏற்ப நீ உண்பதில்லை, உனது உடலின் தேவைக்கு ஏற்ப நீ உறங்குவதில்லை. நீ உனது தலையின் தேவைகளை உடலின் மீது வலுக்கட்டாயமாக திணித்துக் கொண்டு இருக்கிறாய். அந்த குறுக்கிடு தான் எல்லாவற்றையும் நோயாக ஆக்குகிறது. அப்படித்தான் காமமானது கலைக்கப்பட்டு காமகமனமாக ஆகிறது. காமமானது ஏற்றுக் கொள்ளப்பட்டால், மதிக்கப்பட்டால், வாழ்ந்து பார்க்கப்பட்டால், அது அன்பாக மாறுகிறது.

''காமக மனதில் இருந்து அன்புக்கு செல்கின்ற வழியை எனக்கு கூறுங்கள்'' என்று நீ கேட்கிறாய். முதலில், அதற்கான வழியானது காமகமனம் காமத்திற்கு திரும்பிவந்தாக வேண்டும். நேரடியாக வேறு வழி இல்லை. வேறு பாதை இல்லை, காமக மனத்தில் இருந்து அன்பிற்கு வேறு பாதை இல்லை. வெறுமனே வேறு பாதை கிடையாது, அது குறித்து எதுவும் செய்ய முடியாது. காமகமனதில் இருந்து அன்பிற்கு பாதை கிடையாது ஏனெனில் காமகமனம் தலையில் உள்ளது மேலும் அன்பானது இதயத்தில் இருக்கிறது.

காமகமனத்தில் இருந்து, காம மையத்திற்கு திரும்பி வா. காமத்திலிருந்து அன்பிற்கு நேரடியாக பாதை உள்ளது. அவை பாலம் வைத்து இணைக்கப்பட்டுள்ளன. உண்மையில் எதுவுமே செய்யப்படவேண்டிய அவசியம் கிடையாது. வெறுமனே உனது பாலுறவு தருணங்களை முழு சந்தோஷத்தோடு, அமைதியோடு, சமாதானத் தோடும், கொண்டாட்டத் தோடும் வாழ்ந்து பார். உனது பாலுறவு தருணங்களை தியானத்தன்மையுடன் வாழ்ந்துபார். அப்போது தியானமானது காமத்தை அன்பாக மாற்றிவிடும். காமம் மட்டும் அன்பாக மாறுவதோடு மட்டுமல்லாமல் ஒருநாள் அது பிரார்த்தனையாகவும், வழிபாடாகவும் ஆகிவிடுகிறது. அது

உயர உயர போகிறது. மிக உயர்ந்த வடிவம் பிரார்த்தனை, மிகவும் கீழ்நிலையில் உள்ள வடிவம் காமம். இரண்டுக்கும் இடையே அன்பு இருக்கிறது. அன்பு தான் பாலம். காமகமனம் என்பத சாதாரண மில்லாதது, அது நோயுற்றது. அது சுகவீனம். எனவே கீழைநாட்டு மக்களைப் போன்றோ அல்லது மேலை நாட்டு மக்களைப் போன்றோ நீ நோயுற்று இருப்பதற்கான பாதையை தேர்வு செய்கிறாயா என்பது ஒரு பொருட்டாகாது.

உனது வாழ்க்கை எப்படி உள்ளதோ அதை அப்படியே ஏற்றுக் கொள், உனது ஏற்றுக் கொள்ளுதல் எந்த அளவுக்கு முழுமையாக இருக்க முடியுமோ அந்த அளவுக்கு முழுமையாக இருக்கட்டும். நீ உன்னோடு சண்டை போடாமல் இருக்கும் போது உனது சக்தியானது ஒரு மெல்லிய ஒத்திசைவில் வீழ்ந்து விடுகிறது. அந்த ஒத்திசைவு உனக்கு அன்பைக் கொண்டு வருகிறது. மேலும் அந்த ஒத்திசைவானது மேலும் மேலும் நேர்த்தியானதாக ஆகிவிடும் போது, அது உனக்கு பிரார்த் தனையைக் கொண்டு வருகிறது.

காமம் என்பது பிரார்த்தனையாக ஆகாத வரையில், உனது இலக்கானது அடையப்படவில்லை என்பதை நினைவில் கொள்.

***மூன்றாம் கேள்வி:***

***ஓஷோ,***

***மனிதன் ஒரு இயந்திரம் என்று சூ∴பிக்கள் என் கூறுகிறார்கள்?***

மனிதன் ஒரு இயந்திரமாக இருப்பதால் அப்படிக் கூறுகிறார்கள். மனிதன் இப்போது இருக்கிற நிலையில் முற்றிலும் தன்னுணர்வு இழந்த நிலையில் இருக்கிறான். அவனது பழக்கவழக்கங்கள் தவிர வேறு எதுவாகவும் அவன் இல்லை. அவனது பழக்கவழக்கங்களின் ஒட்டுமொத்த எண்ணிக்கையாக அவன் இருக்கிறான். மனிதன் ஒரு எந்திரன், மனிதன் இன்னமும் மனிதனாக இல்லை. உனது ஆன்மாவிற்குள் தன்னுணர்வானது நுழையாத வரையில் நீ ஒரு இயந்திரம் போன்று தான் இருப்பாய்.

அதனால் தான் மனிதன் ஒரு இயந்திரம் என்று சூஃபிக்கள் கூறுகின்றனர். மனிதன் ஒரு இயந்திரம் என்பதை சூஃபிக்களிடம் இருந்து தான் குர்ட்ஜியஃப் மேலை நாடுகளுக்கு அறிமுகம் செய்து வைத்தார். நீ தன்னுணர்வுடன் இருப்பது மிகவும் அபூர்வமானது. உனது எழுபது வருட வாழ்வினில், உள்ளேயும், வெளியேயும் ஆரோக்கியமாகவும், முழுமையாகவும், வளர்ச்சி என்பதன் வலி அறியாமல், மிளிரும் அழகுடைய ஒரு முத்தானது உனக்குள் வளர்கின்ற வேதனை எதுவும் இல்லாமல், சாதாரண வாழ்க்கையை நீ வாழ்ந்தால், அதன் பிறகு உனது எழுபது வருட வாழ்வில் ஒரு நொடிப்பொழுதுகள் கூட நீ விழிப்புணர்வுடன் இருந்திருக்க மாட்டாய். மேலும் அப்படி ஏழு அல்லது குறைவான நொடிப்பொழுதுகளை நீ அறிந்து கொண்டால், அவை எதிர் பாராமல் நடந்து விபத்து போன்றதாக மட்டுமே இருந்திருக்கும்.

உதாரணமாக யாராவது ஒருவர் திடீரென்று வந்து உனது இதயத்தின் மீது கைத்துப்பாக்கியை வைத்தால் அந்த நொடிப் பொழுதில் நீ விழிப்புணர்வை அறிந்திருப்பாய். அந்த நொடிப் பொழுதில் உனது சிந்தனை, பழக்கப்பட்ட சிந்தனை நின்று விடுகிறது. அந்த தருணத்தில் நீ விழிப்புணர்வை உணர்கிறாய் ஏனெனில் அது அந்த அளவுக்கு ஆபத்தான தருணம், நீ சாதாரணமாக தூக்கத்தில் இருக்க முடியாது. சில ஆபத்தான சூழ்நிலைகளில் நீ விழிப்புணர்வு கொள்கிறாய், மற்றபடி நீ ஆழ்ந்து உறங்கிக் கொண்டு இருக்கிறாய். இயந்திரத்தனமாக உனது வேலைகளைச் செய்வதில் நீ முற்றிலும் திறமை நிறைந்தவனாக இருக்கிறாய்.

சாலையின் ஓரத்தில் நின்று கொண்டு மக்களைக் கவனித்துப் பார், அப்போது அவர்கள் தங்களின் தூக்கத்தில் நடந்து செல்வதை உன்னால் பார்க்க முடியும். அவர்கள் அனைவரும் தூக்கத்தில் நடப்பவர்கள் எனவே நீயும் அப்படித்தான் இருக்கிறாய்.

பக்கத்து வீட்டில் கொலை செய்ததற்காக இரண்டு சோம்பேறிகள் கைது செய்யப்பட்டு குற்றம் சுமத்தப்பட்டனர். அவர்கள் குற்றவாளிகள் என்பதைக் கண்டு கொண்ட நீதிபதி

அவர்கள் சாகும் வரை தூக்கில் போடும் படி தீர்ப்பளித்தார். ஆனால் கடவுள் அந்த ஆன்மாக்களின் மீது இரக்கம் காட்டினார்.

அவர்கள் இருவரும் சோம்பேறிகளாக சுற்றினர். அவர்களை தூக்கிலிடும் நாளும் வந்தது. அவர்களை தூக்கு மேடைக்கு தயார் செய்து கொண்டு இருக்கும் போது ஒருவன் மற்றவனிடம் திரும்பி, ''நான் என்னைத்தான் குறை கூற வேண்டும். நான் எனது எண்ணங்களை ஒன்று சேர்க்க முடியாமல் போய்விட்டேன். ஏன், இந்த நாள் வாரத்தின் எந்த நாள் என்று கூட எனக்கு தெரியாமல் போயிற்று'' என்றான்.

''இது ஒரு திங்கட்கிழமை'' என்றான் அடுத்த சோம்பேறி.

''திங்கட் கிழமையா? அட கடவுளே, இந்த வாரத்தை இப்படி அழுகல் நாற்றமடிக்கும் வழியிலா ஆரம்பிக்க வேண்டும்'' என்றான்.

வெறுமனே உன்னைக் கவனி. மரணத்தின் போதும் கூட மக்கள் தங்களின் பழைய பழக்கவழக்கத்தின் படி செல்கின்றனர். இப்போது அவர்களுக்கு வாரம் என்கிற ஒன்று இருக்கப் போவதில்லை; அவர்களை தூக்கில் போடக்கூடிய காலைப் பொழுது வந்துவிட்டது. ஆனால் வெறுமனே பழைய பழக்கம் அவர்களிடம் உள்ளது. இன்று திங்கட்கிழமை என்று யாரோ கூறியவுடன் நீ ''திங்கட்கிழமையா? அட கடவுளே! இந்த வாரத்தை இப்படி அழுகிய நாற்றமடிக்கும் வழியிலா ஆரம்பிக்க வேண்டும்!'' என்று கூறுகிறாய்.

மனிதன் எதிர் செயல் புரிகிறான். அதனால் தான் சூஃபிக்கள் மனிதன் ஒரு இயந்திரம் என்கின்றனர். நீ பதில் செயல் புரியாத வரையில், நீ பொறுப்புடன் இருக்காத வரையில் எதுவும் நடக்காது. எதிர் செயல் என்பது உனது பழைய பழக்க வழக்கத்தில் இருந்து வருகிறது, பதில் செயல் என்பது நிகழ்கால நொடிப் பொழுதில் இருந்து வருகிறது. பதில் செயல் தானாக நிகழ்வது, எதிர் செயல் வெறுமனே உனது பழைய பழக்க வழக்கம்.

வெறுமனே உன்னைக் கவனித்துப்பார். உனது மனைவி உன்னிடம் ஏதாவது சொல்கிறாள். அதன் பின்னர் நீ என்ன சொல்கிறாய் என்பதை கவனித்து அதை ஆழ்ந்து சிந்தித்துப்பார். அது வெறும் ஒரு எதிர்செயலாகவே இருக்கும். உனது செயல்களில் தொண்ணூற்றி ஒன்பது சதவீதம் செயல்கள் செயல்களே அல்ல என்பதைக் கண்டு நீ ஆச்சரியப்படுவாய் ஏனெனில் அவை பதில் செயல்கள் அல்ல, அவை வெறுமனே இயந்திரத் தனமானவை.

இது மீண்டும் மீண்டும் நடந்து கொண்டிருக்கிறது. நீ அதே விஷயங்களைத் தான் கூறுகிறாய் மேலும் உனது மனைவியும் அதே விதத்தில் தான் எதிர் செயல் செய்கிறாள். அதன்பின்னர் நீ அதற்கு எதிர் செயல் செய்கிறாய், எனவே அது மீண்டும் மீண்டும் அதே விஷயத்தில் முடிகிறது. உனக்கும் தெரியும், அவளுக்கும் தெரியும். எல்லாமே முன்கூட்டியே தீர்மானிக்கக் கூடியவை.

இது நான் கேள்விப்பட்டது.

பத்து வயது பையன் ஒருவன், ''அப்பா, போர்கள் எப்படி ஆரம்பிக்கின்றன?'' என்று கேட்டான்.

அதற்கு அப்பா, ''நல்லது மகனே, அமெரிக்கா இங்கிலாந்தோடு வாய்த் தகராறு செய்கிறது என்று வைத்துக் கொள்வோம்'' என்றார்.

உடனே தாயார், ''அமெரிக்கா இங்கிலாந்துடன் வாய்த் தகராறில் ஈடுபடவில்லை'' என்று குறிக்கிட்டாள்.

அதற்கு அப்பா, ''இல்லை என்று யார் சொன்னது? நான் நமது பையனுக்கு புரிய வேண்டும் என்பதற்காக ஒரு கற்பனை நிகழ்வை வெறுமனே கூறுகிறேன்'' என்றார்.

உடனே தாயார், ''முட்டாள்தனமானது, அதெல்லாம் கிடையாது. நீங்கள் கூறுவதை அவன் கேட்டால் அதன் பின்னர் அவனது மூளையில் வேறு எந்த எண்ணமும் ஒருபோதும் வராது'' என்றாள்.

இப்படியாக தட்டுகளை தூக்கி எறிகின்ற நிலை வந்த போது, அவர்களது மகன், நன்றி அம்மா, நன்றி அப்பா. போர்கள் எப்படி ஆரம்பிக்கின்றன என்று நான் மீண்டும் ஒருபோதும் கேட்க மாட்டேன். என்று கூறினான்.

வெறுமனே உன்னை கவனித்துப்பார். நீ செய்கிற விஷயங்களையே அநேக முறை நீ செய்து கொண்டிருக்கிறாய். நீ எப்படி எதிர் செயல் புரிகிறாயோ அப்படித்தான் எப்போதுமே எதிர் செயல் புரிகிறாய். ஒரே விதமான சூழ்நிலையில் நீ எப்போதும் ஒரே விதமான விஷயங்களையே செய்கிறாய். உனக்குள் கலவர உணர்வு ஏற்படம் போது நீ சிகரெட்டை எடுத்து புகை பிடிக்க ஆரம்பிக்கிறாய். இது ஒரு எதிர் செயல், நீ கலவரம் அடையும் போதெல்லாம் நீ அப்படி செய்திருக்கிறாய்.

நீ ஒரு இயந்திரம். இப்போது அது உன்னுள் ஏற்கனவே திட்டமிட்டு உண்டாக்கப்பட்ட ஒன்றாக உள்ளது. நீ கலவர உணர்வு கொள்ளும் போது உனது கைகள் உனது சட்டைப் பைக்குள் செய்கிறது அப்போது சிகரெட் பாக்கெட் வெளியே வருகிறது. இது கிட்டத்தட்ட ஒரு இயந்திரம் தனது காரியங்களைச் செய்வது போன்று இருக்கிறது. நீ சிகரெட்டை வெளியே எடுக்கிறாய், சிகரெட்டை வாயில் வைக்கிறாய், சிகரெட்டை பற்ற வைக்கிறாய், இப்படி இவை எல்லாம் இயந்திரத் தனமாக நடந்து கொண்டு இருக்கின்றன. பல லட்சம் தடவை இப்படி செய்தாகி விட்டது, எனவே நீ மீண்டும் செய்கிறாய்.

மேலும் ஒவ்வொரு முறை நீ இதைச் செய்யும் போதும், அது மேலும் வலுப்பெறுகிறது. இயந்திரம் மேலும் அதிக இயந்திரமயமாகிறது. அந்த இயந்திரம் அதிக திறமை மிக்கதாக ஆகிறது. நீ அதிகம் செய்யும் போது, அதைச் செய்வதற்கு குறைந்த விழிப்புணர்வே தேவைப்படுகிறது. அதனால்தான் மனிதன் ஒரு இயந்திரமாக இருக்கிறான் என்று சூஃபிக்கள் கூறுகின்றனர். நீ இப்படிப்பட்ட இயந்திரத் தனமான பழக்கங்களை அழிக்காவிட்டால் உன்னால் விழிப்புணர்வுடன் இருக்க முடியாது.

இதை அழிப்பதற்கு சூஃபிக்கள் அநேக செய்முறைகளை வைத்திருந்தனர். உதாரணமாக அவர்கள் அநேக உபாயங்களை கற்பிக்கின்றனர். ''நீ எப்போதும் என்ன செய்து வந்தாயோ அதற்கு நேர் எதிரான ஒன்றை செய்'' என்று அவர்கள் கூறுகின்றனர்.

இதை முயற்சி செய்து பார். நீ வீட்டிற்கு வருகிறாய், நீ பயத்தில் இருக்கிறாய், வழக்கம் போல நீ தாமதமாக வீட்டிற்கு வந்து விட்டாய் அப்போது உனது மனைவி உன்னோடு சண்டை போட அங்கு தயாராக இருப்பாள். அலுவலகத்தில் அதிக வேலை, அது, இது என்று ஏதாவது சொல்வதற்கு நீ திட்டமிடு வாய். ஆனால் நீ என்ன திட்டம் போடுகிறாய் என்பது எல்லாம் அவளுக்குத் தெரியும். அவள் கேட்டால் நீ என்ன சொல்லப் போகிறாய் என்பதும் கூட அவளுக்குத் தெரியும். மேலும் அலுவலகத்தில் அதிக வேலை இருந்தால் தாமதமாகி விட்டது என்று நீ கூறினாலும் அதை அவள் நம்பப்போவதும் கூட கிடை யாது. அவள் அதை ஒருபோதும் நம்பவில்லை. அவள் ஏற் கனவே அதை சோதித்து பார்த்திருப்பாள், அவள் அலுவலகத் திற்கு தொலைபேசியில் பேசி இருப்பாள் நீ எங்கு இருக்கிறாய் என்று அவள் ஏற்கனவே விசாரித்து இருப்பாள். ஆனால் இன்னமும் கூட இது தான் வெறும் நடைமுறையாக உள்ளது.

''இன்று வீட்;டிற்கு சென்று முற்றிலும் வித்தியாசமான விதத்தில் நடந்து கொள்'' என்று சூஃபிக்கள் கூறுகின்றனர். உனது மனைவி உன்னிடம், ''நீங்கள் எங்கு போயிருந்தீர்கள்?'' என்று கேட்கிறாள். அப்போது நீ '' நான் ஒரு பெண்ணோடு காதலித்து கொண்டு இருந்தேன்'' என்று கூறு. அப்போது என்ன நடக்கிறது என்று பார். அவள் அதிர்ச்சி அடைந்து விடுவாள்! அவளுக்கு என்ன சொல்வது, என்ன பேசுவது என்று கூட தெரியாமல் போய்விடும். ஒரு நொடிப் பொழுது அவள் முற்றிலும் திணறிவிடுவாள் ஏனெனில் எந்த ஒரு எதிர் செயலும், எந்த ஒரு பழைய நடைமுறையும் இப்போது சரிப்படாது.

அல்லது அவள் அதிக இயந்திரத்தனமாக ஆகிவிட்டால், ''நான் நீங்கள் சொல்வதை நம்பவில்லை'' என்று அவள் கூறலாம்.

எப்போதுமே உன்னை நம்பாதது போல் அவள் கூறலாம். ''நீங்கள் சொல்வது சிரிப்பாக இருக்கிறது. ஒவ்வொரு நாளும் நீங்கள் வீட்டிற்கு தாமதமாகத் தான் வருகிறார்கள்.'' என்றும் கூறலாம்.

இதுவும் நான் கேள்விப்பட்டது. மனநல மருத்துவர் ஒருவர் தனது நோயாளியிடம் அறிவுரை கூறிக் கொண்டிருந்தார் ஏனெனில் அந்த நோயாளி மீண்டும் மீண்டும் அவரிடம், ''வீட்டிற்கு போவதற்கு எனக்கு எப்போதும் பயமாக இருக்கிறது. எனது மனைவி எப்போதும் மிகவும் துன்பத்தில், மிகவும் சோகத்தில், எப்போதும் கவலையில் இருப்பதால் எனது இதயம் மூழ்க ஆரம்பித்து விடுகிறது. நான் வீட்டில் இருந்து தப்பித்து ஓட விரும்புகிறேன்'' என்று கூறினார்.

உடனே மனநல மருத்துவர் அவரிடம், ''ஏதாவது செய்யுங்கள். ஒருவேளை நீங்கள் தான் அதற்கு காரணமாக இருக்கலாம். ஏதாவது செய்யுங்கள் இன்று பூக்களும், இனிப்பும், ஐஸ்கிரீமும் வாங்கிக் கொண்டு செல்லுங்கள், மேலும் அவள் கதவைத் திறந்த உடன் அவளைக் கட்டி அனைத்து அவளுக்கு ஒரு முத்தம் கொடுங்கள். மேலும் உடனே அவளுக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்ய ஆரம்பியுங்கள், மேஜையில் சுத்தம் செய்யுங்கள், பாத்திரம் மற்றும் தரையை சுத்தம் செய்யுங்கள். இதற்கு முன்பு நீங்கள் செய்திராத முற்றிலும் புதிதான ஒன்றை செய்யுங்கள்'' என்று கூறினார்.

அந்த யோசனை அவனுக்கு பிடித்திருந்ததால் அவன் அதை முயற்சி செய்தான். அவன் வீட்டிற்கு சென்றான். அவன் கதவைத் திறந்தவுடன் அவள் தனது கணவன் பூக்கள், இனிப்பு மற்றும் ஐஸ்கிரீம் ஆகியவற்றோடு, எப்போதுமே சிரிக்காத அந்த மனிதர் முகத்தில் புன்சிரிப்புடன் அவளைக் கட்டி அணைத்தார். என்ன நடக்கிறது என்பதை அவளால் நம்புவதற்கு முடியவில்லை. அவர் முழு அதிர்ச்சி அடைந்தாள்; அவளால் தனது கண்களை நம்புவதற்கு முடியவில்லை. இது ஒருவேளை வேறு யாராகவும் இருக்கலாம் என்று நினைத்து அவள் மீண்டும் கணவனைப் பார்த்தாள்.

அவளுக்கு முத்தம் கொடுத்து விட்டு அவன் மேஜையைச் சுத்தம் செய்தான், அதன் பின்னர் அவன் பாத்திரங்களை எல்லாம் கழுவி சுத்தம் செய்தான். அதைப் பார்த்தவுடன் அவளது மனைவி கதறி அழ ஆரம்பித்து விட்டாள். அவன் திரும்பி வந்து அவளிடம், ''நீ ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டான்.

உடனே அவள், ''உங்களுக்கு பைத்தியம் பிடித்து விட்டதா? நீங்கள் இப்படி ஒரு நாள் இல்லை மறுநாள் இப்படி பைத்தியக்காரர் ஆகிவிடுவீர்கள் என்று நான் சந்தேகத்துடன் இருந்தேன். இப்போது அது நடந்து விட்டது. நீங்கள் போய் ஒரு மனநல மருத்துவரை ஏன் பார்க்கக் கூடாது?'' என்று கேட்டாள்.

சூஃபிக்கள் இப்படிப்பட்ட உபாயங்களை வைத்திருந்தனர். ''முழுமையாக, வித்தியாசமாக செயல்புரியுங்கள் அப்போது மற்றவர்கள் ஆச்சரியப்படுவதோடு மட்டுமல்லாமல், நீங்களும் கூட ஆச்சரியப்படுவீர்கள்'' என்று அவர்கள் கூறுகின்றார்கள். மேலும் இவை வெறுமனே சிறிய விஷயங்கள். உதாரணமாக உங்களுக்கு பயம் வரும் போது நீங்கள் வேகமாக நடக்கிறீர்கள். வேகமாக நடக்காதீர்கள், மிகவும் மெதுவாகச் சென்று என்ன நடக்கிறது என்று பாருங்கள். அது பொருத்த மில்லாமல் இருப்பதைக் கண்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள், உடனடியாக உங்களது ஒட்டு மொத்த இயந்திர மயமான மனதும், ''நீ என்ன செய்கிறாய்? இதைப் போன்று நீ ஒருபோதும் செய்தது கிடையாது!'' என்று கூறுகிறது. மேலும் நீங்கள் மெதுவாக நடந்து சென்றால் நீங்கள் ஆச்சரியப்படும் விதமாக உங்களது பயம் மறைந்து போகிறது ஏனெனில் நீங்கள் புதிதாக ஒன்றை கொண்டு வந்து விட்டீர்கள்.

இவை விபாசனா, சாஜென் ஆகிய வழிமுறைகள். நீ அதற்குள் ஆழ்ந்து சென்றால் அவற்றின் அடிப்படை ஒரே மாதிரி இருக்கும். நீ விபாசனா தியானத்தின் முடிவில் தியானத்துடன் நடக்கும் போது நீ எப்போதும் நடக்காத அளவுக்கு இப்போது மிகமிக மெதுவாக நடக்க வேண்டும். ஏதோ புதிதாக நடப்பது போன்று நடக்க வேண்டாம். இந்த ஒட்டு மொத்த உணர்வும்,

புதியதாக இருப்பதால் எதிர் செயல் புரிகின்ற மனதினால் செயலாற்றமுடியாது. அதனால் செயல்புரியமுடியாது ஏனெனில் அதற்குள் அதற்கான திட்டமிடல் ஏற்கனவே பதிவு செய்யப்பட வில்லை. அது வெறுமனே வேலை செய்வதை நிறுத்தி விடுகிறது.

அதனால் தான் விபாசான தியானத்தில் சுவாசத்தை நீ கவனிக்கும் போது அதிக அமைதியை உணர்கிறாய். நீ எப்போதுமே சுவாசித்துக் கொண்டு இருக்கிறாய் ஆனால் நீ அதை ஒருபோதும் கவனித்தது கிடையாது. இது ஏதோ புதுமையான ஒன்றாக உள்ளது. நீ அமைதியாக அமர்ந்து கொண்டு உனது அசுவாசத்தை, உள்ளே வருவதையும், வெளியே போவதையும், உள்ளே வருவதையும் வெளியே போவதையும் கவனித்துக் கொண்டே இருக்கிறாய். நீ என்ன செய்து கொண்டு இருக்கிறாய்? என்று உனது மனம் ஆச்சரியப்படுகிறது. ஏனெனில் நீ ஒருபோதும் இதைச் செய்ததில்லை. இது அந்த அளவுக்கு புதிதான ஒன்றாக இருப்பதால் மனமானது இதற்கு உடனடியாக ஒரு எதிர்ச் செயலை செய்ய முடிவதில்லை. அதனால் தான் அது அமைதியாகி விடுகிறது.

அடிப்படை ஒன்றுதான். சூஃபி, அல்லது பௌத்தம் அல்லது இந்து அல்லது முகமதியம், இதில் எது என்பது கேள்வி அல்ல, நீ தியானத்தின் அடிப்படைக்குள் சென்று பார்த்தால், அதில் முக்கியமான விஷயம் ஒன்றாகத் தான் இருக்கும். இயந்திரம் போன்று தானே இயங்குவதில் இருந்து உன்னை எப்படி வெளியே கொண்டு வருவது என்பதுதான் அந்த முக்கிய விஷயமாகும்.

குர்ட்ஜியப் தனது சீடர்களுக்கு மிகவும் இயல்புக்கு மீறிய, நம்பத்தகாத விஷயங்களை செய்வது வழக்கம். எப்போதும் சைவ உணவையே சாப்பிடுகின்ற ஒருவர் வந்தால், அவர், ''மாமிசம் சாப்பிடு'' என்று அவரிடம் கூறுவார். இப்போது இது அதே மாதிரியான அடிப்படை தான். இந்த மனிதர் தனக்கே உரித்தான வழியில் கொஞ்சம் அதிகப்படியாக நடந்து கொள்கிறார். கொஞ்சம் திடசித்தமில்லாதவர். அவர், ''மாமிசம் சாப்பிடு'' என்று கூறுகிறார். இப்போது ஒரு சைவன் மாமிசம் சாப்பிடுவதைக்

கவனி. இப்போது அவனது முழு உடலும் அதை வெளியே தள்ளுவதற்கு விரும்புகிறது மேலும் அவன் வாந்தி எடுப்பதற்கு விரும்புகிறான். அப்போது அவனது முழுமனதும் ஆச்சரியமும் கலக்கமும் அடைகிறது. எனவே அவனுக்கு வியர்த்து கொட்டு கிறது ஏனெனில் அவனது மனதினால் அதைச் சகித்துக் கொள்ள முடியவில்லை.

அதைத்தான் குர்ட்ஜியம் பார்ப்பதற்கு விரும்பினார். ஒரு புதிய சூழ்நிலைக்கு எதிர் செயல் புரிவது எப்படி? ஒருபோதும் மதுபானம் அருந்தாத ஒருவரிடம் குர்ட்ஜியம், '' குடி, உன்னால் எவ்வளவு குடிக்க முடியுமோ அவ்வளவுகுடி'' என்று கூறுவார்.

எப்போதும் மதுபானம் குடிக்கக் கூடிய ஒருவனிடம் குர்ட்ஜியப், ''ஒரு மாதம் முற்றிலும் நிறுத்திவிடு,'' என்று கூறுவார். மனதிற்கு புதிதான ஒரு சூழ்நிலையை அவர் உருவாக்குவதால் மனமானது வெறுமனே அமைதியில் ஆழ்ந்து விடுகிறது, அதற்கு மனதிடம் எந்த ஒரு பதிலும் கிடையாது. அதற்கு ஏற்கனவே தயார் செய்யப்பட்ட பதில்கள் மனதிடம் கிடையாது.

மனமானது கிளிப்பிள்ளையின் வழியில் செயல் புரிகிறது. அதனால் தான் ஜென் குருமார்கள் சிலசமயம் சீடர்களை அடிப்பார்கள். அதுவும் கூட மீண்டும் அதே அடிப்படையத்தான் கொண்டுள்ளது. இப்போது நீ ஒரு குருவிடம் போகும் போது ஒரு புத்தர் உன்னை அடிப்பார் என்று நீ எதிர்பார்க்க மாட்டாய் அல்லது எதிர் பார்ப்பாயா? நீ ஒரு புத்தரிடம் போகும் போது அவர் கருணையுடனும் அன்புடனும் இருப்பார், மேலும் அவர் தனது கைகளை உனது தலை மீது வைப்பார் என்று எதிர்பார்த்துக் கொண்டு தான் செல்வாய். ஆனால் இந்தபுத்தர் உனக்கு ஒரு அடி கொடுக்கிறார். தனது கைத்தடியை எடுத்து பலமாக உனது தலையில் அடிக்கிறார். இப்போது இது உனக்கு அதிர்ச்சியாக இருக்கும். ஒரு புத்தர் நம்மை அடிப்பதா? ஒரு நொடிப் பொழுது மனம் நிற்கிறது. அதற்கு வழி கிடையாது. என்ன செய்வது என்கிற யோசனை கிடையாது. அது செயல் புரிவதில்லை. ஆனால் மனம் அப்படி வேலை செய்யாமல் இருப்பது தான்

ஆரம்பம். சில சமயம் குருவானவர் இப்படி முட்டாள்தனமாக எதையாவது வெறுமனே செய்த காரணத்தினால் ஒருவர் மெய்ஞ்ஞானியாக ஆகி இருக்கிறார்.

மக்களிடம் எதிர்பார்ப்புகள் உள்ளது. மக்கள் எதிர்பார்ப்பு களின் மூலம் வாழ்கின்றனர். எந்த விதமான எதிர்பார்ப்பு களுக்கும் குருமார்கள் பொருந்திப் போக மாட்டார்கள் என்பதை அவர்கள் அறிவதில்லை.

இந்தியாவானது கிருஷ்ணர், ராமர் போன்ற மக்களைப் பற்றி பழக்கப்பட்டு விட்டது. அதன் பின்னர் மகாவீரர் வந்தார். அவர் ஆடைகள் இல்லாமல் நிர்வாணமாக இருந்தார். கிருஷ்ணர் நிர்வாணமாக நிற்பதை உன்னால் கற்பனை செய்து பார்க்க முடியாது. அவர் எப்போது அழகான ஆடைகளையே அணிந்து வந்தார். மிகவும் அழகான மனிதர்களில் அவர் ஒருவராவார். தங்கம் மற்றும் வைரத்தினால் ஆன ஆபரணங்களை அவர் அணிவது வழக்கம். ஆனால் அதன் பிறகு திடீரென்று மகாவீரர் வருகிறார். நிர்வாணமாக இருப்பதன் மூலம் மகாவீரர் என்ன அர்த்தத்தை கூறினார்? அவர் ஒட்டு மொத்த நாட்டையும் அதிர்ச்சிக் குள்ளாக்கினார், அந்த அதிர்ச்சியில் அநேக மக்களுக்கு அவர் உதவினார்.

எப்படி அதிர்ச்சி அளிப்பது என்று ஒவ்வொரு குருவும் முடிவு செய்ய வேண்டும். இப்போது, இந்தியாவில் பல நூற்றாண்டுகளாக என்னைப் போன்ற ஒரு மனிதனை அவர்கள் அறிந்திருக்கவில்லை. ஆகவே நான் என்ன செய்தாலும், நான் என்ன சொன்னாலும் அது அதிர்ச்சியானதாக உள்ளது. இந்த ஒட்டு மொத்த நாடும் அதிர்ச்சிக்குள்ளாகிறது, இந்த நாட்டின் முதுகெலும்பில் ஒரு பெரிய நடுக்கம் ஓடுகிறது. இதை நான் உண்மையிலேயே சந்தோஷமாக அனுபவிக்கிறேன் ஏனெனில் அவர்களால் சிந்திக்க முடியாது.

எனக்கு இப்போது ஒரு கடிதம் வந்தது. அதில் ''நீங்கள் எப்போதும் அரசியலுக்கு அப்பாற்பட்டவர் என்று நாங்கள் நினைத்தோம். அப்படி இருக்கும் போது நீங்கள் ஏன் அரசியல்

பற்றி பேச ஆரம்பிக்கிறீர்கள்?'' என்று கேட்டிருக்கிறார்கள். அதனால் தான் நான் பேசுகிறேன். நான் அதற்கு அப்பாற்பட்ட வன் என்பதால் தான் பேசுகிறேன். வேறு யார் அதைபற்றி பேசமுடியும்? அரசியலில் இருப்பவர்கள் அதைப்பற்றி பேசமுடியாது. அவர்கள் கட்சி சார்புடையவர்கள்.

மலையின் உச்சியில் இருக்கின்ற ஒருவர் கீழே உள்ள பள்ளத்தாக்கினை நன்றாக பார்க்கமுடியும். சிறகடித்து உயரத்தில் பறக்கின்ற ஒரு பறவையானது பூமியில் நடப்பது எல்லாவற் றையும் பார்க்கமுடியும். அவரிடம் அதிக தொலைநோக்கு, அதிக பார்வை இருக்கிறது. என்றால் மிகவும் சிறந்த முறையில் பார்க்க முடியும். ஏனெனில் நான் ஒருபோதும் பள்ளத்தாக்கின் ஒரு பகுதியாக இல்லை.' பள்ளத்தாக்கில் என்ன நடக்கிறது என்பதை என்னால் பார்க்க முடியும், புது டெல்லியில் என்ன நடக்கிறது என்பதை என்னால் பார்க்க முடியும். ஏனெனில் நான் அதற்கு மேல் எழுந்து நிற்பவன். ஆனால் இந்திய மனமானது பழக்கப்பட்ட எதிர்பார்ப்புகளை கொண்டுள்ளது. ஒரு துறவி அரசியல் பற்றி பேசுவது வழக்கமல்ல. ஆனால் ஒரு துறவி உண்மையில் யாருடைய எதிர்பார்ப்புகளையும் ஒருபோதும் பின்பற்றுவதில்லை.

உனது எதிர்பார்ப்புகளை நிறைவேற்றுவதற்காக நான் இங்கு இல்லை. உனது எதிர்பார்ப்புகளை நான் நிறைவேற்றி னால், உன்னை என்னால் ஒருபோதும் மாற்றமுடியாது. உனது எதிர்பார்ப்புகளை எல்லாம் அழிப்பதற்காகவே நான் இங்கு இருக்கிறேன், உனக்கு அதிர்ச்சி அளிப்பதற்கே நான் இங்கு இருக்கிறேன் அதை உன்னால் நினைத்துப் பார்க்க முடியாது மேலும் அந்த சந்தர்ப்பத்தில் தான் புதிதான ஏதோ ஒன்று உனக்குள் நுழைய முடியும்.

எனவே இந்தியர்கள் சொல்லக் கூடாது என்று நினைக்கின்ற சில விஷயங்களை அவ்வப்போது நான் கூறுகிறேன். ஆனால் நான் எதைச் சொல்ல வேண்டும் மேலும் எதைச் சொல்லக் கூடாது என்று முடிவு செய்வதற்கு நீ யார்? மேலும், இயல்பாகவே,

அவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு எதிராக ஏதாவது ஒன்று நடந்துவிட்டால், அவர்கள் உடனடியாக அவர்களின் சொந்த கட்டுத்திட்டங்களுக்கு தக்கபடி எதிர் செயல் புரிகின்றனர். அப்படி தங்களது பழைய கட்டுத்திட்டங்களுக்கு தக்கபடி எதிர் செயல் புரிபவர்கள் ஒட்டு மொத்த விஷயத்தையும் தவறவிட்டு விடுகிறார்கள். பழைய கட்டுத்திட்டங்களுக்கு தக்கபடி எதிர் செயல் புரியாதவர்கள் அமைதியாக இருந்து விடுகிறார்கள், அவர்கள் ஒரு புதிய வெளிக்குள் வந்து விடுகிறார்கள்.

நான் எனது சீடர்களிடம் பேசிக்கொண்டு இருக்கிறேன். இப்படி அல்லது அப்படி நான் அவர்களை தாக்குவதற்கு முயற்சிக்கவில்லை. இது எல்லாம் வெளிப்படையானது. நான் மொராய்ஜி தேசாய் பற்றி விமர்சனம் செய்யும் போது அது மொராய்ஜி தேசாய் குறித்து தான் அதிகம் இருக்கும் ஏனெனில் ஒவ்வொருவரும் ஒரு அரசியல் வாதியை உள்ளுக்குள் வைத்திருக்கிறீர்கள். மொரார்ஜி தேசாயை தாக்கும் போது உனக்குள் உள்ள மொராய்ஜி தேசாயைத் தாக்குகிறேன், உனக்குள் உள்ள அரசியல் வாதியைத் தாக்குகிறேன்.

ஒவ்வொருவரும் ஒரு அரசியல்வாதியை வைத்திருக்கிறோம். அரசியல்வாதி என்றால் ஆதிக்கம் செலுத்துவதற்கான ஆசை, முதல் ஆளாக இருக்க வேண்டும் என்ற ஆசை என்று அர்த்தமாகும். அரசியல்வாதி என்றால் லட்சியம், லட்சிய மனம் என்று அர்த்தம். எனவே நான் மொரார்ஜி தேசாயை தாக்கிப் பேசும் போது, நீ உனக்குள் தாக்கப்பட்டு, "இந்த மனிதர் உண்மையில் மெய்ஞ்ஞானி அல்ல, அப்படி இருந்தால் இவர் ஏன் இப்படி மொரார்ஜி தேசாயை தக்க வேண்டும்" என்று நினைக்க ஆரம்பிக்கிறாய். நீ வெறுமனே பகுத்தறிகிறாய். உனக்கும் மொரார்ஜி தேசாயைத்தான் காப்பாற்றுகிறாய், உனக்குள் உள்ள உனது சொந்த அரசியல்வாதியைத்தான் காப்பாற்ற முயற்சி செய்கிறாய். மொரார்ஜி தேசாய்க்கும் எனக்கும் எந்த சம்பந்தமும் கிடையாது. அந்த அப்பாவி மொராய்ஜி தேசாய்க்கு நான் என்ன செய்ய முடியும்? ஆனால் உனக்குள் உள்ள அரசியல்வாதியோடு நான் எல்லாவற்றையும் செய்தாக வேண்டும்.

ஸூஃபிக்கள் மனிதனை ஒரு இயந்திரம் என்கின்றனர் ஏனெனில் அவன் அவனுக்குள் ஏற்கனவே உள்ளீடு செய்யப்பட்டுள்ள திட்டங்களுக்கு தக்கபடி மட்டுமே எதிர் செயல் புரிகிறான். நீ பொறுப்புடன் பதில் செயல் செய்வதற்கு அரம்பி அதன் பின்னர் நீ ஒரு இயந்திரம் அல்ல. மேலும் நீ ஒரு இயந்திரமாக இல்லாத போது ஒரு மனிதனாக இருக்கிறாய். அதன் பின்னர் மனிதன் பிறக்கிறான்.

கவனி, உஷாராக ஆகிவிடு, உற்றுநோக்கு. மேலும் உனக்குள் உள்ள உதிர்செயல் நடைமுறைகளை எல்லாம் கைவிட்டு விடு. ஒவ்வொரு நொடிப் பொழுதும் உண்மை நிலைக்கு பதில் செயல் செய். உனக்குள் ஏற்கனவே தயாராக உள்ள யோசனைக்கு தக்கபடி அல்ல. ஆனால் வெளியில் உள்ள உண்மை நிலையானது எப்படி உள்ளதோ அதற்கு தக்கபடி பதில் செயல் செய். உண்மை நிலைக்கு பதில் செயலாற்று. உனது முழு தன்னுணர்வோடும் பதில் செயலாற்று. ஆனால் உனது மனதின் மூலம் எதிர் செயல் புரியாதே.

நீ எதிர் செயல் புரியாமல், நீ தன்னியல்புடன் பதில் செயல் புரியும் போது செயல் என்பது பிறக்கிறது. செயல் அழகானது, எதிர் செயல் அசிங்கமானத. விழிப்புணர்வு உள்ள மனிதன் மட்டுமே செயல் புரிகிறான், விழிப்புணர்வு இல்லாத மனிதன் எதிர் செயல் புரிகிறான். செயல் என்பது விடுதலை அளிக்கிறது. எதிர் செயல் சில அடிமைச் சங்கிலிகளை உரு வாக்கிக் கொண்டே போகிறது. அது அவற்றை தடிமனாகவும், கடினமானதாகவும், பலமானதாகவும் ஆக்கிக் கொண்டே போகிறது.

பதில் செயல் புரிகின்ற வாழ்க்கையை வாழ்ந்து பார், எதிர் செயல்புரிகின்ற வாழ்க்கையை அல்ல.

***நான்காம் கேள்வி:***

***ஓஷோ,***

***நான் மிகவும் பயங்கர அசிங்கமாக இருக்கிறேன், மேலும் அதனால் நான் மிகவும் அதிகம் கஷ்டப் பட்டு விட்டேன். நான் என்ன செய்ய வேண்டும்?***

ஓர் அரசியல்வாதி ஆகிவிடு!

முந்தைய தினம், லண்டன் தொழில் கல்லூரியின், லண்டன் ஆராய்ச்சியாளர் பள்ளியினர் நடத்திய ஆய்வு அறிக்கையை சுப்குதி எனக்கு அனுப்பி இருந்தார். அசிங்கமான மற்றும் முட்டாள்தனமாக தோன்றுகின்ற மக்கள் அதிகம் தேர்தலில் மனம் கவர்பவர்களாக இருப்பதாக அந்த ஆய்வ கூறுகிறது. அவர்கள் ஆராய்ச்சி செய்துள்ளனர். மேலும் இது மிகவும் விநோதமான ஆராய்ச்சி முடிவாகும். விநோதமானது ஆனால் உண்மையானது. அசிங்கமான மக்கள், முட்டாள் போன்று தோற்றமளிப்பவர்கள், புத்திசாலித்தனம் இல்லாதவர்கள் ஆசியவர்கள் தேர்தலில் மக்களின் மனம் கவர்பவர்களாக இருக்கின்றனர்.

இது ஏன்? ஏனெனில் மக்கள் கூட்டம் அவர்கள் தங்கள் இனத்தை சார்ந்தவர் என்று நினைக்கிறது. அவர்கள் மக்கள் கூட்டத்தை போன்று அதிகம் தோற்றமளிக்கின்றனர். அழகான மனிதர், புத்திசாலித்தனம் உள்ள மனிதர், உடனடியாக அதிகார வர்க்கத்தை சார்ந்தவர் என்று உணரப்படுகிறது. இயற்கையில் அவர் பெரும்பான்மைமக்கள் கூட்டம் போன்று இருப்பதில்லை. அவர் பொழுது போக்கும் வகுப்பைச் சார்ந்தவர் மக்கள் கூட்டம் அவரை எதிரியாக நினைக்கிறது.

இப்போது, நீ என்னிடம், ''நான் மிகவும் பயங்கர அசிங்கமாக இருக்கிறேன்...'' என்று கேட்கிறாய். அதைப் பயன் படுத்து. இது ஒரு மிகப்பெரிய வாய்ப்பு. ஒரு அரசியல் வாதி ஆகிவிடு. மேலும் குறிப்பாக இந்தியாவில் எல்லாவிதமான அசிங்கமான மக்களையும் நீ பார்க்க முடியும். புத்திசாலித் தனமான தோற்றம், அழகு, கொஞ்சம் கவர்ச்சி மற்றும் அருள் நிறைந்த ஒர அரசியல்வாதியைக் காண்பது மிகவும் அபூர்வ மாகும். அப்படியாரும் இல்லை, நீ எந்த அளவுக்கு அசிங்கமாக இருக்கிறாயோ அந்த அளவுக்கு நீ இந்த மக்கள் கூட்டத்தின் பிரதி நிதியாக ஆவதற்கு அதிக சாத்தியக் கூறுகள் இருக்கின்றன ஏனெனில் இந்த மக்கள் கூட்டம் உன்னிடம் சில தோற்ற ஒற்றுமை, ஒரு ஆழ்ந்த தோற்ற ஒற்றுமை, உள்ளதாக உணர்கிறது. நீ அவர்களைச் சார்ந்தவன், அவர்களும் உன்னைச் சார்ந்தவர்கள். நீ அவர்களில் ஒருவன்.

கடந்த தேர்தலில் இந்திரா காந்தி தோற்றதற்கு ஒருவேளை அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். அவரிடம் கவர்ச்சி உள்ளது. அவரிடம் கண்களுக்கு புலப்படாத அழகும் அருளும் உள்ளது. இந்தியாவில் அழகு மற்றும் அருளுடன் தோற்ற மளிக்கின்ற புத்திசாலியான அரசியல்வாதி அவர் மட்டுமே யாகும். மிகவும் அசிங்கமான மக்களால் அவர் தோற்கடிக்கப் பட்டார். ஆனால் இதுதான் அதற்கான மனரீதியான காரணமாக இருக்கலாம். அவள் அதிகாரவர்க்கத்தை சார்ந்தவர். லண்டன் தொழில் நுட்ப கல்லூரியில் நடந்த ஆய்வானது இந்தியாவில் நடந்த புரட்சிக்கு ஒரு நிரூபணமாக இருக்கலாம்.

அவரது தந்தை மிகவும் அழகான மனிதர், இந்த உலகத்தில் மிகவும் அழகான மனிதர்களில் அவரும் ஒருவர். அவர் அரசியலில் ஆதிக்கம் செலுத்தினார். அதன்பிறகு இந்திரா காந்தி வந்தார். அவர் அதிகார வர்க்கத்தை போன்று தோற்றமளித்தார். எனவே கொஞ்சம் கொஞ்சமாக மக்கள் கூட்டமானது இந்த தேசம் அவர்களால், அவர்களின் மக்களால் இன்னமும் ஆளப்பட வில்லை என்று உணர ஆரம்பித்தது. இப்போது அவர்கள் சுறுசுறுப்பற்ற, வயதான, அழுகல் வாடையுள்ள, சாந்தமான வர்களை தேர்ந்தெடுத்துள்ளனர். மேலும் அவர்களை ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக தேர்ந்தெடுத்துள்ளனர். அவர்கள் இந்த மக்கள் கூட்டத்தோடு முற்றிலும் பொருந்திப் போகிறார்க்ள. அவர்கள் மிகச்சரியாக இந்த மக்;கள் கூட்டத்தினரைப் போன்று உள்ளனர். ஆனால் இப்போது அவர்கள் இந்த நாட்டிற்கு உதவப் போவது கிடையாது ஏனெனில் புத்திசாலி மக்களால் மட்டுமே ஒரு நாடானது உதவி பெற முடியும்.

ஆனால், இந்த உலகில் அதிகம் சோசியலிஸம் பற்றி பேசப்படுவதால், உலக விவகாரங்களில் அதிக அதிகார வர்க்கத்தை சார்ந்த மக்கள் தங்களின் பிடியை இழந்து விட்டார்கள் என்பதையும் நினைவில் கொள். அவர்கள் உதவி இருக்க வேண்டும். அதிகார வர்க்கத்தில் பல வகைகள் உள்ளது என்பதை நினைவில் கொள். இது செல்வச் செழிப்பு மற்றும் பிறப்பு மட்டுமே சம்பந்தப்பட்ட கேள்வி அல்ல. உயர்ந்த அறிவு படைத்த

ஒருவர் புத்திசாலித்தனம் நிறைந்த அதிகார வர்க்கத்தை சார்ந்தவராக இருக்கிறார். ஆனால் எல்லாரும் சமம் என்றும் கருத்தானது பரப்பப்படும் போது உண்மையில் யாரும் சமமானவர்களாக இல்லை. இங்கு அறிவு குறைவான மக்கள் இருக்கிறார்கள் மேலும் உயர்ந்த அறிவுபடைத்த மக்களும் இருக் கிறார்கள். எனவே அவர்கள் சமமானவர்கள் அல்ல, மக்களைப் பொருத்தமட்டில் அவர்கள் தூர விலகி இருக்கிறார்கள்.

இங்கு அழகான மக்களும் இருக்கிறார்கள், அசிங்கமான மக்களும் இருக்கிறார்கள், இவை மீண்டும் அதிகார வர்க்கங்கள். மேலும் இந்த எண்ணம் பரவினால், அது உலகினுள் சென்று விடுகிறது.

அனைவரும் சமம் என்கிற கற்பனையை, கற்பனைகளில் மிகப் பெரிய ஒன்றினை மார்க்ஸ் உருவாக்கினார். மக்கள் சமமாக இல்லை. ஆனால் அந்த எண்ணம் பரவிவிட்டால் அதன்பின்னர் அங்கு மிகப் பெரிய பொறாமை இருந்தது. உங்களுக்கு மேல் யார் இருந்தாலும் அவர்கள் கீழே இழுக்கப்படவேண்டும், அவர் உங்களுக்கு சமமானவராக ஆக்கப்படவேண்டும். எல்லாரும் சமமானவராக இருக்க வேண்டும். மேலும் அவர்கள் சமமானவர் இல்லை என்றால் அவர்களும் கூட சமமானவர் ஆக்கப்பட வேண்டும்.

இந்த உலகமானது, கொஞ்சம் கொஞ்சமாக, மெதுவாக, மெதுவாக கீழ்நிலை புத்திசாலித்தனத்தினால் ஆதிக்கம் செலுத்தப்படுவதாக ஆகிக் கொண்டு இருக்கிறது. இது உலகம் முழுவதிலும் நடந்து கொண்டு இருக்கிறது. மேலும் கீழ்நிலை புத்திசாலித் தனத்தினால் பிரச்சினைகளைத்தீர்க்க முடியாது. கீழ்நிலை புத்திசாலித்தனமானது பிரச்சினைகளை தீர்க்கின்ற தகுதி இல்லாமல் இருக்கிறது. பிரச்சினைகளை அந்த அளவுக்கு பெரிய தாக இருக்கின்றன. அவற்றைத் தீர்ப்பதற்கு புத்திசாலித்தனம் தேவைப்படுகிறது. அவற்றைத் தீர்ப்பதற்கு மிகஉயர்ந்த புத்தி சாலித்தனம் தேவைப்படுகிறது. பிரச்சினைகள் மிகவும் சிக்கல் நிறைந்து இருக்கின்றன. மக்கள் சமமானவர்கள் என்கிற கேள்வியே இல்லை. இந்த உலகமானது புத்திசாலித்தனம்

நிறைந்த மக்கள் சொல்வதைக் கேட்கவேண்டும். ஒரு எதிர் காலத்தை உருவாக்க கூடிய, தொலை நோக்கு பார்வை கொண்ட மக்கள் சொல்வதை இந்த உலகம் கேட்க வேண்டும்.

ஆனால் யாராவது ஒருவர் ஒரு புதிய எதிர்காலத்தை உருவாக்க விரும்பினால், அது இந்த மக்கள் கூட்டத்தின் பழக்கங்களுக்கு எதிராக, அவர்களின் பழைய பாரம்பரியத்திற்கு எதிராக, அவர்களின் பழைய மூடநம்பிக்கைகளுக்கு எதிராக போய் விடுகிறது. ஆகவே அந்த மூடநம்பிக்கைகளையும், பாரம் பரியங்களையும் யார் ஒருவர் ஏற்றுக் கொள்ள தயாராக இருக்கிறாரோ அவர் மிகவும் அவலமாக ஆதிக்கம் செலுத்துகின்ற அரசியல்வாதியாக, அதிகாரம் படைத்தவராக ஆகி விடுவார்.

அப்படித்தான் இந்தியாவில் நடந்தது. அப்படித்தான் இந்த உலகம் முழுவதும் நடந்து கொண்டிருக்கிறது. மக்கள் கூட்டத்தின் மூட நம்பிக்கைகளை தங்களுக்குள் சுலபமாக ஏற்றுக் கொள் பவர்களும், இந்த மக்கள் கூட்டத்தை போன்று தோற்றமளிப் பவரும் அதிக அதிகாரம் படைத்தவர்கள் ஆகிவிடுவார்கள். ஆனால் அது மிகவும் ஆபத்தானது. ஆனால் அதுதான் மேலும் மேலும் அதிகமாக நடப்பது போல் தெரிகிறது எனவே இந்த உலகமானது ஒரு பேரழிவிற்கு நெருக்கமாக வந்து கொண்டு இருக்கிறது. புத்திசாலித்தனம் நிறைந்த மக்கள் கூறுவதைக் கேட்டால் மட்டுமே இதைத் தவிர்க்க முடியும்.

கொஞ்சம் அருள், தங்களுக்குள் கொஞ்சம் அமைதி, மனம் மற்ற நிலையின் சிறிது ருசி அறிந்தவர்கள் ஆகியவர்கள் கூறுவதை கேட்டால் இந்த உலகமானது காப்பாற்றப்படும், மனித இனம் காப்பாற்றப்படும், இல்லையெனில் அது காப்பாற்ற பட முடியாது. இது சமாளிப்பதற்கு மிகவும் கடினமான ஒரு பிரச்சினை ஏனெனில் அவர்கள் காது கொடுத்து கேட்க மாட்டார்கள். மக்கள் கூட்டம் அவர்களைத் தங்களுக்கு எதிரான வர்களாக உணரும்.

அங்குதான் இந்திரா சிக்கலில் மாட்டிக் கொண்டார். அவர் பிரச்சினைகளை தீர்ப்பதற்கு முயற்சித்தார். இந்த நாட்டின்

சூழ்நிலைகளில் தீவிரமான மாற்றத்தைக் கொண்டுவருவதற்கு அவர் துணிந்தார். ஆனால் அதன்பின்னர் அது மக்களுக்கு எதிரானதாகவும், மேலும் அவர்களின் பாரம்பரியம், அவர்களின் மூட நம்பிக்கை அகியவற்றிற்க எதிரானதாக சென்று விட்டது. மக்களின் பழைய மனதிற்கு அது அதிகமாக ஆகிவிட்டது. அவர்கள் இந்திராவிக்கு எதிராக கிளர்ந்து எழுந்தார்கள்.

நீ என்னிடம், '' நான் மிகவும் பயங்கரமாக அசிங்கமாக இருக்கிறேன், மேலும் அதனால் நான் மிகவும் அதிகம் கஷ்டப்பட்டு விட்டேன். நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்கிறாய். இதுவரை நான் என்ன கூறினேனோ அது வெறும் நகைச் சுவைக்காக மட்டுமே சொன்னேன். தயவு செய்து ஒரு அரசியல் வாதி ஆகிவிடாதே. அங்கு அசிங்கமான மக்கள் இருக்கின்றனர். அநேக அசிங்கமான மக்கள் உள்ளனர். அது போதும், நீ அவர்களைப் பற்றி கவலைப் பட வேண்டாம்.

''நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று நீ கேட்கிறாய். அசிங்கம் என்பதற்கும் உனது உடலுக்கும் சம்பந்தம் கிடையாது, மேலும் அழகு என்பதற்கும் உனது உடலுக்கும் கூட சம்பந்தம் கிடையாது. உடலின் அழகும் அசிங்கமும் மிகவும் மேற்பரப்பில் இருப்பவை, உண்மையான விஷயம் உனக்குள் இருந்து வருகிறது. நீ உனக்குள் அழகானவனாக ஆகிவிட்டால், நீ ஒளி வீசுபவனாக ஆகிவிடுவாய். அநேக முறை அது போன்று நடந்துள்ளது. ஒரு அசிங்கமான மனிதனும் கூட, அவன் தியானம் நிறைந்தவனாக ஆகி விடும் போது, மிகவும் அழகாகத் தோன்ற ஆரம்பிக்கிறான். இதை நான் வருடா வருடம் இடைவிடாமல் கவனித்து வந்திருக்கிறேன்.

மக்கள் இங்கு வரும் போது அவர்கள் முற்றிலும் வேறுபட்ட ஒரு முகத்தை பெற்றிருக்கின்றனர். அவர்கள் தியானம் செய்ய ஆரம்பித்த உடன், அவர்கள் நடனமாட ஆரம்பித்தவுடன், அவர்கள் பாட ஆரம்பித்தவுடன் அவர்களது முகங்கள் இளைப்பாறுதல் அடைகின்றன. அவர்களின் மன அழுத்தம் கைவிடப்படுகிறது. அவர்களின் துன்பம் அவர்களின் முகத்தின் ஒரு பகுதியாக ஆகிவிட்ட அந்த துன்பம் மெதுவாக, மெதுவாக

தேய்ந்து போகிறது. அவர்கள் குழந்தைகள் போன்று ஒய்வுடன் இருக்கின்றனர். ஒரு புதிய அக மகிழ்ச்சியினால் அவர்களின் முகம் பிரசாகமாகிறது. அவர்கள் ஒளி வீசுபவர்களாக ஆகிவிடு கிறார்கள்.

உடல் அழகும், அசிங்கமும் மிகவும் முக்கியமானது அல்ல, உண்மையான விஷயம் உனக்குள் உள்ளது. உள்ளுக்குள் இருந்து அழகாக இருப்பது எப்படி என்பதை நான் உனக்கு கற்றுக் கொடுக்க முடியும். மேலும் அதுதான் உண்மையான அழகாகும். அது அங்கு வந்துவிட்டால், உனது உடலின் வடிவம் அதிகம் கவலைதராது. உனது கண்கள் மகிழ்ச்சியில் பிரகாசிக்கும், உனது முகத்தில் ஒரு பிரகாசமும், மகிமையும் இருக்கும். உனது தோற்றம் ஒர பொருட்டாக ஆகாது. உனக்குள் இருந்து ஏதோ கொஞ்சம் அருளானது வெளியே வழிந்தோட ஆரம்பித்து விட்டால், அதன்பிறகு உனது வெளிப்புறத் தோற்றமானது வெறுமனே அருகில் தூக்கி வைக்கப்பட்டு விடுகிறது. ஒப்பிட்டு பார்க்கும் போது உனது உடல் தோற்றம் அதன் சிறப்பை இழந்து விடுகிறது. அதைப்பற்றி கவலைப்படாதே.

நான் அரசியல்பற்றி சொன்னதெல்லாம் வெறும் நகைச் சுவைக்காக மட்டுமேயாகும். எனவே ஒரு அரசியல்வாதி ஆகிவிடாதே, ஏனெனில் நி ஒரு அரசியல் வாதி ஆகிவிட்டால் நீ இன்னம் அதிக அசிங்கமானவனாக ஆகிவிடுவாய். நீ அசிங்கமானவனாக ஆகாமல் இருப்பது சாத்தியப்படாது ஏனெனில் இந்த ஒட்டு மொத்த அரசியல் உலகமும் இடைவிடாது சண்டையும், இடைவிடாது வன்முறையோடும், தொடர் போட்டிகளும் நிறைந்து உள்ளது. அது உன்னை இன்னும் அதிக மன அழுத்தம் மிக்கவனாக ஆகிவிடும். அது உன்னை மேலும் அருளற்றவன் ஆக்கிவிடும். அது உள்ளன அதிக சோம்பேறியாக ஆக்கிவிடும். ஏனெனில் சுறுசுறுப்பற்றவர்கள் மட்டுமே அரசியல் உலகில் வெற்றி பெற முடியும்.

லண்டன் தொழில் நுட்ப கல்லூரி ஆராய்ச்சியாளர்களுக்கு நான் கூறும் அறிவுரை என்னவென்றால் உங்களது ஆராய்ச்சியானது வெறும் பாதி கதை மட்டுமேயாகும். தயவு

செய்து அடுத்த பாதி குறித்தும் ஆராய்ச்சி செய்யுங்கள். ஒரு பாதியில் ஆசிங்கமான மற்றும் புத்தியற்ற மக்களுக்கு அரசியல் வெற்றி என்பது அதிகம் சாத்தியப்படக்கூடியது. அடுத்தபாதி என்னவென்றால் அப்பாவி அரசியல்வாதிகள் ஆகின்றவர்கள் மேலும் அதிக அசிங்கமானவர்களாகவும், மேலும் அதிக புத்திசாலித்தனம் இல்லாதவர்களாகவும் தோற்றமளிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். அவர்கள் அப்படித்தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் உங்களை எது வெற்றி பெறச் செய்கிறதோ அதை இயல்பாகவே, உண்மையாகவே நீங்கள் அதிகம் பயிற்சி செய்தாக வேண்டும். நீங்கள் வெற்றி பெறுவதற்கு எது உங்களுக்கு உதவி செய்ததோ அதுவே உங்களது வாழ்க்கை முறையாக ஆகிவிடுகிறது. அதுதான் இந்த கதையின் அடுத்த பகுதி. அந்த அரசியல்வாதி மேலும் அதிக அசிங்கமானவனாக ஆகிவிடுகிறான்.

இங்கு நீ என்னோடு தியானம் செய், நேசி, நடனமாடு, பாடு, கொண்டாடு, அப்போது அசிங்கம் மறைந்துவிடும். உனக்குள் உயர்ந்த ஒன்றினைக் கொண்டுவா அப்போது கீழ்நிலையில் உள்ளது மறக்கப்பட்டுவிடும் ஏனெனில் இது எல்லாமே ஒப்பிட்டு பார்ப்பதால் வருவதுதான். இது எல்லாமே சார்புடையது தான். உன்னால் முடிந்தால் உனக்குள் உயர்ந்த ஒன்றினை கொண்டு வா.

இது எனதப் போன்றது என்றால் ஒரு அறையில் ஒரு சிறிய மெழுகுவர்த்தி எரிந்து கொண்டு இருக்கிறது. அதனுள் ஒரு பெரிய விளக்கை நீ எடுத்துவந்தால் அந்த சிறிய மெழுகுவர்த்தி அதன் சிறப்பியல்பை இழந்து விடுகிறது. உள்ளுக்குள் உள்ள அழகை கொண்டுவர, அதுதான் சுலபமானது. வெளி அழகுக்கு என்னால் அதிகம் உதவ முடியாது. நான் ஒரு பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை மருத்துவர் அல்ல. பிளாஸ்டிக் அறுவை சிகிச்சை அளிக்கின்ற மருத்துவர்களை உன்னால் காண முடியும் ஆனால் அது எந்த விதத்திலும் உதவாது. நீ கொஞ்சம் நீண்ட மூக்கினை, நன்றாக வடிவமைக்கப்பட்டதை பெறலாம். ஆனால் அது உனக்கு எந்த விதத்திலும் அதிகம் உதவாது. நீ உள்ளுக்குள்

அப்படியே இருந்தால் உனது வெளி அழகும் கூட உனக்குள் உள்ள அசிங்கத்தை மட்டுமே வெளியே காட்டும், அது அதற்கு நேர் எதிரான பின்புலமாக ஆகிவிடும். எனவே கொஞ்சம் அக அழகை கொண்டுவா.

அதைத்தான் நாங்கள் இங்கு செய்து கொண்டு இருக்கிறோம். சந்நியாசம் என்பது அக அழகை, உள்ளுக்குள் உள்ள வரப் பிரசாதத்தை வெளியே கொண்டு வருகின்ற விஞ்ஞானம் ஆகும். இந்த இயற்கையானது உன்மீது பொழியட்டும். அப்போது உடலானது முற்றிலும் மறக்கப்பட்டுவிடும். இந்த உடலானது கலப்பு எரு உரமாக ஆகிவிடும், மேலும் உனது ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஒரு தோட்டமாக ஆகிவிடும், அப்போது மாபெரும் மலர்கள், தங்க மலர்கள் உன்னுள் மலரும்.

இன்று இது போதும்.

தூய மனிதன்
இரண்டில் ஒன்றாக இணைகிறான்
பக்தன்
மூன்றில் ஒன்றாக இணைகிறான்
உனது அறியாமையும், முட்டாள்தனமும்
வெறுமனே உன்னை பாலத்தில் நிற்கும்படி
செய்து விடுமோ என்று நான் பயப்படுகிறேன்.

திடநம்பிக்கை மற்றும் உலக பொருள்கள்
ஆகிய இரண்டையும் கொடுப்பவராக
அவர் இருக்கிறார்.
அவர் நமது வாழ்க்கையை முடித்து வைக்கின்றவரைத்
தவிர வேறு யாராகவும் இல்லை.
அவர் கொடுங்கோலன் அல்ல;
ஏனெனில் அவர் எடுத்துக் கொள்கின்ற ஒவ்வொன்றினைப்
போன்றும் எழுபது மடங்கு நமக்கு திருப்பி கொடுகிறார்;
மேலும் அவர் ஒரு கதவை மூடினால்,
அவர் உனக்கு அடுத்த பத்து கதவுகளைத் திறக்கிறார்.

நீ உனக்கு செய்வதை விடவும்
அவர் உனக்கு அதிக பொக்கிஷத்தை கொடுக்கிறார்.
எழுந்து நில், கற்பனை கதைகளை செய்தது போதும்.
உனது அடிப்படை தீவிர உணர்ச்சிகளை விட்டுவிட்டு
என்னிடம் வா.

*அவரது இந்த வழிகாட்டுதல் தான்*
*உன்னை இந்த பாதையில் வைத்திருக்கிறதே தவிர*
*உனது சொந்த பலம் அல்ல என்பதை*
*நீ உணர வேண்டும்.*

இரண்டுபட்ட தன்மையின் மூலம் வாழ்க்கை இருக்கிறது. வாழ்க்கையானது எதிர் எதிர் துருவங்களின் செயல் முறையைச் சார்ந்து உள்ளது. வாழ்க்கை என்பது ஒரு நதி போன்றது. நதி இருப்பதற்கு இரண்டு கரைகள் தேவை. இரண்டு கரைகளின் ஆதரவு இல்லாமல் நதியானது இருக்க முடியாது. இரண்டு சிறகுகள் இல்லாமல் பறவையால் பறக்க முடியாதது போல, இரண்டு கால்கள் இல்லாமல் உங்களால் நடக்கமுடியாதது போல, இரண்டு கரைகள் இன்றி நதி இருக்காது.

வாழ்க்கைக்கு இரண்டுபட்ட தன்மை தேவை. இறுதி நிலை வரும் வரை அதை நீங்கள் எங்கும் கண்டு கொள்ளலாம். இறுதியானது, முழுமையானது அல்லது அதை நீங்கள் கடவுள் என்று அழைத்தாலும் சரி, அது இந்த இரட்டை தன்மைகளைக் கடந்து உள்ளது. ஆனால் அப்போது வாழ்க்கை மறைந்து விடுகிறது. அதன் பின்னர் நீங்கள் காணாமல் போய் விடுகிறீர்கள். அதன் பின்னர் உங்களுக்கு உருவம் கிடையாது. பெயர் கிடையாது. நீங்கள் அப்பால் போய் விட்டீர்கள். அது தான் நிர்வான நிலை, முக்தி நிலை.

இந்த இரண்டு விஷயங்களையும் நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். வாழ்க்கை என்பது எதிர் எதிர் துருவங்கள் இல்லாமல் இருக்க முடியாது. வாழ்க்கை என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும், இடையே இருளுக்கும் ஒளிக்கும், இடையே, வாழ்விற்கும் சாவிற்கும் இடையே, நல்லதற்கும் தீயதற்கும் இடையே நடக்கின்ற ஒரு இரு தன்மை செயல்பாடு. இந்த இருதன்மைகள் இல்லாமல் வாழ்க்கையானது இருக்கமுடியாது. இரட்டை தன்மை இல்லாமல் வெளிப்பாடு என்பத சாத்தியப்படாது.

அதனால், மற்றொரு பார்வையானது, புரிந்து கொள்ளப் படுவது சாத்தியமாகிறது. இந்த இரட்டை தன்மை மறைந்து

விட்டால், நீ அறிந்து கொண்டுள்ள இந்த வாழ்க்கையும் மறைந்து விடுகிறது. அதன்பிறகு அடுத்த கதவு திறக்கிறது. நீங்கள் அடுத்த தளத்திற்கு, மட்டத்திற்கு நகர்ந்து விடுகிறீர்கள். தெரியாத ஒரு தளத்திற்கு, புதிர் நிறைந்த ஒரு நிலைக்கு, உருவமும், பெயரும் இல்லாத ஒரு தளத்திற்கு நீங்கள் நகர்ந்து விடுகிறீர்கள். எல்லாம் அப்படியே இருக்கும் ஆனால் வெளிப்படுத்தப்படாமல் இருக்கும். அதுதான் நிர்வாணம், மோட்சம், சமாதயின் இறுதி நிலை, அங்கு எல்லாம் மறைந்து விடுகிறது.

இரட்டை தன்மை வாழ்க்கையின் வழியாக இருந்தால், அதன் பின்னர் இரட்டைத்தன்மை இல்லாமல் இருப்பது தான் மதத்தின் வழியாகும்.ஏனெனில் மதம் என்பது வெளிப்படுத்தப்பட்டுள்ள இந்த உருவத்தைக் கடந்து வெளிப்படுத்தப்படாததன் உள்ளே போகின்ற கலையாகும். நாம் இங்கு வந்த அந்த ஆரம்ப இடத்திற்கு, நாம் ஏங்கிக் கொண்டு இருக்கிற அந்த இடத்திற்கு போவது தான் மதம் என்பதாகும் ஏனெனில் நாம் அந்த இடத்திற்கு சொந்தமானவர்கள். நாம் இப்போது எங்கு இருந்தாலும் நம்மால் நமது வீட்டில் இருக்கின்ற உணர்வு வராது. ஏதோ ஒன்று நிறைவேறாமலே இருக்கும். நாம் நமது அசல் மூல இடத்தை தவறவிட்டுக் கொண்டே போகிறோம். ஏனெனில் ஓய்வு என்பது அந்த மூல இடத்தில் மட்டுமே இருக்கிறது.

இன்றைய சூத்திரங்கள் அளவுகடந்த மதிப்புள்ளவை. ஒவ்வொரு வார்த்தை குறித்தும் தியானியுங்கள்.

*தூய மனிதன்*
*இரண்டில் ஒன்றாக இணைகிறான்*
*பக்தன்*
*மூன்றில் ஒன்றாக இணைகிறான்.*

இந்த இரட்டைத் தன்மையைக் கடப்பதற்கு, இந்த பலவகைப்பட்ட தன்மையை கடப்பதற்கு, பிறப்பிற்கும் இறப்பிற்கும் இடையே உள்ள இந்த இடைவிடாத சச்சரவைக் கடப்பதற்கு இரண்டு வழிகள் இருப்பதாக ஆத்ம அறிவு பெற்ற பாரம்பரியம் கூறுகிறது. அத்ம அறிவு பெற்றோரின் முதல் பாதையானது (Via Putgativa) அதாவது "தூய்மையின் மூலம்"

என்றும், இரண்டாம் பாதையானது (Via Unitiva) அதாவது ''இணைதலின் மூலம்'' என்றும் அழைக்கப்படுகிறது. முதல் பாதையானது தியானத்தின் பாதையாகவும் இரண்டாம் பக்தியின் பாதையாகவும் இருக்கிறது. முதல்பாதை ஜென்னாக இருக்கிறது. இரண்டாம் சூஃபியிசமாக உள்ளது.

தியானத்தின் பாதையில் ஒருவன் நீக்கிக் கொண்டே செல்லவேண்டும், ஒருவன் தன்னை முற்றிலுமாக காலி செய்ய வேண்டும். பக்தியின் பாதையில் இதற்கு நேர் எதிரான செயல்முறை பின்பற்றப்பட வேண்டும். ஒருவன் மேலும் மேலும் நிறைவு பெற்றவனாக ஆகவேண்டும். ஒருவன் தான் நிரம்பி வழிகிறவரை நிறைவு பெற்றவனாக ஆகவேண்டும். தியானத்தின் பாதையில் அவனுக்குள் எதுவுமே இல்லாத அளவுக்கு காலியானவனாக ஆகவேண்டும். ஒருவன் வெறுமனே தூய வெறுமையாக இருக்க வேண்டும்.

அதனால் தான் புத்தர் ஆன்மா இல்லை என்று கூறுகிறார். இறுதியான அனுபவத்தில் எதுவுமே காணப்படுவதில்லை என்று அவர் கூறுகிறார். வெறுமை மட்டுமே காணப்படுகிறது. அது முழுமையான வெறுமை, ஆன்மா இல்லாத ஒரு நிலை. அனாத்மா அதனால் தான் அவர் அதை நிர்வானா என்று அழைத்தார். நிர்வானா என்றால் ''மெழுவர்த்தியை அணைத்தல்'' என்று அர்த்தம். நீங்கள் மெழுகுவர்த்தியை அணைத்தது போன்று உங்களது ஞான என்னும் தன் முனைப்பானது வெறுமனே மறைந்து போகிறது, எதுவுமே இருப்பதில்லை. எதுவுமே இல்லாத போது தான் தூய்மை இருக்கிறது. அங்க ஏதாவது இருந்தால் அது அசுத்தமானதாக ஆகிறது. கண்ணாடியில் எதுவும் இல்லாத போது அது தூய்மையானதாக இருக்கிறது, அதில் எந்த பிரதிபலிப்பும், எந்தவிதமான தூசியும், தன்னுணர்வில் எந்த ஒரு பொருளும் இருக்கும் போது அது தூய்மையாக இருக்கிறது. அறிந்து கொள்ளக் கூடியது எதுவும் இருப்பதில்லை. அதன் பிறகு ஒருவர் தூய்மையானவராக இருக்கிறார். இது தூய்மையின் மூலம், எல்லாவற்றையும் நீங்கிக் கொண்டு செல்லும் பாதையாகும்.

உபநிடதங்கள் இதை 'நேத்தி நேத்தி' என்று கூறுகின்றன. அதாவது இதுவும் அதுவல்ல, அதுவும் கூட அதுவல்ல, இதுவும் அல்ல அதுவும் அல்ல. மறுத்துக் கொண்டே போவது. நீக்கிக் கொண்டே போவது, எதுவுமே இல்லாத வரையில் மறுத்துக் கொண்டே போவதாகும். மேலும் நீங்கள் முழுமை வெறுமை நிலையை அடைந்து விட்டால், அது தான் இலக்கு. அதன் பின்னர் எல்லாமே சாந்தம், எல்லாமே அமைதியாக உள்ளது. ஒருவர் இருமைக்கு அப்பால் பன்மைக்கு அப்பால் நகர்ந்து விடுகிறார்.

இந்த நிலையில் கவனிப்பவர், கவனிக்கப்படுகின்றதாக ஆகிறார். கவனிப்பவருக்கும், கவனிக்கப்படுகின்றதற்கும் இடையே எந்த வேறுபாடும் இல்லை. அதனால்தான், ''கவனிப்பவனே கவனிக்கபடுவதுமாக இருக்கிறான்'' என்கிற ஜே. கிருஷ்ணமூர்த்தியின் புகழ்பெற்ற வாசகம் வந்தது. தியானத்தின் சாராம்சம் அதுதான். அதன்பின்னர் அங்கு இருவர் இல்லை, அறிபவரும் இல்லை அறியப்படுகின்றதும் இல்லை. அகப்பொருளும் இல்லை புறப்பொருளும் இல்லை. ஒருவர் மட்டுமே இருக்கிறார். ஆனால் முற்றிலும் மௌனமாக, அமைதியாக இருக்கிறார். ஒருவர் மட்டுமே இருக்கிறார் ஆனால் அதை அறிவிப்பதற்கு அவருக்குள் யாரும் இல்லை. ஆனால் நீங்கள் அதை ஒருவர் என்றும் கூட அழைக்கமுடியாது ஏனெனில் அதை ஒருவர் என்று அழைப்பதற்கு யாரும் அங்கு இருக்க மாட்டார்கள். ஒருவர் அங்கு இருக்கிறார் ஆனால் தான் இல்லாமல் போய் விட்டது போல இருக்கிறார்.

இதைத்தான், **தூய மனிதன் இரண்டில் ஒன்றாக இணைகிறான்.....** என்று ஹக்கிம் சனாய் கூறுகிறார். கவனிப்பவனும், கவனிக்கப் படுவதும் இணைகிறது. தூய மனிதன் என்றால் தியானிக்கிற ஒரு மனிதன் என்று அர்த்தம். தூய மனிதன் என்றால் தூய்மையின் மூலம் **(Via Putgativa)** முயற்சி செய்கிற ஒரு மனிதன் என்று அர்த்தம், அந்நியமாக தன்னிடம் உள்ள எல்லாவற்றையும் வெறுமனே காலி செய்து கொண்டு மேலும் தனது முக்கிய ஆன்மா அல்லாத எல்லாவற்றையும் நிக்கிக் கொண்டே போகின்ற ஒருவன் என்று அர்த்தம். அதன் பின்னர் கையில் எதுவுமே இருக்காது.

ஜென் மக்கள், மனிதன் ஒரு வெங்காயம் போன்றவன் என்று கூறுகின்றனர். நீங்கள் அதன் தோலை உரித்துக் கொண்டே போகிறீர்கள். ஆனால் இறுதியில் எதுவுமே இருக்காது. ஆனால் அது தான் தேடுதல் என்பதாகும். உங்களது கைகள் காலியானதாக, எதுவுமே இல்லாமல் இருந்தால், நீங்கள் அடைந்து விட்டீர்கள். இப்போது அங்கு துன்பம் இருக்க முடியாது ஏனெனில் துன்பப்படுவதற்கு அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். இப்போது அங்கு வேதனை இருக்காது ஏனெனில் அங்கு வேதனையை உணர்வதற்கு யாரும் இருக்க மாட்டார்கள். இப்போது அங்கு அறிவும் இருக்காது அல்லது அறியாமையும் இருக்காது ஏனெனில் அங்கு அறிபவர் இருக்க மாட்டார். இப்போது அங்கு அடிமைத் தளையும் இருக்காது அல்லது விடுதலையும் இருக்காது ஏனெனில் அடிமைப்படுவதற்கோ அல்லது விடுதலை அடைவதற்கோ அங்கு யாரும் இருக்க மாட்டார்கள். எல்லாமே போய்விட்டது. எல்லாமே மறைந்து விட்டது. நீங்கள் உங்களது மூலத்தில், ஆரம்ப இடத்தில் திரும்பவும் வீழ்ந்து விட்டீர்கள்.

அதன் பின்னர் வெளிப்படுதல் என்பது ஒருபோதும் கிடையாது. நீங்கள் வெளிப்படுத்தப்பட முடியாதவர் ஆகிவிட்டீர்கள். இந்த நிலையில் நீங்கள் ஆணும் இல்லை பெண்ணும் இல்லை. இந்த நிலையில் நீங்கள் சந்தோஷமாகவும் இல்லை சந்தோஷம் இல்லாமலும் இல்லை. ஏனெனில் அவை எல்லாம் இரட்டை உலகின் அதாவது சந்தோஷம், சந்தோஷமின்மை, ஆண், பெண், அழகு அசிங்கம், நல்லது, தீயது எல்லாமே போய்விடுகிறது. நீங்கள் நல்லவனாகவும் அல்லது தீயவனாகவும் இருக்கமாட்டீர்கள். இப்போது அங்கு கடவுளும் இருக்க மாட்டார் சாத்தானும் இருக்க மாட்டார். இவை இரண்டின் பகுதிகள், அதே இரட்டைத் தன்மை மேலும் இரட்டைதன்மையில் எப்போதும் படபடப்பு இருக்கும், இரட்டை தன்மையில் எப்போதும் சண்டை இருக்கும். இரட்டை தன்மையில் எப்போதும் அடுத்தவர் என்பது இருக்கும்.

''அடுத்தவர் நரகமாக இருக்கிறார்'' என்று ஜீன் பால் சார்த்ரே கூறுவதை ஜென் மக்கள் ஒத்துக் கொள்வார்கள். ஜென்மக்கள்,

''ஆம், அடுத்தவர் நரகம் தான், அடுத்தவர் மறைந்து போக வேண்டும். ஆனால் நீங்கள் மறைந்தால் மட்டுமே அடுத்தவரும் மறைவார்'' என்று கூறுவார்கள். நான் மற்றும் அவர் ஆகிய இரண்டும். அதே நாணயத்தின் இரண்டு பக்கங்களாக இருக்கின்றன. அவர் மறைந்து விட்டால் நானும் மறைந்து விடுகிறது. நான் மறைந்து விட்டால் அவரும் மறைந்து விடுகிறார். அவர்கள் தனித்தனியாக இருக்க முடியாது. அவர்கள் ஒரே விஷயத்தின் பகுதிகள். ஆகவே இங்கு நானும் இல்லை, அல்லது அவரும் இல்லை.

அதனால் தான் புத்தர் ஆன்மா அல்லது கடவுள் பற்றி எதையுமே கூறுவதில்லை. அவரது பாதை தியானத்தின் தூய பாதையாக உள்ளது. தூய்மையின் வழியை புரிந்த கொள்ள முடியாத மற்றவர்களுக்கு இது மிகவும் குழப்பமான விஷயமாக இருந்து வருகிறது. புத்தர் இதை விசுத்தி மார்க்கம் என்ற அழைத்தார். அதற்கு மிகச் சரியான அர்த்தமானது தூய்மைப் பாதை என்பதாகும்.

புத்தர் என்ன சொல்ல முயற்சிக்கிறார் என்பதை கிறிஸ்தவர்கள், இந்துக்கள், முகமதியர்கள் பிரிந்து கொள்ள முடியாது. கடவுள் இல்லை, ஆன்மா கிடையாது, அதன் பின்னர் மதம் என்பது என்ன? கடவுள் இல்லாத, ஆன்மா இல்லாத இந்த நிலை தான் மதம் என்று புத்தர் கூறுகிறார். கிறிஸ்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள் புத்தர் கூறுவது என்ன வகையாக மதம் என்று கருத்தில் கொள்ள முடியாது ஏனெனில் மதம் என்றால் கடவுள் என்னும் கருத்தை மையமாக கொண்ட ஒன்று என்று நாம் நினைக்கிறோம். கடவுள் இல்லாமல் ஒரு மதம் எப்படி இருக்க முடியும்?

ஆனால் சமணம் என்ற ஒரு மதம் இருக்கிறது, அது கடவுள் இல்லாமல் இருக்கிறது. கடவுள் இல்லை என்பது வரையில் சமணர்கள் புத்தரோடு ஒத்துப் போகின்றனர். ஆனால் ஆன்மாவும் கூட இல்லை என்று புத்தர் கூறும்போது சமணர்களும் கூட அதை ஒத்துக் கொள்வதில்லை. ''ஆன்மா இல்லாமல் ஒரு மதம் எப்படி இருக்க முடியும்?'' என்று அவர்கள் கூறுகின்றனர். கிறிஸ்தவர்கள், இந்துக்கள், முகமதியர்கள் ஆகியோர், ''கடவுள்

மற்றும் ஆன்மா இல்லாமல் எந்த ஒரு மதமும் இருக்க முடியாது. அந்த இரண்டும் அவசியம் தேவை'' என்று கூறுகின்றனர். மேலும், ''இந்த இரண்டும் கைவிடப் படவில்லை என்றால், நீங்கள் மதம் என்னும் உலகில் நுழைய முடியாது'' என்றும் கூட புத்தர் கூறுகிறார். இந்த இரண்டும் தடைகளாக இருக்கின்றன என்கிறார்.

''கடவுள் என்பதை விட்டுவிடலாம். அது தேவையில்லாத கொள்கை வெறுமனே உன்னை தூய்மையாக்கி கொள் அவ்வளவுதான். கடவுளுக்கான அவசியம் கிடையாது. பிரார்த்தனைக்கான அவசியம் கிடையாது, தியானம் மட்டுமே போதும். நீ தூய்மையானவனாக ஆகிக் கொண்டே செல்'' என்று சமணர்கள் கூறுகின்றனர். அவர்கள் பாதி தூரம் வரை புத்தரை ஒத்துக் கொள்கின்றனர் மேலும் பாதி தூரம்வரை இந்துக்கள், முகமதியர்கள் மற்றும் கிறிஸ்துவர்கள் ஆகியோருடன் ஒத்துக் போகின்றனர்.

அதனால் தான் இந்தியாவில் புத்தமதமும், சமணமதமும் ஒன்று சேர்ந்து பிறந்தது, ஆனால் இந்துக்கள் புத்தமதத்தை முற்றிலும் அழித்து விட்டார்கள். அவர்கள் சமண மதத்தை அழிக்கவில்லை. அவர்கள் சமணமதத்தை அருகில் இருப்பதற்கு அனுமதித்து விட்டார்கள். ஏனெனில் சமணமதமானது குறைந்த பட்சம் ஆன்மா என்பதிலாவது ஒத்துப்போவது போன்று தெரிகிறது.

புத்தர், இந்துக்களின் கண்களில் இருந்து வெகுதூரம் விலகி சென்று விடுகிறார். அதில் அவர் இரண்டையும் மறுக்கிறார். ஆனால் அதற்கு ஒரு முக்கிய கருத்தையும் வைத்திருக்கிறார். கடவுள் இல்லை என்றால் அதன் பின்னர் ஆன்மாவும் கூட இருக்க முடியாது என்கிறார். நான் மற்றும் அவர் என்பது ஒரு ஜோடியின் பாகங்களாக மட்டுமே இருக்கமுடியும். அவை ஜோடியாக இருக்கின்றன. அவர்களை விவாகரத்து செய்ய முடியாது. அடுத்தவர் என்பது இல்லாத போது நான் என்னும் வார்த்தைக்கு என்ன அர்த்தம் உண்டு? அதற்கு எந்த அர்த்தமும் இருக்காது. அது அர்த்தமற்றதாக இருக்கும். அடுத்தவர் ஒருவர்

இருப்பதால் தான் நான் என்பதற்கு அர்த்தம் கொடுக்கப்படுகிறது. இருள் இல்லை என்றால் வெளிச்சம் என்பதற்கு என்ன அர்த்தம் உண்டு? மரணம் இல்லை என்றால் வாழ்வு என்பதற்கு என்ன அர்த்தம் உனக்கு?

மொழியின் இரட்டை தன்மையை வெறுமனே பாருங்கள். எல்லா மொழிகளும் இரட்டை தன்மையுடையவை. (எதிர் சொல்லில் இருந்து தன் ஒருவார்த்தைக்கு அர்த்தமே வருகிறது) எதிர் சொல்லில் இருந்து தான் ஒரு சொல்லிற்கு அர்த்தம் வரவேண்டும் என்பது மிகவும் விநோதமாக உள்ளது. இருள் என்பது இருப்பதால் தான் வெளிச்சத்திற்கு அர்த்தம் உள்ளது. வெறுப்பு என்பது இருப்பதால் மட்டுமே அன்பு என்பதற்கு அர்த்தம் உள்ளது, கோபம் என்பது இருப்பதால் மட்டுமே கருணை என்பதற்கு அர்த்தம் இருக்கிறது. மேலும் பாவி என்பவர் இருப்பதால் மட்டுமே புனிதர் என்பது அர்த்தமுள்ளதாக உள்ளது. வியாபார ஸ்தலம் என்று இருப்பதாலேயே மடாலயம் என்பது அர்த்தமுள்ளதாக இருக்கிறது. இது விநோதமாக இருக்கிறது ஆனால் இப்படித்தான் இது இருக்கிறது. வார்த்தைகள் எதிர் சொல்லைச் சார்ந்து மட்டுமே இருக்கின்றன.

தத்துவ வாதிகளின் பேரகராதியை நீங்கள் பார்த்து அதில் ''பொருள் என்றால் என்ன?'' என்று விசாரித்தால் ''மனம் அல்ல'' என்ற பதிலைத் தான் நீங்கள் காண்பீர்கள். அதில் ''மனம் என்றால் என்ன?'' என்று பார்த்தால் அதில் ''பொருள் அல்ல'' என்பதைக் காண்பீர்கள். இது மிகவும் அர்த்தமற்றது. ''மனம் அல்ல'' என்பதன் மூலம் நீங்கள் மனதை விவரிக்கிறீர்கள். எனவே உங்களுக்கு மனம் என்றால் என்ன என்றும் பொருள் என்றால் என்ன என்றும் தெரியவில்லை போன்று தோன்றுகிறது. யாருக்கும் தெரியாது.

வாழ்க்கையானது முழுவதும் இரட்டை தன்மையை சார்ந்து இருப்பது போல மொழியும் இரட்டைத் தன்மையை சார்ந்து இருக்கிறது. வாழ்க்கையின் அனுபவங்களில் இருந்துதான் மொழி எழுகிறது. அது முற்றிலும் வாழ்க்கையின் அனுபவங்

களில் வேர் ஊன்றி உள்ளது. அதனால் தான் உண்மை நிலையானது வார்த்தைகளால் கூறமுடியாத ஒன்றாக இருக்கிறது.

''உண்மையை நிங்கள் கூறி விட்டால் அது பொய்யாக ஆகி விடுகிறது. அதை கூறுங்கள், நீங்கள் அதை பொய்யாக்கி விடுகிறீர்கள். சொல்லப்படுகின்ற தாலோ உண்மையான தாலோ அல்ல. வார்த்தைகளால் வெளிப்படுத்துகின்ற உண்மை ஒரு போதும் உண்மை அல்ல, சூத்திரங்களாலும், விவரணைகளாலும் கூறப்படுகின்ற கடவுள் ஒருபோதும் கடவுளாக இருக்க முடியாது'' என்று லாவோத்சு கூறுவது சரியானது தான். மொழி என்பது இரட்டைத்தன்மையில் வேர் ஊன்றி உள்ளது. ஆனால் உண்மையானது இரட்டை தன்மையைக் கடந்து உள்ளது. அதைப் பற்றி எதுவும் கூற முடியாது என்று தான் அவர் கூறுகிறார்.

அதனால் தான் உண்மை நிலை பற்றி புத்தர் எதுவும் கூறவில்லை, ஆம் அல்லது இல்லை என்று கூட கூறவில்லை. அவர் தனது தலையை இப்படியோ அல்லது அப்படியோ கூட அசைப்பது கிடையாது. நீங்கள் அவரிடம் உண்மைநிலை பற்றி கேட்டால் அவர் கற்சிலை போன்று இருப்பார். எந்த விதமான பதிலும் அவரிடம் இருந்து வராது. எதிர்மறையான அல்லது நேர்மறையான எந்த பதிலும் வராது. நீங்கள் என்ன கேட்கிறீர்கள் என்பது அவர் காதுகளில் விழாதது போன்று இருப்பார். அவர் கேட்டிருப்பார் ஆனால் அதைப்பற்றி ஏதாவது கூறுவது தவறானதாக இருக்கும் எதுவுமே தவறாகத்தான் இருக்கும். அதைப்பற்றி எதுவும் கூறமுடியாது என்பதும் கூட தவறானதாகத் தான் இருக்கும். ஏனெனில் நீங்கள் ''உண்டைநிலைபற்றி எதுவும் கூறமுடியாது'' என்று ஏற்கனவே ஒன்றைக் கூறிவிடுகிறீர்கள். அது உண்மை நிலையை விவரிக்கின்ற ஒரு வாக்கு மூலமாக ஆகிவிடுகிறது. அது அர்த்தமுள்ள வெளிப்பாட்டை கொடுக்கிறது.

இந்த உலகில் மிகவும் தவறாக புரிந்து கொள்ளப்பட்ட மனிதர் புத்தர். அதற்கான காரணம்? அவர் எதிர்மறை பாதையைத் தேர்வு செய்து விட்டார். தன்னை காலி செய்து விடுகின்ற பாதையை, நீக்கிவிடுகின்ற பாதையை தேர்வு செய்து விட்டார்.

இரண்டானது ஒன்றாகின்ற தியானத்தின் தூய பாதை அவருடையது. எனவே இரண்டு ஒன்றாகிவிடும் போது எதுவும் கூறமுடியாது. அவரால் நடனம் கூட ஆடமுடியாது ஏனெனில் அந்த நடனம் கூட ஒரு வாக்கு மூலம் ஆகிவிடும். அவரால் நேரடியாக எந்த ஒரு குறிப்பையும், ஜாடை காட்டு தலையும் கொடுக்க முடியாது. அவர் முற்றிலும் அமைதியாக இருப்பார். அவர் தூய அமைதியாக இருப்பார். உங்களுக்கு பார்க்கும் திறனுடைய கண்கள் இருந்தால் உங்களால் அதைப் பார்க்க முடியும். உங்களுக்கு அதைப் புரிந்து கொள்ளும் இதயம் இருந்தால், நீங்கள் அதை புரிந்து கொள்வீர்கள். ஆனால் மொழி மற்றும் தகவல் தொடர்பு உலகில் அவர் முற்றிலுமாக கிடைக்க மாட்டார்.

**தூய மனிதன் இரண்டில் ஒன்றாக இணைகிறான், பக்தன் மூன்றில் ஒன்றாக இணைகிறான்** என்று சனாய் கூறுகிறார். ஆனால் அவர் பக்தன் பற்றி என்ன கூறுகிறார்? அவனது இணைதல் அதிக செழிப்பானது. ஏனெனில் அவன் மூன்றில் ஒன்றாக இணைகிறான். அதாவது பக்தன், கடவுள், மற்றும் பக்தி. அவனது இணைதல் ஒரு வகையான மும்மூர்த்தி நிலை, அது தான் இரண்டாம் பாதை. பக்தனின் பாதை, சூஃபி, காதலனின் பாதை. மேலும் தூய பாதையை விட இது அதிக செழிப்பானது என்று சனாய் கூறுகிறார். மூன்று விஷயங்கள் இணைவதால், அதில் செழிப்பு இருக்கிறது, அது அதிக சாறு நிறைந்தது, மேலும் இது பக்தியின் பாதை என்பதால் இது எதையும் ஒதுக்குவதில்லை, இது ஏற்றுக் கொள்கிறது.

தியானத்தின் பாதையில் செல்பவர் நேதி, நேத்தி என்று கூறுகிறார். இதுவும் இல்லை அதுவும் இல்லை என்று கூறுகிறார். பக்தனின் பாதையில் இத்தி, இத்தி என்று கூறப்படுகிறது. இதுவும் கூட, இதுவும் கூட என்று கூறப்படுகிறது. அது ஏற்றுக் கொள்கிறது. அது ஒத்துக் கொள்கிறது. அது வரவேற்கிறது. அது நேர்மறையானதாக உள்ளது. அது ஒருவனை காலியாக்குவது கிடையாது. மாறாக அது ஒருவகை நேசிப்பவனால் நிரப்புகிறது. அது கடவுளை வரவேற்கிறது. அது கடவுளுக்கு விருந்தளிப்பவர்

ஆகிறது. மேலும் அதில் எழுகின்ற இணைதல் என்பது, கவனிப்பவன் கவனிக்கப்படுவதில் மறைந்து போகின்ற இணைதல் போன்றது கிடையாது. அது மறைதலில் இணைதல் அல்ல, அது ஒரு உயிருள்ள இணைதல் இது இரண்டு காதலர்கள் அவர்களின் காமத்தின் உச்ச நிலைக்கு நகர்ந்து செல்வது போன்றது. அப்போது அவர்கள் ஒருவர் மற்றொருவரில் கரைந்து விடுகின்றனர் ஆனால் அவர்கள் இருக்கின்றனர். மேலும் அவர்கள் எப்போதும் இருந்ததை விடவும் இப்போது அதிகமாக இருக்கிறார்கள்.

இதை நீங்கள் கவனித்திருக்கிறீர்களா? யாராவது ஒருவர் உங்களது கையை மிகவும் அன்போடு அவரது கையோடு சேர்த்து கொண்டு கதகதப்புடன், அன்புடன், அக்கறையுடன் சேர்த்துக் கொள்ளும் போது திடீரென்று உங்களது கைகள் உயிர் பெற்று விடுகிறது. அது மகிழ்ச்சியில் துடிக்கிறது. ஒரு நொடிப் பொழுதிற்கு முன்பு உங்களுக்கு உங்கள் கைகள் குறித்த விழிப்புணர்வு கூட இருந்திருக்காது. இப்போது அந்த கை உயிர்த் துடிப்புடன் இருக்கிறது. உங்களது உடலில் வேறு அங்கங்களை விடவும் உங்களது கையானது அதிக உயிர்த்துடிப்புடன் இருக்கிறது. கை மட்டும் தனியாக இருக்கிறது. அது கதகதப்பாக, சூடேறுகிறது. அடுத்தவர் உங்களை வாழ்த்துவதில் மகிழ்ச்சியை அது உணர்கிறது. அடுத்தவர் உங்கள் மீது பொழிகின்ற அன்பை அது உணர்கிறது. அதற்கு பதில் செயல் புரிய அரம்பிக்கிறது. அது அதிர்கிறது, அது துடிக்கிறது, அது சிற்றோடையாக ஓடுகிறது.

பெற்றோர்களால் கட்டிஅணைக்கப்படாத குழந்தைகள் எப்படியோ உயிரற்று இருக்கின்றன என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகின்றனர். அவனது உடல் ஒருபோதும் உயிருள்ள நிலைக்கு வருவதில்லை. குழந்தைக்கு கட்டி அணைப்பது தேவைப்படுகிறது, குழந்தைக்கு மீண்டும் மீண்டும் கட்டி அணைக்கப்படுவது அவசியமாகிறது. அதற்கு தடவிக் கொடுத்தல், முத்தமிடல் அவசியமாகிறது. இல்லை எனில் அந்த குழந்தை அவனது உடலில் உயிர் துடிப்பதை ஒருபோதும் அறிய

மாட்டான். அவன் சொல் அளவில் குளிர்ச்சி அடைந்தவனாக இருப்பான் ஏனெனில் அவன் தனக்குள் கதகதப்பானது செலுத்தப்படுவதை ஒருபோதும் அறியமாட்டான். அவனது உடலில் கதகதப்பு செலுத்தப்படாத போது, அவன் தனது சொந்த கதகதப்பையும் பதிலுக்கு காட்டமுடியாது. அவனது கதகதப் பானது தூண்டப்படவேண்டும், அதற்கு சவால் விடப்பட வேண்டும்.

ஆனால் நமது உலகமானது மேலும் மேலும் அன்பற்ற தாகவும், அக்கறையற்றதாகவும், கட்டி அணைக்காததாகவும் ஆகிவிட்டது. மக்கள் விலகி இருக்கிறார்கள், மக்கள் கொஞ்சம் தூரம் விட்டு வாழ்கிறார்கள். ரயிலில் அவர்கள் அருகருககே நின்று கொண்டு இருந்தாலும் கூட, இருவரின் உடல்களும் தொட்டுக்கொண்டு இருந்தாலும் கூட, அவர்கள் தங்களை தனியாகவும், தூரத்தில் இருப்பதாகவும் நினைத்துக் கொள்கின்றனர். அவர்களின் அந்த தொடுதலானது குளிர்ச்சி யானதாக இருந்தாக வேண்டும் ஏனெனில் அந்த தொடுதல் கதகதப்பானதாக ஆகிவிட்டால், அடுத்தவர் அதனால் பாதிக்கப்பட்டதை உணரலாம். நீங்கள் ஒ!வரது எல்லைக்குள் நுழைந்து விட்டீர்கள் எனவே உங்களுக்கு என்ன தைரியம்! உடல்கள் தொட்டுக் கொள்ளலாம். ஆனால் ஆன்மாக்கள் தொட்டுக் கொள்ளக் கூடாது. உடல்கள் தொட்டுக் கொண்டு இருக்கலாம் ஆனால் அவை பிணங்கள் தொட்டுக் கொள்வது போன்று இருக்க வேண்டும். அந்த தொடுதல் கதகதப்பாக ஆகிவிடக்கூடாது. அவர்கள் பதில் செயல் செய்யக்கூடாது. இந்த நிலையானது மனிதனை கல்லறையில் வசிப்பது போன்று, இருள் மற்றும் குளிர்ச்சி நிறைந்த உலகில் வாழ்வது போன்று உருவாக்கிவிட்டது.

யாராவது ஒருவர் உங்களைக் கட்டி தழுவும் போது, அந்த கட்டித்தழுவுதல் வெறுமனே ஒரு வெற்று அசைவாக, ஒரு வெறுமையான அசைவாக இல்லாதபோது, அந்த கட்டித் தழுவுதல் உண்மையானதாகவும், முழுமையானதாகவும் இருந்தால் அவர் தன்னுடைய அன்பினை உங்களுக்குள்

ஊற்றுகிறார். உங்களது அன்பு சக்தியும் அந்த நிலைக்கு எழுந்து விடுகிறது. உங்களது உடல் உயிர்த்துடிப்புள்ளதாக ஆகிறது நீங்கள் முற்றிலும் வித்தியாசமான ஒரு வாழ்க்கையை உணர்கிறீர்கள். நீங்கள் அதிக பட்ச நிலையை நோக்கி நகர ஆரம்பித்து விடுகிறீர்கள். மற்றபடி மக்கள் குறைந்தபட்ச நிலையில் தான் வாழ்கிறார்கள். அவர்கள் இரட்டை வாழ்க்கை வாழ்கின்றனர். அவர்களது வாழ்க்கையில் கூர்மை இருப்ப தில்லை. அன்பு இல்லாமல் அது இருக்க முடியாது.

நீங்கள் யாரையாவது அன்படன் பிடித்துக் கொண்டு இருக்கும் போது உங்களது உடலைக் கவனியுங்கள் என்று நான் கூறுகிறேன். அப்போது என்ன நடக்கிறது? மற்றவர்களின் அன்போடு தொடர்புடைய உங்களது உடலின் அந்தப் பகுதி யானது அடுத்தவரின் அன்பை உணர்கிறது. அது அதிக உயிர்த்துடிப்புள்ளதாக ஆகிறது. யாராலும் கொடுக்க முடியாத அன்பினை அன்பு கொடுக்கிறது.

தியானிப்பவர் குளிரில் உறைந்து இருக்கிறார். புத்தருக்கு பளிங்கு சிலைகள் முதன் முதலில் உருவாக்கப்பட்டது ஏதோ எதிர்பாராமல் நடந்தது அல்ல. அவர்தான் முதல்மனிதர், மேலும் பளிங்கு அவருக்கு முற்றிலும் பொருந்துகிறது. அவர் அந்த பளிங்கைப் போன்று குளிர்ச்சியாகவும் இருக்கிறார் மேலும் அந்த பளிங்கு போன்று அமைதியாகவும் இருக்கிறார். ஆனால் அவர் ஒரு மனிதர் என்பதை விடவும் ஒரு சிலை போன்று அதிகம் இருக்கிறார்.

ஒரு சூஃபியின் சிலையை உங்களால் உண்டாக்க முடியாது ஏனெனில் அந்த சிலையானது அந்த சூஃபியின் நடனத்தை வெளிப்படுத்தாது. அந்த சிலையானது அவரது பாடலை வெளிப்படுத்தாது. அந்த சிலையானது அவரது அன்பை வெளிப்படுத்தாது. அவரது பிரார்த்தனையை, அல்லது நன்றி உணர்வை வெளிப்படுத்தாது. அவரது பரவச நிலை பைத்தியக்கார செயல்களை அந்த சிலையானது வெளிப்படுத்த முடியாது. தியானிப்பவருக்கு மட்டுமே சிலைகள் உண்டாக்க முடியும். தியானிப்பவர், குளிர்ந்த அமைதியான, வெறுமையான

ஒரு சிலையாக இருக்கிறார். வெறுமை என்பதில் ஒரு விதமான தூய்மை இருக்கிறது. அது உண்மை தான், ஆனால் அதில் ஏதோ ஒன்று தவறவிடப்பட்டுள்ளது. செழிப்பு அதில் காணாமல் உள்ளது உயிர் அதில் காணாமல் போயுள்ளது. உயிருள்ள மகிழ்ச்சி அதில் காணாமல் போய் விட்டது.

இணைதல் மூலம் செல்கின்ற பாதையில் பயணிப் பவர்களுக்கு இதுதான் நடக்கிறது. அவர்களின் பாதையானது உயிருடன் ஒன்று கலத்தல், வெறுமனே இரண்டு காதலர்கள் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவி, ஒருவரை ஒருவர் ஊடுருவி, உடல் அளவில் மட்டுமல்ல ஆன்மாவின் அளவிலும் கூட, கரைந்து போய்விடும் போது ஒருவிதமான இணைதல் எழுகிறது. இரண்டு தனிமனிதர்கள் ஒன்றாகி விடுகின்றனர். ஆனால் இந்த இரண்டு தனிமனிதர்கள் ஒன்றாகும் போது, உண்மையில் மூன்று விஷயங்கள் ஒன்றாகின்றன. காதலன், காதலி மற்றும் காதல்.

காதல் என்பது காதலர்களுக்கு மிகவும் திடமான விஷயம். உண்மையில் காதலனும், காதலியும் காதல் என்னும் உண்மை நிலையோடு ஒப்பிடும் போது அவர்கள் ஒன்று மற்றவர்கள். அவர்கள் ஒருவரிடம் இருந்து ஒருவர் தனித்து இருப்பதை விடவும் காதலானது மேலும் அதிக உண்மையானதாகும். ஆகவே காதலர்கள் சந்திக்கும் போது மூன்று விஷயங்கள் சந்திக்கின்றன.

இதை குறிப்பிட்டு காட்டுவதற்காக, இந்தியாவில் மூன்று நதிகள் சந்திக்கின்ற பிரயாகை என்னும் அழகிய புனித இடத்தை நாங்கள் உருவாக்கி இருக்கிறோம். அதில் இரண்டு நதிகள் கண்களுக்கு தெரியும். மூன்றாம் கண்களுக்கு தெரியாது. ஒன்று கங்கை நதி, நன்றாக தெரிவது, அடுத்தது யமுனை நதி, இதுவும் நன்றாக தெரிவது. மூன்றாவதாக சரஸ்வதி நதி இருக்கிறது. யாரும் அதைப் பார்க்க முடியாது. அது அங்கு உள்ளது. அதை வெறுமனே நம்பப்பட வேண்டும். அது கண்ணுக்குத் தெரியாது.

அறிவியல் பூர்வமான மனதிற்கு இது அர்த்தமற்றதாக தெரிகிறது. கண்ணுக்குத் தெரியாத நதி ஒன்று எப்படி இருக்க

முடியும்? யாரும் அதைப் பார்த்தது கிடையாது, ஆனால் இந்துக்கள் அங்கு மூன்று நதிகள் சங்கமிக்கின்றன என்று கூறிக் கொண்டே போகிறார்கள். இரண்டு நதிகள் இந்த உலகை சார்ந்தவை மூன்றாம் நதி அடுத்த உலகைச் சார்ந்தது. இரண்டு நதிகள் இந்த பூமியைச் சார்ந்தவை. மூன்றாம் அப்பால் உள்ள ஒன்றைச் சார்ந்தது.

இது உண்மையில் காதலின் உருவகம். இரண்டு காதலர்கள் சந்திக்கும் போது, மூன்று விஷயங்கள் சந்திக்கின்றன, மூன்று நதிகள் சந்திக்கின்றன, இரண்டு இந்த பூமி சார்ந்தது, ஒன்று அப்பால் உள்ளது. இரண்டு கண்களுக்கு தெரிவது. காதலனையும், காதலியையும் உங்களால் பார்க்க முடியும் ஆனால் உங்களால் காதலைப் பார்க்க முடியாது. அது தான் இந்த இரண்டையும் விட அதிக மதிப்பு மிக்கது. உண்மையில் இந்த மூன்றாம் விஷயத்திற்காகத் தான் அந்த இரண்டும் சந்திக்கின்றன. அந்த மூன்றாவதில் தான் இரண்டும் கரைந்து போகின்றன. ஆனால் இரண்டும் கரைந்து விடும் போது, மூன்றாம் கூட கரைந்து விடுகிறது. ஆனாலும் கூட மீண்டும் இது ஒரு முற்றிலும் வேறுபட்ட விஷயமாக உள்ளது.

பகாவுதீன், புத்தரிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர். ஹக்கிம் சனாய் சோசனிடமிருந்து முற்றிலும் வேறுபட்டவர். இதில் உள்ள வேறுபாடு என்ன வென்றால் புத்தர் முற்றிலும் காலியானவராக இருப்பார். பகாவுதீன் முற்றிலும் நிறைந்து இருப்பார். புத்தர் அமைதியாக, குளிர்ச்சியாக, தனியாக, பிரிந்து, மௌனமாக இருப்பார், பகாவுதீன் அபரிமிதமான பரவச நிலையில் நடனமாடிக் கொண்டு இருப்பார். புத்தர் வெறுமனே அமைதியாக இருப்பார். பகாவுதீன் பேரானந்தத்தோடும் கூட இருப்பார் அவருக்கு அமைதி இரண்டாவதாக இருக்கும், பேரானந்தம் முதன்மையானதாக இருக்கும். புத்தரிடம் அமைதி முதலாவதாகவும், பேரானந்தம் கண்களுக்கு தெரியாததாக இருக்கும். பகாவுதீனிடம் பேரானந்தமானது அங்கு நடனமாடிக் கொண்டு இருக்கும். கண்களுக்கு தெரிவதாக இருக்கும், நீங்கள் கிட்டத்தட்ட அதை தொட்டு உணர முடியும், ஆனால்

அமைதியானது மறைந்து இருக்கும். அமைதி என்பது வெறும் ஒரு நிழல் போன்று இருக்கும். நீங்கள் அதை யூகிக்க மட்டுமே முடியும். ஆனால் உங்களால் அதைத் தொட முடியாது. சோசனிடம் நீங்கள் தூய்மையான வெறுமையைக் காணலாம். ஆனால் சனாயிடம் நிறைவை, முழுமையான நிறைவை, பொங்கி வழிகின்ற நிறைவை நீங்கள் காணலாம்.

அப்பால் உள்ளதை நீங்கள் சந்திப்பதற்கான வழிகள் இந்த இரண்டாகும். ஒன்று நீங்கள் புத்தரைப் போல முற்றிலும் மறைந்து விடுங்கள் அல்லது ஒரு சூஃபியைப் போல, ஒரு பக்தனைப் போல முழுமையாக ஆகிவிடுங்கள். **தூய மனிதன் இரண்டில் ஒன்றாக இணைகிறான், பக்தன் மூன்றில் ஒன்றாக இணைகிறான்.**

அதனால் தான் சனாய் அவரது பாதையை "தோட்டத்தின் பாதை என்று அழைக்கிறார். தியானிப்பவரின் பாதை ஒரு வகையான பாலைவனம் போன்றது. பாலைவனம் அதற்கே உரிய ஒரு அழகைக் கொண்டுள்ளது. நீங்கள் இரவில் ஒரு பாலைவனத்தில் இருந்தால், நீங்கள் எங்குமே காணமுடியாத ஒரு குளிர்ச்சி அங்கு இருக்கும். அங்கு அளவில்லாத அமைதியும், எல்லையற்று இருக்கும். அதற்கென்று ஒரு ருசியை அது பெற்றிருக்கிறது. இரவில் நட்சத்திரங்களுக்கு கீழாக, நீங்கள் பாலைவனத்தில் தனியாக இருந்தால், அந்த தனிமையை உங்களால் வேறு எங்கும் ஒருபோதும் காண முடியாது."

இந்த பூமியில் பாலைவனத்தை தவிர வேறு எந்த இடத்திலும் முழுமையான தனிமை இருக்காது. அங்கு பல வகையானவை கிடையாது, எனவே உங்களது கவனத்தை திசை திருப்ப முடியாது. அங்கு மைல் கணக்கில் வெறும் மணல் வெளிதான் இருக்கும். தொடுவானம் வரையில் உங்களால் பார்க்க முடிந்த தூரத்திற்கு ஒன்றுமே இருக்காது. அதே காட்சிதான் மேலும் மேலும் நீண்டு கொண்டே செல்லும். உங்கள் மனதை திசை திருப்பாது.

அதனால் தான் தியானம் செய்பவர்கள் பாலைவனத்திற்கு நகர்ந்து சென்றனர். காலம் காலமாக அநேக மக்கள் பாலை

வனத்திற்கு நகர்ந்துள்ளனர். அங்குள்ள அமைதியும், மனதை திசை திருப்பாத சூழ்நிலையும் தான் அதற்கு காரணம். எதுவும் கவனத்தை திசை திருப்பாது, எதுவும் நகராது, எல்லாமே முழு அமைதியாக இருக்கும். மரணம் மட்டுமே பாலை வனம் போன்று அமைதியாக இருக்க முடியும். பாலைவனம் அதற்கே உரித்தான அழகைக் கொண்டுள்ளது. ஆனால் அதில் செழிப்பும், பல வகையான இனங்களும் இருக்காது.

தோட்டத்தில் பலவகையானவை இருக்கிறது. அநேக மரங்கள், அதிக பசுமையான கிளைகள், மலர்கள், அநேக நிறங்கள், பறவைகள் பாடும், ஓடையில் நீர் ஓடிக்கொண் டிருக்கும், ஓடும் நீரின் ஓசை மற்றும் சவுக்கு மரங்களின் ஊடே கடந்த செல்லும் காற்றின் ஒலி ஆகியவை இருக்கும். இது போன்று ஆயிரம் விஷயங்கள் ஒரு சேர நடந்து கொண்டிருக்கும். தோட்டம் நிறைந்து இருக்கும், பாலைவனம் காலியாக இருக்கும்.

தியானம் செய்கிறவனின் உயிர் உணர்வானது ஒரு பாலைவனம் போல ஆகிவிடுகிறது. ஆனால் ஒரு பக்தனின் உள் உணர்வானது ஒரு தோட்டம் போன்று ஆகிவிடுகிறது. அதனால் தான் சனாய் இந்த சூத்திரங்களைக் கடிகா, தோட்டம் என்று அழைத்தார்.

என்றாலும் கூட அது உங்களைப் பொருத்து உள்ளது. ஒருவர் தோட்டத்தை விடவும் பாலைவனத்தை அதிகம் விரும்பலாம். அதன் பின்னர் அது தான் அவருடைய பாதையாகும். அதில் எந்தத் தவறும் இல்லை. ஒருவர் அந்தப் பாதையில் போகத்தான் வேண்டும். ஒருவர் தனக்குள் உற்றுப் பார்த்து தனது சக்தியை, தனது சாத்தியங்களை, தன்னுடைய மனம் எந்தப் பக்கம் சாய்கிறது என்பதை கண்டு கொள்ள வேண்டும்.

ஒரு தோட்டமானது உங்களுக்கு ஒரு பாலைவனம் மாதிரியோ அல்லது பாலைவனம் ஒரு தோட்டம் மாதிரியோ இருப்பதற்கான சாத்தியம் உள்ளது. ஏனெனில் ஒரு மனிதனுக்கு உணவாக இருப்பது அடுத்த மனிதனுக்கு விஷம் போன்று இருக்கலாம். ஒரு காதலன், ஒரு பக்தனின் உலகம் அதிக

செழிப்பானது என்று சனாய் கூறுகிறார். இது ஒரு பக்தன் தனது உலகத்தைப் பற்றி பேசுவது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

*உனது அறியாமையும் முட்டாள்தனமும்*
*வெறுமனே உன்னை பாலத்தில் நிற்கும் படி*
*செய்து விடுமோ என்று நான் பயப்படுகிறேன்.*

ஆனால் ஒரு விஷயத்தை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள் என்று சனாய் கூறுகிறார். ஒவ்வொரு குருவும் இதைக் கூறியே ஆகவேண்டும். ஏனெனில் இந்த பிரச்சினை இரண்டு பாதைகளிலும் உண்டு. அந்த பிரச்சினை என்ன வென்றால் ஒருவன் பாலத்திலேயே நின்று விடலாம். ஒரு பக்தன் மிகவும் பக்திக்கு அடிமை ஆகிவிடலாம், அதன் பின்னர் அவன் பாலத்தில் நின்று விடுவான். பக்தி என்பது ஒரு பாலம், தியானம் என்பது ஒரு பாலம். எனவே நீங்கள் பாலத்திற்கு அப்பால் போக வேண்டும்.

முடிவான நிலையில், தியானம் செய்பவன் தனது தியானத்தை கைவிட்டாக வேண்டும், மேலும் பக்தன் தனது பக்தியை எல்லாம் மறந்தாக வேண்டும். அப்படி இல்லை எனில் நீங்கள் கதவிற்கு மிகவும் நெருக்கத்தில் இருப்பீர்கள். ஆனால் உங்களால் கோயிலுக்குள் நுழைய முடியாது. எனவே நீங்கள் கடைபிடித்த செய்முறையானது மறக்கப்பட வேண்டும்.

ஒவ்வொரு செய்முறையும் ஒரு கட்டுமரம் ஒரு படகு போன்றது என்று புத்தர் கூறுகிறார். அடுத்த கரைக்கு போவதற்கு அதை நீங்கள் பயன்படுத்துங்கள். அதன் பிறகு அதை அங்கேயே விட்டு விடுங்கள். அதைப் பற்றி எல்லாம் மறந்து விட்டு உங்களது பாதையில் செல்லுங்கள். அந்த கட்டுமரத்தை உங்களது தலையில் சுமந்து கொண்டு செல்ல வேண்டிய அவசியம் கிடையாது. கட்டுமரத்தை தலையில் நீங்கள் சுமந்து கொண்டு சென்றால் அதன் பின்னர் நீங்கள் வெறும் முட்டாள். ஆனால் இதுதான் நடந்து கொண்டு இருக்கிறது. பல கோடி மக்கள் தங்களின் செயல் முறைகளுக்கு அடிமையாகி இருக்கின்றனர். செயல்முறை யானது அடிமையாகி விடும்படி இருக்கும். ஏனெனில் அது அந்த அளவுக்கு அழகான அனுபவங்களைக் கொடுக்கும்.

கடைசித் தடை உங்களது செயல்முறையாகத் தான் இருக்கிறது. கடைசித் தடை பாலமாகத்தான் இருக்கிறது. வெறுமனே இந்த விஷயத்தைப் பார். இது மிகவும் முரண்பாடானது. பாலம் உன்னை அடுத்த கரைக்கு எடுத்துச் செல்கிறது. நிச்சயமாக அது ஒரு உதவிதான், மேலும் நீங்கள் அதற்கு நன்றி உள்ளவராக இருக்க வேண்டும். ஆனால் அதுவே ஒரு பிரச்சினையாகவும் ஆகிவிடமுடியும். அந்த பாலத்தின் மீது ஆசை கொண்டு அதன் பின்னர் உங்களது வீட்டை அந்த பாலத்தின் மீது கட்டிவிடலாம். எனவே நீங்கள் பாலத்திலேயே வசிக்க ஆரம்பித்து விட்டால் நீங்கள் இந்தக் கரையிலும் இருக்க மாட்டீர்கள், அந்தக் கரையிலும் இருக்க மாட்டீர்கள். நீங்கள் இரண்டும் கெட்டானாக இருப்பீர்கள். மேலும் அநேக சமய செயல் முறைகளை பயிற்சி செய்பவர்கள் இப்படி இரண்டும் கெட்டானாகவே இருக்கிறார்கள். அவர்கள் இந்த உலகைச் சார்ந்தவர்களாகவும் இருப்பதில்லை அல்லது அந்த உலகைச் சார்ந்தவராகவும் இருப்பதில்லை. அவர்கள் பாலத்திற்கு அடிமையாகி விட்டார்கள்.

ஆனால் பாலம் மிகவும் அழகானது. அதனால் தான் சனாய் பயப்படுகிறார். ''நான் பயப்படுகிறேன்'' என்று சனாய் கூறுகிறார். **உனது அறியாமையும் முட்டாள்தனமும், வெறுமனே உன்னை பாலத்தில் நிற்கும்படி செய்து விடுமோ என்று நான் பயப்படுகிறேன்.** ஆரம்பத்தில் ஒவ்வொரு சீடனுக்கும் இது சொல்லப்படவேண்டும். ''இதுவரை உங்களுக்கு உதவிய செயல்முறையானது கைவிடப்பட வேண்டும். அதன் வேலை முடிந்து விட்ட பின்னர் அதை சுமந்து கொண்டு செல்லாதீர்கள். ஒரு சிறு நொடிப் பொழுது கூட அதிகமாக அதை சுமந்து செல்லாதீர்கள். உங்களது நோயானது போய்விட்டால், நீங்கள் மருந்தினை கைவிட்டு விடவேண்டும். நீங்கள் மருந்தினை தொடர்ந்து சாப்பிட்டால் அதன் பின்னர் அது உங்களது நோயாக ஆகிவிடும்.''

எல்லா செய்முறைகளும் செய்முறைகளே, எல்லா வழிகளும் வெறும் வழிகளே. மேலும் நீங்கள் இறுதி நிலையை அடைய விரும்பினால் நீங்கள் எல்லா வழிகளையும், எல்லா

செய்முறைகளையும் கைவிடவேண்டும். அது ஒன்று மட்டுமே இறுதி நிலைக்குள் நுழைவதற்கான வழியாகும். பக்தன் தனது பக்தியைப் பற்றி மறந்தாக வேண்டும். மேலும் தியானம் செய்பவன் தியானத்தைப் பற்றி எல்லாம் மறந்தாக வேண்டும். ஆம், ஒரு தருணம் வருகிறது. அப்போது தியானம் செய்பவர் தியானம் செய்ய மாட்டார் ஏனெனில் அவரே தியானமாக ஆகிவிடுகிறார். இப்போது தியானம் என்பது தனிப்பட்ட செயல் அல்ல, அவனே பக்தியாக மாறிவிட்டதால் பக்தன் பக்தி செலுத்த மாட்டான். பக்தியைத் தவிர அங்கு வேறு யாரும் இருக்க மாட்டார்கள். பக்தி என்பது அவனது உயிர் உணர்வாக ஆகிவிடும். அவன் அதைப் பற்றி எல்லாம் மறந்து விடுவான்.

கபீர் என்னும் மாபெரும் இந்திய சூஃபி கூறுகிறார்:

எனது பிரபுவை நான் சந்தித்த நாள் முதல்

எங்களது நேசம் என்னும் விளையாட்டிற்கு முடிவே இல்லை....

கண்களைத் திறந்து நான் பார்த்து சிரிக்கிறேன்,

அவனது அழகை எங்கும் காண்கிறேன்.

நான் அவரது பெயரைச் சொல்கிறேன்.

நான் எங்கு பார்த்தாலும் அது எனக்கு அவரை நினைவு படுத்துகிறது

நான் எதைச் செய்தாலும் அது வழிபாடாக ஆகிறது.

நான் எங்கு சென்றாலும், அவரைச் சுற்றியே நான் செல்கிறேன்

நான் சாதித்தது எல்லாம் அவரது சேவையே.

ஒரு பக்தன் அல்லது தியானம் செய்பவனின் ஒவ்வொரு செயலும் அவனது தியானம் அல்லது பக்தியில் ஒன்றாகி விடுகிறது. மெதுவாக மெதுவாக அங்கு செய்பவன் என்பவன் இருக்க மாட்டான். தங்களைப் பற்றிய தன்னுணர்வு இல்லாமலேயே

மரங்கள் மலர்வது போல, தியானம் செய்பவனும் தன்னுணர்வு இல்லாமல் தியானமாக இருப்பான். பக்தன் தன்னுணர்வு இல்லாமல் பக்தியாக இருப்பான். ஆனால் மனிதனின் முட்டாள் தனமானது பிரச்சினையை உருவாக்க முடியும்.

உனது பக்தி விசுவாசம் சோதிக்கப்பட்டு விட்டது. அது அசைக்க முடியாததாய் இருப்பதை நான் கண்டு கொண்டேன். எனவே நீ போய்த்தான் ஆக வேண்டும்''என்கிற வார்த்தை களோடு நஜ்மைனி என்னும் சூஃபி குரு ஒரு மாணவனை வெளியேற்றினார்.

உடனே அந்த மாணவன், ''நான் போகிறேன், ஆனால் பக்தி விசுவாசம் என்னை வெளியேற்றுவதற்கு எப்படி ஒரு காரணமாக இருக்கமுடியும் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடிய வில்லை'' என்று கூறினான்.

அதற்கு நஜ்மைனி, ''இத்தனை வருடங்களாக நாங்கள் உனது பக்தி விசுவாசத்தை பரிசோதித்தோம். பயனற்ற அறிவு மற்றும் மேம்போக்கான தீர்மானங்களுக்கான உனது பக்தி விசுவாசம் நிறைவடைந்து விட்டது. அதனால் தான் நீ கண்டிப்பாக போய் ஆக வேண்டும்'' என்றார்.

பயனற்றவற்றின் மீதுள்ள பக்தி விசுவாசம் முட்டாள் தனமானது. பக்தி விசுவாசம் எப்போதும் நல்லதல்ல, நிபந்தனைகள் இன்றி நல்லதல்ல. பயனற்றவற்றிற்கான பக்தி விசுவாசம் ஒரு ஆபத்தான விஷயம். தங்களது முட்டாள் தனத்தின் மீது நம்பிக்கையோடு இருக்கிற மக்கள் இங்கு இருக்கிறார்கள். தங்களின் தப்பெண்ணங்களின் மீது நம்பிக்கையோடு இருக்கிற மக்கள் இங்கு இருக்கிறார்கள், தங்களது அறியாமையின் மீது மற்றும் தாங்கள் சேர்த்து வைத்துள்ள எல்லாவற்றின் மீது பற்றுதலோடு இருக்கின்ற மக்கள் இங்கு உள்ளனர். இது பயனற்றது. இது தீங்கானதாக கூட இருக்கலாம். இது விஷமானதாகக் கூட இருக்கலாம். ஆனால் மக்கள் எதை வைத்திருந்தாலும் அதோடு பற்றுதலுடன் இருக் கின்றனர். அது போவதற்கு அவர்களால் விட்டுவிட முடியாது.

அப்படி இருக்கும் போது அழகான அனுபவங்களை ஆன்மிக அனுபவங்களைப் பற்றி என்ன சொல்வது? மக்கள் தங்களது துன்பத்தோடு கூட அடிமையாகி இருக்கிறார்கள். அவர்களால் தங்களது துன்பத்தை கைவிட முடிவதில்லை. அவர்கள் கஷ்டப்பட்டுக் கொண்டே தான் இருக்கிறார்கள் ஆனால் அவர்களால் அதைக் கைவிட முடியவில்லை. துன்பத்தில் இருந்து தங்களைப் பிரித்துக் கொள்வதற்கு அவர்களால் முடிவதில்லை. அப்படி இருக்கும்போது பக்தி மற்றும் தியான அனுபவங்களின் பரவச நிலைகள் பற்றி என்ன செய்ய முடியும்? இந்த ஆபத்து இருக்கிறது.

ஒருவர் வேதனையின்மீது அதிக பற்றுதலோடு இருந்தால், அவரால் பக்தி மற்றும் தியானத்தின் பாதையில் நடக்கின்ற அந்த முற்றிலும் சந்தோஷமான அனுபவங்களுக்கு சுலபமாக பற்றுதல் கொண்டு விட முடியும். ஒருவர் அந்த பாலத்தில் நின்று விட நேரிடும் என்பதை நினைவில் கொள்ளுங்கள்!

நீங்கள் பற்றிக் கொண்டு இருக்கும் அளவுக்கு எந்த ஒரு செய்முறையும் மதிப்பு மிக்கது அல்ல. அதை பயன்படுத்துங்கள், ஆனால் அதை புத்திசாலித்தனமாக பயன்படுத்துங்கள். அது உபயோகமானதாக இருக்கும் போது பயன் படுத்துங்கள், உங்கள் வளர்ச்சிக்கு அது உதவும் போது அதைப் பயன்படுத்துங்கள். இப்போது நீங்கள் அதை போதுமான அளவு பயன்படுத்தி விட்டபின், உங்களது வளர்ச்சிக்கு அதனால் இனிமேல் உதவி இருக்காது என்கிற அந்த நொடிப் பொழுதில் அதைப் பயன் படுத்துவதை நிறுத்திவிட்டு அது கைவிடப் படவேண்டும்.

ஒரு குரு அநேக விஷயங்களுக்கு தேவை. இதுவும் கூட ஒரு தேவை தான். சீடனுக்கு மிகவும் முக்கியமான தேவை. ''இப்போது போதும் நிறுத்தி விடு'' என்று சரியான தருணத்தில் சீடனிடம் கூறுவதற்கு குரு அவசியம் தேவை. ''நீ இந்த செயல்முறையை பயன்படுத்தினாய், உனக்கு இது மிகவும் உதவிகரமாக இருந்தது. ஆனால் இதற்கு மேலும் இதை சுமந்து கொண்டு செல்வது அழிவுக்குரியதாக இருக்கும்'' என்று உங்களுக்கு கூறுவதற்கு ஒரு குரு அவசியம் தேவை.

இப்படிப்பட்ட முட்டாள் தனங்களுடன் மக்கள் வாழ்வதைப் பார்த்தால், அவர்கள் எப்படி சமாளிக்கிறார்கள் என்று நீங்கள் ஆச்சரியம் அடைவீர்கள். அவர்கள் தங்களை எப்படி இந்த அளவுக்கு முட்டாள் ஆக்கிக் கொண்டு இருக்கிறார்கள்?

இது நான் கேள்விப்பட்டது.....

இரண்டு அயர்லாந்து கத்தோலிக்க தொழிலாளர்கள் எல்லாருக்கும் தெரிந்த விலை மாது வசிக்கின்ற வீடு உள்ள தெருவில் பூமிக்கு அடியில் புதைக்கப்பட்டுள்ள கேபிள்களை சரி செய்து கொண்டு இருந்தனர். அவர்களை அந்த தெரு முழுவதும் பார்க்கின்ற சௌகரியம் இருந்தாலும் கூட அவர்களை யாரும் கவனிக்கமுடியாது.

அப்போது ஒரு யூதமதகுரு தன்னை யாரும் பார்க்கிறார்களா என்று எல்லா திசைகளிலும் பார்த்துக் கொண்டு விரைவாக அந்த வீட்டிற்குள் சென்றார். உடனே அந்த தொழிலாளிகளில் ஒருவனான பேட், மைக் என்பவனின் பக்கம் திரும்பி, ''இதோ பார் அழுக்கடைந்த எதற்கும் பயன்படாத அந்த யூதன் அந்த தீய வீட்டிற்குள் போகிறான்'' என்றான்.

கொஞ்ச நேரம் கழித்து அவர்கள் மெதாடிஸ்ட் தேவா லயத்தை சேர்ந்த ஒருவர் அதே போன்று அங்கும் இங்கும் பார்த்துவிட்டு விரைவாக அந்த வீட்டிற்குள் சென்றார். மீண்டும் பேட், மைக்கிடம், ''பார் அந்த வேசிமகன் அந்த தீய வீட்டிற்குள் பதுங்கிக் கொண்டு செல்கிறான்'' என்று கூறினான்.

பின்னர் ஒரு மணி நேரம் கழித்து ஒரு பார்ஷ் பாதிரியார் அந்தத் தெருவிற்கு வந்து, கவனமாக எல்லா திசைகளிலும் பார்த்துவிட்டு அந்த வீட்டிற்குள் நுழைந்தார். உடனே பேட், மைக் பக்கம் திரும்பி, ''அப்பாவி பாதிரியார் உள்ளே செல்கிறார், அந்த இடத்தில் யாருக்கு உடல் நலம் சரியில்லை என்று எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது'' என்று கூறினான்.

இப்போது இது வித்தியாசமாக இருக்கிறது. இப்போது உங்களது சொந்த பாதிரியார் வரும்போது, உங்களது ஒட்டு மொத்த பொருள் விளக்கமும் மாறுகிறது. இதுதான் முட்டாள்

தனம். தனது தப்பெண்ணங்கள், பற்றுதல்கள், அடிமைப்பட்டு கிடக்கும் விஷயங்கள் ஆகியவற்றை கண்டு கொள்கின்ற திறமை இல்லாமல் இருப்பது தான் முட்டாள்தனம். மனிதன் உண்மையில் மிகவும் முட்டாளாக இருக்கிறான்.

இதை விஞ்ஞானிகள் ஒரு சின்ன கதை மூலம் விளக்கு கின்றனர். நீங்கள் அநேக அறைகள் கொண்ட ஒரு கூண்டிற்குள் ஒரு எலியை விட்டு, ஏழாவது அறையில் நீங்கள் கொஞ்சம் பாலாடைக் கட்டியை வைத்து விட்டால், அதன் பின்னர் அந்த எலியானது எல்லா இடத்திற்கும் சென்று, எல்லா அறைகளையும் தேடி கடைசியில் ஏழாவது அறையில் உள்ள பாலாடைக் கட்டியைக் கண்டு பிடித்து விடுகிறது. இப்படி நீங்கள் ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை செய்யுங்கள். அதன் பிறகு எலியானது உடனடியாக ஏழாவது அறைக்கு போகிறது. பாலாடைக் கட்டி எங்கு உள்ளது என்று அதற்கு தெரிகிறது.

இப்படி அது ஏழாவது அறைக்கு போவதற்கு பழக்கமாகி விட்ட பின்னர் நீங்கள் அதை மாற்றுங்கள். நீங்கள் பாலாடைக் கட்டியை மூன்றாம் அறையில் வைத்து விடுங்கள். அந்த எலி ஏழாவது அறைக்கு பாய்ந்து செல்லும், அது சுற்றுமுற்றும் பார்க்கும், பாலாடைக் கட்டி இருக்காது, கொஞ்சம் ஆச்சரியப் படும், அது வீடு முழுவதும் சுற்ற ஆரம்பித்து விட்டு எல்லா திசைகளிலும் தேடும். ஒருமுறை அல்லது இருமுறை ஏழாவது அறைக்கு மீண்டும் நம்பிக்கையுடன் அது போகும். ஆனால் கூடிய விரைவில் அது பாலாடைக் கட்டியை மூன்றாம் அறையில் கண்டு பிடித்து விடும். அதன் பின்னர் அது ஏழாவது அறைக்கு செல்வதை நிறுத்திவிடும்.

மனிதனிடம் அப்படி இல்லை. அவன் தனது வாழ்நாள் முழுவதும் ஏழாம் எண் அறைக்கே தொடர்ந்து போய்க் கொண்டு இருப்பான். அங்கு பாலாடைக்கட்டி காணப்படவில்லை என்றாலும் கூட மனிதனுக்கு அது ஒரு பொருட்டாகாது. ஏழாம் எண் அறைமீது அவனுக்கு விசுவாசம், அவனது பக்தி, அவனது நிலையான தன்மை ஆகியவை இருக்கும். அவனால் எப்படி மாற முடியும்?

பாலாடைக்கட்டி கிடைக்கிறதோ அல்லது இல்லையோ கிறிஸ்தவன் தேவாலயத்திற்கு செல்கிறான். இந்துக்கள் கோயிலுக்கு போகின்றனர். பாலாடைக் கட்டியானது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மறைந்து விட்டது. பௌத்தர்கள் புத்தரை வழிபட்டுக் கொண்டே செல்கின்றனர். ஆம், அங்கு பாலாடைக் கட்டி இருந்தது. ஆனால் அதன் பின்னர் இருபத்து ஐந்து நூற்றாண்டுகள் கடந்து விட்டது. இப்போது பாலாடைக் கட்டி இங்கு இருக்கிறது!

மனிதன் அது போன்று இருக்கிறான். இந்த பூமியில் மனிதன் மட்டுமே முட்டாள்தனமான விலங்கு. எந்த ஒரு விலங்கினமும் அந்த அளவுக்கு முட்டாளாக இல்லை. அந்த வகையில் எல்லா விலங்குகளும் கெட்டிக்காரத்தனத்துடன் இருக்கின்றன. அந்த வழியில் புத்திக் கூர்மையுடன் இருக்கின்றன. பாலாடைக் கட்டியானது அங்கு இருக்கிறதா அல்லது இல்லையா என்று எலியானது எப்போதும் அங்கு போய்க் கொண்டே இருக்கும் என்று நீங்கள் எதிர்பார்க்கமுடியாது. குறைந்த பட்சம் அது உஷாராகவாவது இருக்கும். பாலாடைக் கட்டி இல்லை என்றால் முடிந்து விட்டது! நீங்கள் எந்த ஒரு பாலாடைக் கட்டியையும் அதில் காணவில்லை என்றால் நீங்கள் ஏன் குர்ஆனை ஓதிக் கொண்டே போகிறீர்கள்? ஏனெனில் உங்களது தந்தைமார்கள் ஓதிக் கொண்டு இருந்தார்கள். ஆனால் அவர்களும் கூட பாலாடைக் கட்டியை கண்டு கொள்ள முடியவில்லை. ஆனால் அவர்கள் அதை ஓதிக் கொண்டு இருந்தார்கள். ஏனெனில் அவர்களின் தந்தைமார்கள் அதை ஓதிக்கொண்டு இருந்தார்கள். இப்போது பாருங்கள், நீங்கள் மட்டும் ஏழாம் எண் அறைக்கு போவதோடு மட்டுமல்லாமல், உங்களது குழந்தைகளும் கூட போகும். உங்களது குழந்தைகளின் குழந்தைகளும் தொடர்ந்து போகும். இது முட்டாள்தனமானது!

ஆழ்ந்த சிந்தனையில் அமர்ந்திருந்த ஒரு சூஃபி குருவிடம் ஒரு நாடோடி முஸ்லிம் துறவி ஓடிவந்து, ''சீக்கிரம்! நாம் ஏதாவது செய்தாக வேண்டும் ஒரு குரங்கின் கையில் கத்தி ஒன்று கிடைத்து விட்டது'' என்று கூறினார்.

அதற்கு அந்த குரு, ''அது மனிதனாக இல்லாத வரையில் நீ கவலைப்படாதே'' என்று கூறினார்.

அந்த முஸ்லிம் துறவி மீண்டும் குரங்கைப் பார்த்த போது குரு நிச்சயித்து கூறியது போல அந்த குரங்கு கத்தியை தூர வீசி எறிந்து விட்டது.

விலங்குகள் அவற்றுக்கே உரித்தான உள்ளுறைந்துள்ள புத்திக் கூர்மையைப் பெற்றுள்ளன. மனிதனைப் போல எந்த ஒரு விலங்கும் முட்டாளாக இல்லை. அதற்கான காரணம் என்னவெனில் எந்த ஒரு மிருகமும் அதன் தலையின் மூலம் வாழ்வதில்லை. விலங்குகள் தங்களது அனுபவத்தின் மூலம் வாழ்கின்றன. நீங்கள் உங்களது தலையின் மூலம் வாழ்கிறீர்கள். நீங்கள் உங்களது வாழ்க்கை குறித்து ஏற்கனவே தயாரித்து வைத்துள்ள ஒரு திட்டத்தை உண்டாக்கி கொண்டு அதன் திட்ட வரைபடத்தை அப்படியே பின்பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள். அதை நீங்கள் பின்பற்ற வில்லை என்றால் நீங்கள் குற்ற உணர்வு கொள்கிறீர்கள். நீங்கள் தேவாலயத்திற்கு செல்ல வில்லை என்றால் குற்ற உணர்வு கொள்கிறீர்கள்.

அநேகம் பேர் என்னிடம் வந்து ''நாங்கள் பிரார்த்தனை செய்கிறோம் நாங்கள் தியானம் செய்கிறோம்'' என்று கூறுகின்றனர். உடனே நான் அவர்களிடம், ''அதன் மூலம் நீங்கள் வளர்ச்சி அடைந்து கொண்டு இருக்கிறீர்கள்?'' என்று கேட்கிறேன். ''ஒன்றும் கிடைக்கவில்லை'' என்று அவர்கள் கூறுகின்றனர். ஆனால் நாம் பிரார்த்தனை செய்யவில்லை என்றால் அதன் பின்னர் நாம் குற்ற உணர்வு கொள்கிறோம்.

இந்த முறை ஏழாம் எண் அறைக்கு போகவில்லை என்பதால் அந்த எலியானது குற்ற உணர்வு கொள்ளும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? ஏழாம் எண் அறை குறித்து அது என்ன அக்கறை கொள்ளப்போகிறது? அதன் அக்கறை எல்லாம் பாலாடைக் கட்டியின் மீதுதான் இருக்கும். நீங்கள் பிரார்த்தனை செய்து கொண்டே போகிறீர்கள். நீங்கள் குற்ற உணர்வு கொள்கிறீர்கள் ஏனெனில் உங்களது தந்தை உங்களை

பிரார்த்தனை செய்யும் படி கூறினார். உங்களது தாயார் உங்களை பிரார்த்தனை செய்யும்படி கூறினார். எனவே நீங்கள் பிரார்த்தனை செய்யவில்லை என்றால் உங்களது தாய்க்கும், தந்தைக்கும், துரோகம் இழைப்பதாக நீங்கள் உணர்கிறீர்கள்.

நீங்கள் உங்களது சொந்த புத்திசாலித்தனத்திற்குத் தான் துரோகம் இழைக்கிறீர்கள். அப்படி துரோகம் இழைப்பதைப் பற்றி மட்டுமே நீங்கள் கவலைப்பட வேண்டும். உங்களது புத்தி சாலித் தனத்திற்கு துரோகம் இழைக்காதீர்கள். உங்களது புத்திக்கூர்மைக்கு துரோகம் இழைக்காதபடி உஷாராக இருங்கள். அப்படி இல்லை என்றால் எந்த விதத்திலாவது பாலத்தில் நின்று கொண்டு இருப்பீர்கள், ஏனெனில் பாலமானது அளவுகடந்த அழகுள்ளது. அதைப் போன்ற எதையுமே நீங்கள் அறிந்த தில்லை. நீங்கள் தியான உலகில் நகர்ந்து சென்றால் உங்களுக்கு அழகான வண்ணமிகு அனுபவங்கள் வரும். அவை அந்த அளவுக்கு மிகவும் புதிர் நிறைந்த ஒன்றாக இருப்பதால் நீங்கள் அதில் நிச்சயமாக கட்டுண்டு கிடப்பீர்கள்.

உதாரணமாக, ஒருநாள் உங்களது முதுகுத் தண்டில் ஒரு மாபெரும் சக்தி எழுந்து அது அந்த அளவுக்கு குளிர்ச்சியாக இருப்பதை உணர்வீர்கள். திடீரென்று நீங்கள் அடுத்த உலகிற்கு சென்று விட்டதாக உணர்வீர்கள். நீங்கள் அந்த அளவுக்கு உயிர்த்துடிப்புடன், துடிப்பான வாழ்க்கையுடன் இருப்பீர்கள். அந்த சக்தியானது முதுகுத் தண்டில் மேலும் மேலும் உயரத்தில் நகர்ந்து செல்லும் போது நீங்களும் உயர உயர நகர்ந்து செல்வீர்கள். அதன் பின்னர் நீங்கள் இந்த பூமியில் இருக்க மாட்டீர்கள். நீங்கள் வேறு எங்கோ நகர்ந்து சென்றிருப்பீர்கள். அந்த அனுபவம் மிகவும் அழகானதாகவும், அந்த அளவுக்கு மனநிறைவோடும், மிகவும் இன்பமானதாகவும், அதோடு ஒப்பிடும் போது ஆயிரம் உடலுறவு உச்சக்கட்ட பரவச நிலைகளும் கூட ஒன்று மற்றவை என்பது போன்றும் இருக்கும். வெறுமனே அந்த சக்தியானது ஒருமுறை உங்களது முதுகுத் தண்டில் இருந்து கழுத்திற்கு ஊடுருவிச் செல்லும் போது கிடைக்கின்ற இன்பமானது ஆயிரம் உடலுறவின் உச்சகட்ட

பரவச நிலை அனுபவம் கூட ஒன்றுமில்லாதது போன்று ஆகிவிடும். அதன் பின்னர் நீங்கள் ஒவ்வொரு நாளும் உட்கார்ந்து கொண்டு, அதற்காக காத்துக் கொண்டு, அதற்காக பிரார்த்தனை செய்து கொண்டு, அதற்காக செயலாற்றிக் கொண்டு இருப்பீர்கள். அந்த சக்தியானது எப்படியாவது மேலே நகர்வதற்கு உதவி செய்வதற்கு நீங்கள் முயற்சிப்பீர்கள்.

இந்திய யோகிகள் எப்படி தலைகீழ் நிற்பதற்கு ஆரம்பித்தார்கள். என்பதை நீங்கள் அறிவீர்களா? இந்த அனுபவத்தால் தான் அவர்கள் அப்படி நிற்கிறார்கள். நீங்கள் உங்களது தலையில் நின்றால் அந்த சக்தியானது சுலபமாக நகர்ந்து செல்லும் என்பது இயல்பாக கண்டுபிடிக்கப்பட்டது. இயல்பாகவே புவி ஈர்ப்பு விசையானது வேலை செய்யும். அது உங்களது சக்தியை இழுக்கும். நீங்கள் நேராக உட்கார்ந்து, இருக்கும் போது அந்த சக்தியானது மேலே செல்வதற்கு கடினப்படும். ஏனெனில் அந்த சக்தியானது வழி நெடுகிலும் மேலே ஏற்றப்பட வேண்டும், மேலே இழுக்கப்பட வேண்டியதிருக்கும், புவிஈர்ப்பு விசைக்கு எதிராக மேலே இழுக்கப்பட வேண்டியதிருக்கும். முட்டாள் ஜனங்கள் இப்படி தலையில் நிற்கும் யோசனையை கண்டுபிடித்தார்கள். அப்போது அந்த சக்தியானது வெறுமனே சுலபமாக எந்தமுயற்சியும் இல்லாமல் ஏற்றப்படும் என்று முட்டாள்தனமாக நினைத்தனர்.

மேலும் சில சமயம் உங்களது தலையில் நிற்கும் போது அது நடக்கும், அது சுலபமாக போகும். ஆனால் நீங்கள் அதில் பிடிபட்டு, அங்கேயே நின்று விடுவீர்கள். அந்த அனுபவமானது மிகவும் அழகாக, அதிக அடுத்த உலகம் சார்ந்ததாக, மிகவும் உன்னதமாக, மிகவும் சுதந்திரமானதாக இருக்கும். இப்போது நீங்கள் ஒரு பெண் அல்லது ஆணைச் சார்ந்து இருக்க மாட்டீர்கள். நீங்கள் முற்றிலும் சுதந்திரமானவராக இருப்பீர்கள். எந்த ஒரு உடலுறவு அனுபவமும் இதுவரை கொடுக்காததை எல்லாம் நீங்கள் சுதந்திரமாக அனுபவித்துக் கொண்டு இருப்பீர்கள். ஆனால் நீங்கள் அதிலேயே நின்று விடுவீர்கள்.

இப்படித்தான் மக்கள் போதைப் பொருள்களுக்கு அடிமை ஆகின்றனர். இவை உங்களுக்குள் உள்ள போதைப் பொருள்கள்; இவை எல்லாம்கூட உங்களது உடல் இரசாயனத்தின் ஒரு பகுதியாகும். குண்டலினி என்பதில் எந்த ஒரு ஆன்மிகத் தன்மையும் இல்லை. உங்களது இரத்தத்தைப் போன்றே அதுவும் உடல் ரீதியானது. அது உண்மையில் உங்களது உடல் மின்சாரமானது முதுகுத்தண்டின் அடிப்பாகத்தில் ஒன்று சேர்ந்து இருப்பதாகும். அது உண்மையில் அளவுக்கு அதிகமாக இருக்கும்போது அது முதுகுத்தண்டில் உயரே எழுவதற்கு ஆரம்பிக்கிறது; எனவே மின்சாரமானது அப்படி நகர்ந்து செல்வது உங்களை கல் போன்று இருக்கச் செய்கிறது. ஆனால் உண்மையில் இது வித்தியாசமானது கிடையாது. நீங்கள் போதை மருந்துகளை உட்கொள்ளும் நிலையும் அல்லது சில யோகா சனங்கள் மூலம் உள்ளுக்குள் இருக்கும் இந்த போதை மருந்தை உருவாக்க முயற்சி செய்வதும் ஒரே குறிப்பிட்ட சுவாசப்பயிற்சிகள் மூலமாகவும் நடக்கலாம். ஏனெனில் நீங்கள் ஒரு குறிப்பிட்ட விதத்தில் மூச்சுபயிற்சி செய்யும்போது அது உங்களது உடல் ரசாயனத்தை மாற்றுகிறது. சில சுரப்பிகள் அழுத்தப்படுவதால், அது உங்களது உடல் ரசாயனத்தை மாற்றுகிறது. நீங்கள் ஒரு குறிப்பிட்ட செயல்முறையில் சுவாசிக்கும் போது அதிக பிராணவாயு உள்ளே போகிறது. அதிக கரியமல வாயு வெளியே போகிறது. எனவே உங்களுக்குள் அந்த சமநிலை மாறுகிறது.

இந்த விஷயங்களை நீங்கள் அனுபவிக்கக் கூடாது என்று நான் கூறவில்லை. இவை எல்லாம் வெறுமனே அழகான அனுபவங்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். ஆனால் நீங்கள் இதிலேயே நின்று விடக்கூடாது. இந்த பாலமானது அளவுகடந்த வண்ணஜாலம் நிறைந்தது. நீங்கள் அடுத்த கரையை அதிகம் நெருங்க நெருங்க, இந்த அனுபவங்கள் மேலும் மேலும் பரவசமானதாயும், வேறு உலகைச் சார்ந்ததாகவும் இருப்பதால், இதில் ஜாக்கிரதையாக இருங்கள். ஏனெனில் இவை அதிக பரவசமாக இருப்பதால், நீங்கள்

உங்களுக்குள், ''நான் சென்றடைந்து விட்டேன்'' என்று நினைப்பதற்கான சாத்தியங்கள் அதிகம் உள்ளன.

*திடநம்பிக்கை மற்றும் உலகப் பொருள்கள்*
*ஆகிய இரண்டையும் கொடுப்பவராக*
*அவர் இருக்கிறார்.*
*அவர் நமது வாழ்க்கையை முடித்து வைக்கின்றவரைத்*
*தவிர வேறு யாரும் அல்ல:*
*அவர் கொடுங்கோலன் அல்ல;*
*ஏனெனில் அவர் எடுத்துக் கொள்கின்ற ஒவ்வொன்றினைப்*
*போன்றும் எழுபது மடங்கு நமக்கு திருப்பி கொடுத்தார்.*
*அவர் ஒரு கதவை மூடினால்*
*அவர் உனக்கு அடுத்த பத்து கதவுகளைத் திறக்கிறார்.*

''இப்படிப்பட்ட ஆன்மிக அனுபவங்கள், நடக்க ஆரம்பிக்கும்போது இவற்றை எல்லாம் செய்பவர் நீங்கள் இல்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள்; இவை எல்லாம் மீண்டும் அவரது பரிசு. அதன்பின்னர் நீங்கள் இதற்கு அடிமை ஆக மாட்டீர்கள்'' என்று சனாய் கூறுகிறார்.

நீங்கள் உங்களுக்குள், ''நான்தான் இதைச் செய்கிறேன். நான் ஒரு சித்தர் ஆகிவிட்டேன். நான் சாதித்து விட்டேன். எனவே என்னால் இப்போது இந்த அனுபவங்களை உருவாக்கும் திறமை உள்ளது'' என்று நினைத்தால் அதன்பிறகு நீங்கள் பிடிபட்டு விடுகிறீர்கள். உங்களது ஆணவமானது பின்வாசல் வழியாகத் திரும்பவும் வந்து விடுகிறது. வழக்கமாக உங்களது ஆணவமானது அதிக பணம் சம்பாதித்தல், பெரிய வீட்டைக் கட்டுதல், ஒரு அழகான மனைவியை அடைதல், இது அது என்று அதன்மூலம் பலம் பெற்று வந்தது. இப்போது, அதே ஆணவமானது ஆன்மிக அனுபவங்கள் என்னும் அடுத்த பயணத்தை அனுபவித்துக் கொண்டு இருக்கிறது.

''இப்படி உங்களது வழியில் உங்களுக்கு ஏற்படுகின்ற அனுபவங்களால் நீங்கள் ஆணவம் மிக்கவராக ஆகிவிட்டால், நீங்கள் அதற்கு அடிமை ஆகி விடுவீர்கள். நீங்கள் பாலத்தில் நின்று விடுவீர்கள்,'' என்று சனாய் கூறுகிறார்.

அப்படியானால் என்ன செய்யபட வேண்டும்? திட நம்பிக்கை மற்றும் உலகப் பொருள்கள் ஆகிய இரண்டையும் கொடுப்பவராக அவர் இருக்கிறார். அவர் நமது வாழ்க்கையை முடித்து வைக்கின்றவரைத் தவிர வேறு யாரும் அல்ல. ஏனெனில் அவர் எடுத்துக் கொள்கின்ற ஒவ்வொன்றினைப் போன்றும் எழுபது மடங்கு நமக்கு திருப்பி கொடுக்கிறார். அவர் ஒரு கதவை மூடினால், அவர் உனக்கு அடுத்த பத்து கதவுகளைத் திறக்கிறார்.

எல்லாம் அவரிடமிருந்து தான் வருகிறது என்பதை நினைவுக் கொள்ளுங்கள். இது ப்க்தியின் பாதையில் மட்டுமே சாத்தியப்படும். தியானத்தின் பாதையில் நீங்கள் தனியாக விடப்படுவீர்கள். பக்தி மார்க்கத்தை விடவும் தியான மார்க்கத்தில் ஆணவம் எழுவதற்கு அதிக ஆபத்து இருக்கிறது. ஏனெனில் நீங்கள் அங்கு தனியாக இருக்கிறீர்கள் கடவுள் என்பவர் இல்லை. நீங்கள் அதற்குச் சரணாகதி அடைய முடியாது. உங்களது சொந்த ஆன்மாவில் இருந்து உங்களை பாதுகாப்பதற்கு உங்களால் கடவுளைப் பயன்படுத்த முடியாது. ஆனால் பக்தி மார்க்கத்தில் இந்த அழகான உதவி கிடைக்கிறது.

**அவர் ஒரு கொடுங்கோலன் அல்ல** என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஏன்? அடுத்து ஒரு விஷயத்தை உங்களுக்கு நான் ஞாபகப்படுத்த வேண்டும். இந்த அழகான அனுபவங்கள் நடக்கும்போது, அதே வேளையில் அநேக வேதனையான அனுபவங்களும் கூட நடக்கும். ஏனெனில் நீங்கள் உங்களது சொந்த அடையாளத்தில் இருந்து, உங்களது பழைய அடையாளத்தில் இருந்து வேரோடு அகற்றப்படுவதால் அங்கு வேதனை இருக்கும்.

புதிதான உண்மை நிலைக்குள் நீங்கள் நகர்ந்து செல்லும்போது அதில் மாபெரும் பேரானந்தம் இருக்கும். ஆனால் உங்களது பழைய விஷயங்களில் இருந்து நீங்கள் வேரோடு அகற்றப்படும் போது அங்கு மாபெரும் வேதனையும் இருக்கும். அங்கு இரவுகளும், பகல்களும் இருக்கும். அங்கு வேதனை மற்றும் இன்பமான தருணங்களும் இருக்கும். அந்த

இன்பமான தருணங்களை உங்கள் படைப்பாக எடுத்துக் கொள்ளாதீர்கள்; அவற்றை கடவுளிடம் ஒப்படைத்து விடுங்கள். அவர்தான் எல்லாவற்றையும் அளிப்பவர். அவர்தான் இந்த வாழ்க்கையையே கொடுப்பவர்.

வேதனை வரும்போது, துன்பம் வரும்போது நீங்கள் மாபெரும் குழப்பத்தில், ஆன்மாவின் இருள் நிறைந்த இரவில் இருப்பீர்கள். அதற்காக கவலைப்படாதீர்கள். **அவர் கொடுங் கோலன் அல்ல** என்பதை நினைவில் கொள்ளுங்கள். அவர் எப்படி கொடுங்கோலனாக இருக்கமுடியும்? இந்த வாழ்க் கையின் மூலமே அவர்தான். அவர்தான் உனது தந்தை, உனது தாய்.

**அவர் எடுத்துக் கொள்கின்ற ஒவ்வொன்றினைப் போன்றும் எழுபது மடங்கு நமக்கு திருப்பிக் கொடுக்கிறார்.** இதை நினைவில் கொள்ளுங்கள். ஆம் இது மிகச்சரியாக அப்படியே நடக்கிறது. நீங்கள் கொஞ்சம் கஷ்டப்படும்போது, நமக்கு எழுபது மடங்கு சந்தோஷம் திருப்பி தரப்படும் என்பதை நினைவில் கொள்ளுங்கள். என்னவெல்லாம் எடுக்கப்படுகிறதோ அதற்கு பதிலாக இன்னும் அதிகமானது கொடுக்கப்படும். ஏனெனில் உங்களிடம் இருந்து எடுக்கப்பட்டது கற்பனையானது. உங்களுக்கு நடக்கப் போவது அதிக உண்மையானதான இருக்கப் போகிறது.

ஒரு அடி எடுத்து வைக்கும் போதும் இப்படித்தான் இருக்கும், ஒவ்வொரு அடி எடுத்து வைக்கும் போதும் நீங்கள் மேலும் மேலும் செழிப்பாக ஆகிவிடுவீர்கள். ஆனால் நீங்கள் ஒரு விஷயத்திற்கு தயாராக இருக்க வேண்டும். நீங்கள் அநேக அக்னிகளைக் கடந்தாக வேண்டும். அக்னியில் கடந்து செல்கின்ற ஒவ்வொரு அனுபவமும் ஒரு புதிய வளர்ச்சி அனுபவமாக இருக்கிறது. அக்னியில் பிரவேசிப்பது வேதனையாக, முற்றிலும் வேதனையாக இருக்கும். ஆனால் நீங்கள் அதிலிருந்து வெளியே வந்து விடும்போது அந்த அக்னியை நீங்கள் கடந்தே தீரவேண்டும் என்கிற விஷயத்தை கண்டு கொள்வீர்கள். இப்போது நீங்கள் உயர்ந்த மட்டத்தில்

இருப்பீர்கள். மேலும் இன்னும் அதிக உயர்ந்த மகிழ்ச்சிகள் உங்களுக்கு கிடைக்கக் கூடியதாக இருக்கும்.

இப்படி ஒருவர் நெருப்பைக் கடந்து செல்லும்போது அவர் சொக்கத் தங்கமாக ஆகிவிடுகிறார். **அவர் கொடுங்கோலன் அல்ல.** இந்த நினைவு உங்களுக்கு உதவும். அவர் பிறரைத் துன்புறுத்தி அதில் இன்பம் காண்பவர் அல்லர். அவர் உங்களை துன்புறுத்தி மகிழ்பவர் அல்ல. நீங்கள் அதை துன்புறுத்தலாக உணர்ந்தால், அது உங்களது பொருள் விளக்கம். இன்னும் அதிக மகிழ்ச்சியானது. மேலும் மேலும் உங்களுக்கு கிடைக்கும்படி அவர் அப்படி செய்கிறார். ஆனால் நீங்கள் உங்களது விளையாட்டு பொம்மைகளை விட்டுவிட வேண்டும். ஆனால் அப்படி பழைய விளையாட்டு பொம்மைகளை விட்டுவிடுதல் உங்களுக்கு வேதனையாக இருக்கும். அந்த பொம்மைகள் மீது உங்களுக்கு உள்ள பற்றுதல் தான் அந்த வேதனையை உருவாக்குகிறது. நாம் நமது பொம்மைகளை அளவுக்கு அதிகமாக நம்புகிறோம். அவை பொம்மைகள் என்பதை நாம் அறிவோம். இன்னமும் நாம் அதை ஒப்புக் கொண்டு இருக் கிறோம்.நமது முட்டாள்தனம் அப்படிப்பட்டது. பணம் என்பது ஒரு விளையாட்டு பொம்மை என்னும் நமக்கு மரணம் வரும்போது அது எடுக்கப்பட்டு விடும் என்றும் நாம் அறிவோம். எல்லாமே எடுக்கப்பட்டு விடும்.

ஆனால் இன்னமும் நாம் சேர்த்துக் கொண்டே தான் போகிறோம். இதற்கிடையில், "இது எல்லாருக்கும் நடக்கிறது. ஆனால் எனக்கு மட்டும் நடப்பதில்லை. நான் தனிச்சிறப்பு வாய்ந்தவன். நான் ஒரு விதிவிலக்கு," என்று நம்பிக்கொண்டும் இருக்கின்றோம். யாரும் விதிவிலக்கல்ல. உங்களிடமிருந்து எல்லாமும் எடுக்கப்பட்டு விடும். ஆனால் நாம் விளையாடிக் கொண்டே போகிறோம். நாம் நமது கற்பனைகளை நம்பிக் கொண்டே போகிறோம். நாம் எல்லாவற்றையும் திரையிட்டுக் கொண்டே போகிறோம்.

ஒரு பிரான்ஸ் நாட்டு சுண்டெலியும், ஒரு யானையும் மாஜிஸ்ட்டிரேட்டிடம் சென்று அவர்கள் இருவரும் அப்படியே

திருமணம் செய்து கொள்ள சிறப்பு உரிமம் வழங்கும்படி கேட்டன. அதற்கு மாஜிஸ்ட்ரேட் தலையை அசைத்து, அது சாத்தியப்படாது. ஏனெனில் யானையும், சுண்டெலியும் ஒன்று கலக்க முடியாது என்கிறார். ஆனால் அந்த சிறிய சுண்டெலி கண்களில் கண்ணீர்மல்க, ''ஆனால் மாஜிஸ்ட்ரேட் ஐயா, தயவுசெய்து நாங்கள் அந்த சிறப்பு உரிமத்தை பெற்றே தீரவேண்டும்'' என்கிறது.

மக்கள் இப்படிப்பட்ட அர்த்தமற்ற விஷயங்களை நம்பிக் கொண்டே செல்கின்றனர். இப்போது அந்த சிறிய சுண்டெலி தான் கர்ப்பமாக இருப்பதாக நினைத்துக் கொண்டு கண்டிப்பாக திருமணம் செய்தே தீர வேண்டும். இப்போது அதைத் தவிர்ப்பதற்கு வழியே கிடையாது என்று கூறுகிறது.

உங்களது சொந்த அர்த்தமற்ற செயல்களைப் பாருங்கள். உங்களது சொந்த வாழ்க்கையைப் பாருங்கள். நீங்கள் என்ன செய்து கொண்டு போகிறீர்கள் என்பதைப் பாருங்கள். அது மிகவும் முட்டாள்தனமானது. மக்கள் வாழும் விதம், மக்கள் தங்களது வாழ்க்கையை வீணாக்கும் விதம், எல்லாமே முட்டாள்தனமாக உள்ளது. இந்த விளையாட்டு பொம்மைகள் உங்களிடமிருந்து எடுக்கப்பட்டு விடும்போது உங்களுக்கு வேதனை இருக்கும். ஆனால் அவை எடுக்கப்பட்டே ஆக வேண்டும். இல்லையெனில் நீங்கள் ஒருபோதும் முதிர்ச்சி அடைய மாட்டீர்கள்.

பக்தியின் பாதையில், கடவுள் உங்களுக்கு கிடைக்கிறார். அவர் **கொடுங்கோலன் அல்ல. ஏனெனில் அவர் எடுத்துக் கொள்கின்ற ஒவ்வொன்றைப் போன்றும் எழுபது மடங்கு நமக்கு திருப்பிக் கொடுக்கிறார். அவர் ஒரு கதவை மூடினால், அவர் உனக்கு அடுத்த பத்து கதவுகளைத் திறக்கிறார்.**

ஆனால் மனித மனதிற்கு ஒரு சிக்கல் இருக்கிறது. மனித மனம் ஒரு குறிப்பிட்ட விஷயங்களில் மட்டும் மனதைக் குவித்துக் கொண்டு இருக்கிறது. உதாரணமாக, நீங்கள் ஒரு வாசல் வழியாக

போய்ப் பழக்கப்பட்டு விட்டால், நீங்கள் ஒரு விதமான குகை போன்ற பார்வையை உருவாக்கி விடுகிறீர்கள். உங்களால் வேறு அடுத்த கதவுகளைக் காணமுடிவதில்லை. அந்த கதவை மட்டுமே நீங்கள் பார்க்கிறீர்கள். நீங்கள் அடுத்த கதவுகள் குறித்து மறந்து விட்டவர்களாக ஆகிவிடுகிறீர்கள். எனவே அந்த ஒரு கதவானது மூடப்பட்டு விடும்போது நீங்கள் உங்களது குகை போன்ற பார்வையில் கலவரம் அடைகிறீர்கள்.

கடவுளைத் தேடுகின்ற ஒரு மனிதன் இந்த குகை போன்ற பார்வையை விடுவது எப்படி என்றும், எல்லா சாத்தியக் கூறுகளுக்கும் தான் கிடைக்கக் கூடியவனாக உஷாராக இருப்பது எப்படி என்றும் கற்றுக் கொள்ள வேண்டும். ஒரு கதவு மூடப்பட்டால், பத்து கதவுகள் உடனடியாக உங்களுக்காக திறக்கப்படுகிறது. இது வெறும் தத்துவார்த்தமான வாக்குமூலம் அல்ல; இது வெறுமனே ஒரு உண்மைநிலை. ஆனால் நீங்கள் உங்களது கடந்த காலத்தின் மூலமாக மட்டுமே பார்க்கிறீர்கள். நீங்கள் கடந்த காலத்தோடு அந்த அளவுக்கு அதீதபற்றுடன் இருப்பதால் மற்ற கதவுகள் திறப்பதை உங்களால் கண்டு கொள்ள முடியவில்லை. அடுத்த கதவுகள் உள்ளன என்று கூட உங்களால் நம்ப முடிவதில்லை. உங்களுக்கு தெரிந்தது எல்லாம் அந்த ஒரே கதவு மட்டுமே. நீங்கள் அதோடு பழகிவிட்டீர்கள். அந்த ஒரு கதவின் வழியாக உங்களால் விழிப்புணர்வு இல்லாமல் இயந்திரம் போன்று உள்ளே போகவும், வெளியே வரவும் முடியும். அதற்கு விழிப்புணர்வு தேவை இல்லை. நீங்கள் ஏற்கனவே அதற்கு பழக்கப்பட்டு விட்டீர்கள்.

இப்போது அந்தக கதவு மூடப்பட்டுவிட்டது. எனவே உங்களுக்கு மாபெரும் வேதனை, மிகப்பெரிய பயம், மாபெரும் துக்கம் வருகிறது. இந்த துக்கமானது கதவு மூடப்பட்டதால் ஏற்படவில்லை. அந்த துக்கமானது நீங்கள் குகை போன்று குறுகிய பார்வை கொண்டிருப்பதால் நடக்கிறது. உங்களால் வேறு எங்கும் பார்க்க முடியாது. நீங்கள் ஒன்றின் மீது உங்களது பார்வையை குவித்து இருக்கிறீர்கள். உங்கள் கண்கள் இன்னும் கொஞ்சம் அகலமாக விரியட்டும்.

உங்களுக்கு ஏற்கனவே பத்து கதவுகளை திறந்து வைக்காமல் அவர் ஒருபோதும் அந்த ஒரு கதவை மூடுவது கிடையாது என்று சனாய் கூறுவதை நினைவில் கொள்ளுங்கள். எனவே சுற்றுமுற்றும் பாருங்கள் அப்போது நீங்கள் கண்டு கொள்வீர்கள். ஆயிரக்கணக்கான தியானிப்பவர்களுடன் பணியாற்றிய பின்னர் இது எனது அனுபவமும் கூட. இது தினமும் வருகிறது. பழைய கதவுகள் மூடப்பட்டாக வேண்டும். இல்லையெனில் நீங்கள் எப்படி வளர்ச்சி அடைந்து மேல்நோக்கி நகர்ந்து செல்வீர்கள்? நீங்கள் ஒரே கதவு வழியாக நகர்ந்து சென்று கொண்டே இருந்தால் அதன்பிறகு அங்கு மாற்றம் என்பது சாத்தியப்படாது. கதவுகள் மூடப்பட்டாக வேண்டும் அப்போது தான் ஒரு புதிய கோணத்தில், ஒரு புதிய பரிமாணத்தில் நகர்ந்து செல்வதற்கு நீங்கள் நிர்ப்பந்திக்கப்படுவீர்கள்.

குருவானவர் உங்களது பழைய கதவுகளை எல்லாம் எல்லா வழிகளிலும் மூடுவதற்கு முயற்சி செய்கிறார். அதனால் தான் குருவைக் கண்டு மக்கள் பயப்படுகிறார்கள். எனவே மக்கள் கொஞ்ச தூரம் தள்ளியே இருக்கின்றனர். தாங்கள் தப்பித்து ஓடுவதற்காக அவர்கள் குறிப்பிட்ட தூரத்தில் நிற்கின்றனர். அங்கு விஷயங்கள் தாங்க முடியாதபடி ஆகிவிட்டால், அதிகப்படியாக ஆகிவிட்டால், எப்போதும் அவர்கள் தப்பித்து ஓடி விடமுடியும்.

கதவானது மூடபபட்ட உடன் அது உங்களைக் காயப்படுத்து கிறது. நீங்கள் வளர்ச்சி அடையவேண்டும் என்று கேட்கிறீர்கள். ஆனால் கதவு மூடப்படும்போது அது உங்கள் மனதைக் காயப்படுத்துகிறது. நீங்கள் கோபம் அடைகிறீர்கள், நீங்கள் ஆத்திரம் கொள்கிறீர்கள். நீங்கள் எளிய கணிதத்தை புரிந்து கொள்வதும் கிடையாது. நீங்கள் வளர்ச்சி அடைவதற்கு ஆசைப்பட்டால், அதன்பின்னர் நீங்கள் புதிய பார்வைகள், புதிய எல்லைகள், புதிய தளங்களில் நகர்ந்து செல்வதற்கு நீங்கள் எப்போதும் தயாராக இருந்தாக வேண்டும். ஆனால் பழைய பாதை பத்திரமானது. பழைய கதவு பாதுகாப்பானது.

சௌகரியமானது. அதை நானும் அறிவேன் மேலும் ஒவ்வொரு குருவும் அறிவார்கள். ஆனால் நீங்கள் பழையவற்றோடு இருந்தால், நீங்களும் பழைமை ஆனவராகவே இருப்பீர்கள். நீங்கள் உயிரற்றவராகவே இருப்பீர்கள்.

புதியதில் தான் வாழ்க்கை உள்ளது. ஒவ்வொரு நொடிப் பொழுதும் மரணமும், உயிர்த்தெழுதலுமாக இருக்க வேண்டும். ஒவ்வொரு நொடியும் கடந்த காலத்திற்கு இறந்தவர் ஆகி விடுங்கள். அங்குதான் சீடன் சோதனை செய்யப் படுகிறான். அதுதான் அக்னி பரீட்சை. ஒரு கதவு மூடப்படும் போது அங்கு அடுத்த பத்து கதவுகள் திறக்கப்பட்டு இருக்க வேண்டும் என்று சீடன் நம்புகிறான். அவன் மூடப்பட்ட கதவை மறந்துவிட்டு, திறந்து இருக்கும் கதவுகளுக்காக சுற்றுமுற்றும் பார்க்க ஆரம்பிக்கிறான். இதுதான் திடநம்பிக்கை.

வாழ்க்கை மீது திடநம்பிக்கை கொள்ளுங்கள், கடவுள் மீது திடநம்பிக்கை கொள்ளுங்கள். இந்த பிரபஞ்சத்தின் மீது திடநம்பிக்கை கொள்ளுங்கள்.

*நீ உனக்கு செய்ததை விடவும்*

*அவர் உனக்கு அதிக பொக்கிஷத்தை கொடுக்கிறார்.*

கடவுள் தான் உங்களைப் படைத்தார் என்பதை நினைவில் கொள்ளுங்கள். தேவை இல்லாமல் உங்களை கடவுள் படைத்திருக்க மாட்டார். எதிர்பாராத விதமாக நீங்கள் இங்கு வரவில்லை. கடவுள் உங்களை அந்த அளவுக்கு தனித்துவம் வாய்ந்தவராகவும், அந்த அளவுக்கு தனிமனித ராகவும் படைத்திருக்கிறார். ஏனெனில் உங்களைப் போன்ற வேறு யாரும் இங்கு கிடையாது. நீங்கள் ஒருவர் மட்டுமே! இதற்கு முன்பும் கடவுள் உங்களைப் போன்ற ஒரு மனிதரைப் படைக்கவில்லை. உங்களைப் போன்ற ஒரு மனிதரை அவர் ஒருபோதும் படைக்க மாட்டார். அவர் உங்கள் மீது எவ்வளவு மரியாதை கொடுக்கிறார் என்பதைப் பாருங்கள்.

கடவுள் என்பவர் போர்டு கார் தயாரிப்பு நிறுவனத்தில் உள்ள வரிசையாக எல்லாக் கார்களுக்கும் அந்தந்த பாகங்கள் பொருத்தப்படுகின்ற வரிசைப் பிரிவு போன்றவர் அல்லர். அதே போர்டு கார்கள், பல லட்சம் போர்டு கார்கள், எல்லாம் ஒரே மாதிரி இருக்கின்றன. கடவுள் ஒரு படைப்பாளி. கார்கள் வரிசையாக வரும் வரிசைப்பகுதி அல்ல. ஒவ்வொரு தனிமனிதனும் குறிப் பிட்ட தினுசாக, ஒரு குறிப்பிட்ட வார்ப்படத்தில் தயாரிக்கப்பட வில்லை. ஆனால் ஒவ்வொரு தனிமனிதனும் தனிப்பட்ட கவனம் செலுத்தி படைக்கப்பட்டு இருக்கிறான். கடவுள் உங்களை தனித்தன்மையுடன் நிறம் உள்ளவராக ஆக்கி இருக்கிறார். அவர் உங்களை ஒரு குறிப்பிட்ட விதமாக செதுக்கி இருக்கிறார். ஒரு குறிப்பிட்ட வடிவத்தைக் கொடுத்திருக்கிறார். குறிப்பிட்ட உயிர் உணர்வைக் கொடுத்திருக்கிறார். நீங்கள் தனித்தவம் வாய்ந்தவர். நீங்கள் அசல், நீங்கள் ஒரு நகல் அல்ல. அவர் உனக்கு **அதிக பொக்கிஷத்தை கொடுத்திருக்கிறார்.** நிச்சயமாக நீங்கள் அவரது படைப்பு. நீங்கள் இறந்துவிட்டால், அது அவரது இறப்பு. **நீ உனக்கு செய்ததை விடவும் அவர் உனக்கு அதிக பொக்கிஷத்தை கொடுத்து இருக்கிறார்.** இது மிகவும் கண்ணுக்கு தெரிந்த உண்மை.

மக்கள் தங்கள் மீது அன்பு செலுத்துவதில்லை. அவர்கள் தங்கள்மீது மரியாதை கொள்வதில்லை. அதற்கு மாறாக அவர்கள் தங்களை கண்டனம் செய்கின்றனர். நீங்கள் அனைவரும் தங்களைத் தாங்களே கண்டனம் செய்பவர்கள். இந்த உலகம் எங்கும் மதகுருக்களால் அப்படித்தான் நீங்கள் மீண்டும் மீண்டும் கற்பிக்கப்பட்டு இருக்கிறீர்கள். உங்களை நீங்களே கண்டனம் செய்யும் அளவுக்கு நீங்கள் கட்டுத்திட்டம் செய்யப்பட்டு இருக்கிறீர்கள். எனவே நீங்கள் உங்களை கண்டனம் செய்து கொண்டே போகிறீர்கள். உங்களுக்கு எந்த ஒரு மதிப்பும் இருப்பதாக நீங்கள் நினைப்பதில்லை. இது தான் தடைகளில், மாபெரும் தடைகளில் ஒன்றாகும்.

உங்களை நேசியுங்கள், உங்களுக்கு மரியாதை கொடுங்கள் அப்போது நீங்கள் கடவுளுக்கு மரியாதை கொடுப்பீர்கள்.

ஏனெனில் ஒரு ஓவியத்திற்கு மரியாதை கொடுப்பது அதன் ஓவியருக்கு மரியாதை கொடுப்பதாகும். ஒரு கவிதையை நேசிப்பது அதன் கவிஞரை நேசிப்பதாகும். நீங்கள் தான் ஓவியம், நீங்கள் தான் கவிதை. அவரால் உருவாக்கப்பட்ட இசைதான் நீங்கள். கடவுள் இருக்கிறார் என்பதற்கு கண்களுக்கு தெரிந்த நிருபணம் நீங்கள்தான்; படைப்பு இருக்கிறது. படைப்பாளி இருக்கிறார் என்பதற்கு கண்களுக்கு தெரிந்த நிருபணமாகிய படைப்பு இருக்கிறது. அந்த படைப்பை நேசியுங்கள், அதை சுவைத்து பாருங்கள். அதை கொண்டாடுங்கள். இது மட்டுமே கடவுளை கொண்டாடுகின்ற வழியாகும். கடவுளின் படைப்பில் கடவுளுக்கு மிகவும் அருகில் இருப்பது நீங்கள் தான்.

தன்னை கண்டனம் செய்கின்ற ஒரு மனிதனால் வேறு யாரையும் நேசிக்க முடியாது. தன்னையே கண்டனம் செய்கின்ற ஒரு மனிதன் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சத்தையே கண்டனம் செய்கின்றான். இந்த உலகம் முழுவதும் கண்டனங்களால் நிறைந்து இருக்கிறது. அவர்கள் எல்லாரையும் விஷமாக்கி விட்டார்கள். எனவே குரு செய்கின்ற முதல் விஷயம் என்னவென்றால் அவர் சீடனின் ஆன்மாவில் உள்ள எல்லா விஷத்தையும் வெளியே எடுப்பது தான் ஆகும். உங்களுக்கே நீங்கள் மரியாதை கொடுக்கும் அளவுக்கு உங்களை எப்படி செய்வது என்பது தான் மிகப்பெரிய பிரச்சினை. நீங்கள் விலைமதிப்பற்றவர்கள். நீங்கள் ஒப்பிடமுடியாதவர்கள், உங்களுக்குள் அதிக சக்தி உள்ளது. உங்களுக்குள் புத்தர்கள் மறைந்து கொண்டு இருக்கிறார்கள். நீங்கள் எல்லாம் புத்தர்களுக்கான விதைகள் என்று உங்களை விழிப்புணர்வு அடையச் செய்வது மிகப்பெரிய பிரச்சினையாகும்.

*எழுந்துநில், கற்பனைக் கதைகளை செய்ததுபோதும்;*

*உனது அடிப்படை தீவிர உணர்ச்சிகளை விட்டுவிட்டு*

*என்னிடம் வா.*

சனாய் கூறுவது போல, எல்லா குருமார்களும் எப்போதும் ''என்னிடம் வாருங்கள்'' என்றுதான் கூறுகிறார்கள். ஆனால்

நீங்கள் சில விஷயங்களை விட்டுவிட வேண்டும். அப்போது மட்டுமே நீங்கள் ஒரு குருவிடம் வரமுடியும். உங்களால் அந்த சில விஷயங்களை விட்டுவிட முடியவில்லை எனில் நீங்கள் மதகுருக்களிடமே இருப்பீர்கள். நீங்கள் ஒருபோதும் குருவைக் காண மாட்டீர்கள். மதகுருக்கள் எல்லா குருமார்களுக்கும் எதிரி போன்றவர்கள்.

மதகுரு ஒருபோதும் குருவாக இருக்கமுடியாது. குருவானவர் ஒருபோதும் மதகுருவாகவும் இருக்க முடியாது. அவர்கள் ஒரே பரிமாணத்தை சார்ந்தவர்கள் அல்லர். மதகுருவிற்கும் கடவுளுக்கும் சம்பந்தம் இல்லை. மதகுரு கடவுளை வைத்து வியாபாரம் செய்கிறார். அவர் கடவுள் என்னும் கொள்கையை வைத்து உங்களை சுரண்டிக் கொண்டு இருக்கிறார். கடவுள் என்னும் பெயரைக் கூட சுரண்டிவிடும் அளவுக்கு மதகுரு மிகவும் அசிங்கமானவர்.

ஒரு கதையின்படி, கடவுள் இந்த உலகத்தை படைத்து விட்டு அது நன்றாக இருப்பதை பார்த்தபோது சாத்தான் அவரோடு சேர்ந்து படைப்புகளை ஒவ்வொன்றாக பாராட்டி விட்டு, ''இவை எல்லாம் நன்றாக உள்ளன! இவை எல்லாம் மிகவும் நன்றாக உள்ளன. எனவே இதை ஒரு நிறுவனமாக நாம் ஆக்கிவிடலாம்,'' என்று சாத்தான் கூறினான்.

இப்போது, அவர்தான் மதகுருவாக இருக்கிறார். மதகுரு எல்லாவற்றையும் ஒரு வியாபாரம் ஆக்கி விடுகிறார். மதகுரு எல்லாவற்றையும் ஒரு நிறுவனம் ஆக்கி விடுகிறார். மாபெரும் புத்தர்களின் ஒவ்வொரு அகப்பார்வையும் இறுதியில் ஒரு நிறுவனமாக, ஒரு திருச்சபையாக தரம் தாழ்த்தப்பட்டு விடுகிறது. மதகுரு சாத்தானுக்கு சேவை செய்து கொண்டு இருக்கிறார்.

*எழுந்து நில், கற்பனை கதைகளை செய்தது போதும்...*

இந்த மதகுருதான் கற்பனை கதைகளுக்கு சாப்பாடு போட்டு காப்பாற்றிக் கொண்டு இருக்கிறார். அவர் கடவுளைப் பற்றி பேசுகிறார். அவர் சொர்க்கம் நரகம் பற்றி பேசுகிறார்.

நற்காரியங்கள் செய்பவர்களுக்கு கிடைக்கும் வெகுமதி மற்றும் தேவதைகள் பற்றியும், பாவிகள் கஷ்டப்படுவதற்கான தண்டனைகள் பற்றியும் பேசுகிறார். இவை எல்லாம் கற்பனைக் கதைகள்.

மதகுரு உங்களுக்கு இப்படிப்பட்ட கற்பனைக் கதைகளை சாப்பாடாக கொடுத்துக் கொண்டு இருக்கிறார். மேலும் இப்படிப்பட்ட கற்பனைக் கதைகள் மீது நீங்கள் அதிக பற்றுதல் கொண்டு விட்டதால் நீங்கள் குழந்தையாகவே இருக்கிறீர்கள். நீங்கள் முட்டாளாகவே இருக்கிறீர்கள். நீங்கள் முதிர்ச்சி அடைவதில்லை. ஜாக்கிரதையாக இருங்கள்! மதகுரு சாத்தானுக்கு சேவை செய்யக் கூடியவர். மதகுருவின் ஒட்டு மொத்த வேலையும் இந்த கற்பனைக் கதைகளை நன்றாக அலங்கரிப்பதில் தான் இருக்கிறது. அவர் மேலும் மேலும் கற்பனைக் கதைகளைக் கண்டுபிடித்துக் கொண்டே செய்கிறார். அவர் உண்மைநிலை பற்றி கவலைப்படுவதில்லை; உண்மையில் அவர் உண்மை நிலையைக் கண்டு அதிகம் பயப்படுகிறார்.

ஆகவே, புத்தரைப் போன்ற ஒரு மனிதர் வந்துவிடும்போது, இந்த மதகுரு அவருக்கு எதிராக இருக்கிறார். இயேசு போன்ற ஒரு மனிதர் வரும்போது இந்த மதகுரு அவருக்கு எதிராக இருக்கிறார். இப்போது ஆபத்து வருகிறது என்று உடனடியாக இந்த மதகுரு உஷாராகி விடுகிறார். ஏனெனில் புத்தர், இயேசு போன்ற இந்த மக்கள் கற்பனைக் கதைகளுக்கு எதிரானவர்கள். மதம் என்னும் பெயரில் நடைபெறுகின்ற இந்த குழந்தைத் தனமான முட்டாள்தனங்களை எல்லாம் அவர்கள் அழித்து விடுவார்கள். ஆனால் மதகுரு இதில்தான் உயிர் வாழ்ந்து கொண்டு இருக்கிறார். காலம் காலமாக அவர் இதில் உண்மையில் திறமை மிக்கவராக ஆகிக் கொண்டு இருக்கிறார். மதகுரு தான் இந்த உலகிலேயே மிகப்பெரிய விற்பனை மனிதர்.

ஒருவன் ஒரு மளிகைக் கடைக்கு வந்து ஐந்து ரூபாய் மதிப்புள்ள உப்பு கொடுக்கும்படி கேட்டான்.

கடைக்காரர், ''என்ன விதமான உப்பு உனக்கு வேண்டும்?'' என்றார்.

''என்ன விதமான உப்பா? எனக்கு சாதாரண உப்பு வேண்டும். எத்தனை விதமான உப்பு இங்கு உள்ளது?'' என்று கேட்டான்.

உடனே, ''ஹா, ஹா என்று சிரித்துவிட்டு அந்த கடைக்காரர்.

''உனக்கு உள்ள உப்பைப் பற்றி தெரியாதா? நீ என்னோடு வா'' என்று கூறிவிட்டு அவனை கீழ்தளத்திற்கு கூட்டிச் செல்ல அங்கு நாற்பது அல்லது ஐம்பது பீப்பாய்க்கும் குறைவில்லாமல் உப்பு இருப்பதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தான்.

''இவை எல்லாம் வேறு வேறு உப்புகளா?'' என்று கேட்டான்.

உடனே கடைக்காரர், ''ஆம், இவை எல்லாம் வேறு வேறானவை. நாங்கள் எல்லா விதமான விலைகளுக்குத் தக்கவாறும், உபயோகத்திற்கு தக்கவாறும் உப்பு வைத்திருக் கிறோம்'' என்று கூறினார்.

அதற்கு உப்பு வாங்க வந்தவன், ''அட கடவுளே, நீங்கள் இதில் தனிச்சிறப்பு பெற்றவர் தான். இப்படி வெவ்வேறு உப்புகளை இந்த பீப்பாய்களில் நீங்கள் வைத்திருப்பதன் மூலம் நீங்கள் நிறைய உப்பு விற்பீர்கள் என்று நான் நினைக்கிறேன். உண்மையில் எப்படி உப்பு விற்பது என்பது உங்களுக்கு தெரிகிறது!'' என்றான்.

உடனே அந்த கடைக்காரர், ''ஓ, நானா? நான் உப்பு விற்பதில் சிறந்தவன் அல்ல. ஆனால் இதை எல்லாம் எனக்கு விற்பனை செய்தானே, அவனால் உப்பு விற்பனை செய்ய முடியுமா?'' என்றார்.

மதகுரு இடைவிடாமல் எப்போதும் கற்பனைக் கதைகளை கண்டுபிடித்துக் கொண்டு இருக்கிறார். அவற்றை எல்லாவிதமான

மக்களுக்கும், எல்லாவிதமான மனிதருக்காகவும் அவர் கண்டுபிடிக்கிறார். அதனால்தான் இந்த பூமியில் முந்நூறு மதங்கள் இருக்கின்றன. அதற்கு எல்லா அளவுகளிலும், எல்லா விலைகளிலும் கிடைக்கக்கூடிய, ஒவ்வொருவரின் தேவைக்கு ஏற்றபடி கிடைக்கக்கூடிய முந்நூறு விதமான கற்பனைக் கதைகள் உள்ளன என்று அர்த்தம். அப்படி இல்லையெனில் இந்த பூமியில் முந்நூறு மதங்களுக்கான அவசியம் என்ன? இங்கு முந்நூறு அறிவியல் கிடையாது. அறிவியல் ஒன்று தான் ஏனெனில் அறிவியல் பூர்வமான அணுகுமுறை ஒன்றுதான். அறிவியலின் அடிப்படையும் ஒன்று தான்.

மதகுருக்கள் மறைந்து, இங்கு புத்தர்கள், பகாவுதீன்கள், சனாய்கள் மற்றும் சோசன்கள் மட்டுமே இருந்தால் மதம் ஒன்று மட்டுமே இருக்கும். இங்கு ஒரே ஒரு மதம் மட்டுமே இருக்கும். உண்மையில் மதங்கள் இருக்காது, ஆனால் ஒருவிதமான மதத்தன்மை இருக்கும்.

நீங்கள் உங்களது கற்பனைக் கதைகளை கைவிடவேண்டும். கிறிஸ்தவ, இந்து, முகமதிய கதைகளை கைவிடவேண்டும். **எழுந்து நில். கற்பனைக் கதைகளைச் செய்தது போதும், உனது அடிப்படை தீவிர உணர்ச்சிகளை விட்டுவிட்டு என்னிடம் வா.** பணம், அதிகாரம், காமகமனம், பேராசை, கோபம் எல்லாவற்றையும் தனதாக்கிக் கொள்ளுதல், இப்படி எல்லாமும் அடிப்படை தீவிர உணர்ச்சிகளாகும். ஆனால், மனிதன் இந்த தீவிர உணர்ச்சிகளில் மட்டுமே வாழ்கிறான். அவற்றினால் எந்த தவறும் கிடையாது. அவை வாழ்க்கை என்னும் கோயிலின் அஸ்திவாரமாக இருக்கின்றன. ஆனால் கோயில் இல்லாமல் வெறும் அஸ்திவாரம் மட்டுமே இருந்தால் அந்த அஸ்திவாரம் முற்றிலும் பயனற்றது. கோயில் என்பது இருந்தால் மட்டுமே அது பயனுள்ளது. முழு கோயிலும் கட்டப்பட்டால் அதன்பின்னர் அஸ்திவாரம் என்பது பயனுள்ளது. ஆனால் கோயில் என்பது கட்டப்படாமல், நீங்கள் இந்த அஸ்திவாரத்தை மட்டுமே எப்போதைக்கும் கட்டிக்

கொண்டே போனால், அது முற்றிலும் பயனற்றது, அர்த்தமற்றது, வாழ்க்கை மற்றும் சக்தியை வீணாக்குவதாகும்.

சிக்மண்ட் பிராய்டு இந்த அடிப்படை தீவிர உணர்ச்சிகள் பற்றி அக்கறை கொண்டார். அதுதான் அவரது தவறு. அதனால் மனப்பகுப்பாய்வு என்பது இன்னமும் ஒரு கோயிலாக ஆகாமல் இருக்கிறது. அது வெறும் அஸ்திவாரம் மட்டுமே, முழு நிர்வாணமான அஸ்திவாரம். அது நீங்கள் வசிக்கின்ற ஒரு வீடாக இன்னமும் ஆகவில்லை. அவர் தனது நண்பர் ஒருவருக்கு, ''நான் மனிதன் என்றழைக்கப்படுகின்ற மாளிகையின் அடித்தளம், மற்றும் தரைத்தளம் ஆகியவற்றில் மட்டுமே எப்போதும் என்னை ஈடுபடுத்திவிட்டேன்,'' என்று எழுதினார். ஆல்டஸ் ஹக்ஸ்லி ஒருமுறை பிராய்டு பற்றி கூறும்போது,'' பிராய்டு ''அடித் தளத்திலும் அடித்தளம்'' என்று கூறி இருக்க வேண்டும் என்றார்.

மனிதனுக்கு ஒரு அடித்தளம் இருக்கிறது. அது உண்மை தான். ஆனால் அவனுக்கு உப்பரிகையும் உள்ளது. மனிதன் விழிப்புணர்வை இழந்து இருக்கிறான். ஆனால் அதி உன்னத தன்னுணர்வுக்கான சக்தியும் கூட மனிதனிடம் உள்ளது. எனவே நீங்கள் அந்த அதி உன்னத தன்னுணர்வுக்கான தேடுதலை ஆரம்பிக்காத வரையில், நீங்கள் அடித்தளத்திலேயே இருப்பீர்கள் அல்லது அடித்தளத்திற்கும் அடித்தளத்திலும் கூட இருப்பீர்கள். நீங்கள் தரையில் ஊர்ந்து கொண்டு இருப்பீர்கள். ஆனால் உங்களிடம் பறக்கின்ற திறமை உள்ளது. நீங்கள் ஒரு வண்ணத்துப்பூச்சி ஆக முடியும். ஆனால் நீங்கள் உங்களது சிறகுகளைத் திறக்காமல் இருக்கிறீர்கள். ஏனெனில் இந்த பூமி மீதான பற்றுதல் உங்களுக்கு அதிகமாக இருக்கிறது. அந்த பற்றுதல் மாற்றப்பட வேண்டும். நீங்கள் நட்சத்திரங்களைப் பார்க்க ஆரம்பிக்க வேண்டும்.

அதைத்தான் சூஃபிக்கள் அடாப், அதாவது குருவின் சந்நிதானத்தில் இருத்தல் என்று அழைக்கின்றனர். இந்துக்கள் அதை சத்சங்கம் என்று அழைக்கின்றனர். குருவின் சந்நிதானத்தில் இருப்பது என்பதற்கு, நட்சத்திரங்களைப் பார்த்தல், உங்களுடைய

உப்பரிகை குறித்து விழிப்புணர்வு கொள்ளுதல். இப்படிப்பட்ட உயர்ந்த ஒன்று உங்களுக்கும் சாத்தியப்படும். என்றும் அர்த்தமாகும். நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே முடிந்து போகவில்லை என்பதை கண்டு நீங்கள் விரும்பிய உயரத்திற்கு உங்களால் பறந்து செல்லமுடியும். இதில் வானமும் கூட எல்லை அல்ல என்கிற உத்வேகம் கொள்ளுங்கள்.

**எழுந்து நில். கற்பனைக் கதைகளைச் செய்தது போதும். உனது அடிப்படை தீவிர உணர்ச்சிகளை விட்டுவிட்டு என்னிடம் வா.** இந்த உலகில் இரண்டு வகையான மக்கள் உள்ளனர். இந்த உலகத்தை சார்ந்த மக்கள் அடித்தளத்தில் இருந்து விடுகிறார்கள். அவர்கள் அடிப்படை தீவிர உணர்ச்சிகளோடு அக்கறை கொண்டு இருந்து விடுகிறார்கள். மதவாதிகள் மற்றும் மறுஉலகம் சார்ந்த மக்கள் என்று அழைக்கப்படுபவர்கள் கற்பனைக் கதைகள் பற்றி அக்கறையோடு இருக்கின்றனர். எனவே இருவருமே இழந்து விடுவார்கள்.

உண்மையான ஆன்மிகத்தை தேடுபவர் இரண்டு விஷயங்களை விட்டுவிடுவார். முதலில் அவர்கள் இந்த கற்பனைக் கதைகளை விட்டுவிடுவார்கள். அதனால் தான் சனாய் முதலில் **எழுந்து நில், கற்பனைக் கதைகளைச் செய்தது போதும்** என்று கூறுகிறார். கற்பனைக் கதைகளை கைவிடுவது தான் முதல் விஷயமாகும். மதகுருக்களின் கண்டுபிடிப்புகளை கைவிடுவதாகும். அடுத்தபடியாக இரண்டாவதாக உங்களது அடிப்படை தீவிர உணர்ச்சிகளை. ஏனெனில் உங்களது அடிப்படை தீவிர உணர்ச்சிகளில் மாபெரும் சக்தி மறைந்து இருக்கிறது. அது வெளிப்படுத்தப்பட்டால் இந்த பூமியையும் அந்த வானத்தையும் இணைக்கின்ற ஒரு பாலமாக அது ஆகிவிடும்.

*எனவே என்னிடம் வா.*

*அவரது இந்த வழிகாட்டுதல் தான்*

*உன்னை இந்த பாதையில் வைத்திருக்கிறதே தவிர*

*உனது சொந்த பலம் அல்ல என்பதை*

*நீ உணர வேண்டும்.*

ஆனால் பக்தியின் பாதையில் இதை இடைவிடாது நினைவில் வைத்திருக்க வேண்டும் என்று சனாய் மீண்டும் உங்களுக்கு நினைவுபடுத்துகிறார். இதை ஒரு சிறு நொடிப் பொழுதும் கூட மறந்து விடாதீர்கள். **அவரது வழிகாட்டுதல் தான் என்பதை நீ உணர வேண்டும்.** நீங்கள் கடவுளை நோக்கி நகர்ந்து சென்றால், அவர்தான் இதற்கு உங்களைத் தேர்ந்தெடுத்து இருக்கிறார் என்பதை எப்போதும் நினைவில் வைத்திருங்கள். ''இங்கே பாருங்கள்! நான் கடவுளைத் தேடுகின்ற மாபெரும் தேடுதலாளன். நான் சாதாரண மனிதன் கிடையாது. நான் இந்த உலகம் சார்ந்தவன் அல்ல. நான் இந்த உலக உயிரினங்கள் போன்றவன் அல்ல. நான் ஒரு ஆன்மிக மனிதன். நான் கடவுளை தேடுகிறேன். நான் பணத்தையும், பதவியையும் தேடவில்லை,'' என்று ஒரு நொடிப்பொழுதும் கூட நினைக்காதீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் மீண்டும் கீழே விழுந்து விடுவீர்கள். மீண்டும் நீங்கள் அடித்தளத்தில் திரும்பவும் விழுந்து விடுவீர்கள். உங்களது ஆணவம் திரும்பவும் வந்துவிட்டது. நீங்கள்தான் கடவுளைத் தேடுகிறீர்கள் என்று ஒருபோதும், ஒரு நொடிப் பொழுதும் கூட நினைக்காதீர்கள்.

அதற்கு மாறாக, பக்தியின் மார்க்கத்தில், உங்களை அழைத்தது அவர்தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அப்படி இல்லை என்றால் நீங்கள் எப்படி அவரைத் தேட முடியும்? உங்களைத் தேர்ந்தெடுத்தது அவராகத்தான் இருக்க வேண்டும். உங்களை இழுத்தது அவராகத்தான் இருந்தாக வேண்டும். ஏதோ ஒரு தெரியாத, புதிர் நிறைந்த வழியில் அவர் தான் உங்களை தொலைவில் உள்ள தெரியாத பிரபஞ்சத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும். **அவரது வழிகாட்டுதல்தான் உங்களை இந்த பாதையில் வைத்திருக்கிறது என்பதை நீ உணர வேண்டும்.**

மேலும் ஒரு சிறு நொடிப்பொழுதும்கூட, ''எனது பலத்தினால் தான் நான் இந்தப் பாதையில் இருக்கிறேன்'' என்று ஒருபோதும் நினைக்காதீர்கள். அப்படி கிடையாது. உங்களது பலத்தினால் இந்த பாதையில் இருக்கிறீர்கள் என்றால் நீங்கள் ஏற்கனவே வழிதவறி சென்று விட்டீர்கள். நீங்கள் ஏற்கனவே ஆணவக்காரர் ஆகிவிட்டீர்கள். நீங்கள் உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே பிரிவை ஏற்படுத்தி விட்டீர்கள்'' அவர் தான் என்னை இந்த பாதையில் வைத்திருக்கிறார். வழிதவறி போகாமல் இருக்கவேண்டும் என்று எனக்கு நினைவு படுத்துவதும் அவர்தான்'' என்று நீங்கள் நினைக்க வேண்டும்.

உண்மை என்பதற்கு பிளாட்டோ ஒரு அழகான வார்த்தையைப் பயன்படுத்துகிறார். அந்த வார்த்தை அல்தியா (Althea) என்பதாகும். அதற்கு மறந்துவிடாமல் இருத்தல் என்று அர்த்தம். உண்மையை நீங்கள் இடைவிடாமல் நினைவில் கொள்ள வேண்டும். கடவுள் இருக்கிறார் என்பதை மறக்காமல் இருப்பதுதான் உண்மை நிலையாகும். ''அவர்தான் எனக்கு இந்த உயிரைக் கொடுத்திருக்கிறார்'' என்றும் ''உண்மை நிலையைத் தேடுவதற்கான இந்த ஆசையை அவர்தான் எனக்கு கொடுத்திருக்கிறார்'' என்றும் ''அவரைத் தேடுவதற்கு அவர் என்னைத் தேர்ந்தெடுத்து இருக்கிறார்'' என்றும் ''அவர் ஏதோ ஒரு புதிரான வழியில் என்னை அழைத்திருக்க வேண்டும். இல்லை எனில் இந்த திசையில் நான் எப்படி நகர்ந்து வந்திருக்க முடியும்?'' என்றும் நீங்கள் மறக்காமல் நினைவில் வைத்து இருப்பதற்கு தான் உண்மை நிலை என்று அர்த்தமாகும்.

உங்களது நேசத்துக்குரியவர் தன்னை உங்களுக்கு நினைவுபடுத்திக் கொண்டே இருக்கிறார். ''நேசத்துக்குரியவர் தான் ஒரு காந்தம் போல செயல்படுகிறார். நான் இழுக்கப்படுகிறேன். நான் கவர்ந்து இழுக்கப்படுகிறேன். இது என்னுடைய வேலை அல்ல. இது அவரது அருள்'' என்று நீங்கள் நினைக்க வேண்டும். நீங்கள் இது அவரது அருள்தான் என்பதை நினைவில் வைத்திருக்கும் போது உங்களுக்குள் ஆணவம் எழாது. மெதுவாக, மெதுவாக ஆணவமானது கைவிடப் பட்டு விடும்.

ஆணவம் கைவிடப்பட்டு விட்டால் நீங்கள் வந்து சேர்ந்து விட்டீர்கள். அதன்பின்னர் மூன்றில் ஒன்றாக இணைகிறீர்கள். அதன்பின்னர் காதலன், காதலி, காதல், மூன்றும் ஒன்றாக விடுகிறது. நீங்கள் ஹடிகாவிற்குள் அதாவது தோட்டத்திற்குள் நுழைந்து விட்டீர்கள்.

இன்று இதுபோதும்.

*முதல் கேள்வி:*

***ஓஷோ,***

***படைப்பாற்றல் என்றால் என்ன?***

செயல் படைப்பாற்றல் அல்ல, செயல் இல்லாமையும் படைப்பாற்றல் அல்ல, படைப்பாற்றல் என்பது தன்னுணர்வு மற்றும் ஆன்மாவின் மிகவும் முரண்பாடான ஒரு நிலை. அது செயல்புரியாமல் செயல்புரிவதாகும். இதைதான் லாவோத்சு வெய் வூ வெய் (**Wei, Wu, Wei**) என்று கூறுகிறார். இது ஏதோ ஒன்று உன்மூலம் நடப்பதற்கு அனுமதிப்பதாகும். இது வெறுமே நீ ஒரு வெற்று மூங்கில் போன்று ஆகிவிடுவதாகும். இது செய்தல் அல்ல. இது அனுமதித்தல். முழுமையானது உன் மூலமாக வழிந்தோடுவதற்கு நீ பாதையாக ஆகிவிடுவதாகும். அதன் பின்னர் ஏதோ ஒன்று திடீரென்று நடக்க ஆரம்பிக்கிறது. ஏனெனில் மனிதனுக்கு பின்னால் கடவுள் மறைந்து இருக்கிறார். அவருக்கு கொஞ்சம் வழிகொடு, கொஞ்சம் வழி, உன் மூலமாக வருவதற்கு வழி கொடு. அதுதான் படைப்பாற்றல், கடவுள் நடத்துவதற்கு அனுமதிப்பது தான் படைப்பாற்றல்.

படைப்பாற்றல் என்பது மதத்தன்மையுள்ள நிலை. அதனால் தான் ஒரு மறைஇயல் அறிஞரை விடவும் ஒரு கவிஞர் கடவுளுக்கு நெருக்கமாக இருக்கிறார். ஒரு நடனக்கலைஞர் இன்னும் அதிக நெருக்கத்தில் இருக்கிறார் என்று நான் கூறுகிறேன். தத்துவமேதை வெகு தொலைவில் இருக்கிறார். ஏனெனில் நீ அதிகம் சிந்திக்கும்போது, உனக்கும் முழுமைக்கும் இடையே ஒரு மாபெரும் சுவரினை நீ உருவாக்கி விடுகிறாய். நீ

அதிகம் சிந்திக்கும் போது அதில் அதிகம் நீ இருக்கிறாய். உனது நான் என்னும் தன்முனைப்பு என்பது கடந்த காலத்தில் சேர்த்து வைக்கப்பட்ட எல்லா எண்ணங்களையும் தவிர வேறு எதுவும் அல்ல.

நீ இல்லாதபோது கடவுள் இருக்கிறார். அதுதான் படைப்பாற்றல்.

படைப்பாற்றல் என்றால் நீ முழு ஓய்வுடன் இருக்கிறாய் என்று அர்த்தம். அதற்கு செயல்புரியாமல் இருக்கிறாய் என்று அர்த்தம் அல்ல. அதற்கு ஓய்வுடன் இருக்கிறாய் என்றுதான் அர்த்தம். ஏனெனில் ஓய்வில் இருந்து அதிக செயல் பிறக்கும். ஆனால் அது நீ செய்வதாக இருக்காது. நீ அந்த செயலுக்கான வெறும் வாகனமாக மட்டுமே இருப்பாய். ஒரு பாடல் உன்மூலம் வர ஆரம்பிக்கும். அதைப் படைப்பவன் நீ அல்ல. அது அப்பால் இருந்து வருகிறது. அது எப்போதும் அப்பால் இருந்து வருகிறது. நீ அதை உருவாக்கினால், அது வெறுமனே சாதாரணமானதாக இருக்கிறது. அது உன்மூலமாக வரும்போது அதற்கு உயர்ந்த அழகு உள்ளது. அது தன்னுள் அழியாத ஒன்றினைக் கொண்டு வருகிறது.

மாபெரும் கவிஞர் கோலரிட்ஜ் இறந்தபோது, அவர் ஆயிரக்கணக்கான கவிதைகளை முடிக்காமல் வைத்திருந்தார். அவரது வாழ்க்கையில் அநேகமுறை அவரிடம், ''இந்த கவிதைகளை நீங்கள் ஏன் முடிக்கக்கூடாது?'' ஏனெனில் சில கவிதைகளில் ஒன்று அல்லது இரண்டு வரிகள் மட்டுமே இல்லாமல் இருக்கிறது. அவற்றை நீங்கள் ஏன் முடிக்கக்கூடாது?'' என்று கேட்கப்பட்டது.

அதற்கு அவர், ''என்னால் முடியாது. நான் முயற்சி செய்துவிட்டேன். ஆனால் நான் அதை முடித்தால் ஏதோ ஒன்று விடுபட்டு போகிறது, ஏதோ ஒன்று தவறாக போகிறது. என் மூலமாக வந்த அந்த கவிதையில் எனது வரிகள் ஒருபோதும் ஒத்துப்போவது இல்லை. அது தடைக்கல்லாகவே இருக்கிறது. அது ஒரு பாறையாக உள்ளது. அது கவிதையின் ஓட்டத்தை

தடுக்கிறது. ஆகவே நான் காத்திருக்க வேண்டும். என்மூலமாக யார் வழிந்தோடிக் கொண்டு இருந்தாரோ, அவர் மீண்டும் என்மூலம் வழிந்தோட ஆரம்பித்து அந்த கவிதையை முடித்து வைக்கிறாரோ அப்போது அந்த கவிதை முடிக்கப்படும். அதற்கு முன்னால் அல்ல,'' என்று கூறுவார்.

அவர் ஒரு சில கவிதைகளை மட்டுமே முடித்தார். ஆனால் அவை உயர்ந்த அழகுள்ளவை. மாபெரும் ஞானத்தின் கம்பீரம் மிக்கவை. அது எப்போதும் அப்படித்தான் இருந்தது. கவிஞன் மறைந்து விடுகிறான். அதன்பின்னர் அங்கு படைப்பாற்றல் உள்ளது. அதன்பின்னர் அவன் ஆட்கொள்ளப்படுகிறான். ஆம், அது தான் சரியான வார்த்தை, அவன் ஆட்கொள்ளப்படுகிறான்.

இந்த பிரபஞ்சத்தினால் ஆட்கொள்ளப்படுவது படைப் பாற்றல் ஆகிறது.

சைமன் டி பியூலர் என்பவர், ''வாழ்க்கை என்பது அதை நிலை நிறுத்துவதிலும், அதை மிஞ்சுவதிலும் தான் ஆக்ரமிக்கப் பட்டுள்ளது. அது செய்வது எல்லாம் அதைப் பராமரிக்கின்ற ஒன்றாகவே இருந்துவிட்டால், அதன்பின்னர் வாழ்க்கை என்பது சாகாமல் இருத்தல் என்பதாக மட்டுமே இருக்கிறது'' என்று கூறுகிறார்.

எனவே படைப்பாற்றல் இல்லாத ஒரு மனிதன் வெறுமனே சாகாமல் மட்டுமே இருக்கிறான். அவ்வளவுதான். அவனது வாழ்க்கையில் ஆழம் இருக்காது. அவனது வாழ்க்கை இன்னமும் வாழ்க்கையாக இல்லாமல் ஆனால் வெறும் ஒரு முன்னுரையாக மட்டுமே இருக்கும். வாழ்க்கை என்னும் புத்தகம் இன்னும் ஆரம்பிக்கவில்லை. அவன் பிறந்து விட்டான், உண்மைதான், ஆனால் அவன் உயிரோடு இல்லை.

நீ படைப்பாற்றல் மிக்கவனாக ஆகிவிடும்போது, படைப்பாற்றலானது உன் மூலமாக நடப்பதற்கு நீ அனுமதித்து விடும்போது, நீ உனக்கே சொந்தமான ஒரு பாடலைப் பாட ஆரம்பிக்கும்போது, ''இது எனது சொந்தப்பாடல்'' என்று நீ கூறிக்கொண்டு உனது கையெழுத்தை அதில் போடமுடியாது

போது. வாழ்க்கை என்பது சிறகுகளைப் பெறுகிறது. அது மேலே எழுகிறது.

படைப்பாற்றலில்தான் மிஞ்சிநிற்பது இருக்கிறது. மற்றபடி அதிகபட்சமாக நாம் நம்மை நிலைநிறுத்திக் கொண்டே போகிறோம். நாம் நம்மை ஞாபகப்படுத்திக் கொண்டே போகிறோம். நீ ஒரு குழந்தையை பெறுகிறாய், இது ஒரு படைப்பாற்றல் இல்லை. நீ இறந்து விடுவாய் ஆனால் அந்தக் குழந்தை வாழ்க்கையை நிலைநிறுத்த இங்கு இருக்கும். ஆனால் நீ வாழ்க்கையில் மிஞ்சி நிற்காமல், இருக்கிறவரையில், வெறுமனே வாழ்க்கையை ஞாபகப்படுத்திக் கொண்டு இருப்பது என்பது போதாது. ஆனால் மிஞ்சி நிற்பது என்பது அப்பால் இருந்து ஏதோ ஒன்று வந்து உன்னோடு தொடர்பு கொள்ளும் போது மட்டுமே நிகழ்கிறது. அதுதான் கடந்து நிற்கும் இடம், மிஞ்சி நிற்கும் இடம். மேலும் மிஞ்சி நிற்பதில் அற்புதம் நடக்கிறது. அதில் நீ இருக்கமாட்டாய் ஆனாலும் கூட முதல்முறையாக நீ இருப்பாய்.

ஞானத்தின் சாரம்சமானது இயற்கையோடு ஒத்திசைந்து செயல்புரிவதாகும். அதுதான் மாபெரும் ஞானிகளின் போதனை ஆகும். இயற்கையோடு ஒத்திசைந்து செயல்புரிவது என்பதுதான் லாவோத்சூ, புத்தர், பகாவுதீன், சோசன், சனாய் போன்ற ஞானிகளின் செய்தியாகும். விலங்குகள் தன்னுணர்வு இல்லாமலேயே ஒத்திசைந்து வாழ்கின்றன. பாறைகள், தாவரங்கள், மற்றும் நட்சத்திரங்கள் ஆகியவை தன்னுணர்வு இழந்தநிலையில் இயற்கையோடு ஒத்திசைவோடு உள்ளன. மனிதன் தன்னுணர்வோடு இயற்கையோடு ஒத்திசைந்து செயலாற்ற வேண்டும். ஏனெனில் மனிதனிடம் தன்னுணர்வு என்பது இருக்கிறது. இயற்கையோடு ஒத்திசைந்து போகாமல் செயல்புரிவதை மனிதன் தேர்ந்தெடுக்க முடியும். எனவே தான் மனிதனுக்கு மிகப்பெரிய பொறுப்பு உள்ளது.

மனிதனுக்கு பொறுப்பு உள்ளது. மனிதனுக்கு மட்டுமே பொறுப்பு உள்ளது. அதுதான் அவனது கம்பீரம். வேறு எந்த விலங்கிற்கும் பொறுப்பு என்பது கிடையாது. அது வெறுமனே

இயற்கையோடு ஒத்திசைந்து செயல்புரிகிறது. அது வழிதவறி செல்வதற்கு வாய்ப்பு இல்லை. மிருகம் வழிமாறி செல்ல முடியாது. அது இன்னமும் வழிமாறிச் செல்கின்ற திறனைப் பெறவில்லை. அதற்கு இன்னும் தன்னுணர்வு வரவில்லை. நீ ஆழ்ந்த உறக்கத்தில் செயலாற்றுவது போலத்தான் விலங்கானது செயல் புரிகிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் நீயும் கூட இயற்கையோடு ஒத்திசைந்து போகிறாய். அதனால்தான் ஆழ்ந்த தூக்கமானது அந்த அளவுக்கு புத்துயிர் அளிப்பதாகவும், அந்த அளவுக்கு ஓய்வுடன் கூடியதாகவும் உள்ளது. வெறுமனே ஒரு சில நிமிடங்கள் ஆழ்ந்து தூங்கினால் போதும் அதன் பின்னர் நீ மீண்டும் இளமையுடன் புத்துணர்வோடு இருக்கிறாய். அப்போது நீ சேர்த்து வைத்திருந்த தூசி எல்லாம், உனது களைப்பு மற்றும் சலிப்பு ஆகியவை மறைந்து போகிறது. ஆழ்ந்த தூக்கத்தில் நீ உனது மூலத்தை, ஆரம்ப இடத்தை தொடர்புகொண்டு விட்டாய். ஆனால் இது விலங்குகளின் வழியில் நீ உனது மூலத்தை தொடர்பு கொள்வதாகும். தூக்கம் என்பது உனது ஆரம்ப இடத்தை தொடர்பு கொள்வதற்கான ஒரு விலங்கின் வழியாக உள்ளது.

விலங்குகள் நேர்கோட்டு வசத்தில் செல்பவை, மனிதன் செங்குத்தாக, செல்பவன். நீ தூங்குவதற்கு விரும்பினால் நீ படுக்கை கோட்டுவசத்தில் தான் விழுந்தாக வேண்டும். படுக்கை கோட்டு வசத்தில் தான் உன்னால் தூங்க முடியும். நின்று கொண்டே உன்னால் தூங்க முடியாது. அது மிகவும் கடினமானதாக இருக்கும். நீ மீண்டும் திரும்பி செல்ல வேண்டும். பல மில்லியன் ஆண்டுகள் பின்னால் செல்ல வேண்டும். வெறுமனே ஒரு விலங்கு நிலைக்கு நீ போக வேண்டும். நீ படுக்கை கோட்டு வசத்தில், பூமிக்கு இணையாக இருக்கும்போது, திடீரென்று நீ உனது தன்னுணர்வை இழக்க ஆரம்பிக்கிறாய். திடீரென்று நீ பொறுப்புடன் இருப்பதில்லை.

இந்த காரணத்தினால் தான் சிக்மண்ட் பிராய்டு தனது நோயாளிகளுக்கு படுக்கை கோட்டு வசத்தில் உள்ள நாற்காலிகளைத் தேர்வு செய்தார். அது நோயாளிகளின்

சௌகரியத்திற்காக செய்யப்பட்டதல்ல. அது ஒரு யுக்தி. நோயாளி படுக்கை கோட்டு வசத்தில் இருக்கும்போது அவன் பொறுப்பில்லாமல் இருக்க ஆரம்பிக்கிறான். விஷயங்களைக் கூறுவதற்கு அவன் முற்றிலும் சுதந்திரத்தை உணராதவரையில், அவன் தனது ஆழ்மனதில் உள்ள விஷயங்களைக் கூறமாட்டான். அவன் நிமிர்ந்து இருந்து கொண்டு பொறுப்புடன் இருந்தால், அவன் ஆழ்மன விஷயங்களை சொல்லலாமா அல்லது சொல்லாமல் இருக்கலாமா என்று இடைவிடாமல் தீர்மானிக்க ஆரம்பித்து விடுவான். அப்போது அவன் விஷயங்களை தணிக்கை செய்து விடுவான்

நோயாளி அந்த நேர்கோட்டு வசத்தில் உள்ள படுக்கையில் படுத்துக்கொண்டு இருக்கும்போது, அவனது ஆழ்மான விஷயங்களை பகுப்பாய்வு செய்கின்ற மருத்துவர் அவனுக்கு பின்னால் மறைந்து கொண்டு இருப்பான். உன்னால் அவரைப் பார்க்க முடியாது. அப்போது திடீரென்று அந்த நோயாளி மீண்டும் ஒரு மிருகம் போன்று இருக்கிறான். அவனுக்கு பொறுப்புகள் கிடையாது. வேறு யாரிடமும் சொல்லாத விஷயங்களை அவன் இப்போது ஒரு அந்நியரிடம் உளறிக்கொட்ட ஆரம்பிக்கிறான். அவனது மனதின் தன்னுணர்வு இழந்த பகுதியில் உள்ள ஆழமான விஷயங்களை அவன் இப்போது கூற ஆரம்பிக்கிறான். அந்த ஆழ்மன விஷயங்கள் மேலே எழுந்து வர ஆரம்பிக்கின்றன. இது ஒரு யுக்தி, பிராய்டின் யுக்தி. ஒரு நோயாளியை ஒரு குழந்தை போல முற்றிலும் உதவியற்ற நிலைக்கு அல்லது ஒரு மிருகத்தின் நிலைக்கு கொண்டு செல்கின்ற பிராய்டின் யுக்தி, தந்திரம் ஆகும்.

நீ பொறுப்பில்லாமையை உணரும்போது, நீ இயல்பானவனாக ஆகிவிடுகிறாய். அப்போது மனநோய் சிகிச்சையானது மாபெரும் உதவியாக இருக்கிறது. அது உன்னை இளைப்பாறச் செய்கிறது. நீ இதுவரை உனக்குள் அடக்கி வைத்திருந்தவை எல்லாம் மேலே எழுந்து வருகிறது. மேலும் மேலே எழுந்து வந்தபின்னர் அது ஆவியாகி வெளியேறி விடுகிறது. இப்படிப்பட்ட மனப்பகுப்பாய்வு சிகிச்சைக்கு பின்னர் நீ சுமை

குறைந்தவனாக, அதிக இயல்பானவனாக, அதிக ஒத்திசைவோடு இருக்கிறாய். உன்னோடும், இயற்கையோடும் ஒத்திசைந்து இருக்கிறாய். ஆரோக்கியமாக இருத்தல் என்பதற்கு இதுதான் அர்த்தம்.

ஆனால் இது திருப்பி செல்வதாகும், பின்னோக்கி செல்வதாகும். நேற்றைய தினம் நான் பேசிக் கொண்டிருந்த அந்த அடித்தளத்திற்கு போவதாகும். ஆனால் வாழ்க்கையில் மிஞ்சி நிற்பதற்கு அடுத்ததாக ஒரு வழி உள்ளது. அது உப்பரிகைக்கு, மாடத்திற்கு நீ செல்வதாகும். அது சிக்மண்ட் பிராய்டின் வழி அல்ல. ஆனால் அது ஒரு புத்தரின் வழியாகும்.

இயற்கையோடு தன்னுணர்வோடு தொடர்பில் இருப்பதன் மூலம் நீ உன்னையே கடந்து இருக்கமுடியும். அதுதான் ஞானத்தின் சாராம்சம். இயற்கையோடு ஒத்திசைந்து இருத்தல், இந்த பிரபஞ்சத்தின் இயல்பான ஓசை நயத்தோடு ஒத்திசைந்து இருப்பதாகும். இந்த பிரபஞ்சத்தில் இயல்பான ஓசை நயத்தோடு நீ ஒத்திசைந்து இருக்கும் போது நீ ஒரு கவிஞனாக, நீ ஒரு ஓவியனாக, நீ ஒரு இசைக்கலைஞனாக, நீ ஒரு நடனக் கலைஞனாக இருக்கிறாய்.

இதை முயன்று பார். சிலசமயம் ஒரு மரத்தின் அருகில் அமர்ந்திருக்கும்போது தன்னுணர்வோடு அதோடு ஒத்திசைந்து விடு. இயற்கையோடு ஒன்றாகிவிடு. எல்லைகள் எல்லாம் கரைந்து போகட்டும். அந்த மரமாக ஆகிவிடு, அந்த புல்லாக ஆகிவிடு, காற்றாக ஆகிவிடு, அப்போது ஒருபோதும் நடந்திராத ஏதோ ஒன்று உனக்கு நடப்பதை நீ திடீரென்று காண்பாய். உனது கண்கள் மிகவும் வர்ணஜாலம் மிக்கதாக ஆகிவிடும். மரங்கள் எப்போது இருப்பதை விடவும் அதிக பசுமையானதாக தெரியும், ரோஜாக்கள் அதிக ரோஜாத்தன்மையுடன் இருக்கும். எல்லாமே ஒளிவீசுவதாக தெரியும். அப்போது திடீரென்று நீ ஒரு பாட்டு பாடவிரும்புவாய். அது எங்கிருந்து வருகிறது என்று உனக்கு தெரியாது. உனது கால்கள் நடனமாட தயாராக இருக்கும். உனது நரம்புகளில் நடனமானது முணுமுணுப்பதை நீ உணரலாம். உள்ளேயும், வெளியேயும் அந்த இசையின் ஒலியை உன்னால்

கேட்கமுடியும். இதுதான் படைப்பாற்றல் மிக்க நிலை. இப்படி இயற்கையோடு ஒத்திசைந்து இருப்பது வாழ்க்கையோடு, பிரபஞ்சத்தோடு ஓசை நயத்தோடு இருப்பது. இதை அடிப்படைத் தன்மை என்று அழைக்கலாம்.

லாவோத்சூ இதற்கு வெய்-வூ-வெய் என்று அழகான பெயரைக் கொடுத்திருக்கிறார். செய்யாமல் செய்தல். இதை நீ படைப்பாற்றல் மிக்க அமைதி என்றும் அழைக்கலாம். ஒரு தனிமனிதனுக்குள், மிகவுயர்ந்த செயலாற்றல் மற்றும் மிகவுயர்ந்த ஓய்வு ஆகிய இரண்டையும் ஒன்று சேர்க்கின்ற ஒரு செயல்முறையாக அது இருக்கும்.

அதுதான் படைப்பாற்றலின் முரண்பாடு. ஒரு ஓவியர் ஓவியம் தீட்டிக் கொண்டு இருப்பதை நீ பார்த்தால், நிச்சயமாக அவர் அந்த காரியத்தை செய்கிறார். முழு செயல்திறனுடன், பைத்தியக்காரர் போன்று அந்த செயலே அவராக ஆகி விடுகிறார். அல்லது நீ ஒரு நடனக் கலைஞர் நடனமாடுவதைப் பார்க்கிறாய். நடனமே அவராக இருக்கிறார். ஆனாலும் கூட அவருக்குள் அடி ஆழத்தில், நடிப்பவரும் இல்லை, செய்பவரும் இல்லை. அங்கு எல்லாம் அமைதியாக உள்ளது. அதனால்தான் நான் படைப்பாற்றலை ஒரு முரண்பாடு என்று அழைத்தேன். எல்லா அழகான நிலைகளும் முரண்பாடாதாக இருக்கிறது. நீ உயரத்தில் போகப்போக நீ உண்மை நிலையின் முரண் பாட்டிற்குள் ஆழ்ந்து போகிறாய்.

மிக உயர்ந்த செயல். அதோடு மிகவுயர்ந்த ஓய்வு மேற்பரப்பில் மிகப்பெரிய செயல் நடந்து கொண்டிருக்கிறது. ஆழத்தில் எதுவுமே நடப்பதில்லை அல்லது ஒன்றுமில்லாமை மட்டுமே உள்ளே நடக்கிறது. படைப்பாற்றலுடன் கூடிய அமைதியானது உயர்ந்த செயலாக இருக்கிறது. நமக்குள் இருந்து வழிந்தோடுகின்ற சுதந்திரமாக, தானே நடப்பதாக, எளிமை யானதாக, விலைமதிப்பற்ற வளைந்து கொடுத்தலாக அது இருக் கிறது. அல்லது நம் மூலமாக நடப்பதாக இருக்கிறது. தனிப்பட்ட ஆணவங்களும், தன்னுணர்வுடன் கூடிய முயற்சிகளும்

தங்களுக்கு சொந்தமில்லாத ஒரு சக்திக்கு வழி விடும்போது படைப்பாற்றல் நம் மூலமாக நடக்கிறது.

உனக்கு சொந்தமில்லாத சக்திக்கு வழிவிடுதல், உனக்கு அப்பால் உள்ள ஒரு சக்தியிடம் சரணாகதி அடைதல்தான் படைப்பாற்றலாக இருக்கிறது. தியானம் படைப்பாற்றலாக இருக்கிறது. நான் என்னும் ஆணவம் மறைந்து விடும்போது, உனக்குள் உள்ள காயமும் மறைந்து விடுகிறது. நீ குணப் படுத்தப்பட்டு விட்டாய், நீ முழுமையாக இருக்கிறாய். உனது ஆணவம் தான் உனது நோய். உனது ஆணவம் மறைந்து விடும்போது நீ ஒருபோதும் சும்மா இருக்கமாட்டாய். நீ வழிந்தோட ஆரம்பித்து விடுவாய். பிரபஞ்சத்தின் அளவுகடந்த வழிந்தோடுதலோடு நீயும் சேர்ந்து வழிந்தோட ஆரம்பித்து விடுவாய்.

நார்பர்ட் வீய்னர் என்பவர், ''நாம் தொடர்ந்து இருக்கிற பொருள் அல்ல. ஆனால் தங்களையே நிலை நிறுத்திக் கொள் கின்ற வகையைச் சார்ந்தவர்கள் எப்போதும் ஓடிக்கொண் டிருக்கும் தண்ணீரில் உண்டாகும் சுழல்கள் போன்றவர்கள்'' என்று கூறுகிறார்.

அதன்பின்னர் நீ ஒரு ஆணவமாக இருக்கமாட்டாய். ஆனால் அல்லது ஒரு நிகழ்வாகவோ அல்லது நிகழ்வுகளின் செயல்முறையாகவோ இருப்பாய். அதன்பின்னர் நீ ஒரு செயல்முறையாக இருப்பாய், ஒரு பொருள் போன்று இருக்கமாட்டாய். தன்னுணர்வு என்பது ஒரு பொருள் அல்ல. அது ஒரு செயல்முறை. ஆனால் நாம் அதை ஒரு பொருளாக ஆக்கிவிட்டோம். ''நான்'' என்று நீ அழைக்கின்ற அந்த நொடிப்பொழுதில் அது ஒரு பொருளாக ஆகிவிடுகிறது. விவரிக்கப்பட்ட, எல்லையுள்ள, தேங்கியுள்ள, செயலற்ற ஒரு பொருளாக ஆகிவிடுகிறது. அப்போது நீ மரணமடைய ஆரம்பித்து விடுகிறாய். ஆணவம் தான் உனது மரணம். ஆனால் அந்த ஆணவத்தின் மரணம் தான் உனது உண்மையான வாழ்க்கை. உண்மையான வாழ்க்கை படைப்பாற்றலாக இருக்கிறது.

படைப்பாற்றலைக் கற்றுக்கொள்ள நீ எந்த ஒரு பள்ளிக் கூடத்திற்குப் போக வேண்டியதில்லை. நீ செய்யவேண்டியது எல்லாம் உனக்குள் போய் அந்த ஆணவம் கரைந்து போவதற்கு உதவுவது ஒன்றேயாகும். அதற்கு ஆதரவு அளிக்காதே, அதை பலப்படுத்தவோ, ஊட்டமளிக்கவோ செய்யாதே. ஆணவம் இல்லாதபோது, எல்லாமே உண்மைதான், எல்லாமே அழகான வைதான். அதன்பின்னர் என்ன நடந்தாலும் அது நல்லதாகவே இருக்கிறது.

நீ ஒரு பிக்காஸோ அல்லது ஒரு சேக்ஸ்பியர் ஆகிவிடுவாய் என்று நான் கூறவில்லை. நான் அப்படிச் சொல்லவில்லை. உங்களில் சிலர் ஓவியர்கள் ஆகிவிடுவீர்கள். உங்களில் சிலர் பாடகர்கள் ஆகிவிடுவீர்கள். ஒருசிலர் இசைக் கலைஞர் களாகவும், ஒரு சிலர் நடன கலைஞர்களாகவும் ஆகிவிடுவீர்கள். ஆனால் அதுவல்ல விஷயம். ஒவ்வொருவரும் உங்களுக்கு உரித்தான வழியில் படைப்பாற்றல் மிக்கவராக ஆகிவிடுவீர்கள். நீங்கள் ஒரு சமையல்காரராக இருக்கலாம். ஆனால் அதில் படைப்பாற்றல் இருக்கும். அல்லது நீ வெறுமனே சுத்தம் செய்பவனாக இருக்கலாம். ஆனால் அதில் படைப்பாற்றல் இருக்கும். அங்கு சலிப்பு என்பது இருக்காது. சிறு விஷயங்களில் கூட நீ புதிதாக கண்டுபிடிப்பாய். சுத்தம் செய்வதிலும் கூட ஒரு வகையான வழிபாடு, பிரார்த்தனை இருக்கும். எனவே அதன்பின்னர் நீ என்ன செய்தாலும் அதில் படைப்பாற்றலின் ருசி இருக்கும்.

நமக்கு அநேக ஓவியர்கள் தேவை இல்லை. எல்லாருமே ஓவியர்கள் ஆகிவிட்டால், வாழ்க்கை மிகவும் கடினமாகிவிடும். நமக்கு அநேக கவிஞர்கள் தேவை இல்லை. நமக்கு தோட்டக் காரர்கள் தேவை, நமக்கு விவசாயிகள் தேவை. மேலும் நமக்கு எல்லா வகையான மக்களும் தேவை. ஆனால்; ஒவ்வொரு மனிதனும் படைப்பாற்றல் மிக்கவனாக இருக்க முடியும். அவன் ஆணவம் இல்லாமல், தியானம் செய்பவன் ஆக இருந்தால், அதன்பிறகு கடவுள் அவன் மூலமாக வழிந்தோட ஆரம்பிக் கிறார். அவனது திறமைக்கு தக்கபடி, அவனது சக்திக்கு தக்கபடி, கடவுள் வடிவங்களை எடுக்க ஆரம்பிக்கிறார்.

அதன்பின்னர் எல்லாமே நல்லதாக இருக்கிறது. நீ புகழ் பெற்றவன் ஆக வேண்டியதில்லை. உண்மையான படைப்பாளி ஒருவன் புகழ் அடைவதைப் பற்றி கொஞ்சம் கூட கவலைப்பட மாட்டான். அதற்கு அவசியமும் கிடையாது. அவன் என்ன செய்தாலும் அதில் அவன் மிகுந்த நிறைவை அடைகிறான். அவன் எப்படி இருக்கிறானோ, எங்கு இருக்கிறானோ அதில் நிறைவடைகிறான். அங்கு ஆசை என்னும் கேள்விக்கே இட மில்லை. நீ படைப்பாற்றலுடன் இருக்கும்போது லட்சியங்கள் மறைந்து விடுகின்றன. நீ படைப்பாற்றல் மிக்கவனாக இருக்கும்போது, நீ எப்போதும் என்னவாக இருக்கவேண்டும் என்று விரும்பினாயோ அதுவாக ஏற்கனவே இருக்கிறாய்.

***இரண்டாம் கேள்வி:***

***ஓஷோ,***

> ***நீங்கள் எப்போதும் அரசியல்வாதிகளுக்கு எதிரானவர் என்று நான் நினைத்தேன். எனவே நீங்கள் இந்திரா காந்தியை ஆசீர்வதித்ததை அறிந்தவுடன் நான் மிகவும் ஆச்சரியமடைந்தேன். அது குறித்து நீங்கள் ஏதாவது கூறுவதற்கு விரும்புகிறீர்களா?***

நான் அரசியல் மனதிற்கு எதிரானவன். அரசியல் மனம் என்றால் வஞ்சகமனம் என்று அர்த்தம். அரசியல் மனம் என்றால் கொலைகார, வன்முறை மனம் என்று அர்த்தம். அரசியல் மனம் என்றால் மற்றவர்கள் மீது ஆதிக்கம் செலுத்துவதில் மட்டுமே ஆர்வமுள்ள மனம் என்றும், பல மில்லியன் மக்களின் வாழ்க்கையானது இப்படியோ அல்லது அப்படியோ அவரது கையில் இருக்கின்ற நிலையில் மட்டுமே ஆர்வமுள்ள மனம் என்றும் அர்த்தமாகும். அரசியல்வாதியின் மனமானது, நிறைவான ஆணவக்காரரின் மனமாக உள்ளது.

நிச்சயமாக நான் அரசியல் மனதிற்கு எதிரானவன். இந்த அரசியல் மனதைச் சுற்றிசுற்றி வருகின்ற உலகை நான் விரும்பமாட்டேன். மதத்தன்மை உள்ள ஒரு உலகைத்தான் விரும்புவேனே தவிர அரசியல்தன்மை உள்ள ஒரு உலகத்தை

அல்ல. குறைந்தபட்சமாக அரசியல் தன்மையுள்ள மனமானது பின்னணிக்கு திரும்பிச் செல்ல வேண்டும் என்றாவது விரும்புவேன்.

மையத்தில் ஒரு படைப்பாற்றல் உள்ள மனம் இருக்க வேண்டும். அரசியல் அழிப்பதாக இருக்கிறது. ஆனால் இது இப்போதைக்கு நடக்காது. பல மில்லியன் ஆண்டுகளாக அரசியலானது இந்த மையத்தில் இருந்து வந்தள்ளது. ஆகவே இப்போதைக்கு அது நடக்காது. முதலில் மாபெரும் தியான சக்தியானது வெளியிடப்பட வேண்டும்.

பல மில்லியன் மக்கள் தியானம் செய்பவர்களாக ஆகிவிட்டால், அதன்பிறகு மெதுவாக மெதுவாக இந்த பூமியின் மீதுள்ள சக்தியின் அமைப்பானது மாறும். அது அரசியல் மனதில் இருந்து சமய மனதிற்கு நகர்ந்து செல்ல ஆரம்பிக்கும். நான் அரசியல் மனதிற்கு எதிரானவன். ஆனால் இப்போதைக்கு அது நடக்காது என்பதையும் நான் அறிவேன். அதற்கு இன்னமும் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் ஆகலாம். ஆரம்பமானது இப்போது நடக்க வேண்டும். விதையானது இப்போதைக்கு விதைக்கப்பட வேண்டும். ஆனால் பழங்கள் பின்னால் மட்டுமே வரும். நீ இப்போதே ஒரு அரசியல் மனம் அற்றவனாக ஆக முடியும். அப்போது உனது வாழ்க்கையானது மலர்ச்சியை பெற்றுவிடும். ஆனால் இந்த பூமியைப் பொருத்த வரையில் இதற்கு கொஞ்ச காலம் பிடிக்கும். இதற்கு இடையில் நாம் என்ன செய்யப் போகிறோம்?

நான் இந்திரா காந்தியை ஆசீர்வதித்தேன் ஏனெனில் இந்திய அரசியல்வாதிகளில் அவள் குறைந்தபட்ச அரசியல்தனம் இருப்பதாக எனக்கு தெரிகிறது. இது மீண்டும் உனக்கு விநோதமானதாக தெரியும் ஏனெனில் அவளைப்பற்றி என்னவெல்லாம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அவளைப்பற்றி என்னவெல்லாம் பரப்பப்பட்டிருக்கிறதோ, அவளைப்பற்றி உள்ள வதந்திகள் எல்லாம் வெறுமனே நேர் எதிரானவை. ஆனால் நான் கவனித்தவரையில் அவள் குறைந்தபட்ச அரசியல்மனம் கொண்டவராக தெரிகிறார்.

நான் ஏன் அப்படி கூறுகிறேன்? இவைதான் அதற்கான காரணங்கள், முதலாவதாக, அவள் உண்மையில் ஒரு அரசியல்வாதியாக இருந்தால், அரசியல்வாதியாக மட்டுமே இருந்திருந்தால், இந்திய பாரம்பரியத்திற்கு எதிராக செல்கின்ற எதையும் செய்வதற்கு அவள் முயற்சி செய்திருக்கவே மாட்டார். அரசியல்வாதி ஒருபோதும் பாரம்பரியத்திற்கு எதிராக செல்லமாட்டார். அவர் எப்போதும் தனது சொந்த தொண்டர் களைத் தான் பின்பற்றுவார். அது ஒருவருக்கொருவர் செய்து கொண்டுள்ள உடன்பாடு. குறிப்பாக ஜனநாயக அமைப்பில், அரசியல்வாதியால் பாரம்பரியத்திற்கு எதிராக போகமுடியாது. ஏனெனில் ஐந்து வருடங்களுக்;கு பின்னர் தேர்தல் வரும். நீ மக்களின் பாரம்பரியத்திற்கு எதிராக சென்றால், அது சரியா அல்லது தவறா என்பதல்ல விஷயம், நீ பாரம்பரியத்திற்கு எதிராக சென்றால் மக்கள் பழிவாங்கி விடுவார்கள்.

எனவே உண்மையான அரசியல்வாதி மாற்றத்தைப் பற்றி பேசுவதை மட்டுமே செய்வான். ஆனால் அவன் ஒருபோதும் எதையும் மாற்ற முயற்சி செய்யமாட்டான். அவர்கள் பேச மட்டுமே செய்வார்கள். பேசுவது தவறல்ல. சரியானது. அது யாரையும் புண்படுத்துவதில்லை. மக்கள் கூட்டம் கூட பேசுவதை ரசிக்கும். புரட்சி பற்றி பேசலாம். ஆனால் அதைச் செய்வதற்கு முயற்சி செய்யக்கூடாது. ஏனெனில் நீ அதை செய்வதற்கு முயற்சி செய்யும்போது மக்கள் கூட்டத்தின் அநேக பாரம் பரியங்கள் மற்றும் மூடநம்பிக்கைகள் ஆகியவை அழிக்கப்பட வேண்டியதிருக்கும். எனவே அதன்பின்னர் அந்த மக்கள் கோபம் அடைவார்கள். ஜனநாயக அமைப்பு முறையில் அவர்களின் கோபம் ஆபத்தானதாக இருக்க முடியும்.

இந்திரா காந்தி ஏதாவது செய்யவேண்டும் என்று முயற்சி செய்தார், நேர்மையான முயற்சி செய்தார். உண்மையில் அதுதான் அவருக்கு சிக்கலை உருவாக்கி விட்டது. பணக்காரர்களுக்கு எதிராக அவர் ஏழைகளுக்கு உதவி செய்ய முயற்சி செய்தார். அவள் பணக்காரர்களை கோபத்துக்குள்ளாக்கினார். அவர்கள் தான் பலம் மிக்கவர்கள். அவர் அரசியலால் ஆதாயம்

அடைபவர்களை கோபத்துக்குள்ளாக்கினார். எந்த ஒரு அரசியல்வாதியாலும் அதைத் தாங்கிக் கொள்ள முடியாது. பெரிய விஷயங்களையும் பற்றி பேசுவது அனுமதிக்கப்படும். நீ என்ன பேசுகிறாய் என்று ஒருவரும் கவலைப்பட மாட்டார்கள். ஆனால் வெறுமனே எதையும் செய்வதற்கு முயற்சி செய்யாமல் இருக்க வேண்டும். புதிய யோசனைகளை உருவாக்கி கொண்டே செல். ஆனால் அவற்றை ஒருபோதும் செயல்படுத்தாதே.

இந்த நாட்டின் பணக்காரர்களை அவர் கோபத்திற்குள்ளாக்கினார். ஏனெனில் அவர்; ஏழைக்களுக்கு ஏதாவது செய்தார். ஆனால் அவர் ஏழைகளை கோபத்திற்கு உள்ளாக்கினார். ஏனெனில் அவர் செய்தது எல்லாம் அவர்களின் பாரம்பரியத்திற்கு எதிரானதாக போய்விட்டது. உதாரணமாக அவர் குடும்பக் கட்டுப்பாட்டை திணித்தார். இந்திய மக்களால் அதை சகித்துக் கொள்ள முடியவில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக கடவுள்தான் தங்களுக்கு குழந்தைகளைக் கொடுப்பதாக இந்திய மக்கள் நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். எனவே அதைத் தடுப்பதற்கு நீ யார்? இது கடவுளின் பரிசு என்பதுதான் மக்களின் எண்ணமாக இருந்தது. இப்போது அந்த பரிசு ஆபத்தாக மாறிவிட்டது. அந்த பரிசானது கிட்டத்தட்ட தற்கொலை நிலைக்கு செல்லும் அளவுக்கு ஆபத்தானதாக ஆகிக் கொண்டு இருக்கிறது. இந்த நாடு மரணத்தை நோக்கி போகட்டும், யார் அதைப் பற்றி கவலைப்படுகிறார்கள்?

மொரார்ஜி தேசாய் வந்ததில் இருந்து, குடும்பக் கட்டுப்பாட்டிற்கான எல்லா திட்டங்களும் கைவிடப்பட்டன. ஆனால் அது ஒன்று மட்டுமே இந்த நாட்டின் நம்பிக்கையாக இருந்தது. இந்த நாடு உயிர் பிழைத்து இருக்க முடிந்தால், அதற்கான ஒரே நம்பிக்கை உங்களது ஜனத்தொகையை குறைப்பது மட்டுமேயாகும். ஏற்கனவே இங்கு மக்கள் தொகை அதிகம் உள்ளது. எழுபத்தி ஐந்து சதவிகித மக்கள் மனிதநிலைக்கு கீழ்நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். ஐம்பது சதவிகித மக்கள் கிட்டத்தட்ட பட்டினி கிடக்கினார்கள். இருபத்து ஐந்து ஆண்டுகளுக்குள், இந்த நூற்றாண்டின் இறுதியில், இந்த

ஒட்டுமொத்த நாடும் பட்டினியில் கிடக்கும். ஆனால் அது ஒரு விஷயமாக எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

அரசியல்வாதி இப்போது அவருக்குள்ள அதிகாரத்தை மட்டுமே நினைக்கிறார். இங்கு அவர் பிரதமராக ஐந்து வருடங்கள் அல்லது அதிகபட்சமாக பத்து வருடங்கள் இருப்பார். அதன் பின்னால் என்ன நடக்கிறது என்று யார் கவலைப்படுவார்கள்? அவர் ஏன் அவரது அதிகாரம் மற்றும் பதவியை பணயமாக வைக்கவேண்டும்? இந்திரா அதை பணயம் வைத்தார். அதனால்தான் அவளை இந்திய அரசியலில் குறைந்த பட்சமாக அரசியல் மனம் உள்ள மனிதரராக அழைக்கிறேன்.

இரண்டாவதாக அவர்; தனது திட்டங்களில் வெற்றி பெற .... அது ஆபத்தானது; நீ வெற்றி அடையக்கூடாது. அதிகாரத்தில் உள்ள ஒரு மனிதன் தோற்றுப் போய்விட்டால், எல்லா அரசியல்வாதிகளும் சந்தோஷப்படுகின்றனர். ஏனெனில் ஆட்சியில் உள்ள ஒரு மனிதர் தோற்றுப்போவது அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பத்தை கொடுக்கும். ஆட்சியில் இருப்பவர் வெற்றி பெற்றால் அதன்பின்னர் தாங்கள் ஒருபோதும் ஆட்சிக்கு வரமுடியாது. மேலும் இந்த நாட்டில் ஒரு குறிப்பிட்ட ஒழுங்கிணைக் கொண்டு வந்ததில் வெற்றி பெற்ற முதல் இந்தியப் பிரதமர் அவர்தான். இங்கு இருந்த குழப்பங்களுக்கு சில ஒழுங்கு நடவடிக்கைகளை உருவாக்கினார். அவர் மக்களின் வாழ்க்கை தரத்தை உயர்த்துவதில் வெற்றி அடைந்தார். மக்கள் அதிக ஆக்கபூர்வமாகவும், குறைவான அழிவுப்பூர்வத்துடனும் இருப்பதற்கு அவர் உதவினார். அவர் அநேக அநேக வழிகளில் வெற்றி பெற்றுக் கொண்டு இருந்தார்.

ஆனால் அது மற்ற அரசியல்வாதிகளை கோபத்துக்குள் ளாக்குகிறது. இப்போது அவர்களுக்குரிய சந்தர்ப்பம் என்ன இருக்கிறது? ஆட்சியில் இருப்பவர்களின் தோல்விகளில் தான் அடுத்த அரசியல்வாதிகள் உயிர் வாழ்கின்றனர். ஒருவர் வெற்றி பெற்று விடக்கூடாது. வெற்றி பெறுவதைவிட அதிக ஆபத்தானது எதுவும் கிடையாது.

இது விநோதமானது. ஆனால் மனித வரலாற்றில் இதுதான் உண்மை. யாராவது ஒருவர் வெற்றி பெற்று விட்டால், அவரது சொந்த வெற்றியே அவர்மீது பூமராங் ஆகப் போகிறது. அவர் தோற்றுப் போயிருந்தால்; இங்கு பிரச்சினை இருந்திருக்காது. அதன் பின்னர் அவருக்கு எதிராக இருந்த அரசியல்வாதிகள் பிரிவுபட்டு இருந்தார்கள். மேலும் அவர்கள் பிளவுபட்டு இருந்ததால் அவருக்கு ஆபத்து இல்லாமல் இருந்தது. ஆனால் அவர் தொடர்ந்து வெற்றி பெற்றுக் கொண்டு வந்ததால் ஆட்சியில் அடுத்தவர்கள் வருவதற்கான சந்தர்ப்பங்கள் குறைந்து கொண்டே சென்றது. அவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்தனர். அவர்கள் ஒன்று சேர்ந்து இருந்தாக வேண்டும். அவர்களுக்கு இது வாழ்வா சாவா பிரச்சினை. இப்போது கொள்ளைகள் குறித்து எந்த கேள்வியும் இருக்காது.

இந்தியாவில் ஒரு விநோதமான விஷயம், மிகவும் விநோதமான விஷயம் நடந்தது. மொரார்ஜி தேசாய் மகாத்மா காந்தியை பின்பற்றுபவர். ஆனால் அவர் மகாத்மா காந்தியைக் கொன்றவர்களின் உதவியின் மூலம் ஆட்சியில் இருக்கிறார். விநோதமான மனிதர்கள்! ஆனால் வாழ்வா சாவா என்ற கேள்வி எழும்போது கொள்கைகளைப் பற்றி யார் கவலைப்படுவார்கள். கொள்ளைகள் என்பவை விளையாட்டு பொருள்கள், பொம்மைகள் போன்று நல்லவை. பல்வேறு நோக்கங்கள், அணுகுமுறைகள், நேர் எதிரான கொள்கை உள்ளவர்கள், அனைவரும் ஒன்று சேர்ந்து இந்திரா காந்திக்கு எதிராக ஒன்றாக அணிதிரண்டனர். ஏன்? இது எப்படி நடந்தது? அவர் வெற்றி பெற்றுக் கொண்டு இருந்தார்.

அரசியல்வாதிகள் வெறும் பாசாங்கு மட்டுமே செய்வார்கள். அவர்கள் உண்மையில் ஒருபோதும் எதையும் செய்வதில்லை. ஆனால் அவர் நேர்மையாக இருந்தார். இந்த நாட்டிற்கு உண்மையில் ஏதாவது செய்வதற்கு அவர் முயற்சி செய்தார். அதனால்தான் இந்த நாடு அவரை ஒருபோதும் மறக்க முடியாது.

ஒரு தனிப்பட்ட வழக்கிற்காக அவரது வாழ்நாள் முழுவதும் நீதிமன்றங்களில் போராடிய ஒரு மனிதரை நான் அறிவேன்.

கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டுகள் போராடினார். அவரது வழக்கை விசாரித்த எல்லா நீதிபதிகளும் இறந்துவிட்டனர். அவரது வழக்கை எடுத்தவர்கள் அனைவரும் இறந்துவிட்டனர். அவருக்கு ஆதரவாகவும், எதிராகவும் இருந்த வக்கீல்களும் இறந்துவிட்டனர். இறுதியில் அவரும்கூட இறந்து விட்டார். ஆனால் அந்த வழக்கு மட்டும் முடிக்கப்படாமல் இருந்தது. நீதிபதிகள் மற்றும் வக்கீல்கள் மட்டும் மரணமடையவில்லை. அரசாங்கம் கூட மாறிவிட்டது. 1947-ல் இந்தியா சுதந்திரம் பெற்றுவிட்டது. அந்த வழக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தால் போடப்பட்டது. அரசாங்கம்கூட மரணமடைந்து அடுத்த அரசு ஆட்சிக்கு வந்தும்கூட அந்த வழக்கு தொடர்ந்தது.

இந்த நாட்டில் நீ எதையாவது செய்ய விரும்பினால், இப்படிப்பட்ட அதிகார வர்க்கத்தினரை வைத்துக் கொண்டு செய்வது சாத்தியப்படாது. அதிகார வர்க்கத்தினரை காரியங்களைச் செய்யும்படி நிர்பந்திக்க வேண்டும். அதிகாரவர்க்கம் கோபத்தில் இருந்தது. உண்மையில் இந்திதரா காந்தியை ஏமாற்றியது இந்த அதிகார வர்க்கம்தான். அவரிடம் பொய்யான தகவல்கள் கொடுக்கப்பட்டன. அவரது நிலை முற்றிலும் சரியானது என்று அதிகாரவர்க்கத்தினர் பொய்யான தகவல்களைக் கொடுத்தனர். அவர் தேர்தலை நடத்தலாம். அவர்தான் வெற்றி பெறுவார் என்று பொய்யான தகவல்கள் கொடுக்கப்பட்டன. அவர் அந்த அதிகார வர்க்கத்தின் அறிக்கைகளைச் சார்ந்து இருந்தார். அந்த அறிக்கைகள் பொய்யானவை. அதிகாரவர்க்கம் முற்றிலும் அவருக்கு எதிராக இருந்தது. யாரும் இதுவரை எதையும் செய்யும்படி இந்த அளவுக்கு நிர்பந்தம் செய்ததில்லை. ஆனால் அவர் இந்த அதிகாரவர்க்கத்திடம் எல்லாவற்றையும் செய்யும்படி நிர்பந்தித்தார்.

ஆனால் மொரார்ஜி தேசாய் வந்தவுடன், இந்த அதிகார வர்க்கம் முற்றிலும் சந்தோஷம் அடைந்தது. மீண்டும் காரியங்கள் முன்பு எப்படி மெதுவாக நகர்ந்து சென்றதோ அதே போன்று நகர்ந்து சென்றது. மொரார்ஜி கூட ஒரு அதிகார வர்க்கத்தை சேர்ந்தவர்தான். அவர் ஒரு துணை ஆட்சியராக தனது

வாழ்க்கையை தொடங்கியவர். இந்த அதிகார வர்க்கம் எப்படி செயல்படும் என்பதை அவர் அறிவார். அவர் அதில் குறுக்கிடு வது கிடையாது. ஆட்சியில் வெறுமனே நீ இருக்கவேண்டும் என்று இருந்தால் நீ குறுக்கிடமாட்டாய். அதுதான் அரசியல் வாதியின் மனம். நீ அநேக எதிரிகளை உருவாக்கிக் கொள்ள மாட்டாய்.

பணக்காரர்கள் இந்திராவிற்கு எதிராக இருந்தனர். ஏனெனில் அவர் ஏழை மக்களை அவர்களின் வறுமையில் இருந்து கொஞ்சம் மேலே கொண்டுவர முயற்சி செய்தார். ஆனால் அந்த ஏழை மக்களோ அவர் கட்டாய குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை கொண்டு வந்ததால் கோபமடைந்தனர். அதை நீங்கள் வலுக்கட்டாயமாகத் தான் செய்யமுடியும் மற்றபடி அது சாத்தியப்படாது. அதிகாரவர்க்கம் அவருக்கு எதிராக இருந்தது ஏனெனில் அதிகார வர்க்கத்தினர் வேலை செய்யும்படி அவர் நிர்பந்தித்தார். விரைவாக திட்டங்களை நிறைவேற்ற நிர்பந்தித்தார். இந்த ஒட்டுமொத்த நாடும் அவர்மீது கோபத்தில் இருந்தது. அவர் ஓர் அரசியல்வாதியாக இருந்திருந்தால் இதுபோன்று நடந்திருக்காது.

நான்காவதாக அவர் அவசரநிலையை பிரகடனம் செய்தார். அவர் நேர்மையாக இருந்தார். அவர் ஓர் அரசியல்வாதியாக இருந்திருந்தால் அவசரநிலையில் செய்யப்படுகின்ற எல்லா வற்றையும் அவசரநிலை பிரகடனம் செய்யாமலேயே அவரால் செய்திருக்க முடியும். இப்போது அதுதான் செய்யப்படுகிறது. அவசரநிலை காலத்தில் இருந்ததைப் போன்றுதான் எல்லாம் நடைபெறுகின்றன. ஆனால் அதை அறிவிக்காமல் செய் கிறார்கள். வஞ்சக அரசியல்வாதி எப்போதுமே மறைமுகமாக காரியம் செய்வார். நேரடியாக செய்யமாட்டார். அவர் நேர்மையானவர் அல்ல.

பி.பி.சி.க்கு கொடுத்த பேட்டி ஒன்றில் மொரார்ஜி தேசாய் கூறியதாவது: பி.பி.சி.யின் நிருபர் அவரிடம் இது குறிப்பாக நேரடியாக உங்களிடம் கேட்கப்படுகிறது. இந்த நாட்டில் நடைபெறும் காரியங்கள் பற்றி கேட்கப்படுகிறது. ''நீங்கள்

உங்களது நாட்டில் திரைப்படம் எடுப்பதற்கு எங்களை சுதந்திரமாக அனுமதிப்பீர்களா?'' என்று கேட்டார். அதற்கு அவர், ''அது எங்களது பாதுகாப்பிற்கு ஆபத்தானதாக இல்லை என்றால் நான் அதை அனுமதிப்பேன்,'' என்று பதிலளித்தார்.

இப்போது, இந்த நாட்டின் பாதுகாப்பிற்கு எனது சந்நியாசிகள் எப்படி ஆபத்தானவர்களாக இருக்கின்றனர்? டைனமிக் தியானம் மற்றும் குண்டலினி தியானம் செய்து கொண்டும் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் இருப்பவர்கள், எப்படி ஆபத்தானவர்களாக இருக்க முடியும்? அப்படி மொரார்ஜி தேசாய் ஏதாவது ஆபத்து உள்ளது என்று நினைத்தால் அவர் வெறுமனே பி.பி.சி.யினரிடமும் மற்றும் எல்லா தொலைக்காட்சி நிறுவனங்களிடமும், ''ஆஸ்ரமம் குறித்து உங்களது படத்தை எடுங்கள். ஆனால் உங்களது படங்கள் தணிக்கை துறைக்கு சென்றாக வேண்டும்'' என்றார். இது மிகவும் எளியது! உங்களது நாட்டிற்கு எதிராக ஏதாவது போய்விடுகிறது என்றால் நீங்கள் அதை வெட்டி எறிந்து விடலாம். ஆனால் இது வஞ்சகம் நிறைந்த அரசியல் மனமாகும். சுதந்திரம் பற்றி பேசுவார்கள், வெறுமனே சுதந்திரம் பற்றி பேசுவார்கள், அவ்வளவுதான். ஆனால் மேலும் மேலும் அதிகமாக மக்களுக்கு அடிமைத்தளைகளை உருவாக்கி கொண்டே போவார்கள்.

இந்திரா நேர்மையானவர், அவர் அவசரநிலையை பிரகடனம் செய்தாள். அது சீனா அல்லது பாகிஸ்தானோடு போர் புரிவதைவிடவும் அதிக ஆபத்தானது. ஏனெனில் சீனா உங்களை அழிக்கமுடியாது. அல்லது பாகிஸ்தானும் உங்களை அழிக்க முடியாது. ஒருவேளை சீனா சில மைல் தூரம் நிலத்தை மட்டும் எடுத்துக் கொள்ளலாம். ஆனால் இந்த ஜனத்தொகை அதிகரிப்பு என்பது தான் உண்மையான எதிரியாக இருக்கிறது. வரப் போகின்ற குழந்தைகள் உங்களை அழித்துவிடப் போகிறார்கள். விஷயங்கள் ஆபத்தான சூழ்நிலையில் உள்ளன. கடந்த காலத்தில் எப்போதும் இந்தியா இதுபோன்ற நெருக்கடியை சந்தித்ததில்லை. இதை கையாள்வதற்கு எந்த ஒரு வழியும் அதற்கு தெரியவில்லை. விஷயங்கள் மிகவும் கவலைக்குரியதாக எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.

அவசர நிலையினை திணித்ததற்கு பின்னால் அந்த முயற்சிதான் இருந்தது. ஆனால் ஒரு ஜனநாயக நாட்டில் அவசரநிலையை பிரகடனம் செய்வது ஆபத்தானது. அதை அரசியல்மனம் இல்லாத ஒருவரால் மட்டுமே செய்யமுடியும். சூழ்நிலையை உண்மையிலேயே மாற்ற விரும்புகின்ற ஒருவரால் மட்டுமே செய்யமுடியும். அதை என்ன விலை கொடுத்தாவது செய்ய வேண்டும். அவர் தனது பிரதமர் பதவியை, இந்த நாட்டின் வரலாற்றின் போக்கை மாற்றுவதற்கு பணயமாக வைத்தார்.

இந்த அவசரநிலை பத்திரிகையாளர்கள் மற்றும் ஊடக மக்களை கோபம் கொள்ளச் செய்தது. மேலும் எந்த ஒரு அரசியல்வாதியும் பத்திரிகையாளரை கோபத்திற்குள்ளாக்க விரும்பமாட்டார். ஏனெனில் அவர் அவர்களை அதிகம் சார்ந்து இருக்கிறார். இந்திராவின் வீழ்ச்சியில் ஐம்பது சதவிகிதம் இந்திய பத்திரிகையாளர்களால் சாத்தியமாயிற்று என்று தயங்காமல் கூறலாம். அவர்கள் கோபத்திற்கு மேல் கோபம் கொண்டனர். அவர்கள் கிசுகிசுக்களை எழுதுவதற்கு அனுமதிக்கப்படவில்லை. வதந்திகளை உண்டாக்க அவர்கள் அனுமதிக்கப்படவில்லை. ''பத்திரிகை சுதந்திரம்'' என்று அவர்கள் அழைப்பதை அனுமதிக்கவில்லை. எனவே அவசரநிலை நீக்கப்பட்ட பின்னர், அவர்கள் பழிவாங்கி விட்டனர். இப்படித்தான் மனிதமனம் வேலை செய்கிறது. ஒரு அரசியல்வாதி இது குறித்து உஷாராக இருந்திருப்பார்.

ஐந்தாவதாக அவரது மகன் சஞ்சய்காந்தி அரசியலில் நுழைந்தார். ஒரு உண்மையான அரசியல்வாதி, ஒரு வஞ்சக அரசியல்வாதி அவரை பின்வாசல் வழியாக மட்டுமே அனுமதித்திருப்பார். இல்லையெனில் மற்றவர்கள் பொறாமைப்படுவார்கள். அவர் அவரை முன் வாசல்வழியாக நுழைய அனுமதித்தாள். ஆனால் ஒட்டுமொத்த நாடும் பொறாமை கொண்டது.

யாரும் அரசியலில் நுழைவதைத் தடுப்பதற்கு எந்த காரணமும் இல்லை. அவன் பிரதமரின் மகனாக இருந்தாலும் கூட

அவனுக்கு அரசியலில் நுழைவதற்கு மற்றவர்களுக்கு உள்ளதைப் போன்ற உரிமை உள்ளது. சஞ்சயிடம் கொஞ்சம் சக்தி இருந்தது. அதில் எந்த தவறும் இல்லை. ஆனால் அவனை முன்வாசல் வழியாக அனுமதித்தது என்பது ஒரு அரசியல் அல்லாத விஷயம். ஒரு வஞ்சக அரசியல்வாதி என்பதைவிடவும் அவர் ஒரு தாயாக, ஒரு மனுஷியாக செயல் பட்டார்.

அவரது சொந்த தந்தையும்கூட அவரை பின்வாசல் வழியாக ஒரு போதும் அனுமதித்ததில்லை. ஆனால் அவர் ஓர் அரசியல்வாதி என்பதை விடவும் அவள் ஒரு தாய். அவள் சஞ்சய்காந்தியை முன் வாசல்வழியாக அனுமதித்தாள். அது ஆபத்தாகி விட்டது. அவளது வீழ்ச்சிக்கு மிகவும் முக்கிய காரணங்களில் அதுவும் ஒன்றாகிவிட்டது. அது மிகவும் ஆபத்தானதாக இருந்தது. ஏனெனில் சஞ்சயிடம் அந்த சக்தி இருந்தது. கூடிய விரைவில் அவர் பிரதமராக ஆகி இருப்பார். அவரிடம் அதற்கான சக்தியும், தைரியமும் இருந்தது. அதைத் தடுக்க முடியாது. ஆனால் இந்திரா அரசியல்வாதி போல் அல்லாமல் செயல்பட்டார்.

மொரார்ஜி தேசாய் மிகவும் வஞ்சகர். அவரது மகனும் அரசியலில் இருக்கிறார். ஆனால் எப்போதும் அவருக்கு பின்னால் இருக்கிறார். ஆட்சி அதிகாரத்தில் இன்னும்கூட அதிக ஆர்வம் உள்ளவர்கள். இன்னமும் அதிக தூரம் சென்றார்கள். ஹரியானா மாநிலத்தின் முதல்வராகிய தேவிதயாள் தனது மகனை தனது மகன் அல்ல என்று கூறிவிட்டு அவரது பதவியை காப்பாற்றி கொண்டார். பதவியை காப்பாற்றி கொண்டு மகனை தனது மகன் இல்லை என்று கூறிவிட்டார். இப்படித்தான் அரசியல்வாதி செயலாற்றுகிறார்.

இந்திரா காந்தி தனது மகனைக் காப்பாற்ற தனது ஆட்சியை பணயமாக வைத்தார். இது ஒரு அரசியல்வாதியின் வழி அல்ல. ஒருவேளை ஒரு தாயின், ஒரு பெண்ணின் வழியாக இருக்கலாம்.

ஆறாவதாக, அரசியல்வாதி செய்கின்ற மிகப்பெரிய தவறு, மிகவும் அடிப்படையான தவறை அவர் செய்தார். இந்திரா காந்தி

எல்லா அரசியல் கட்சிகளையும் ஒன்றாக சிறையில் அடைத்தார். அது மிகவும் அர்த்தமற்றது. அரசியலுக்கும் எனக்கும் சம்பந்தமில்லாத என்னைப்போன்ற ஒருவனால்கூட அது அர்த்தமற்றது என்பதைக் காணமுடிந்தது. நீ உனது எதிரிகளை எல்லாம் பிடித்து சிறையில் போட்டால், அவர்கள் அனைவரையும் ஒன்று சேர்வதற்கு நீ நிர்ப்பந்திக்கிறாய்.

அவள் மச்சியவல்லியை கொஞ்சம் அதிகம் படித்திருக்க வேண்டும். அது மிகவும் எளிமையானது. ஒரு அரசியல்வாதி ஒருபோதும் அதைச் செய்யமாட்டார். குறைந்தபட்சம் பாதி எதிரிகளையாவது சிறைக்கு வெளியே வைத்திருந்து இருக்கலாம். மீதி பாதி எதிரிகளை சிறையில் போட்டிருக்கலாம். அவர்களை தனியாக வைத்து சண்டை போட வைத்திருக்கலாம். ஏனெனில் ஆட்சி செய்வதற்கு அது ஒன்றுதான் வழி. பிரித்து ஆளுதல், இது முற்றிலும் முட்டாள்தனமானது. அதாவது உனது எதிரிகளை எல்லாம் ஒன்றாக சிறையில் போட்டதால் அவர்கள் அனைவரும் ஒன்று சேர்வதற்கு கிட்டத்தட்ட நீ நிர்ப்பந்தப்படுத்தி விட்டாய். அதை அவர்களால் தவிர்க்க முடியாது. இப்போது நீ அவர்கள் அனைவருக்கும் எதிரி ஆகிவிட்டாய்.

அவர்கள் நண்பர்கள் ஆகிவிட்டனர். மேலும் தாங்கள் நண்பர்களாக ஒன்று சேர்ந்துவிட்டால் அதன் பின்னர் இந்திரா போய்விடுவாள் என்கிற விஷயத்தை அவர்கள் கண்டு கொண்டனர். முப்பது ஆண்டுகளாக இதை அவர்கள் பார்க்க வில்லை. முப்பது ஆண்டுகளாக அவர்கள் பிரிந்து இருந்தனர். திடீரென்று இந்திரா அவர்களை ஒன்று சேர்த்துவிட்டாள். எனவே, ''நாம் அனைவரும் ஒன்று சேர்ந்தால், இந்திரா காந்தி ஒன்றுமில்லாமல் போய்விடுவாள்'' என்று அவர்கள் தெரிந்து கொண்டனர். காங்கிரஸ் கட்சி முப்பது ஆண்டுகளாக ஆட்சி செய்தது. ஏனெனில் எதிரிகள் பிரிந்து கிடக்கிறார்கள். எனவே இந்திரா ஒரு அரசியல்வாதி அல்லாதவர் போன்று செயல் பட்டாள்.

ஏழாவதாக, அவசரநிலைக்கு பின்னர், உடனடியாக மக்கள் மீது குடும்பக் கட்டுப்பாட்டை திணிப்பதற்கு பெரும் முயற்சி

எடுத்துக் கொண்டாள். ஏழை மக்கள், பணக்கார மக்கள், பத்திரிகையாளர்கள் இப்படி அனைவரும் கோபத்தில் இருக்கும்போது அவசர நிலைக்கு பின் உடனடியாக ஒரு பொதுத் தேர்தலை அறிவித்தது மீண்டும் ஏற்றுக் கொள்ள முடியாததாகும்.

அவள் என்னிடம் கேட்டிருந்தால் நான் அவரிடம் ''குறைந்தபட்சம் ஒரு வருடமாவது காத்திரு. அவசரநிலையை விலக்கிவிட்டு ஒரு வருடம் காத்திரு'' என்று சொல்லி இருப்பேன். அந்த ஒரு வருடத்தில் அதை செய்து முடிக்கலாம். பத்திரிகையாளர்களின் கொதிப்பு அடங்கிவிடும். குடும்பக் கட்டுப்பாட்டை திணித்ததை மக்கள் மறந்துவிடுவார்கள். மக்களின் நினைவாற்றல் மிகவும் குறுகியவது. மேலும் அந்த ஒரு வருடத்தில், எல்லா அரசியல் எதிரிகளும் தங்களின் பழைய பழக்கத்திற்கு மாறி இருப்பார்கள். மேலும் ஒருவருக்கொருவர் மீண்டும் சண்டை போட ஆரம்பித்து விடுவார்கள்.

நாட்டின் மீது உடனடியாக பொதுத் தேர்தலை அறிவித்தது முற்றிலும் அரசியல்தனம் அல்ல. அப்படித்தான் அவள் தோறகடிக்கப்பட்டாள்.

இந்தத் தவறுகளால்தான் அவளை இந்திய அரசியல்வாதி களில் குறைந்த அளவு அரசியல்தனம் உள்ளவர் என்று நான் கூறுகிறேன். அதனால்தான் அவரை நான் ஆசீர்வதித்தேன். நான் அவளை ஆசீர்வதித்தேன். மீண்டும் அவளை நான் ஆசீர்வதிக்கிறேன்.

***மூன்றாம் கேள்வி:***

***ஓஷோ,***

***இளம் குழந்தைகளுக்கு பாலியல் கல்வி கற்றுக் கொடுப்பது பற்றி நீங்கள் என்ன கூறுகிறீர்கள்?***

உண்மை உண்மைதான். எனவே யாரும் அதிலிருந்து ஒதுக்கி வைக்கப்படக்கூடாது. சிறுவர்கள் இளைஞர்களாக இருக்கிறார்கள் என்பதற்காக அவர்களுக்கு பொய்களைக் கற்றுக் கொடுக்க வேண்டுமா? உண்மை என்பது வளர்ந்தவர்களுக்கு மட்டும்

தானா? அப்படியானால் உண்மை என்பது குழந்தைகளின் மென்மையான தன்னுணர்விற்கு ஆபத்தானது என்று அர்த்தமா?

உண்மை ஒருபோதும் ஆபத்தானது அல்ல, பொய்தான் ஆபத்தானது. நீ வளர்ந்த ஒருவனிடம் பொய் கூறினால் அவனால் தன்னைப் பாதுகாத்துக் கொள்ளமுடியும். அது மன்னிக்கப்பட முடியும். ஆனால் ஒருபோதும் ஒரு குழந்தை யிடம் பொய் கூறாதே. ஏனெனில் அவன் உதவியின்றி, விவரிக்க முடியாதபடி இருக்கிறான். அவன் உன்னை அதிகம் சார்ந்து இருக்கிறான். அவன் உன்னை அதிகம் நம்புகிறான். அவனுக்கு துரோகம் செய்துவிடாதே. இது துரோகம் செய்தல்தான். எந்த ஒரு பொய்யையும் கூறும்போது நீ அந்த குழந்தைக்கு துரோகம் செய்து விடுகிறாய். இறுதியில் நீ தான் சிக்கலில் மாட்டிக் கொள்வாய். கூடிய விரைவில் நீ பொய்தான் சொன்னாய் என்பதை குழந்தையானது கண்டுபிடித்துவிடும். அந்த நாளில் உன்மீது இருந்த நம்பிக்கை எல்லாம் மறைந்துவிடும்.

இளைஞர்கள், பெற்றோர்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்ய ஆரம்பிக்கின்றனர் என்றால், அதற்கு அவர்கள் பொறுப்பாளிகள் அல்ல, பொறுப்பானது பெற்றோர்களுக்கு தான் இருக்கிறது. இப்படி நீ அநேக பொய்களை அவர்களிடம் கூறிக்கொண்டே வந்தால், நீ அவர்களிடம் உண்மையைக் கூறினாலும் கூட அது சந்தேகத்துக்குரியதாக ஆகிவிடுகிறது. ஒரு விஷயம் மட்டும் நிச்சயம், அவர்கள் உன்மீது நம்பிக்கை இழந்து விடுகின்றனர். நீ துரோகம் செய்துவிட்டாய், நீ ஏமாற்றி விட்டாய், நீ அவர்களின் தன்னுணர்வில் அசிங்கமாக ஆகிவிட்டாய். அதன் பின்னர் உன்னைப் பற்றிய எண்ணம் நன்றாக இருக்காது. உண்மையில் அவர்கள் யாரையும் ஒருபோதும் நம்பமாட்டார்கள்.

அந்த பிரச்சினையைத்தான் நான் தினந்தோறும் எதிர் கொள்கிறேன். நீ இங்கு வந்து சந்நியாசி ஆகிவிடும்போது, உனது பெற்றோர்களிடம் நீ கொண்டிருந்த பிரச்சினையானது இப்போது என்மீது திணிக்கப்படுகிறது. நீ என்னையும் கூட நம்பமுடியாது. கண்களுக்கு தெரியாத விதத்தில் நான் உனது தந்தை வடிவாக

ஆகிவிட்டேன். மேலும் உனது பெற்றோர்கள் உன்னை ஏமாற்றி விட்டதால் யாருக்கு தெரியும்? உனது பெற்றோரோ கூட உன்னை ஏமாற்றிவிடும்போது அதன்பின்னர் நான் ஒரு அந்நியன், மேலும் பெற்றோர்களையே நம்ப முடியாதபோது உன்னால் எப்படி என்னை நம்பமுடியும்?

நீ நேசிக்கும் பெண்ணை உன்னால் ஒருபோதும் நம்பமுடியாது. நீ நேசிக்கும் ஆணையும் உன்னால் நம்பமுடியாது. நீ சரணாகதி அடைந்துவிட்ட குருவையும் கூட உன்னால் நம்பமுடியாது. உனது திடநம்பிக்கையை உனது வாழ்க்கையில் நீ ஒருபோதும் திரும்பப் பெறமாட்டாய். எதற்காக உனது நம்பிக்கையானது அழிக்கப்பட்டது? முட்டாள்தனமான சில விஷயங்களுக்காக அழிக்கப்பட்டது.

என்ன தவறாகி விட்டது? பாலுணர்வு என்பது எளிய உண்மை. அது எந்தவிதமாக இருக்கிறதோ அந்த விதத்திலேயே அதைக் கூறு. குழந்தைகள் மிகமிக உணர்வு உள்ளவர்கள். நீ அவர்களுக்கு சொல்லவில்லை என்றாலும்கூட அவர்கள் தாங்களாகவே அதைக் கண்டுபிடித்து விடுவார்கள். அவர்கள் மிகவும் ஆர்வமுள்ள மக்கள்.

''நான் எங்கிருந்து வந்தேன்'' என்கிற தலைப்பில் கட்டுரை எழுதும்படி கார்லுக்கு வீட்டுப்பாடம் கொடுக்கப்பட்டது. அவன் பள்ளியில் இருந்து திரும்பி வீட்டிற்கு வந்தவுடன், அவனது தாயார் இருந்த அடுப்பங்கரைக்குள் அவன் நுழைந்தான். அவள் இரவு சாப்பாடு தயார் செய்து கொண்டு இருந்தாள்.

''அம்மா நான் எங்கிருந்து வந்தேன்?'' என்று அவன் கேட்டான்.

''ஒரு கொக்கு உன்னைக் கொண்டு வந்தது''

''அப்படியானால் அப்பா எங்கிருந்து வந்தார்?''

''கொக்கு தான் அவரையும் கொண்டு வந்தது''

''அப்படியானால் தாத்தா எங்கிருந்து வந்தார்?''

''ஏன், அவரையும் கொக்குதான் கொண்டு வந்தது?''

இப்படி அம்மா கூறியதை கார்ல் மிகவும் கவனமாக குறித்துக் கொண்டு அடுத்தநாள் கீழ்க்கண்டவாறு அவன் தனது கட்டுரையை எழுதிக் கொடுத்தான்.

''என்னுடைய கணிப்புப்படி, எனது குடும்பத்தில் கடந்த மூன்று தலைமுறைகளாக இயற்கையாக யாரும் பிறக்கவில்லை'' என்று அந்த கட்டுரை இருந்தது.

குழந்தைகள் அதிக புலன் உணர்வு மிக்கவர்கள். அவர்கள் கவனித்துக் கொண்டே செல்கின்றனர். நீ என்ன விதமான முட்டாள்தனங்களை கூறுகிறாய் என்பதை அவர்கள் பார்த்துக் கொண்டே செல்கின்றனர். எவ்வளவு காலம்தான் நீ அவர்களை ஏமாற்ற முடியும்? உயிர் என்பது இருக்கிறது. உயிரானது காமத்தினால் வருகிறது. அவர்கள் வாழ்க்கையை கவனித்துக் கொண்டே இருக்கிறார்கள். மிருகங்கள் உடல் உறவில் ஈடுபடுவதை அவர்கள் பார்க்கிறார்கள். பறவைகள் ஒன்றோடு ஒன்று இன்பத்தை அனுபவிப்பதை அவர்கள் பார்க்கிறார்கள். ஆனால் நீ மனைவியுடன் இன்பத்தை அனுபவித்ததை அவர்கள் ஒருபோதும் பார்த்ததில்லை என்று நீ நம்பிக்கொண்டு இருக்கலாம். அதை நீ நம்பிக்கொண்டு இருக்கலாம். ஆனால் குழந்தைகள் தங்களது பெற்றோர்கள் இன்பத்தை அனுபவிப்பதை அவர்கள் அறிவார்கள். ஆரம்பத்தில் நீங்கள் ஏதோ சண்டை போடுவதாகவோ அல்லது வேறு ஏதோ ஒன்று என்று அவர்கள் நினைக்கலாம். ஆனால் கூடிய விரைவில் அவர்களின் முதுகுக்கு பின்னால் ஏதோ ஒன்று நடந்து கொண்டு இருக்கிறது என்பதை அவர்கள் பின்னாளில் கண்டுபிடித்து விடுவார்கள்.

எனவே ஏன் இது மாதிரியாக சந்தேகங்களை உருவாக்கு கிறீர்கள்? ஏன் உண்மையைச் சொல்லக்கூடாது? உண்மை எப்போதும் நல்லது, உண்மை எப்போதும் தெய்விகமானது. விஷயங்கள் எப்படி இருக்கின்றனவோ அப்படியே அவர்கள் அதனை அறிந்து கொள்ளட்டும்.

தனது மூத்த மகனுக்கு எப்படியாவது பல மணிநேரம் கஷ்டப்பட்டு உடலுறவின் உடலியல் குறித்து விளக்கிவிட வேண்டும் என்று தீர்மானித்த எனது நண்பர் ஒருவரை நான் அறிவேன். முடிவில், முற்றிலும் களைப்படைந்து போய், இதே விஷயத்தை மீண்டும் தனது இளைய மகனிடம் சொல்ல விரும்பாததால் அவர் தனது மூத்த மகனிடம், ''வில்லி, இப்போது நான் அதை உனக்கு விளக்கிவிட்டேன். நீ இதை அப்படியே பாபியிடம் சொல்லிவிடுவாய் என்று நான் எண்ணலாமா?'' என்று கேட்டார்.

''சரி அப்பா'' என்றான் இளைஞன் வில்லியம்.

அவரது மூத்த மகன் உடனடியாக தனது இளைய சகோதரனைத் தேடி வெளியே சென்று அவனைக் கண்டுபிடித்து உடன் அவனிடம், ''பாபி, நான் இப்போது அப்பாவிடம் இருந்து ஒரு நீண்ட சொற்பொழிவைக் கேட்டேன். அவர் என்னிடம் சொன்னதை அப்படியே நான் உன்னிடம் கூறிவிடும்படி என்னிடம் கூறினார்'' என்றான்.

''சரி சொல்'' என்றான் பாபி.

''நல்லது, கடந்த மாதம் சிறுமிகளோடு அந்த சிறிய கட்டடத்தின் பின்னால் நீயும் நானும் செய்தோம் அல்லவா? பறவைகளும் தேனீக்களும் கூட அதைத்தான் செய்வதாக உன்னிடம் கூறும்படி விரும்புகிறார்'' என்றான்.

முட்டாள்தனமாக இருக்காதே, விஷயங்கள் எப்படி உள்ளதோ அப்படியே அவை இருக்கட்டும். உண்மையானது ஒருபோதும் எதிரியாக இருக்க முடியாது. அது காமம் பற்றியதோ அல்லது வேறு எதுவோ. உண்மையோடு நட்பாக இரு.

குழந்தைகள் மிகவும் புரிந்துகொள்ளக் கூடியவர்கள். அவர்கள் உடனடியாக உண்மையை ஏற்றுக் கொள்கின்றனர். அவர்களிடம் தப்பெண்ணங்கள் கிடையாது. அவர்களிடம் சரியானது மற்றும் தவறானது என்று என்ற கருத்தும் கிடையாது. நீ அவர்களிடம் உண்மையைக் கூறினால், அவர்கள் அதை

அப்படியே புரிந்து கொள்கின்றனர். அவர்கள் அதைப்பற்றி மறந்து விடுகின்றனர். இது உனக்குள் ஒரு திட நம்பிக்கையை ஏற்படுத்தும். நீ ஒருபோதும் அவர்களை ஏமாற்றவில்லை.

தலைமுறைகளுக்கு இடையே உள்ள பிளவுக்கு அடிப்படைக் காரணம், காமம் பற்றிய கல்வியாகத்தான் இருக்கிறது. பெற்றோர்கள் தங்களை ஏமாற்றிக் கொண்டு இருந்திருக்கிறார்கள் என்பதை குழந்தையானது கண்டுபிடிக்கின்ற அந்த நாளில் அவன் திடநம்பிக்கையின் எல்லா வேர்களையும் இழந்து விடுகிறான். அவனது மிகவும் மென்மையான அமைப்பு முறைக்கு நீ கொடுக்கக்கூடிய சூழலை உண்டாக்கும் அதிர்ச்சி அதுவாகத்தான் இருக்கும்.

உண்மையைச் சொல்லிக் கொண்டே இரு. அதைப்பற்றி தத்துவார்த்தம் செய்வதற்கு முயற்சி செய்யாதே. அதை சுற்றிச் சுற்றி சொல்லாதே. அது எப்படிப்பட்ட விதத்தில் உள்ளதோ அப்படியே சொல்.

அது குறித்து உன்னிடம் ஏன் இந்த அளவுக்கு பயம் உள்ளது? ஏனெனில் உனது பெற்றோர்கள் இதை உன்னிடம் கூறவில்லை. அதனால் நீ கொஞ்சம், தடுமாற்றத்தை, பயத்தை அதாவது நீ ஏதோ ஒரு ஆபத்தான பகுதிக்குள் நகர்ந்து செல்வது போன்று உணர்கிறாய். எனவே ஒரு குழந்தை எதைப் பற்றியாவது உன்னிடம் விசாரித்தால், உனக்கு அதைப்பற்றி தெரிந்தால் அதைச் சொல். உனக்கு அதைப்பற்றி தெரியவில்லை என்றால் உனக்கு தெரியாது என்று சொல். நீ செய்யக்கூடிய இரண்டு விதமான தவறுகள் உள்ளன. அதில் ஒன்று ஒரு விஷயம் எப்படி இருக்கிறதோ அப்படியே அதைப்பற்றி சொல்லாமல் இருப்பது. இது ஒரு ஆபத்து. அடுத்தது உனக்கு தெரியாத ஒன்றைச் சொல்வது.

உதாரணமாக குழந்தையானது உன்னிடம், ''இந்த உலகைப் படைத்தது யார்?'' என்று கேட்கிறது. உடனே நீ ''கடவுள்'' என்று கூறுகிறாய். மீண்டும் நீ அவனை ஒரு குறும்பு செய்வதற்கு வழி நடத்துகிறாய். உனக்கு தெரியாது. உனக்கு தெரியும் என்று நீ

பாசாங்கு செய்கிறாய். விரைவில் குழந்தையானது உனக்கு ஒன்றும்; தெரியாது என்றும், உனது கடவுள் பொய் என்று கண்டுபிடித்து விடும்.

இதில் உள்ள பிரச்சினை என்னவென்றால் உனது கடவுள் மட்டும் பொய் என்று நிரூபிக்கப்படுவதில்லை. பிரச்சினை என்னவென்றால் கடவுள் என்கிற ஒட்டுமொத்த கருத்துமே பொய்யானது என்று நிரூபிக்கப்பட்டு விட்டது. கடவுளைப் பற்றி விசாரித்து அறிவதற்கான மிகப்பெரிய சாத்தியத்தை நீ அழித்துவிட்டாய். ''எனக்கு தெரியாது'' என்று நீ சொல்லி இருக்க வேண்டும் ''நான் தெரிந்து கொள்ள முயற்சித்துக் கொண்டு இருக்கிறேன், நீ எப்படி அதைப்பற்றி அறியாதவனாக இருக்கிறாயோ அதே போன்று தான் நானும் இருக்கிறேன். நீ கண்டுபிடிப்பதற்கு முன்பாக நான் கண்டுபிடித்துவிட்டால், நான் உனக்கு கூறுகிறேன். நான் கண்டுபிடிப்பதற்கு முன்பாக நீ கண்டுபிடித்துவிட்டால், தயவு செய்து என்னிடம் சொல்,'' என்று கூறி இருக்க வேண்டும்.

இப்படி நீ அவனை சமமாக நினைத்ததற்கு, நீ ஒருபோதும் பாசாங்கு செய்யாததற்கு, உனது இந்த உள்ளத்தின் நேர்மைக்கு நீ அவனிடம், ''எனக்கு தெரியும் ஆனால் உனக்கு தெரியாது,'' என்று ஒருபோதும் காட்டிக் கொள்ளாமல், நீ ஒரு ஆணவக்காரனாக ஒருபோதும் இல்லாததற்கு, எப்போதைக்கும் அவன் உனக்கு மரியாதை கொடுப்பான்.

நீயே தெரிந்து கொள்ளாமல் குழந்தையிடம், ''கடவுள் உலகைப் படைத்தார்,'' என்று கூறுவது உனது ஆணவத்தின் பயணம் என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. குழந்தையின் அறியாமையை விலையாகக் கொடுத்து நீ அனுபவிக்கிறாய். ஆனால் எவ்வளவு நாட்கள் இந்த அறிவை நீ அனுபவிக்க முடியும்?

உன்னால் செய்ய முடியாததை குழந்தையிடம் ஒருபோதும் சொல்லாதே. குழந்தையிடம், ''உண்மையாக இரு, எப்போதும் உண்மை நிறைந்தவனாக இரு'' என்று சொல்லாதே. ஏனெனில்

அவன் நீ உண்மையற்றவனாக இருந்து உன்னைக் கையும் களவுமாக பிடித்துவிடும்போது, நீ அளவுகடந்த மதிப்புமிக்க ஒன்றினை அழித்துவிடுகிறாய். திடநம்பிக்கையைத் தவிர அதிக விலைமதிப்பற்றது எதுவும் கிடையாது.

உண்மையை எத்தனை நாள்தான் உன்னால் மறைக்க முடியும்? ஒருநாள் யாராவது கதவைத் தட்டும்போது நீ குழந்தையிடம், ''அவரிடம் நான் வீட்டில் இல்லை என்று சொல்லிவிடு'' என்று நீ கூறுகிறாய். இப்போது அந்த குழந்தையானது உண்மையைப் பற்றி பேசுவது ஒரு விஷயம். ஆனால் அதைப் பின்பற்றி நடக்கவோ நடைமுறைப்படுத்தவோ வேண்டும் என்று அர்த்தமாகாது என்பதை அறிந்து கொள்கிறது. ஏதோ ஒன்றைச் சொல்லி, ஏதோ ஒன்றைப் போல பாசாங்கு செய்து, அதற்கு நேர்மாறான ஒன்றாக நீ இருக்கும்போது நீ அவனிடம் ஒரு இரட்டைத் தன்மையை உருவாக்கி விட்டாய். நீ அவனுக்குள் ஒரு பிரிவினையை உருவாக்கி விட்டாய்.

உனக்கு ஏதாவது தெரிந்தால், பாலியல் உறவு பற்றி குழந்தை கேட்டால், அல்லது இந்த உலகிற்கு குழந்தைகள் எப்படி வருகின்றன என்று கேட்டால், அப்போது உனக்கு தெரிந்தால், அதன்பின்னர் அது எப்படி உள்ளதோ அப்படியே வெறுமனே கூறு. அதை எவ்வளவு எளிமையாக கூறமுடியுமோ அவ்வளவு எளிமையாக கூறு. ஏனெனில் அந்த குழந்தையானது உடற்கூறு பற்றியோ அல்லது இரசாயனம் பற்றியோ அல்லது பாலியல் உறவின் உள்ளே உள்ள இயந்திரநுட்பம் பற்றியோ கேட்கவில்லை. அவன் அந்த முட்டாள்தனத்தை பற்றி எல்லாம் கேட்கவில்லை. அது அவனது ஆர்வம் அல்ல. அவனிடம் உடற்கூறு பற்றி சொல்ல ஆரம்பிக்காதே ஏனெனில் பள்ளிகளில் பாலியல் கல்வி என்கிற பெயரில் அவர்கள் உடல் கூறுகளை மட்டுமே சொல்லிக் கொடுக்கின்றனர். எனவே குழந்தை வெறுமனே சலிப்படைந்து விடும். அவனுக்கு ஆர்வம் இருக்காது.

அவன் வெறுமனே உண்மைநிலையை விரும்புகிறான். குழந்தைகள் எங்கிருந்து வருகின்றன. அவை எப்படி

வருகின்றன? வெறுமனே அதைச் சொல், அவன் கேட்காத அவனுக்கு தேவைக்கு அதிகமாக அதிக தகவல்களைக் கொடுப்பதற்கு ஒருபோதும் முயற்சி செய்யாதே. ஏனெனில் அது நீ மிகவும் முன்கூட்டியே சொல்வதாக ஆகிவிடும். குறிப்பாக மேலைநாடுகளில் அது நடந்து கொண்டிருக்கிறது. அங்கு அந்த கருத்தானது எல்லாருக்கும் தெரிந்த ஒன்றாக ஆகிவிட்டதால் குழந்தைகளுக்கு பாலியல் கல்வி கொடுக்க வேண்டியதாகிறது. எனவே பெற்றோர்கள் அதற்கு அவசரப்படுகிறார்கள். அந்த குழந்தை அதைப்பற்றி விசாரிக்கவில்லை என்றாலும் கூட தாங்கள் புத்தகங்கள் மூலம் தெரிந்த தகவல்களை குழந்தைகளிடம் தெரிவித்துக் கொண்டே இருக்கின்றனர். அதனால் குழந்தைகள் சலிப்படைந்து விடுகின்றனர். குழந்தையிடம் அதற்கான விசாரணை எழாத வரையில் அதனிடம் எதையும் சொல்ல வேண்டிய அவசியம் கிடையாது. விசாரணை எழுந்துவிட்டால் அதில் எதையும் மறைக்க வேண்டிய அவசியம் கிடையாது.

இதில் வயது பற்றிய கேள்வியே எழவில்லை. எனவே இளம் குழந்தைகள் பற்றி மட்டும் கேட்காதே. இளம்வயதினர் என்று நீ யாரை அழைக்கிறாய்? அதற்கான வயது வரம்பு என்ன? ஏழு வயது என்பது இளம்வயதா? அல்லது ஒன்பது வயது என்பது இளம்வயதா? எனவே வயது என்ன என்பது கேள்வி அல்ல. குழந்தைகள் உன்னிடம் விசாரிக்கும்போது நீ தகவல்களை அவனுக்கு கொடுப்பதற்கு அவன் தயாராக இருக்கிறான். அவனுக்கு நான்கு வயதாக இருக்கலாம். அவனுக்கு ஐந்து வயதாக இருக்கலாம். அவனுக்கு ஏழு வயதாக இருக்கலாம். அந்த குழந்தை அதிக புத்திசாலித்தனத்துடன் இருந்தால் அவன் மிகவும் சீக்கிரமாக விசாரிப்பான் அது மட்டும் நிச்சயம். முட்டாள் குழந்தையானது அவனுக்கு பன்னிரெண்டு வயது ஆனால் கூட அவன் விசாரிக்காமல் இருக்கலாம். ஆனால் அவன் பதிநான்கு வயதில் விசாரிக்கலாம். ஆனால் புத்திசாலிக் குழந்தை கண்டிப்பாக கேட்கும். வாழ்க்கை என்பது ஒரு புதிர் போன்று இருக்கிறது. எனவே ஆரம்பத்தில் இருந்தே குழந்தை யானது ஏதோ ஒன்று நடக்கிறது என்று விழிப்புணர்வுடன்

இருக்கிறது. சுற்றிலும் வாழ்க்கை நடந்து கொண்டு இருக்கிறது. வாழ்க்கையானது தன்னை நிலை நிறுத்திக் கொண்டு இருக்கிறது.

தோட்டத்தில் பறவைகளின் முட்டைகளை அவன் பார்க்கிறான். அதன் பின்னர் ஒருநாள் அந்த முட்டைகள் உடைந்து பறவைகள் வெளியே வருவதைப் பார்க்கிறான். அவன் தனது தாயின் வயிறானது மேலும் மேலும் பெரிதாகிக் கொண்டே போவதைப் பார்க்கிறான். எனவே நிச்சயமாக அவன் ஆர்வம் மிக்கவனாக ஆகிவிடுகிறான். என்ன நடந்து கொண்டு இருக்கிறது? அவனது தாயாருக்கு ஏதாவது நோயா அல்லது வேறு எதுவுமா? அதன்பிறகு ஒரு நாள் அவள் மருத்துவ மனையில் இருந்து ஒரு குழந்தையுடன் வருகிறாள். இப்போது இந்த குழந்தை எங்கிருந்து வந்தது. அதை கொக்கானது கொண்டு வந்ததா? தாயாரின் வயிறானது முன்பு போல பெரிதாக இல்லாமல் இருப்பதையும் அவன் பார்க்கிறான். இப்போது அவன் ஆச்சரியப்படுகிறான். வயிற்றிற்கு என்ன ஆனது?

எனவே தேவை இல்லாத புதிர்களை குழந்தைகளிடம் உருவாக்காதீர்கள். வாழ்க்கையானது அதனளவில் போதுமான புதிர்கள் நிறைந்தது. வாழ்க்கை அந்த அளவுக்கு புதிரானது. எனவே விசாரணை என்பது கண்டிப்பாக அங்கு இருந்தாக வேண்டும். ஆனால் ஒரு குழந்தை அதிக புத்திசாலியாக இருந்தால் அவன் விசாரிக்க போகிறான் என்பதை மட்டும் நினைவில் கொள். எனவே உனது குழந்தையானது சீக்கிரமே விசாரித்தால் அவன் அசிங்கமானவன் என்று ஆரம்பத்தில் இருந்தே நினைக்காதே. அவன் அசிங்கமானவன் அல்ல. அவன் புத்திசாலி. யாராவது அசிங்கமானவர்கள் என்றால் நீதான் அசிங்கமானவன். அவன் வெறுமனே புத்திசாலியாக இருக்கிறான்.

விஷயங்கள் எப்படி இருக்கின்றனவோ அப்படியே அவனிடம் கூறு. மேலும் அவனால் புரிந்துகொள்ள முடிகிற வழியில் சொல். தத்துவம் பேசாதே, மறைமுகமாக சுற்றி சுற்றி போகாதே; விஷயத்திற்கு நேரடியாக போய் விடு. இரண்டும் இரண்டும் கூட்டினால் நான்கு என்பதைப்போல் அதை எந்த

அளவுக்கு தெளிவாக கூறமுடியுமோ அந்த அளவுக்கு தெளிவாக சொல்.

நீ ஆச்சரியப்படுவாய், உண்மை சொல்லப்பட்ட வுடன் குழந்தையானது வெளியே போய் விளையாட ஆரம்பித்துவிடும். அதற்குமேல் அவனுக்கு ஆர்வம் இருக்காது. அவன் மீண்டும் அந்த கேள்வியைக் கொண்டு வரமாட்டான். நீ பொய் சொன்னால், அவன் மீண்டும் மீண்டும், இந்தப் பக்கத்தில் இருந்தோ அல்லது அந்த பக்கத்தில் இருந்தோ அந்த கேள்வியைக் கொண்டுவருவான். எந்த ஒரு சாக்குபோக்கு கிடைத்தாலும் அவன் அந்த கேள்வியை மீண்டும் கேட்பான். ஏனெனில் அவன் உண்மையை தெரிந்து கொள்ள விரும்பு கிறான். எனவே அவனுக்கு உண்மையானது கொடுக்கப்படாத வரையில் அவன் திருப்தி அடையப் போவது கிடையாது.

உண்மைகள் மட்டுமே அவனை திருப்திப்படுத்தும். பொய்கள் ஒத்தி போடப்படலாம். ஆனால் அவை திருப்திப் படுத்த முடியாது.

***நான்காம் கேள்வி:***

***ஓஷோ,***

***நான் என்னையும் எனது வாழ்க்கையையும் பொதுவாக இடைவிடாமல் ஏன் மிகவும் கவலை மிக்கதாக எடுத்துக் கொள்கிறேன்?***

ஒவ்வொருவரும் வாழ்க்கையை மிகவும் கவலைக்குரியதாக எடுத்துக் கொள்கிறோம். ஏனெனில் ஒவ்வொருவரும் அந்த அளவுக்கு வெறுமையுடன் இருக்கிறோம். நீ கவலையுடன்; இருப்பதன்மூலம் நீ உனது வெறுமையை மறைத்துக் கொள்கிறாய்; கவலையுடன் இருப்பதன்மூலம் நீ பாசாங்கு செய்கிறாய். மிகவும் கவலையுடன் இருப்பதன் மூலம் நீ உனக்குள் உள்ள தனிமையில் இருந்து வெறுமனே தப்பித்துக் கொண்டு இருக்கிறாய். உனக்குள் உள்ள வெறுமையில் இருந்து தப்பித்துக் கொண்டு இருக்கிறாய்.

உன்னால் சிரிக்க முடியாது. உன்னால் ஒய்வாக இருக்க முடியாது. ஏனெனில் நீ ஒய்வாக இருக்கும்போது உனக்குள் உள்ள வெறுமை குறித்து விழிப்புணர்வு அடைகிறாய். எனவே நீ அதிக கவலையுடன் இருந்தாக வேண்டும். நீ மேற்பரப்பில்தான் அப்படி கவலையோடு இருக்கிறாய். நீ உனக்குள் ஆழ்ந்து குதித்து விடும்போது, ஓய்வாக இருக்கும்போது அங்கு பயம் இருக்கிறது.

மக்கள் ஒரு குறிப்பிட்ட காரணத்திற்காக கவலை மிக்கவர் களாக இருக்கின்றனர். அவர்கள் தங்களை நேருக்குநேர் எதிர்கொள்வதற்கு விரும்பாதது தான் அந்த காரணமாகும். மேலும் கவலைக்கு ஒரு குறிப்பிட்ட மரியாதை கொடுக்கப்படு கிறது. அது உனது நான் என்னும் தன் முனைப்பை நிறைவு செய்கிறது. நீ கவலையோடு இருந்தால் ஒவ்வொருவரும் உன்னை முக்கியமானவனாக நினைக்கின்றனர். கவலையாக இருப்பது என்பது முக்கியத்துவம் என்பதை உள்ளடக்கி உள்ளது. முக்கியமானவர்கள் மிகவும் கவலையோடு இருப்பார்கள். துறவிகள் சிரிப்பதை நீ பார்க்கமுடியாது. இயேசு ஒருபோதும் சிரிக்கவில்லை என்று கிறிஸ்தவர்கள் கூறுகிறார்கள். அவர்கள் சொல்வது சரியானதாக இருக்க முடியாது. எனக்கு இயேசுவை நன்றாகத் தெரியும். அவர்கள் சொல்வது தவறு. ஆனால் அவர்கள் ஒரு குறிப்பிட்ட மனப்பாங்கினை சுட்டிக்காட்டுகின்றனர். இயேசுவால் எப்படி சிரிக்கமுடியும்? அவர் கண்டிப்பாக கவலையுடன், முற்றிலும் கவலையுடன் இருந்தாக வேண்டும்.

இயேசு குறித்த கிறிஸ்தவ ஓவியங்கள் அனைத்தும் அசிங்கமானவை மற்றும் பொய்யானவை ஏனெனில் அவரது முகம் மிகவும் கவலையுடன் இருப்பதாக ஆக்கப்பட்டுள்ளது. ஓவியர்கள் மிகப்பெரிய காரியம் ஒன்றைச் செய்துள்ளனர். அது மிகவும் கவலையான தோற்றத்துடன் தான் இருந்தாக வேண்டும். ஏனெனில் இயேசுதான் ரட்சகர், எனவே நம்மை ரட்சிப்பவர் எப்படி நகைச்சுவையானவற்றைச் சொல்லி, சிரிக்கமுடியும்? இந்த உலகை ரட்சிப்பவர் நகைச்சுவைகளைச் சொல்வார் என்று நீ எதிர்பார்க்க முடியாது. அவர் கவலையுடன் இருந்தாக

வேண்டும். அவர் மிகப்பெரிய சுமையை வைத்திருக் கிறார். அவர் மிகப்பெரிய சுமையை சுமந்து கொண்டிருக்கிறார். அதாவது இந்த ஒட்டுமொத்த பூமியின் சுமையை, ஒட்டுமொத்த மனித இனத்தின் சுமையை, மனிதனின் அசல் பாவத்தை மேலும் அசல் அல்லாத பாவத்தையும்; கூட அவர் சுமந்து கொண்டு இருக்கிறார். இங்கு பலகோடி மக்கள் இருக்கின்றனர். எனவே அவர் அனைவரின் பாவங்களையும், சுமையையும் சுமந்து கொண்டு இருக்கிறார். அவர் ரட்சகராக இருக்கிறார்.

இந்த எண்ணத்தினால் கிருஷ்ணர் பாடி; நடனமாடி, புல்லாங்குழல் வாசித்துக் கொண்டு இருப்பதை கிருஸ்தவர்களால் நம்பமுடியாது. கிருஷ்ணர் கவலை இல்லாதவராக இருக்கிறார். அநேக மக்கள் அநேக பாவங்களால் கஷ்டப்பட்டுக் கொண்டு இருக்கும் போது உன்னால் எப்படி புல்லாங்குழல் வாசிக்க முடியும்? எல்லாரும் நரகத்திற்கு போகப் போகிறார்கள். அப்படி இருக்கும்போது நீ புல்லாங்குழல் வாசித்துக் கொண்டு இருக்கிறாய்? இதுதான் புல்லாங்குழல் வாசிக்கக்கூடிய நேரமா? மேலும் நீ நடனமாடிக் கொண்டு இருக்கிறாய் அதுவும் அநேக பெண்களுடன்! இது மிகவும் பொறுப்பற்ற செயலாக உள்ளது. இந்த ஒட்டுமொத்த உலகமும் துக்கத்தில் இருக்கிறது. ஆனால் ஒரு ரட்சகர் முழு நிலவின் கீழ் தனது பெண்தோழிகளோடு நடனமாடிக் கொண்டு இருக்கிறார்!

கிருஷ்ணர் ஒரு மருத்துவமனையை திறக்கவேண்டும் அல்லது குறைந்தபட்சம் மக்களும் கல்வி புகட்ட ஒரு ஆரம்ப பள்ளிக்கூடத்தையாவது திறக்க வேண்டும். அவர் சில மதத் தொண்டுகளை செய்ய வேண்டும்: இந்த ஒட்டுமொத்த பூமியும் பாவத்தினால் ஆழத்தில் மூழ்கிக் கொண்டு இருக்கும்போது முழு நிலவின் கீழ் அவர் என்ன செய்து கொண்டு இருக்கிறார்? அவர் அற்பமானவராக தெரிகிறார். இயேசு கவலைப்படுபவராக இருக்கிறார்.

''நான் என்னையும், எனது வாழ்க்கையையும், பொதுவாக இடைவிடாமல் ஏன் கவலை மிக்கதாக எடுத்துக் கொள்கிறேன்?'' என்று நீ என்னிடம் கேட்கிறாய். நீ ஒரு கவலைப்படக்கூடிய

மனிதன் என்பது உனது ஆணவத்திற்கு ஒரு சந்தோஷத்தைக் கொடுக்கிறது. நீ சாதாரணமானவன் அல்ல, நீ சிறப்பு வாய்ந்தவன். திரைப்படங்களுக்கு சென்று சிரித்துக் கொண்டு, முட்டாள்தனமாக பேசிக் கொண்டு, வீண்பேச்சு பேசுகின்ற மனிதன் நீ அல்ல என்பது உனக்கு திருப்தியைக் கொடுக்கிறது. நீ ஒரு கவலை தோய்ந்த மனிதன். நீ தியானம் மட்டுமே செய்கிறாய். நீ பைபிள் அல்லது குர்ஆன் மட்டுமே படிக்கிறாய். நீ மிகப்பெரிய விஷயங்களோடு இருக்கிறாய். நீ சாதாரண விஷயங்களில் ஆர்வம் இல்லாதவனாக இருக்கிறாய்.

ஆழந்த யோசனையில் இருப்பது உனது ஆணவத்திற்கு ஆதரவு அளிக்கிறது. கவலையோடு இருப்பதுதான் உனது ஆணவம் உயிர் வாழ்வதறகு பொருத்தமான சீதோஷ்ண நிலையாக உள்ளது. விளையாட்டாக இருப்பது ஆணவத்தின் மரணமாக இருக்கிறது. நான் உனக்கு விளையாட்டுத் தனத்தை கற்பிக்கிறேன்.

மேலும் இப்படி நீ கவலைப்படுவதால் நீ எறும்பு புற்றைக் கூட மலை போன்று ஆக்கிவிடுகிறாய். சிறிய விஷயங்களைக் கூட மலை போன்று ஆக்கிவிடுகிறாய். யாரோ ஒருவர் புகைப்பிடிக்கிறார். உடனே அவர் சிகரெட் பிடிப்பதால் ஏதோ நரகத்திற்கு சென்று விடுவார் என்பது போன்று இவர் கவலைப்படுகிறார். அவர் மிகப்பெரிய பாவத்தை செய்வதாக இவர் நினைக்கிறார். முட்டாள்தனமாக இருக்காதே. புகையை உள்ளேயும், வெளியேயும் இழுப்பதால் நீ ஒரு பாவத்தை செய்துவிட முடியாது. நீ ஒரு முட்டாள் என்பதை வேண்டுமானால் அது காட்டலாம். நீ பாவி என்பதை அது காட்டாது.

மேலும் முட்டாள்தனத்திற்காக மக்கள் நரகத்திற்கு அனுப்பப்படுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. அப்படி இருந்தால் இந்த ஒட்டுமொத்த உலகமும் நரகத்தில் இருந்தாக வேண்டும். மக்கள் ஏன் இங்கு இருக்கிறார்கள்? முட்டாள் மக்கள் அனைவரும் இங்கு இந்த உலகில் இருக்கின்றனர். ஆனால் நீ இப்படி சிறிய விஷயங்களை மலைபோன்று ஆக்கி விடுகிறாய்.

உன்னால் சிறிய விஷயங்களை சகித்துக் கொள்ள முடியவில்லை. நீ பெரிய விஷயங்களோடு இருக்க வேண்டியதிருக்கிறது.

பாவமன்னிப்பிற்கு ஒரு வயதான பாதிரியாரிடம் சென்ற ஒரு பெண்ணின் கதையை அவர்கள் கூறுவதுண்டு. அவர் பாதிரியாரிடம் சென்று அவளது பாலியல் செயல்பாடுகள் பற்றி நீண்ட கதை ஒன்றைக் கூறினாள். அதற்கு பிரதிபலனாக, அதற்கு தண்டனையாக அந்த பாதிரியார் அவளை அடுத்த அறைக்கு சென்று பன்னிரண்டுமுறை மரியே வாழ்க' என்று கூறிவிட்டு அங்கு மேஜையில் உள்ள பாத்திரத்தில் உள்ள புனித நீரில் தனது கைகளை கழுவி தனது பாவத்தை கழுவிக் கொள்ளும்படி கூறினார்.

அதன்படி அந்த பெண்மணியும் அடுத்த அறையில் மரியே வாழ்க என்று சொல்லிவிட்டு புனித நீர் உள்ள அந்த பாத்திரத்தில் கை கழுவும் போது வேறு ஒரு இளம்; பெண்மணி உள்ளே நடந்து வந்த அந்த காட்சியை ஒரு பார்வை பார்த்துவிட்டு, ''அந்த தண்ணீரில் இருந்து உனது கையை வெளியே தயவுசெய்து எடுத்துவிடு! நான் அதில்தான் வாய்கொப்பளிக்க வேண்டும் என்பதை நீ அறியவில்லையா! என்று கூறினார்.

நீ மிகப்பெரிய பாவங்களைச் செய்வதாக நினைக்கிறாய். இங்கு இன்னும் அதிக கவலையுடன் இருக்கிற வேறு மக்களும் இருக்கின்றனர். நரகத்திலும் கூட நீ முதலாவதாக இருக்கப் போவதில்லை என்பதை நினைவில் கொள். நீ அங்கும் நீண்ட வரிசையில் தான் நின்று கொண்டிருப்பாய். நீ எங்கு இருந்தாலும் அங்கு நீ நீண்ட வரிசையில் தான் நின்று கொண்டு இருப்பாய். நரகத்திலும் கூட முதலாவது ஆளாக இருக்க வேண்டும் என்பதைப் பற்றி எல்லாம் மறந்துவிடு.

ஜார்ஜ் பெர்னாட்ஷாவிடம் யாரோ ஒருவர் ''நீங்கள் எங்கு போக விரும்புகிறீர்கள். சொர்க்கத்திற்கா அல்லது நரகத்திற்கா?'' என்று கேட்டார்கள்.

அதற்கு அவர், ''நான் எங்கு போனாலும் நான் முதலாவது ஆளாக இருப்பதற்கு விரும்புகிறேன். நான் நரகத்திற்கும் கூட

போக தயாராக இருக்கிறேன். ஆனால் நான் முதலாவதாக இருக்க விரும்புகிறேன். மேலும் சொர்க்கத்தில் நான் இரண்டாம் ஆளாகத்தான் இருப்பேன் என்றால் நான் சொர்க்கத்தைப் பற்றி கூட கவலைப்பட மாட்டேன்,'' என்று கூறினார்.

ஆணவமானது எங்கும் முதலாவதாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறது. ஆணவம் மிகப்பெரிய புனிதராக இருக்க விரும்புகிறது. அது முடியவில்லை என்றால் அதன்பின்னர் மிகப்பெரிய பாவியாக இருக்க விரும்புகிறது. ஆனால் எதுவாக இருந்தாலும் மிகப்பெரிய ஒன்றாக இருக்கவேண்டும். உன்னால் ஏன் சாதாரணமானவனாக இருக்க முடிவதில்லை? மேலும் சாதாரணமாக இருப்பது என்பது அளவுகடந்த அழகுள்ளது. வெறுமனே மனிதனாக இருப்பது தெய்விகமானது.

இலக்குகள், லட்சியங்களை மறந்துவிடு; அந்த இலக்கு களும், லட்சியங்களும் தான் உன்னை பயத்தில் வைத்திருக்கிறது. மேலும் மக்கள் தங்களது இலக்குகளை மாற்றிக் கொண்டே இருக்கிறார்கள். முதலில் அவர்கள் சொர்க்கததை அல்லது புனிதத்னமையை, அல்லது கடவுளை அறிவதை அல்லது மெய்ஞ்ஞானத்தை இலக்காக வைத்திருப்பது வழக்கம். அவர்கள் மாற்றுகிறார்கள். இப்போது அவர்கள் முழு உச்சகட்ட பரவச நிலையை அவர்கள் ஒருபோதும் அடைவதில்லை.

இப்போது அந்த உச்சகட்ட அனுபவத்திற்காக இடைவிடாமல் ஆசைப்படுகின்ற மக்கள் இங்கு உள்ளனர். ஒவ்வொரு நொடிப்பொழுதும் அந்த உச்சகட்ட நிலையை அவர்கள் விரும்புகின்றனர். அவர்கள் பைத்தியமாகிக் கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் இந்த உச்சகட்ட பரவசநிலையானது ஒரு நொடிப்பொழுது இல்லாமல் போய் விட்டால் அதன்பின்னர் வாழ்க்கையே வீணகிறது. அதன்பிறகு ஒரு நொடிப்பொழுது வீணாகிவிட்டது. அந்த உச்சகட்ட பரவசநிலை எங்கே உள்ளது? அந்த நிலையில் இடைவிடாமல் இருபத்தி நான்கு மணிநேரமும் அவர்கள் இருக்க விரும்புகின்றனர். இந்த விஷயங்கள் மக்களை பைத்தியக்காரர்களாக ஆக்கிக் கொண்டு இருக்கின்றன.

வாழ்க்கையானது புத்தி சுவாதீனத்துடன் வாழப்பட வேண்டும். இப்படி வாழ்க்கையை புத்தி சுவாதீனத்துடன் வாழவேண்டும் என்று நான் கூறும்போது அதற்கு என்ன செய்யவேண்டும்? ஒருவர் வாழ்க்கையின் சாதாரணத்தன்மை குறித்து முதலில் ஏற்றுக் கொள்ளவேண்டும். மேலும் சாதாரணத் தன்மையில் அபரிமிதமான மகிழ்ச்சி உள்ளது. ஆனால் அந்த மகிழ்ச்சியானது ஒரு உச்சகட்ட அனுபவம் போன்ற ஒன்று அல்ல. அது மிகவும் சிதறிப்பரவுகிறது. அது சிகரம் போன்று இருப்பதில்லை ஏனெனில் சிகரங்கள், பள்ளத்தாக்குகளோடு மட்டுமே இருக்கின்றன. நீங்கள் ஒரு உச்சகட்ட அனுபவத்தை பெற விரும்பினால், அதன்பின்னர் நீங்கள் மீண்டும் மீண்டும் பள்ளத்தாக்கில் விழுந்தாக வேண்டும்.

சிசிபஸ்ஸின் புராணக்கதையை நீ திரும்பச் செய்ய வேண்டும். சிசிபஸ் ஒரு பாறையை மலையின் உச்சிக்கு எடுத்துச் செல்கிறான். ஆனால் அவன் சிகரத்தை அடைந்தபோது, அதன் உச்சியானது மிகவும் சிறியதாக இருக்கிறது. ஆனால் பாறையோ மிகவும் பெரியதாக இருக்கிறது. அதனால் அது மறுபக்கம் உருண்டு விழுந்து விடுகிறது. எனவே அவன் மீண்டும் பள்ளத்தாக்கிற்கு ஓடிச்சென்றாக வேண்டியதாகிறது. அதன் பின்னர் அவன் மீண்டும் உச்சிச் செல்கின்ற தனது பயணத்தை தொடங்கி மீண்டும் அந்த உச்சகட்ட அனுபவத்திற்காக ஆசைப் படுகிறான். மேலும் அவன் உச்சியை அடையும் நேரத்தில் அது முடிந்து விடுகிறது? அது முடிந்து அவன் மீண்டும் பள்ளத் தாக்கிற்கு வந்து விடுகிறான்.

அதுதான் உனக்கும் நடந்து கொண்டிருக்கிறது. ஒவ்வொரு உச்சகட்ட அனுபவமும் ஒரு நொடிப்பொழுது மட்டுமே இருக்கிறது. அது சிசிபஸின் புராணக்கதையை திரும்ப நடத்துவது போன்று உள்ளது. எனவே அதைப்பற்றி மறந்துவிடு. அதற்கு நேர்மாறாக மிகவும் சாதாரண வாழ்க்கையை வாழ்ந்து பார். அதுதான் ஜென் சீடனின் வாழ்க்கையாக இருக்கிறது. அதுதான் சூஃபி சீடனின் வாழ்க்கையாக உள்ளது.

இது நான் கேள்விப்பட்டது:

ஆன்மிக விசாரகர் ஒருவர் பங்களாதேசில் உள்ள டாக்கா வந்தார். அவர் ஒரு மாபெரும் சூஃபி குரு பற்றி கேள்விப்பட்டிருக்கிறார். அவர் அந்த குருவை சந்திக்கின்ற அவசரத்தில் இருந்தார். அவர் அநேக மக்களிடம் அவரைப்பற்றி கேட்டார். ஆனால் யாரும் அந்த குருவைப் பற்றி கேள்விப்பட்டதாக தெரிவிக்கவில்லை. விமானநிலையத்தில் ஒவ்வொருவரிடமும் அவர் விசாரித்தார். ஆனால் யாரும் அவரைப்பற்றி கேள்விப்பட்டதாக தெரிவிக்கவில்லை. அவருக்கு சந்தேகம் வந்து மிகவும் மனம் தளர்ந்துவிட்டார். அந்த சூஃபி குருவைப் பற்றி அந்த அளவுக்கு கேள்விப்பட்டதால் இவ்வளவு தூரத்தில் இருந்து அவர் டாக்கா வந்திருந்தார். ஆனால் யாருக்கு அவர் பெயர் கூட தெரியவில்லை!

ஆனால், கடைசியில் ஒரு டாக்ஸி டிரைவரிடம் கேட்பதற்கு முயன்றார். உடனே அந்த டாக்ஸி டிரைவர் அவரிடம், ''எனது டாக்ஸியில் உட்காருங்கள் நான் அவரிடம் அழைத்துச் செல்கிறேன்,'' என்றார். அவரால் நம்பமுடியவில்லை. ஏனெனில் அந்த குருவைப் பற்றி யாருக்கும் தெரியவில்லை. அவரும் கேட்டுப்பார்த்தார். ஆனால் யாருக்கும் தெரியவில்லை. ஆனால் இப்படி திடீரென்று இந்த டாக்ஸி டிரைவர் அவரைத் தெரியும் என்கிறார்.

அந்த டாக்ஸி டிரைவர், ''கவலைப்படாதீர்கள். எனக்கு அவரைத் தெரியும். உண்மையில் நான் தான் அந்த மனிதர்.'' என்றார். மேலும் அப்படித்தான் அது மாறிவிட்டது. அவர்தான் அந்த சூஃபி குரு ஆனால் ஒரு டாக்ஸி டிரைவராக வேலை செய்து கொண்டு இருந்தார். வெறுமனே ஒரு சாதாரண வாழ்க்கை வாழ்ந்து வந்தார்.

சூஃபிக்கள் அப்படித்தான் செயலாற்றுவார்கள். சிலர் நெசவாளராக இருப்பார்கள், ஒரு குயவராக இருக்கலாம். சிலர் தரை விரிப்புகள் உற்பத்தி செய்பவராக இருக்கலாம். குர்ட்ஜியப் மேலை நாட்டில் என்ன வியாபாரம்; செய்து வந்தார் என்று நீங்கள் அறிவீர்களா? தரை விரிப்புகளை விற்பதுதான் அவரது வியாபாரம். அவர் தரை விரிப்பு விற்பவர். அதுதான் அவரது

தொழில். நீங்கள் அவரைப் பார்த்தால் அவர் மாபெரும் குரு என்று உங்களால் ஒருபோதும் அடையாளம் கண்டுகொள்ள முடியாது. இப்படித்தான் காலம்காலமாக சூஃபிக்கள் இருந்து வந்துள்ளனர். அவர்கள் தனியாகத் தெரிய மாட்டார்கள். அதற்கான அவசியமும் கிடையாது.

உனது ஆணவம் தான் எப்போதும் சிகரத்திற்காக ஆசைப்படுகிறது. அந்த ஆணவம் தான் உன்னை இடைவிடாத மகிழ்ச்சியில் இருப்பதற்கும் அனுமதிப்பதில்லை. இடைவிடாத மகிழ்ச்சி என்பது உச்சகட்ட பரவசநிலை அல்ல என்பதை நினைவில் கொள். அது பேரானந்தம் என்பதைவிட அது அதிகம் அமைதி போன்றது. பேரானந்தம் இருக்கும் ஆனால் அது நறுமணம் போன்று இருக்கும். உன்னால் அதைக் கையில் பிடிக்க முடியாது. அது அங்கு இருக்கும் ஆனால் மிகவும் மறைமுகமாக, கண்களுக்கு தெரியாத ஒன்றாக, மிகவும் மென்மையானதாக இருக்கும். நிச்சயமாக அது சிகரம் அல்ல. அது மிகவும் சமவெளி போன்றது, எளிமையானது.

நீ மிகவும் கவலையோடு இருக்கிறாய். ஏனெனில் உனது சாதாரணத் தன்மையை அறிந்து நீ பயப்படுகிறாய். அதுதான் உண்மை மேலும் உண்மை ஒருபோதும் அசாதாரணமானதாக இருப்பதில்லை. நீ உனது சாதாரணத் தன்மையை ஏற்றுக் கொண்டு விட்டால், உனது அந்த சாதாரணத் தன்மையில் அசாதாரணத் தன்மை எழுகிறது. உனது சாதாரணத்தன்மை ஒளிமிக்கதாக, பிரகாசிப்பதாக ஆகிவிடுகிறது. அதன்பின்னர் ஒவ்வொரு நொடிப்பொழுதும் ஒரு வெகுமதியாக உள்ளது. ஒவ்வொரு நொடிப்பொழுதும் அதன் சொந்த மகிழ்ச்சியைக் கொண்டு வருகிறது. அதற்குரிய அமைதியை, அதற்குரிய அழகினைக் கொண்டு வருகிறது.

எனவே சிகரங்களுக்காக ஒருபோதும் ஏங்காதே. சிகரம் என்கிற எண்ணம் உனது ஆணவத்தின் நீட்டிப்பு. எனவே கவலைமிக்கவனாக ஆகிவிடாதே. எறும்பு புற்றினை மலையாக ஆக்கிவிடாதே. கவலையோடு இருப்பதற்கு இங்கு எதுவும் இல்லை. கொஞ்சம் சிரி, கொஞ்சம் வாழ்ந்து பார், விளையாட்டாக

இரு. அப்போது வாழ்க்கை என்றால் என்ன என்று நீ அறிவாய். அது கவலைப்படுவதால் வருவதில்லை, சிரிப்பதால் தான் வருகிறது.

கவலையோடு இருக்கும் மனிதன் மூடிக்கொண்டு இருக்கும் மனிதன். கவலையோடு இருக்கும் மனிதன் யாருக்கும் கிடைக்காத ஒரு மனிதன். கவலையோடு இருக்கும் மனிதன் எப்போதும் எல்லா ஜன்னல்களையும், கதவுகளையும் மூடிக் கொண்டு இருக்கிறான். கவலை தோய்ந்த மனிதன் தன்னையே சுருட்டிக் கொண்டவன். அவன் மக்களோடு பாலங்களை உண்டாக்குவதில்லை. அவன் கதவுகளை மூடிவிடுகிறான். அவன் ஒருபோதும் பாலங்களை உருவாக்குவதில்லை.

சிரி. ஏனெனில் சிரிப்பு தான் பாலம். அன்பு செலுத்து. ஏனெனில்; அன்புதான் பாலம். சின்னச்சின்ன விஷயங்களில் சந்தோஷத்தை அனுபவி. ஏனெனில் வாழ்க்கை என்பது சின்னச் சின்ன விஷயங்களில் தான் உள்ளது. சின்னச்சின்ன விஷயங்கள் பாலங்கள் போன்று உள்ளன.

அதனால்தான் ஜென் மக்கள் தேநீர் குடிப்பதைக்கூட ஒரு தியானமாக ஆக்கிவிட்டனர். வெறுமனே தேநீர் அருந்துதல், இதை யார் மதசம்பந்தமானது என்று நினைப்பார்கள்? ஆனால் இதை மாற்றமுடியும்; அது உனது மனப்பாங்கில் உள்ளது. உன்னால் தேநீரை தியானத்துடன் குடிக்க முடியும். தியானந்துடன் உறிஞ்சி குடிக்கமுடியும். அதன் ருசியையும், மணத்தையும், தியானத்துடன் உணர முடியும். முதலில் தேனீர் தயாரிக்கும் கெட்டிலைக் கவனி. அதன் பாடலைக்கேள். அதனுள் தண்ணீர் கொதிக்கும் நடனத்தை, நீராவியைக் கவனி. அதிலிருந்து எழுகின்ற கண்ணுக்கு தெரியாத வாசனையைக் கவனி. அதோடு வாழ்ந்து பார். அதோடு இருந்து பார். அதை ஒரு பிரார்த் தனைக்குரிய தருணமாக ஆக்கிவிடும். அப்போது சாதாரண தேநீரானது தெய்விகமான ஒன்றான மாற்றப்பட்டு விடுகிறது. மேலும் இதை நீ தேநீரோடு செய்ய முடியும் என்றால், இதை நீ மற்றவற்றோடும் செய்யலாம்.

அதனால்தான் இங்கு நான் அதிகம் ஆடலையும், பாடலையும் நான் வலியுறுத்துகிறேன். நான் விபாசனா தியானம் மற்றும் சாஜென் தியானம் ஆகியவற்றை பின்னணியில் போட்டுவிட்டேன். ஏனெனில் அவை உன்னில் கவலையை உருவாக்க கூடியது. ஏற்கனவே நீ கவலையோடு இருக் கிறாய். எனவே அது ஆபத்தானது. முதலில் உனது கவலைப் படுதல் அழிக்கப்பட வேண்டும். அதன் பின்னர் மட்டுமே உன்னால் விபாசனா தியானத்தை சந்தோசமாக செய்ய முடியும்.

முதலில் நீ நடனமாட வேண்டும். எனவே நடனத்தில் நீ உனது பாதுகாப்பு கவசங்களை கைவிட்டு விடுகிறாய். முதலில் நீ மகிழ்ச்சியில் கத்த வேண்டும். பாடவேண்டும். அப்போது உனது வாழ்க்கை சக்தி மிக்கதாக ஆகிறது. முதலில் நீ உனது ஆழ்மனதில் உள்ளவற்றை வெளியே கொட்ட வேண்டும். அப்போது நீ உன்னுள் அடக்கிவைத்த அத்தனையும் வெளியே தூக்கி எறியப்படும் அப்போது உனது உடலானது நச்சு மற்றும் விஷம் இல்லாமல் சுத்தமாக்கப்படும். உனது மனநிலையும் கூட அடக்கி வைக்கப்பட்ட கவலையான விஷயங்கள் மற்றும் மனக்காயங்கள் ஆகியவை இல்லாமல் சுத்தமாக்கப்படும்.

இது நடந்த பின்னர், உன்னால் சிரிக்க முடிகின்றபோது, உன்னால் நேசிக்க முடிகின்றபோது, அதன்பிறகு விபாசனா தியானம் செய்யலாம். இப்போது விபாசனா உன்னை கவலைக்குள் தள்ளாது. அது உன்னை எந்த ஒரு ஆணவப் பயணத்திற்கும் தள்ளாது. இப்போது உன்னால் அமைதியாக உட்கார முடியும். இப்போது அமைதியாக அமர்ந்திருப்பது கவலைக்குரியதாக இருக்காது.

விபாசனாவில் ஒரு தனித்தன்மையை நான் இங்கு உருவாக்க முயற்சித்துக் கொண்டு இருக்கிறேன். இது உலகில் எங்குமே இல்லை. தந்திரா மார்க்கத்தை இந்த நூற்றாண்டிற்கு கொண்டு வந்து அதை புதுமையான தந்திர மார்க்கமாக ஆக்குவதுதான் எனது அணுகுமுறையாகும். தாவோவை இருபதாம் நூற்றாண்டிற்கு கொண்டுவந்து அதை புதுமைத் தாவோவாக

ஆக்குவது தான் எனது அணுகுமுறையாகும். ஜென்னை இருபதாம் நூற்றாண்டிற்கு கொண்டு வந்து அதை புதுமை ஜென்னாக ஆக்குவதுதான் எனது அணுகுமுறையாகும். இப்படியே புதுமை சூஃபி, புதுமை யோகா என்று ஆக்குவது தான் எனது அணுகுமுறையாகும்.

பல நூற்றாண்டுகள் இந்த அழகான விஷயங்களை உன்னிடம் இருந்து பிரித்துவிட்டன. அந்த நூற்றாண்டுகளை நீ கைவிட வேண்டும். அந்த நூற்றாண்டுகளில் உனக்கு என்ன வெல்லாம் செய்யப்பட்டுள்ளதோ அதை எல்லாம் நீ கைவிட்டால் மட்டுமே அந்த நூற்றாண்டுகளை நீ கைவிடமுடியும். நீ மிகவும் கவலைக்குரியவனாக ஆகிவிட்டாய். தற்கால மனிதன் கவலைமிக்கவனாக இருக்கிறான். இதற்கு முன்பு இப்படி ஒருபோதும் இருந்ததில்லை. எனவே இந்த கவலையானது இந்த பிரபஞ்சத்திற்கும், முழுமைக்கும் இடையே ஒரு தூரத்தை உருவாக்கி விட்டது.

உனது கவலைக்குள் புகுந்து நீ அதற்கு பின்னால் எதை மறைத்து வைத்திருக்கிறாய் என்று பார்;. நீ தனிமையில் இருக்கிறாய், நீ வெறுமையில் இருக்கிறாய், மேலும் உன்னால் அதை நேருக்குநேர் எதிர்கொள்ள முடியவில்லை. அதை எதிர்கொள்ள வேண்டும். ஏனெனில் வெறுமை என்பது கெட்டது அல்ல. வெறுமை அளவுகடந்த அழகானது. நீ அதிலிருந்து தப்பித்து ஓடினால் அதன்பின்னர் அது அசிங்கமானதாக் ஆகிவிடுகிறது. நீ அதற்குள் நுழைந்தால் அது அமைதி என்பதாக ஆகிறது. மேலும் நீ அதற்குள் மறைந்து போய்விட்டால், அது படைப்பாற்றல் ஆகிறது.

எனவே, தனிமை என்பது அழகானது. தனிமையில் இருக்கின்ற ஒரு மனிதனால் தான் நேசமுள்ளவனாக ஆகமுடியும். தனிமையில் இருக்கமுடியாத மனிதனால் நேசிக்கவே முடியாது. ஏனெனில் அவனது நேசமானது ஒருவிதமான தேவையில் இருக்கிறது.

நேசிப்பதில் இரண்டு வகைகள் உள்ளன. ஒன்று, நீ யாரிடமாவது "நீ எனக்கு தேவை. நான் உன்னை உண்மையில்

நேசிக்கிறேன்'' என்று கூறுகிறாய். இது அசிங்கமானது ஏனெனில் இது தேவையை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ''நீ எனக்கு தேவை,'' என்று நீ கூறுகிறாய், நீ அடுத்தவரை பயன்படுத்து வதற்கு விரும்புகிறாய். உன்னால் இன்னமும் தனிமையில் இருப்பதற்கு முடியவில்லை. நீ யாருடனாவது ஒன்று சேர்ந்து இருக்க விரும்புகிறாய். நீ அடுத்தவரைப் பிடித்து தொங்கிக் கொண்டு இருக்கிறாய். அடுத்தவர் தான் உன்னை நிறைவு செய்கிறார். அடுத்தவர் இல்லை, என்றால் நீ உனது சொந்த தனிமை குறித்து மிகவும் பயப்படுகிறாய். ஆனால் இதைத்தான் மக்கள் சொல்கிறார்கள் மேலும் காதலர்கள் இதை மிகவும் சந்தோஷமானதாக அனுபவிக்கின்றனர். யாராவது ஒருவர் உன்னிடம், ''நீ எனக்கு தேவை, நான் உன்னை உண்மையிலேயே நேசிக்கிறேன்,'' என்று கூறினால், நீ அழகான ஏதோ ஒன்றினுள் புகுந்து விடுவது போன்று உணர்கிறாய். நீ அப்படி உணர்வது சரி அல்ல. நீ அழிவுமிக்க ஒன்றினுள் புகுந்து கொண்டிருக்கிறாய். இது தவறான விதமான காதல் அல்லது நேசம். இந்த காதல் அல்லது நேசம்தான்; இந்த உலகில் இருக்கிறது.

ஒவ்வொருவரும் தனது தனிமையை கண்டு பயப்படுவ தால், அடுத்தவரை பற்றிக் கொள்கிறார்கள். பற்றிக்கொள்வதற்கு ஒரு வழியாக அவர்கள் அடுத்தவரை பயன்படுத்துகின்றனர். எனவே இப்படி நீ அடுத்தவரை பயன்படுத்தும்போது, அடுத்தவர் ஒரு பொருள் போன்று தரம் தாழ்த்தப்பட்டு விடுகிறார். அவர் அதன்பின்னர் ஒரு மனிதராக இருப்பதில்லை. அவர் ஒரு கணவனாகவோ அல்லது ஒரு மனைவியாகவோ ஆகிவிடுகின்றனர். சுதந்திரம் இழக்கப்பட்டு விடுகிறது. அடுத்தவரை சுதந்திரமாக இருப்பதற்கு உன்னால் அனுமதிக்க முடியாது. ஏனெனில் நீ அவர்களுக்கு சுதந்திரத்தை அனுமதித் தால் அதன் பிறகு நீ உனது தனிமையை எதிர்கொண்டாக வேண்டும். ஆனால் அதை நீ செய்வதற்கு விரும்புவதில்லை.

எனவே நீ மற்றவர்களைப் பற்றிக் கொள்கிறாய், நீ அடுத்தவரைப் பிடித்துக் கொள்கிறாய், நீ அடுத்தவரை உனக்கு சொந்தமாக ஆக்கிக் கொள்கிறாய். அடுத்தவரால் சொந்தமாக்கப்

படுவது என்றாலும் கூட, நீ உனது சுதந்திரத்தை இழப்பதற்கு தயாராக இருக்கிறாய். நீங்கள் ஒருவருக்கு ஒருவர் அடிமைகளாக ஒருவருக்கொருவர் சிறை போன்று இருக்கிறீர்கள்.

''குகை போன்ற குறுகிய பார்வை'' என்று நேற்று நான் கூறியது தான் அன்பை, நேசத்தை, காதலை ஒரு தேவையாக உருவாக்குகிறது. நீ அந்த ஒரு மனிதரிடம் ஒருமுகப்பட்டவனாக ஆகிவிடுகிறாய். எனவே அடுத்தவர் உன்னை விட்டு போய்விட்டால், உன்னால் வாழவே முடியாது என்பதைக் கண்டு நீ பயப்படுகிறாய். அடுத்தவர் உன்னை விட்டு விலகுகிறார் என்கிற அந்த எண்ணமே உடனடியாக தற்கொலை செய்து கொள்கின்ற எண்ணங்களை உனக்கு கொடுக்கிறது. அப்போது உனது வாழ்க்கையில் அர்த்தம் இருப்பதில்லை. இது குறுகிய பார்வை. இதில் ஒருவர் குறுகிய நிலையில் உள்ள புலன் உணர்வுகளை மட்டுமே அனுமதிப்பதற்கு விரும்புகிறார். மற்றவை எல்லாம் சிறப்பற்றதாக எடுத்துக் கொள்ளப்படுகிறது.

இது போன்ற எதிர்பார்ப்புகள் தோல்வி அடையும்போது வாழ்க்கையை வாழ்வதற்கு தகுதியற்றதாக உணர்கிறார். இப்படிப்பட்டவர்கள் எப்போதும் தோற்றுத்தான் போவார்கள். ஏனெனில் யாரையும் உண்மையில் உங்களுக்கு சொந்தமான வராக ஆக்கிக் கொள்ள முடியாது. நீ எப்படி ஒரு மனிதரை, ஒரு இருப்பு நிலையை உன்னுடையதாக ஆக்கிக் கொள்ளமுடியும்? அது ஒரு பொருள் அல்ல. அதற்கு நீ ஒருபோதும் எஜமானாக இருக்க முடியாது. அதன் சுதந்திரத்தை அடுத்தவர் தான் தீர்மானிப்பார். சொந்தமாக்கிக் கொண்டும் உனது முயற்சிகளை அடுத்தவர் திக்குமுக்காடும்படி ஆக்கிக்கொண்டே செல்வார். நீ அடுத்தவர்களை உனக்குரியவர்களாக ஆக்குவதற்கு முயற்சிக் கிறாய். அடுத்தவர், உன்னை அவருடையவராக ஆக்குவதற்கு முயற்சிக்கிறார். யாருக்கும் சொந்தமானவராக இருப்பதற்கு யாரும் விரும்புவதில்லை. ஆனால் எல்லாரும் எல்லாரும் தனக்கே உரியதாக இருக்க வேண்டும் என்று விரும்புகிறார்கள். எனவே இப்போது இது தோல்வியில் தான் முடியும்.

வாழ்க்கையில் அர்த்தம் இல்லை என்பதை கூடியவிரைவில் நீ உணர்ந்து கொள்ள ஆரம்பிப்பாய். இந்தவிதமான நேசமானது நோய் போன்றது. ஆனால் இந்த உலகம் முழுவதிலும் இருக்கக்கூடிய, கிடைக்கக்கூடிய ஒரே வகையான அன்பாக, நேசமாக இது மட்டுமே இருக்கிறது. இது மக்களை மனநோயாளி களாகவும், பயந்தவர்களாகவும் ஆக்கிவிடுகிறது. அது நேசமாக மாற்றப்பட வேண்டும். ஒரு தேவை என்பதாக இல்லாமல் அது ஒருநிலை என்பதாக மாற்றப்பட வேண்டும். அதன்பிறகு ஒருவர் வாழ்க்கையை அதிக செழுமையுடன் நேசிக்க முடியும். அதன்பின்னர் ஒருவரால் நேசிக்கவும் முடியும். அதே சமயம் அடுத்தவரை சுதந்திரமாகவும் விடமுடியும். அதன்பிறகு நேசம், காதல் என்பது ஒருவரை தனக்குரியவராக ஆக்கிக் கொள்ளாத தாக இருக்கும். ஆனால் நீ உனது தனிமையோடு வாழ்வது எப்படி என்று கற்றுக் கொள்ளும்போது மட்டுமே அந்தவிதமான நேசம் சாத்தியப்படும். உன்னால் தனிமையில் நிறைவான சந்தோஷத் துடன் இருக்கமுடியும் போதும் அடுத்தவர் இல்லையே என்கிற கவலை இல்லாதபோதும் மட்டுமே உன்னால் நேசிக்கமுடியும்.

ஆனால் இப்போது முற்றிலும் வேறுபட்ட ஒரு நேசம் வந்துவிடுகிறது. அதைப்பற்றி நினைத்தாலே அது உனக்கு அதிர்ச்சி அளிக்கும். அதன்பின்னர் நேசிப்பவர், ''எனக்கு நீ தேவை இல்லை, நான் உன்னை நேசிக்கிறேன்,'' என்று கூறுவார். இது கிட்டத்தட்ட கருத்தில் கொள்ள முடியாத ஒன்றாகும். அதாவது ஒரு காதலன் யாரிடமாவது ''நீ எனக்கு தேவை இல்லை. நான் உன்னை நேசிக்கிறேன்,'' என்று கூறுவதை நம்பமுடியாது. இது முரண்பாடானதாக தெரியும் ஏனெனில் ''நீ எனக்கு தேவை. நான் உன்னை மிகவும் காதலிக்கிறேன்,'' என்று கூறுவதைத்தான் எப்போதும் கேட்டிருப்பாய். இந்த அணுகுமுறைதான் உனக்கு பழக்கப்பட்ட ஒன்றாக இருக்கும்.

ஆனால் இதுதான் உண்மையான காதல். அடுத்தது அழிக்கக்கூடியது. அது இருவரையும் அழித்து விடுகிறது. வளர்ச்சி அடைவதற்கான எல்லா சாத்தியங்களையும் அது அழித்துவிடுகிறது. இதுதான் உண்மையான காதல், இதுதான்

படைப்பாற்றல் நேசம், ''எனக்கு நீ தேவை இல்லை. நான் உன்னை வெறுமனே நேசிக்கிறேன்,'' என்று கூறுகின்ற அன்புதான் வளர்ச்சியைக் கொடுக்கும்.

இது குறித்து வெறுமனே தியானம் செய். ''நீ எனக்கு தேவை இல்லை. நான் உன்னை நேசிக்கிறேன்,'' என்று உனக்குள் அமைதியாக திரும்பத் திரும்ப கூறு. அப்போது முற்றிலும் வேறுபட்ட ஒரு பரிமாணம் திறக்கிறது. இப்போது உனக்கு உரிமை ஆக்கிக் கொள்ளவேண்டும் என்கிற தேவை இருக்காது. இப்போது அடுத்தவரை ஒரு பொருள் போன்று தரம் தாழ்த்த வேண்டிய தேவை இருக்காது. இப்போது உனது சுதந்திரத்தை அழிப்பதற்கு அடுத்தவரை அனுமதிக்க வேண்டிய அவசியம் இருக்காது. இப்போது அன்பானது சுதந்திரத்தோடு இருக்க முடியும்.

சுதந்திரத்தோடு அன்பு இருக்கும்போது அதற்கு அபரிமித மான அழகு உ.ள்ளது. முடிவான ஒன்றின் ஏதோ ஒன்று அதில் உள்ளது. ஆனால் இப்போது அன்பு என்பது தூய்மையான பகிர்ந்து கொள்ளலாக இருக்கிறது. இப்போது நேசம் என்பது ஒரு ஆடம்பரமாக உள்ளது. அதன்பின்னர் அது ஒரு தேவையாக ஒருபோதும் இருக்காது.

அன்பை ஒரு ஆடம்பரமாக நான் உனக்கு கற்பிக்கிறேன். அன்பை ஒரு தேவை என்பதாக நான் கற்பிக்கவில்லை. அது வெறுமனே பொங்கி வழிதல். உன்னிடம் அதிகம் இருப்பதால் அதை உன்னால் இதற்குமேல் தாங்கமுடியாது. எனவே அதை நீ யாருக்காவது கொடுத்தாக வேண்டும். ஆனால் எங்கிருந்து நீ இவ்வளவு அதிகமாக அன்பைப் பெறுகிறாய்? நீ தனிமையில் வாழ்வது எப்படி என்று கற்றுக் கொண்டால் அதிலிருந்து வருகிறது. உனது தனிமையில் எப்படி வாழ்வது என்று நீ கற்றுக் கொண்டால், உனது தனிமையை சந்தோஷமாக அனுபவித்துக் கொண்டு, அதைக் கொண்டாடிக் கொண்டு, தன்னை மேலும் நிரம்பிக் கொள்ளவேண்டும் என்ற ஆசை இல்லாமல் தன்னை எப்படி ஒருவன் காலியாக ஆக்கிக்கொண்டு இருப்பது என்று நீ கற்றுக்கொண்டால் அதிலிருந்து அன்பு அதிக அளவு வருகிறது.

ஒருவன் தன்னை சாப்பாடு, நேசம், பணம், பதவி இவற்றால் நிரம்பிக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்படாதபோது அதிலிருந்து அன்பு வருகிறது. உனது வெறுமையை எந்த ஒரு வழியிலும் நிரப்பிக் கொள்ள ஆர்வத்துடன் இல்லாதபோது, அதன் பின்னர் திடீரென்று அந்த வெறுமை தனது நிறத்தை மாற்றுகிறது. அதன ;தன்மை மாற்றப்பட்டு விடுகிறது.

நீ அதில் இளைப்பாறிக் கொள்வாய். அதன்பின்னர் ''நான் காலியாக இருக்கிறேன்,'' என்று நீ உணர மாட்டாய். ''நான் காலியாக இருக்கிறேன், நான் வெறுமையானவன் என்றால் நான் வெறுமையுடன் இருக்கிறேன்'' என்று நீ உணர்வாய், மேலும் வெறுமையின் இந்த தூய்மையானது அபரிமிதமானது. இந்த சூன்யத்தில் ஒரு சிறு துகள் போன்ற தூசி கூட சேராது. இந்த வெறுமையானது எதனாலும் மாசுபடுத்தப்பட முடியாதது. இதன் தூய்மை முழுமையானது, நிறைவானது. அந்த வெறுமையும் கூட எப்போதும் களங்கமில்லாதது. அந்த வெறுமையில் இருந்து, அந்த வெறுமையில் வாழ்ந்தால், மாபெரும் மகிழ்ச்சி மற்றும் மாபெரும் அமைதி கிணற்று நீர் மேலே எழுந்து வருவது போல எழுந்துவரும்.

இதைத்தான் நான் படைப்பாற்றல் என்று அழைக்கிறேன். இது ஒரு பாடலாக ஆகமுடியும். இது ஒரு நடனமாக ஆகமுடியும். இது ஒரு காதலாக ஆகமுடியும். இது அநேகவிதமான விஷயங்களாக ஆகமுடியும். ஆனால் ஒரே ஒரு விஷயம் மட்டும் ஒன்றுபோல இருக்கும். அது தான் பொங்கி வழிவதாகும். இப்படி அன்பானது பொங்கி வழிவது ஒரு நிலை. ஒரு ஆடம்பரம், பகிர்ந்து கொள்ள வேண்டும் என்கிற மகிழ்ச்சிக்காக பகிர்ந்து கொள்வதாகும். இந்த அன்பு தான் கொண்டாட்டமாக இருக்கிறது.

ஆனால், நீ உனது தனிமையை தவிர்த்துவிட்டாய், நீ உனது வெறுமையைத் தவிர்த்து விட்டாய். நீ இப்படி இதை தவிர்த்துக் கொண்டே போனால் இந்த அன்பினை, நேசத்தை, காதலை நீ ஒருபோதும் அறிந்து கொள்ள மாட்டாய். ஆனால் இதுதான் மிகப்பெரிய அனுபவமாக உள்ளது. நீ உனது சொந்த சாத்யத்

தையும், உனது சொந்த சக்தியையும் தவிர்த்துக் கொண்டு இருக்கிறாய்.

கலீல் ஜிப்ரானின் இந்த வார்த்தைகள் குறித்து தியானம் செய்:

ஒன்றாகச் சேர்ந்து ஆடிப் பாடி மகிழ்ச்சியாக இருங்கள்

ஆனாலும்கூட நீங்கள் ஒவ்வொருவரும் தனிமையானவர்களாக இருங்கள்.

வீணையின் கம்பிகள் கூட தனியாகத்தான் இருக்கின்றன

என்றாலும் கூட அவை ஒரே இசையில் அதிர்கின்றன.

ஒன்றாக சேர்ந்து நில்லுங்கள், எனினும் நெருங்கி நிற்காதீர்கள்

ஏனெனில் கோயில் தூண்கள் தனித்தனியாகத்தான் நிற்கின்றன.

மேலும் ஓக் மரமும், சைப்ரஸ் மரமும் ஒன்று அடுத்ததன்

நிழலில் வளர்வதில்லை.

தனித்திரு, அதுதான் தியானம். தனிமையில் அன்பு ஊற்றெடுக்கும், அதுதான் படைத்தல். அதன் பின்னர் அன்பினால் அற்புதங்களைச் செய்ய முடியும்.

ஆனால் எப்போதும் கவலையோடு இருக்கிற ஒரு மனிதன் அவனது சொந்த வளங்களுக்கு கூட கிடைக்காதவனாக இருக்கிறான். அவன் தனது சொந்த சாராம்சத்திற்கு, தனது சொந்த மண் மற்றும் வேர்களுக்கு கூட கிடைக்காதவனாக இருக்கிறான். கவலையோடு இருக்கிற மனிதன் அவனது உயிர் உணர்விற்கு வெளியே சுற்றி சுற்றி வந்து கொண்டு இருக்கிறான். உனது கவலைகளை கைவிட்டுவிடு.

கொஞ்சம் சிரி, கொஞ்சம் நேசி, அப்போது கடவுள் தன்மை என்றால் என்ன என்று நீ அறிந்து கொள்வாய்.

இன்று இதுபோதும்.

இங்கே, ஒரு சிவப்புக் கல்லானது, வெறுமனே கல்லின் ஒரு துண்டாக உள்ளது. மேலும் ஆன்மிக உயர்வு என்பது அறிவீனமான செயலின் உயர்வாகும். மௌனம் போற்றுதலாக இருக்கிறது-பேச்சினால் செய்யப்பட்டுள்ளது. உனது வீண்பேச்சு உனக்கு கவலை மற்றும் தீங்கினை மட்டுமே கொண்டு வரும் - அப்படித்தான் செய்துள்ளது!

நம்பிக்கையும், நம்பிக்கையின்மையும்
இரண்டும் உனது வேஷதாரி இதயத்தை தான்
ஆரம்ப இடமாக கொண்டுள்ளன.
பாதையானது நெடியதாகத் தான் இருக்கிறது
ஏனெனில்; அதில் பயணத்தை ஆரம்பிக்க நீ
தாமதப்படுத்துகிறாய்
ஒரு அடி எடுத்து வைத்தால் போதும்
அது அவரை உன்னிடம் கொண்டு வந்துவிடும்;
ஒரு அடிமையாக ஆகிவிடு,
அப்போது நீ ஒரு அரசனாக ஆகிவிடுவாய்.

தனது ஆன்மாவில் இருந்து
வாழ்க்கையின் மணமானது அவற்றை சென்றடையும்போது
ஊமை தனது நாவுகளை கண்டு கொள்கிறான்.

உண்மையுடன் கவனி
மேலும் முட்டாளாக ஆக்கப்பட்டு விடாதே.
இது முட்டாள்களுக்கு உரியது அல்ல!
ஒற்றுமை என்னும் ஜாடியில்
இந்த பல்வேறு நிறங்களும்

*ஒரே நிறமாக ஆகிவிடுகின்றன.*
*கயிறானது ஒற்றைப் புரியாக குறைக்கப்படும்போது*
*அது பலமில்லாததாக ஆகிவிடுகிறது.*

*உனது அறிவானது, யூகம் மற்றும் சிந்தனையின்*
*வெறும் தாறுமாறான கலப்பாகும்,*
*பூமியின் முகத்தில் இணக்கமுள்ளதாக இருப்பதாகும்.*
*அவர்கள் எங்கு இருந்தாலும், அவர் இருக்கமாட்டார்.*
*அவர்கள் அவரது படைப்பில் இருக்கின்றனர்.*
*அவரது தோட்டத்தில் மனிதனும் பகுத்தறிவும்*
*தற்போதைய பழுக்கும் செடிகள்.*
*அவரது இயல்பைப் பற்றி நீ என்ன முடிவு செய்தாலும்*
*நீ கண்டிப்பாக உனது ஆழத்திற்கு வெளியே இருப்பாய்,*
*ஒரு குருடன் தனது தாயின் தோற்றத்தை விவரிக்க*
*முயல்வது போன்று இருப்பாய்.*
*பகுத்தறிவானது இன்னமும் ரகசியத்தின் கீழே*
*போய்க்கொண்டு இருந்தாலும்*
*நீ உனது தேடுதலை அன்பு என்றும் திறந்த வெளியில்*
*முடிக்கிறாய்.*

*பாதையானது, சொல்லிலும் இல்லை, செயலிலும் இல்லை,*
*இவற்றில் இருந்து வெறும் தனிமை மட்டுமே வரும்.*
*நினைக்கும் மாளிகை ஒருபோதும் வராது.*
*இனிமையும், வாழ்க்கையும்; தான்*
*இந்த பாதையில் மௌனமாக நடக்கின்ற மனிதனின்*
*வார்த்தைகளாக இருக்கும்;*
*அவன் பேசும்போது அது அவனது அறியாமையில் இருந்து*
*வருவதில்லை, மேலும் ;அவன் மௌனமாக இருப்பது*
*அவனது சோம்பேறித்தனத்தில் இருந்து வருவதில்லை.*

சூஃபி தப்பித்து செல்கின்ற ஒருவர் அல்ல, அது அவரது சீதோஷ்ணநிலை அல்ல. அவர் தப்பித்து செல்வதற்கு முற்றிலும் எதிரானவர். அவர் படைப்பினை கொண்டாடுவதில், பிரபஞ்சத்தை கொண்டாடுவதில், வாழ்க்கையைக் கொண்டாடுவதில்

நம்பிக்கை கொள்கிறார். படைப்பின் மூலமாக மட்டுமே படைத்தவனை அடைய முடியும் என்பது சூஃபியிசத்தின் அடிப்படையாக இருக்கிறது. அவரைப் பெறுவதற்கு நீங்கள் அவரது படைப்பை துறவு கொள்ள வேண்டியதில்லை. உண்மையில் நீங்கள் அவரது படைப்பை துறவு கொண்டுவிட்டால் நீங்கள் ஒருபோதும் அவரை அடையமாட்டீர்கள். அவரது படைப்புகளை துறவறம் கொள்வதன் மூலம், மறைமுகமாக நீங்கள் படைத்தவரையே துறவறம் கொண்டு விட்டீர்கள்.

ஆனால் இன்னமும் துறவறம் நடந்து கொண்டுதான் இருக்கிறது. சூஃபி உலகத்தை துறவு கொள்கிறார் என்பதல்ல. ஆனால் அவர் கடவுளை அடைகிறார். அவர் கடவுளை அடைந்துவிட்ட அந்த நொடிப்பொழுதில், இந்த உலகம் மறைந்து விடுகிறது. துறவு கொள்ள வேறு எதுவும் இல்லை, அதன்பின்னர் கடவுள் மட்டுமே இருக்கிறார்.

சூஃபியானவர் இந்த உலகத்தை துறவு கொள்வதில்லை. ஆனால் இந்த உலகம் மறைந்து போகின்ற, கரைந்து போகின்ற ஒரு தருணம் வருகிறது. சூஃபி இந்த உலகில் வாழ்கிறார். ஒரு நாள் இந்த உலகம் என்பது இல்லாமல், கடவுள் மட்டுமே இருப்பதை அவர் கண்டு கொள்கிறார்.

சூஃபி தன்னைத் தானே துன்புறத்திக் கொள்பவர் அல்ல. அவர் தன்மீது வலியை உண்டாக்கவதில் நம்பிக்கை கொள்வதில்லை. அவர் நோயுற்றவர் அல்ல. சூஃபி முற்றிலும் சாதாரண விதமாக வாழ்கிறார். அவரது வாழ்க்கையின் தன்மையானது மெதுவாக மெதுவாக மாறிக் கொண்டே போனாலும் அவர் எந்தவிதமான நெறிகோணலும், எந்தவிதமான அதீத உணர்ச்சிகளும் இல்லாமல் வாழ்கிறார். அவர் அதை மாற்ற முயற்சிப்பதில்லை. கடவுளை நினைத்துக் கொள்வதில்தான் அவரது முழு முயற்சியும் உள்ளது. தன்னை மாற்றிக் கொள்வதில் அல்ல.

இது உங்களுக்குள் ஆழ்ந்து மூழ்கட்டும். இந்த கருத்தை நீங்கள் தவறவிட்டு விட்டால், சூபியிஸத்தின் ஒட்டு மொத்த

கருத்தையும் தவறவிட்டு விடுவீர்கள். கடவுளை நினைவில் கொள்ளுதல் என்கிற ஒரே ஒரு விஷயத்தில் மட்டும் சூஃபி மனதை ஒருமுகப்படுத்துகிறார். அதை அவர்கள் ஜிக்ர் (Zikr) என்கின்றனர். அந்த நிலையானது ஆழ்ந்து செல்லும்போது, இந்த உலகின் மீதான அதீத ஆசை குறைகிறது. அவர் இறுதியான உண்மை நிலைக்கு நெருங்கி வரவர, இந்த சாதாரண உண்மை நிலையானது அவருக்கு கவர்ச்சியானதாக இருப்பதில்லை. அது மறைந்து போக ஆரம்பிக்கிறது. ஏனெனில் நீங்கள் உண்மையான தங்கத்தை கண்டு கொள்ளும் போது உங்களால் பொய்யான தங்கத்தை எப்படி எடுத்துக்கொண்டு போக முடியும்? நீங்கள் உண்மையான வைரங்களைக் கண்டு கொண்டபின்னர், தானாகவே நீங்கள் இதுவரை சுமந்து கொண்டு வந்துள்ள பலநிற கற்களை கைவிட்டு விடுவீர்கள்.

துறவறம் பூண்டு தப்பித்து செல்பவர், ''உங்களது பலநிற கற்களை துறவு கொண்டு விடுங்கள், அப்போதுதான் உங்களால் உண்மையான வைரங்களை பெறமுடியும்,'' என்கிறார். ஆனால் சூஃபி இதற்கு நேர் எதிரான ஒன்றைக் கூறுகிறார். அவர், ''உண்மையான வைரங்களைப் பெற்று விடுங்கள் அப்போது உண்மை அல்லாதவை தானாகவே உங்களது வாழ்க்கையில் இருந்து தன்னை கழற்றிக் கொண்டு போய்விடும்,'' என்கிறார்.

உண்மையானதை தெரிந்து கொண்டால் போதும், அப்படி தெரிந்து கொள்வதிலேயே பொய்யானது கைவிடப்பட்டு விடுகிறது. மேலும் பொய்யானது அப்படிப்பட்ட அறிதலின் மூலம் கைவிடப்படுவதால், அது உங்கள்மீது எந்த ஒரு காயத்தையும், தழும்பையும் விட்டுச் செல்லாது. தன்னைத் தானே துன்புறுத்திக் கொள்பவர் மிகப்பெரிய காயங்களால் கஷ்டப் படுகிறார். அவர் இன்னமும் பழுக்கவில்லை, இல்லையெனில் அவரது உடல் என்னும் மரத்தில் இருந்து பழமானது எந்த ஒரு தழும்பையும் உருவாக்காமல் கீழே விழுந்திருக்கும். பழம் பழுக்காத போது நீங்கள் அதைப் பறித்தால், அது மரத்தைக் காயப்படுத்துகிறது. அது பழத்தையும் காயப்படுத்துகிறது. இரண்டுமே காயத்தில் இருக்கின்றன.

பழுத்த பழம் தானாகவே விழுகின்ற அழகினை நீங்கள் கண்டதில்லையா? அமைதியாக, தானாகவே விழுவதைக் கண்டதில்லையா? அந்தப் பழம் விழுந்துவிட்டது என்பதை அந்த மரம்கூட உணர்ந்திருக்காது. மரம் அங்கு இருப்பதை அந்த பழமும் கூட உணர்ந்திருக்காது.

சூஃபியிஸம் என்பது சாத்தியப்படுகின்ற எளிமையான வழியாகும். ஒரு சூஃபி மிகவும் எளிய வாழ்க்கையை வாழ்கிறார். ஆனால் எளிமை என்பது அவரால் வளர்த்து எடுக்கப்பட்டதல்ல. ஏனெனில் வளர்த்து எடுக்கப்பட்ட எளிமையானது எளிமையே அல்ல; அது ஏற்கனவே சிக்கலாக இருக்கிறது. நீங்கள் எதையாவது வளர்க்கும் போது அதில் உள்நோக்கம் இருக்கிறது. அதில் ஆசை இருக்கிறது. அதில் ஏக்கம் இருக்கிறது. ஏதோ ஒன்றிற்காக நீங்கள் ஆசைப்படுகிறீர்கள். ஏதோ ஒன்றை வளர்ப்பதன்மூலம் நீங்கள் ஏதோ ஒன்றாக ஆவதற்கு முயற்சிக்கிறீர்கள். ஆகவேண்டும் என்பது ஆசை என்பதாகிறது. மேலும் ஆசை என்பது எப்படி எளிமை என்பதாக இருக்க முடியும்? எனவே வளர்த்தல் ஒருபோதும் எளிமையானதாக இருக்காது. கடைப்பிடிக்கப்படுகின்ற சந்நியாசம், கடைப்பிடிக்கப் படுகின்ற எளிமை, ஒருபோதும் அழகினைப் பெற்றிருக்க முடியாது. முதலில் அது எளிமையே அல்ல.

இந்த நாட்டிலும், அடுத்த நாடுகளிலும் நீங்கள் துறவிகளைப் பார்க்கலாம். அவர்களது எளிமை வளர்க்கப்பட்டது. கணக்குபோட்டு பார்க்கப்பட்டது, உள்நோக்கம் கொண்டது. அவர்கள் கடவுள் மீது ஆசையோடு உள்ளனர். அவர்கள் கடவுள் மீது பேராசையோடு உள்ளனர். எனவே அவர்கள் அதற்கான விலையைக் கொடுக்க தயாராக இருக்கின்றனர்.

சூஃபிக்கள், ''கடவுள் கிடைக்கக்கூடியவராக இருக்கிறார். அது ஏற்கனவே கிடைக்கக் கூடியதாக உள்ளது. உங்களுக்கு தேவையானது எல்லாம் ஒரு சிக்கல் இல்லாத மனமேயாகும். உங்களுக்கு தேவை எல்லாம் ஒரு உள்நோக்கம் இல்லாத மனமேயாகும். நாளை ஏதோ ஒன்றை சாதிக்க வேண்டும் என்று முயற்சி செய்யாமல், இந்த நொடிப்பொழுதின் அமைதியில்

நீங்கள் இருப்பதுதான் உங்களுக்கு தேவை,'' என்று கூறுகின்றனர். மேலும் உங்களது வாழ்க்கைக்கு பிறகு என்ன உள்ளது? அது நாளை என்பதன் நீட்டிக்கப்பட்ட நிழல் போன்றது. ஆகவே யார் தங்களின் மரணத்திற்கு பிறகு சொர்க்கத்தையோ அல்லது முக்தியையோ அடையவேண்டும் என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்களோ அவர்கள் மிகவும் பேராசை பிடித்த மக்கள் அவர்கள் மதப்பற்றுள்ளவர்களே அல்ல.

சொர்க்கம், நரகம் போன்ற மறுஉலக கற்பனைக் கதைகளை சூஃபியிலும் ஒருபோதும் நம்பிக்கை கொள்வதில்லை. ஆனால் அதற்காக சொர்க்கம் என்பது இல்லை என்றாகி விடாது. ஆனால் அது சூஃபியின் கவலை அல்ல. சூஃபி முழுமையாக இந்த நொடிப்பொழுதில் வாழ்கிறார். அவரது எளிமையானது அவரது புரிதலின்மூலம் வருகிறது. அவர் அதை வளர்ப்பதாலோ அல்லது அதை கடைப்பிடிப்பதாலோ வருவதில்லை. வாழ்க்கையை பார்க்கும்போது, அவர் ஒரு ரோஜா மலரின் எளிமையை உணர்கிறார். அது எவ்வளவு எளிமையாக இருக்கிறது. மேலும் அதன் எளிமையின் அழகையும் காண்கிறார். அவர் ஒரு ரோஜா மலர் போன்று எளிமையானவர் ஆகிறார். அது ஏழைநிலை அல்ல, ரோஜா மலர் எளிமையாக இருக்கிறது. ஆனால் செழிப்பாக உள்ளது. இதைவிட அதிக செழிப்புள்ளதாக என்ன இருக்க முடியும்? ரோஜா மலர் எளிமையுடன், முழு ஆடம்பரத்தில் உள்ளது. இதைவிட ஆடம்பரம் வேறு என்ன இருக்கமுடியும்?

ஒரு சூஃபி இந்த நொடிப்பொழுதில் வாழ்கிறார். இந்த நொடிப்பொழுதில் எளிமையாக செழுமையாக ஒரு ரோஜா மலர் போன்று மலர்கிறார். வறுமை அங்கு திணிக்கப்படுவதில்லை. அவர் ஆன்மாவில் ஏழ்மையுடன் இருக்கிறார். ஆன்மாவில் ஏழ்மையுடன் இருப்பது என்பதற்கு என்ன அர்த்தம்? அதற்கு அங்கே ஆணவம் இல்லை என்பதுதான் அர்த்தம், அவ்வளவுதான். அவர் வறுமையோடு சேர்ந்து இருக்கிறார் என்று அர்த்தமல்ல. இதுகுறித்து விழிப்புணர்வுடன் இருங்கள். இங்கே செல்வத்தின் மீது பற்றுக்கொண்ட மக்களும்; உள்ளனர். வறுமை

மீது பற்றுக்கொண்ட மக்களும் உள்ளனர். ஆனால் இது ஒரே மாதிரியான பற்றுதல் தான்.

இது நான் கேள்விப்பட்டது:

ஒரு இஸ்லாமிய துறவி ஒருவர் ஒரு மிகப்பெரிய சூஃபி குருவைப் பார்க்கப் போனார். அவரது செல்வச் செழிப்பை பார்த்துவிட்டு அந்த துறவி தனக்குள், ''எப்படி இந்த செல்வச் செழிப்பும், சூஃபியிசமும் கைகோர்த்துக் கொண்டு இருக்க முடியும்?'' என்று நினைத்தார். சில தினங்கள் அந்த குருவோடு இருந்த பின்னர் அங்கிருந்து வெளியேறுவதற்கு முடிவு செய்தார். அந்த குரு அவரிடம், ''உனது பயணத்தில் நானும் உன்னுடன் வருகிறேன்!'' என்றார்.

கொஞ்ச தூரம் சென்ற பின்னர், அந்த துறவி தனது கஷ்குல்லை அதாவது பிச்சைப் பாத்திரத்தை மறந்து வைத்து விட்டதை அறிந்தார். எனவே திரும்பப் போய் அதை எடுத்து வருவதற்கு அவர் குருவிடம் அனுமதி கேட்டார்.

அதற்கு அந்த குரு, ''நான் எனது எல்லா உடைமைகளையும் விட்டுவிட்டு புறப்பட்டு வந்துவிட்டேன். ஆனால் உன்னால் உனது பிச்சைப் பாத்திரத்தைக்கூட விட்டுவிட்டு வரமுடிய வில்லை. எனவே நாம் இங்கிருந்தே பிரிந்தாக வேண்டும்,'' என்றார்.

சூஃபியானவர் செல்வச் செழிப்புக்கோ அல்லது வறுமைக்கோ பற்றோடு இருப்பவர் அல்ல. அவர் வெறுமனே எந்த ஒன்றோடும் பற்றுதல் இன்றி இருக்கிறார். எனவே நீங்கள் எந்த ஒன்றோடும் பற்றுதல் இல்லாமல் இருக்கும் போது நீங்கள் எதையும் துறவு கொள்ள வேண்டியதில்லை. துறவறம் என்பது பற்றுதல் என்பதன் மறுபக்கமாகும். பற்றுடன் இருப்பதன் முட்டாள்தனத்தை புரிந்து கொண்டவர்கள் துறவு கொள்ள மாட்டார்கள். அவர்கள் இந்த உலகில் வாழ்வார்கள் என்றாலும் கூட இந்த உலகைச் சார்ந்தவர்கள் அல்ல. நீங்களாகவே விரும்பி உங்களை வறுமையில் ஆழ்த்திக் கொள்வதும் கூட ஒருவிதமான பற்றுதல் தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். எந்த

ஒன்றினையும் விருப்பத்துடன் மீண்டும் மீண்டும் வலியுறுத்துவது நான் என்னும் ஆணவத்தின் பயணம் ஆகும்.

சூஃபி எளிமையாக வாழ்கிறார். அவருக்கென்று சொந்தமான எந்த விருப்பமும் இல்லாமல் வாழ்கிறார். அது ஒரு அரண்மனையாக இருந்தாலும், அவர் சந்தோஷமடைகிறார். அது ஒரு குடிசையாக இருந்தாலும் அவர் சந்தோஷம் அடைகிறார். அவர் ஒரு அரசர் போன்று இருக்க வேண்டியது நேரிட்டாலும் கூட அதற்கும் அவர் சரி என்கிறார். அவர் ஒரு பிச்சைக்காரர் போன்று இருக்க நேரிட்டாலும் அதற்கும் சரி என்கிறார். அவர் எந்த முன்னுரிமையும் கொடுப்பதில்லை. அவர் வெறுமனே அந்த நொடிப்பொழுதில் வாழ்கிறார். இந்த இயற்கை அவருக்கு என்னவெல்லாம் கிடைக்கும்படி செய்கிறதோ அதை வாழ்கிறார். அவர் எதையும் மாற்றுவதில்லை.

இது புரிந்து கொள்ளப்பட வேண்டும். ஏனெனில் பல நூற்றாண்டுகளாக மதங்கள் உங்களுக்கு துறவறத்தை கற்பித்து வந்துள்ளன. வாழ்க்கையில் இருந்து தப்பி ஓடுவதை நோக்கி சாய்ந்து கொண்டு பல நூற்றாண்டுகளாக மதங்கள் வாழ்ந்துள்ளன. ஒரு சூஃபி அதிக ஆரோக்கியமான, அதிக முழுமையான, அதிக மனிதாபிமானம் மிக்க, அதிக இயற்கையான ஒரு முற்றிலும் வேறுபட்ட அணுகுமுறையை வைத்திருக்கிறார். ஏனெனில் நீங்கள் ஏதாவது ஒன்றில் இருந்து தப்பித்து ஓடுவது உங்களது பயத்தினால் தான். எனவே பயத்தினால் ஒருபோதும் எந்த மாற்றமும் நடக்காது.

நீங்களாக எதையும் கைவிடாமல், ஆனால் அது வெறுமனே முக்கியமில்லாத ஒன்றாக ஆனபின்பு அது தானாகவே உங்களை விட்டு போய்விடுகிறது. அதன் பின்னர் அங்கு சுதந்திரம்; உள்ளது. சுதந்திரம் என்பது ஒருபோதும் பயத்தினால் வராது. சுதந்திரம் என்பது மிகப்பெரிய விழிப்புணர்வினால் தான் வருகிறது. சூஃபி இந்த உலகில், கடவுள் குறித்த முழு விழிப்புணர்வுடன் வாழ்கிறார். அவர் இந்த உலகில் வாழ்கிறார். ஆனால் அவர் கடவுளை நினைவில் கொள்கிறார். அவர் சந்தைக் கடையில் இருப்பார். ஆனால் அவரது இதயம் ஒரு குறிப்பிட்ட

நினைவோடு துடித்துக் கொண்டு இருக்கிறது. அந்த ஜிக்ர் தொடர்கிறது. அதுதான் அவரது வேலை என்பதை இந்த உலகில் அவர் மறந்து விடுவதில்லை.

தப்பித்து செல்கிறீர்களோ அல்லது தப்பித்து செல்லாமல் இருக்கிறீர்களோ, நீங்கள் கடவுளை மறந்துவிட்டு இருந்தால் நீங்கள் சந்தைக் கடையில் இருந்தாலோ அல்லது மடாலயத்தில் இருந்தாலோ நீங்கள் நினைவுடன் இருந்தால், உஷாராக, விழிப்புணர்வுடன் இருந்தால் அதன் பின்னர் கடவுள் எங்கும் இருக்கிறார். வேறு எங்கும் இருப்பதைப் போல அவர் இங்கும் இருக்கிறார். வேறு எப்போதும் இருப்பதை போன்று அவர் இப்போதும் இருக்கிறார். நீங்கள் எங்காவது போக வேண்டும் என்கிற கேள்வியே கிடையாது. இங்கேயே ஒருவர் வெறுமனே இளைப்பாறலாம். ஒருவிதமான முழு கவனம் நிறைந்த அமைதியில் இருக்கலாம். அதன் பின்னர் வாழ்க்கையானது எளிமையானதாகவும், குழப்பமற்றதாகவும் உள்ளது. ஆம், அது தான் எளிமை என்பதாகும். எளிமை என்பது கடைபிடிக்கப்பட்ட குணநலன் அல்ல. ஆனால் அது முக்கியமல்லாத, சாதாரணமான ஒன்றினால் குழப்பமற்ற ஒரு வாழ்க்கையாக உள்ளது.

சூஃபி எந்தவிதமான கற்பனைக் கதைகளிலும் நம்பிக்கை இல்லாதவர் என்பதை நான் மீண்டும் கூறுகிறேன். எனவே அவர் எதையும் உள்நோக்கத்துடன் செய்கிறார் என்கிற கேள்விக்கே இடமில்லை. அவர் நாளை என்பதை நம்புவதில்லை. காலம் என்பதில் அவர் இந்தப் பொழுது என்பதை மட்டுமே அறிந்தவர். மற்றும் இடம் என்பதில் அவர் இங்கு என்பதை மட்டுமே அறிந்தவர்.

பறவைகளின் ஒலி அவருக்கு தெய்விகமானது. அவரது இருப்புநிலை தவிர தனியாக இங்கு வேறு கடவுள் இல்லை. நடனமாடுபவர் தான் நடனமாக இருக்கிறார். ஆகவே வேறு எங்கோ மேகங்களுக்கு மேலே உட்கார்ந்து கொண்டு இருக்கின்ற ஒரு உருவக்கடவுள் என்கிற எண்ணம் அவரிடம் கிடையாது. அவரது கடவுள் உருவமில்லாத பிரசன்னம்.

இந்த நொடிப்பொழுதிலேயே, இப்போதே அதை உணருங்கள். அவரது பிரசன்னம் வேறு எங்கும் உள்ளதைப் போலவே இங்கும் உள்ளது. தேவையானது எல்லாம் நீங்கள் ஒருவிதமான ஒத்திசையில், ஒன்றிவிடுதலில் இருப்பதாகும். அதன்பின்னர் காக்கைகள் கரைவதும், தொலைவில் இருந்து குயில் கூவுவதும் இப்படி எல்லாமே அமைதியாக உள்ளது. மேலும் அந்த அமைதியில் நீங்கள் உங்களைச் சுற்றி உள்ள ஆள் அரவமற்ற பிரசன்னம் குறித்து விழிப்புணர்வு கொள்ள ஆரம்பித்து விடுகிறீர்கள்.

ஒரு வங்கியின் எழுத்தர் இளைஞர் ஒருவர் வங்கியில் இருந்து ஐயாயிரம் பவுண்ட் பணத்தை திருடிவிட்டார். மேலும் தான் பிடிபட்டுவிட்டால் அதைத் திருப்பி கட்டுவதற்கும் முடியாமல் இருந்தார். எனவே இந்த துக்கத்தில் அவர் தற்கொலை செய்து கொள்வதற்கு ஒரு மலையின் உச்சிக்கு சென்றார்.

அவர் குதிப்பதற்கு முற்படும்போது அவரது இடது தோள் தட்டப்பட்டவுடன் அவர் திரும்பிப் பார்த்தார். அப்போது அங்கு கற்பனைக் கதைகளில் வரும் தாய்க்கடவுள் போன்ற அசிங்கமான பெண்மணி நின்றுகொண்டு இருந்தாள். மேலும் அவள் அவருக்கு மூன்று வரங்களைக் கொடுத்தாள்.

முதல் வரமானது அவருக்கு வேண்டிய ஐயாயிரம் பவுண்டு பணத்தை கொடுப்பது என்பது நிறைவேறியது. இரண்டாவதாக அவன் ஒரு மாபெரும் மாளிகைக்கு சொந்தக்காரன் ஆக வேண்டும் என்றார். மூன்றாவதாக தனக்கு ஒரு ரோல்ஸ் ராய்ஸ் கார் வேண்டும் என்றார். அந்த கற்பனை தாய்க்கடவுளால் இந்த மூன்று வரங்களும் ஏற்கப்பட்டுவிட்டன.

மிகவும் மகிழ்ச்சியோடு ஐயாயிரம் பவுண்டு பணம், மாளிகை மற்றும் ரோல்ஸ் ராய்ஸ் கார் ஆகியவற்றை பெறுவதற்கு அவன் வீட்டிற்கு திரும்பினான். அவரது அந்த கற்பனை உலக தாய்க்கடவுள் அவரை நிறுத்தி அவனது ஒரே ஒரு விருப்பத்தை மட்டும் நிறைவேற்றும்படி கூறினாள். அவன் அதற்கு சந்தோஷப்பட்டார். ஆனால் அவள் அவனிடம் இன்பத்தை அனுபவிக்க வேண்டும் என்றாள்.

அவன் பின்வாங்கினான் ஆனால் அவள் தனக்கு கொடுத்த மூன்று வரங்களை நினைத்து சம்மதித்தான். அவன் அவசரமாக அவளிடம் இன்பத்தை அனுபவித்து விட்டு தனது கால் சட்டையை அணிந்து கொண்டு அவன் புறப்பட தயாரானபோது அவள் மீண்டும் அவரை நிறுத்தினாள்.

இந்த முறை அந்த தாய்க்கடவுள் அவரிடம், ''இளைஞனே உனது வயது என்ன?'' என்று கேட்டாள்.

உடனே, ''எனக்கு முப்பத்தைந்து வயதாகிறது. ஆமாம் இதை நீங்கள் ஏன் கேட்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு அவள், ''இவ்வளவு வயது ஆனபிறகும் கூட நீ கற்பனைக் கதைகளில் வரும் தாய்க்கடவுளை நீ நம்புகிறாயா?'' என்று கேட்டாள்.

தனிப்பட்ட உருவம் கொண்ட ஒரு கடவுளை நம்புகிற ஒருவன் இன்னமும் முதிர்ச்சி அடையாதவளாக இருக்கிறாள். அப்படி எதுவும் இங்கு கிடையாது. தனிப்பட்ட உருவம் கொண்ட ஒரு கடவுள் என்பது உங்களது தந்தை என்னும் எண்ணமானது பெரிதாக்கப்பட்டு திரையிடப்படுகிறது. நீங்கள் குழந்தைத் தனமாக இருக்கிறீர்கள். நீங்கள் பிரார்த்தனை செய்யும்போது, நீங்கள் தனிப்பட்ட ஒரு உருவம் கொண்ட கடவுளிடம் பிரார்த்திப்பதாக நீங்கள் நினைத்தால், நீங்கள் வெறுமனே முட்டாளாக இருக்கிறீர்கள். உங்களது பிரார்த்தனையை காது கொடுத்து கேட்பவர் யாரும் இல்லை. என்றாலும் கூட கடவுள் என்பவர் இருக்கிறார். ஆனால் கடவுள் என்பவர் ஒரு மனித உருவமாக இல்லை. கடவுள் மனித உருவமற்ற ஒரு பிரசன்னமாக இருக்கிறார்.

இருக்கின்ற இந்த முழுமை தான் கடவுள். இருக்கின்ற எல்லாவற்றின் மொத்தமும் கடவுள். எனவே பிரார்த்தனை என்பது வெறும் மௌனமாக மட்டுமே இருக்க முடியும். நீங்கள் கடவுளிடம் வேண்டிக் கொள்ளமுடியாது. பிரார்த்தனை என்பது முழு மௌனமாக மட்டுமே இருக்கமுடியும்.

இப்போது நீங்கள் மௌனமாக இருந்தால், இது ஒரு பிரார்த்தனை நிறைந்த தருணமாக இருக்கிறது. இதுதான் பிரார்த்தனை என்பதாகும். எல்லாமே நின்றுவிடும் போது அதாவது உங்களது தலைக்குள் எந்த ஒரு எண்ணமும் நகர்ந்து செல்லாதபோது, உங்களது சுவாசமானது வேகம் குறைந்ததாக ஆகிவிடும்போது, கிட்டத்தட்ட சுவாசமே இல்லாத அளவுக்கு ஒரு நொடிப்பொழுது வரும்போது பிரார்த்தனை நடக்கிறது. அந்த அமைதி நிலையில் நீங்கள் தொடர்புபடுத்தப்படுகிறீர்கள். உண்மை நிலையுடன் நீங்கள் இணைக்கப்படுகிறீர்கள். அதன் பின்னர் நீங்கள் ஒருபோதும் தனியானவர் கிடையாது. நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள். அந்த ஒன்றுபடுதல் தான் பிரார்த்தனை.

இப்போது சூத்திரங்களைப் பார்ப்போம்.

**இங்கே ஒரு சிகப்பு கல்லானது வெறுமனே கல்லின் ஒரு சிறு துண்டாக உள்ளது.**

எங்கே? 'இங்கே' என்று ஹக்கிம் சனாய் கூறுவதன் அர்த்தம் என்ன? நான் இப்போது பேசிய அந்த மௌனம் நிலைதான் அது. நீங்கள் சமாதிநிலையில், முழு அமைதியுடன், பிரார்த்தனையில் இருக்கும்போது **இங்கே ஒரு சிகப்பு கல்லானது வெறுமனே கல்லின் ஒரு சிறு துண்டாக உள்ளது.** விஷயங்களைப் பார்க்கின்ற உங்களது ஒட்டுமொத்த விதமும் மாறுகிறது. உங்களது மனதில் ஆசைகள் வட்டமடிக்கும்போது, ஒரு சாதாரணக் கல்லும் கூட ஒரு சிகப்புகல் போன்று தெரியும். நீங்கள் உங்களது ஆசையை ஒரு சாதாரணக் கல்லின்மீது திரையிட்டு பார்க்க முடியும். அது மிகவும் விலைமதிப்பற்றது என்கின்ற ஒரு கற்பனையை உங்களால் உருவாக்க முடியும்.

மற்றபடி, நீங்கள் ஆசைகளினால் ஆட்கொள்ளப்படாமல் இருக்கும்போது சிகப்புகல் என்பது என்ன? அது வெறும் சாதாரணக் கல். எல்லா வைரங்களும் வெறும் கற்கள் என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. மூன்றாம் உலகயுத்தம் நடந்து இந்த பூமியில் இருந்து இந்த மனித இனமே மறைந்து விடும்போது ஒரு கல்லுக்கும் ஒரு வைரத்திற்கும் இடையே ஏதாவது வேறுபாடு

இருக்குமா? என்பதை வெறுமனே சிந்தித்து பாருங்கள். அப்போது மிகப்பெரிய கோஹினூர் வைரத்திற்கும், சாலையின் ஓரத்தில் கிடக்கும் ஒரு கூழாங்கல்லுக்கும் இடையே வேறுபாடு ஏதாவது இருக்குமா? அங்கு எதுவும் இருக்காது. எனவே இந்த வேறுபாடானது மனிதனால் உருவாக்கப்பட்டது. இது மனிதனால் திரையிடப்பட்டது என்று அர்த்தம். இது ஒரு உற்பத்தி செய்யப்பட்ட வேறுபாடாகும். இது மனிதனின் மனதில் இருக்கின்ற ஒன்றாகும். மனிதன் மறைந்து விட்டால், அதன்பிறகு இந்த சிகப்புகல் மற்றும் கூழாங்கற்கள் என்று எதுவும் இருக்காது. அதன்பின்னர் எல்லாமே ஒன்றாகவே இருக்கும். அதன்பின்னர் கோஹினூர் வைரமானது தனக்கு தனியாக சிறப்பு வாய்ந்த மரியாதையை கொடுக்க வேண்டும் என்று கேட்க முடியாது.

இது நடந்த கதை. ஒரு ஜென் குரு காட்டில் வசித்து வந்தார். அந்த நாட்டின் அரசர் அவரைப் பார்ப்பதற்கு வந்தார். அந்த அரசர் குரு அணிந்து கொள்வதற்காக வைரங்கள் பதித்த ஒரு அழகான அங்கியையும், வேறு அநேக பரிசுப் பொருள்களையும் கொண்டு வந்தார். வெல்வெட்டினால் ஆன அந்த அங்கியை அவர் பரிசளித்தார்.

குரு அதை ஏற்றுக் கொண்டார். ஆனால் அதன் பிறகு உடனடியாக அதை திருப்பி கொடுத்து விட்டு, "தயவு செய்து இதை திரும்பவும் எடுத்துச் செல்லுங்கள்," என்று கூறினார்.

அரசர் வருத்தமடைந்தார். அவர் குருவிடம், "இது என்னிடம் இருந்து கொடுக்கப்படுகிற பரிசு. அதைப் பெற்றுக் கொள்வதன் மூலம் நீங்கள் எனக்கு உதவி செய்ய மாட்டீர்களா? நான் ஒதுக்கப்பட்டு விட்டது போல உணர்கிறேன்," என்றார்.

உடனே குரு அரசரிடம், "உங்களுக்கு உதவவில்லை என்கிற கேள்வியே இங்கு கிடையாது. நீங்கள் வற்புறுத்தினால் நான் இதை இங்கு வைத்திருக்க முடியும். ஆனால் நான் தங்களிடம் ஒரு விஷயத்தைக் கூறியாக வேண்டும்;. இங்கு நான் தனியாகத் தான் வசிக்கிறேன். இங்கு வேறு மனிதர்களே கிடையாது. எனவே இந்த அங்கியை யார் பாராட்டுவார்கள். நான்

இங்கு மான்கள், மயில்கள், ஆகியவற்றோடு வாழ்கிறேன். மேலும் சிலசமயம் சிங்கங்கள் கூட வரும். எனவே அந்த மிருகங்கள் எல்லாம் என்னைப் பார்த்து சிரிக்கும். இந்த வயதான காலத்தில் நான் முட்டாளாக ஆகிவிட்டதைப் பார்த்து அவை சிரிக்கும். என்னை சிரிப்புக்குரிய ஒருவனாக ஆக்கிவிடாதீர்கள். தயவுசெய்து இதை திரும்ப எடுத்து செல்லுங்கள். அவை எல்லாம் சிரிக்கும். இந்த வயதான காலத்தில் நான் இப்படி முட்டாள் ஆகிவிட்டேனே என்று அவை நினைக்கும்.

எனக்கு பறவைகள், மிருகங்கள் போன்ற தோழர்கள் எல்லாம் இருக்கிறார்கள். அவர்களுக்கு இந்த வைரங்கள் மற்றும் அதன் மதிப்புகள் தெரியாது. தயவுசெய்து இதை திரும்ப எடுத்துச் செல்லுங்கள். திரும்ப எடுத்துச் செல்வதன் மூலம் தயவுசெய்து எனக்கு உதவுங்கள். மனிதனின் முட்டாள்தனங்கள் இருக்கிற இடத்தில் இது முற்றிலும் நல்லது ஆனால் இங்கு இது அர்த்தமற்றது,'' என்று கூறினார்.

வித்தியாசங்களையும், பிரிவுகளையும் உருவாக்கியவன் இந்த மனிதன் தான், மற்றபடி எல்லாமே ஒன்று தான். ஆனால் இதைப் புரிந்து கொள்வதற்கு ஒரு மூன்றாம் உலகப் போர் நடக்க வேண்டியதில்லை. நீங்கள் உங்களது மனதைக் கைவிட்டு விடுகின்ற அந்த நொடிப்பொழுதிலேயே உடனடியாக இதை உங்களால் காண முடியும். மனம் கைவிடப்பட்டால், அப்போது இந்த உலகம் உருமாற்றம் அடைந்துவிடும். ஏனெனில் இந்த மனம்தான் குறிப்பிட்ட ஒரு வகையான உலகை உருவாக்கி உள்ளது. நீங்கள் ஒரு மனம் என்பதாக இல்லாத போது, இந்த ஒட்டுமொத்த உலகமும் மறைந்துவிடும். அது ஒரு கனவாகவே இருந்தது. அதன் பிறகு நீங்கள் கண்விழித்துப் பார்த்தால், நீங்கள் விஷயங்கள் மற்றும் பொருள்கள் எப்படி உள்ளனவோ அதை அப்படியே காண்பீர்கள்.

இம்மானுவேல் கண்ட் என்னும் ஜெர்மானிய தத்துவ மேதையானவர் ''நீங்கள் பொருள்களில் அவை எப்படி உள்ளனவோ அப்படியே பார்க்க முடியாது,'' என்று கூறுவார். தத்துவப்படி அவர் சொல்வது சரியானது. நீங்கள் மனதின் மூலம்

காரியம் செய்தால், பொருட்களை எப்படி உள்ளனவோ அப்படி உங்களால் பார்க்க முடியாது ஏனெனில் உண்மைநிலையை கலைப்பதற்கும், அதை மாற்றவும், அபிவிருத்தி செய்யவும், அதன் தப்பெண்ணங்களால் நிறத்தை இப்படி அல்லது அப்படி வைத்துக் கொள்ளவும், உங்களது மனம் எப்போதும் அங்கு இருக்கும். மனம் அங்கு இருக்கும். பொருள்கள் அவற்றில் எப்படி உள்ளனவோ அப்படியே நீங்கள் பார்ப்பதற்கு மனம் அனுமதிக்காது ஏனெனில் உங்களைச் சென்றடைகின்றவைகள் என்னவாக இருந்தாலும் அவை உங்களது மனதின் மூலமாக மட்டுமே உள்ளே செல்லும். அப்படிப்பட்ட விதத்தில் இம்மானுவேல் கண்ட் கூறுவது சரியானது.

இது நான் கேள்விப்பட்டது:

அமெரிக்க செல்கின்ற ஒரு கப்பலில் தாங்கள் வேலை செய்வதற்கு அனுமதி கேட்டு ஒரு ஆங்கிலேயரும், அயர்லாந்துகாரரும் வந்தனர். கப்பலின் தலைவர் சம்மதித்தார். ஆனால் ஆங்கிலேயனை கப்பலில் ஏறச் சொன்னார். ஆனால் அயர்லாந்துகாரரிடம் அவர் தனக்கான ஆதாரங்களைக் கொண்டு வருமாறு கூறினார். அந்த அயர்லாந்துகாரர் கரைக்கு சென்று அவருக்கான ஆதாரங்களை பெற்று வந்து கொடுத்தார் ஆனால் கப்பலின் தலைவர் இப்படி தன்னை சந்தேகப்பட்டது அவனுக்குள் கோபத்தை உண்டாக்கியது.

ஒருநாள், ஆங்கிலேயரும், அயர்லாந்துகாரரும் அந்த கப்பலை கழுவி விட்டுக் கொண்டு இருந்தனர். ஆங்கிலேயன் வாளியில் ஒரு கயிற்றைக் கட்டி தண்ணீர் இறைப்பதற்கு வாளியை தண்ணீரில் இறக்கினான். அவன் கொஞ்சம் குனிந்து அந்த வாளியை மேலே தூக்கும் சமயத்தில் ஒரு மிகப்பெரிய அலையானது கப்பலின் தளத்தில் அடித்து அந்த ஆங்கிலேயனை இழுத்து கடலில் போட்டு விட்டது.

அந்த அயர்லாந்துகாரன் சுத்தம் செய்வதை விட்டுவிட்டு அந்தப் பக்கம் ஓடினான். அவன் தண்ணீருக்குள் எட்டிப் பார்த்தான். ஆங்கிலேயனைக் காணவில்லை. உடனடியாக அவன் கப்பலின் தலைவர் அறைக்கு ஓடிவந்தான்.

அவன், ''தலைவரே, உங்களுக்கு நினைவு இருக்கலாம். நான் இந்த கப்பலுக்கு வந்தபோது நீங்கள் என்னிடம் என்னைப் பற்றிய ஆதாரங்கள் வேண்டும் என்று கூறிவிட்டு ஆங்கிலே யனை மட்டும் அவை இல்லாமல் உள்ளே அனுமதித்தீர்கள்,'' என்றான்.

உடனே தலைவர், ''ஆம், நினைவிருக்கிறது. அதைப்பற்றி இவ்வளவு தாமதமாக நீ ஏன் வந்து புகார் கூறுகிறாய்?'' என்றார்.

உடனே அயர்லாந்துகாரன், ''புகாரா, நானா? நான் அதுபோன்றவன் அல்ல. உங்களது நம்பிக்கைக்கு துரோகம் செய்துவிட்டார் என்று கூறுவதற்கு தான் நான் இங்கு வந்தேன்,'' என்றான்.

''நம்பிக்கைத் துரோகமா? நீ என்ன சொல்கிறாய்?'' என்றார் தலைவர்.

உடனே அயர்லாந்துகாரன், ''நிச்சயமாக அந்த ஆங்கி லேயன் உங்களது வாளியோடு போயே விட்டான்,'' என்றான்.

நீங்கள் ஏதாவது ஒரு தப்பெண்ணத்தை உங்களது மனதில் சுமந்து கொண்டு இருந்தால் நீங்கள் அந்த தப்பெண்ணத்தின் மூலமாக மட்டுமே பார்ப்பீர்கள். மனம் என்பது தப்பெண்ணங் களால் ஆனது என்பதைத் தவிர வேறு எதுவும் இல்லை. மனம் என்றால் உங்களது ஒட்டுமொத்த கடந்த காலமும் என்று அர்த்தம். எனவே உங்களுக்குள் நுழைகின்ற எதுவானாலும் அது உங்களது கடந்த காலத்தின் மூலமாகத்தான் உள்ளே போக வேண்டும். எனவே அது உருக்குலைக்கப் பட்டுவிடும். அதற்கு சாயம் பூச்சப்பட்டு விடும். அது உங்களை வந்தடைவதற்குள் அது அதிகம் மாற்றப்பட்டு விடும். எனவே உண்மைநிலை என்ன என்று உங்களால் தெரிந்து கொள்ள முடியாது.

தத்துவ ரீதியாக மட்டுமே இம்மானுவேல் கண்ட் கூறுவது சரியானது. ஆனால் அவருக்கு தியான உலகத்தைப் பற்றி தெரியாது. அவருக்கு சூஃபிக்கள், ஜென் மக்கள், தாவோக்கள் ஆகியவர்களைப் பற்றி தெரியாது. மற்றபடி பொருள்கள் எப்படி உள்ளதோ அப்படியே அறிந்து கொள்வதற்கு இங்கு வழிகள்

உள்ளன. வெறுமனே மனதை தூக்கி பக்கத்தில் வைத்து விடுங்கள். வெறுமையான கண்களுடன் பாருங்கள். அதன் பின்னர் உண்மை நிலையோடு குறுக்கீடு இருக்காது.

அப்போது திடீரென்று நீங்கள் ஒரு முத்தை அதன்பின்னர் ஒரு முத்தாக பார்க்க மாட்டீர்கள், ஒரு சிவப்புகல்லே ஒருபோதும் சிகப்பு கல்லாக பார்க்க மாட்டீர்கள். ஒரு வைரம் ஒருபோதும் வைரமாக இருக்காது. அதன்பிறகு எல்லா வித்தியாசங்களும், வேறுபாடுகளும், மதிப்பீடுகளும், தீர்மானங்களும் மறைந்து விடும். அதன்பின்னர் பொருள்கள் எல்லாம் எந்தவிதமான பிரிவுகளும், பெயர்களும், அடையாளங்களும் இல்லாமல் இருக்கும்.

*இங்கே, ஒரு சிவப்புக் கல்லானது, வெறுமனே கல்லின் ஒரு துண்டாக உள்ளது.*
*மேலும் ஆன்மிக உயர்வு என்பது அறிவீனமான செயலின் உயர்வாகும்.*

எனவே தியானத்தை கொஞ்சம் ருசித்தவர்களுக்கு இந்த உலகமானது சிறப்பியல்பானது கிடையாது. அவர்கள் இதை துறவு கொள்வதில்லை. அது வெறுமனே சிறப்பில்லாதது. அது துறவு கொள்ளும் அளவுக்கு சிறப்பானது அல்ல. அதற்கு மதிப்பே கிடையாது.

நீங்கள் இந்த உலகினை துறவு கொள்ளும்போது நீங்கள் அதற்கு ஒரு மதிப்பைக் கொடுக்கிறீர்கள். நீங்கள் அப்போது, ''இது மிகவும் மதிப்புமிக்கது. மேலும் இதை நான் துறவு கொள்ளவில்லை என்றால் நான் இதில் மாட்டிக் கொள்வேன்,'' என்று கூறுகிறீர்கள். நீங்கள் இந்த உலகில் இருந்து தப்பி ஓடும்போது, நீங்கள் இந்த உலகத்தைப் பற்றி பயப்படுகிறீர்கள். இல்லையெனில் ஏன் தப்பிக்கிறீர்கள்? நீங்கள் தப்பி ஓடுவதே நீங்கள் பொருள்கள் மீது அதீத ஆசையோடு இருக்கிறீர்கள் என்பதைக் காட்டுகிறது. நீங்கள் அளவுக்கு அதிகமாக பற்றுதலுடன் இருக்கிறீர்கள். எனவே நீங்கள் இங்கு வாழ்ந்தவர் இந்த பொருள்களில் நீங்கள் மூழ்கி விடுவீர்கள் என்று பயப்படுகிறீர்கள். இது உங்களது சக்தி இல்லாமையைத்தான்

காட்டுகிறது. தப்பி ஓடுபவர் தனது கோழைத்தனத்தையும், சக்தி இல்லாமையையும் மட்டுமே காட்டுகிறார்.

சூஃபிக்கள், ''அதற்காக கவலைப்படாதீர்கள். தியானத்தை செய்யுங்கள். உங்களால் பயிற்சி செய்யப்படாத அமைதியை அடையுங்கள். உங்களது உயிர் உணர்வில் இளைப்பாருங்கள். வெறுமனே இருந்து அதன்பின்னர் பாருங்கள்,'' என்று கூறுகின்றனர். மேலும் துறவு கொள்வதற்கு எதுவும் இல்லை. நீங்கள் அனுபவிப்பதற்கும் இங்கு எதுவும் இல்லை, நீங்கள் துறவு கொள்ளவும் இங்கு எதுவும் இல்லை. இந்த இரண்டு துருவங்களும் மறைந்துவிட்டது.

**இங்கே ஒரு சிகப்புக் கல்லானது, வெறுமனே கல்லின் ஒரு துண்டாக உள்ளது. மேலும் ஆன்மிக உயர்வு என்பது அறிவீனமான செயலின் உயர்வாகும்.** எனவே இவ்வுலக விஷயங்கள் மட்டும் மறைந்து போவதில்லை. நீங்கள் மறுஉலக அனுபவங்கள் என்று அழைப்பவையும் கூட முட்டாள்தன மானதாக ஆகிவிடுகிறது. எல்லா கோரிக்கைகளும் முட்டாள் தனமாக ஆகிவிடுகின்றன. இதுதான் உண்மையான சூஃபியின் அடிப்படைப் பண்பாகும். அவர் எந்த ஒரு உயர்வையும் கோர மாட்டார். அவர் எந்த ஒரு ஆன்மிக அனுபவத்தையும் கோரமாட்டார். எந்த கோரிக்கையும் இன்றி அவர் வாழ்வார். அவரால் எப்படி எதையும் கோரமுடியும்? ஏனெனில் அவருக்குள் அடி ஆழத்தில் கோரிக்கை வைப்பதற்கு அங்கு யாரும் இல்லை என்பதை அவர் அறிந்து கொண்டு விட்டார். அங்கு எல்லாமே காலியாக உள்ளது. அவர் பானா (fana) என்னும் நிலையைக் கண்டு கொண்டார். அவர் கரைந்துவிட்டார். கோருவதற்கு அங்கு யார் இருக்கிறார்? அவரால் இந்த உலக அதிகாரம் மற்றும் புகழைக் கேட்க முடியாது. அவரால் ஆன்மிக உயர்வைக் கேட்க முடியாது.

சனாய் இதை... **அறிவீனமான செயலின் உயர்வாகும்** என்ற கூறுகிறார். ஏன்? - ஏனெனில் ''இந்த உலகின் செல்லத்தை எல்லாம் நான் வைத்திருக்கிறேன்,'' என்று கோருகிறவனை

மன்னித்து விடமுடியும். அவன் ஒரு முட்டாள் ஆனால் அவனை மன்னித்து விடமுடியும். ஆனால் ஆன்மிகச் செல்லத்தை கோருகிற ஒருவனை மன்னிக்க முடியாது. இதுதான் அறிவீன மான செயலின் உயர்வு. நீங்கள் இன்னமும் இந்த உலகின் அதே பிரிவுகளைச் சுமந்து கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் இன்னமும் உங்களைப் பற்றி பெருமையில் பேசிக் கொள்கிறீர்கள்.

உண்மையான ஆன்மிகவாதி வெறுமனே பெயரை வெளியிடாதவனாக ஆகிவிடுகிறான்.

முதல் முறையாக சமாதி நிலையை அடைந்த ஒரு ஜென் குரு பற்றி ஒரு விநோதமான கதை சொல்லப்பட்டுள்ளது. அவரிடம் பறவைகள் வர ஆரம்பித்தன. பறவைகள் அவரது தோளில் உட்காரும், அவரது தலையில் உட்காரும், அவரது தொடை மீது விளையாடும், அவை அவரைச் சுற்றி, அவரையும் ஏதோ பறவை போன்று நினைத்துக் கொண்டு அருகில் உட்காரும்.

இதனால் மிகப்பெரிய புகழ் பரவியது. அவரது சீடர்கள், ''பாருங்கள், இதுதான் முழுமை குரு. இப்படித்தான் ஒரு முழுமையான குரு இருக்க வேண்டும். எங்களது குரு போன்று வேறு எந்த குருவும் கிடையாது. பறவைகள் கூட பயப்படாத அளவுக்கு அவர் சமாதி நிலையின் உயரத்தை அடைந்துவிட்டார். பறவைகளும் கூட புரிந்து கொள்கின்ற அளவுக்கு அன்பையும், கருணையையும் அவர் அடைந்துவிட்டார்,'' என்று கூறினார்கள்.

அதன் பிறகு, ஒருநாள் ஒரு விநோதமான விஷயம் நடந்தது. பறவைகள் வருவதை நிறுத்திவிட்டன. அவை மறைந்துவிட்டன. பல நாட்களாக சீடர்கள் காத்துக் கொண்டு இருந்தனர். ஆனால் அதன்பின்னர் பறவைகள் வரவே இல்லை. அவர்கள் ஆச்சரியப்பட்டனர். அவர்கள் குருவிடம் கேட்டபோது அவர், ''இப்போது, உண்மையில் ஏதோ நடந்துவிட்டது. ''நான் அடைந்துவிட்டேன்'' என்று எனக்குள் கோருதல் இருந்ததால் பறவைகள் வந்துகொண்டு இருந்தன. இப்போது இந்த கோரிக்கை மறைந்துவிட்டது. ஆகவே அந்த பறவைகளும் கூட என்னைப்பற்றி மறைந்துவிட்டன,'' என்றார்.

"இப்போது நான் பெயரை வெளியிட விரும்பாதவனாக ஆகிவிட்டேன். பறவைகளுக்கும் கூட நான் பெயரை வெளியிட விரும்பாதவன் என்பது தெரிந்து விட்டது. நான் இன்னமும் யாரோ ஒருவராக இருந்ததால் அவை வருவது வழக்கமாக இருந்தது. இப்போது அவை வருவதில்லை. இப்போது இறுதிநிலை நிகழ்ந்துவிட்டது. இப்போது அவை இங்கு வருவதில்லை. ஏனெனில் அவை இங்கு யாரையும் காண்பதில்லை. இங்கு வெறுமனே இல்லாமை மட்டுமே உள்ளது.

இதுதான் ஃபானா (fana). இதைத்தான் சூஃபிக்கள் கரைந்து போதல் என்று அழைக்கிறார்கள். இந்த நிலையில் நீங்கள் ஆன்மிக உயர்வையோ அல்லது வேறு எதையோ உங்களுடையதாக கோர முடியாது. எந்த ஒரு ஆன்மிக கோருதலும் ஒரு தடையாக ஆகிவிடுகிறது என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்.

*மௌனம் போற்றுதலாக இருக்கிறது...*

மேலும் இப்போது அங்கு எந்த பிரார்த்தனையும் கூட இருப்பதில்லை. வார்த்தைகளால் ஒன்றும் செய்யமுடியாது. உங்களது பிரார்த்தனைகள் எல்லாம் வெறும் வார்த்தைகளைத் தவிர வேறு எதுவும் இல்லை. இப்போது மௌனம் தான் போற்றுதலாக உள்ளது. வெறுமனே மௌனமாக இருப்பதே போதுமானதாக இருக்கிறது.

*... பேச்சினால் செய்யப்பட்டுள்ளது;*
*உனது வீண்பேச்சு உனக்கு கவலை மற்றும் தீங்கினை*
*மட்டுமே*
*கொண்டுவரும் - அப்படித்தான் செய்துள்ளது!*

நீங்கள் உண்மையிலேயே ஒரு பிரார்த்தனை நிலையில் இருக்க விரும்பினால் வார்த்தைகளை விட்டு விடுங்கள். கிறிஸ்தவர்களாக, இந்துக்களாக, முகமதியர்களாக உங்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது, எப்படி பிரார்த்தனை செய்வது, என்ன வார்த்தைகளைப் பயன்படுத்துவது, முறையான பிரார்த்தனை என்பது என்ன என்று கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. எல்லா பிரார்த்தனைகளும் பொய்யானவை. உண்மையான

பிரார்த்தனையானது வார்த்தைகளோடும், செய்யப்பட வேண்டிய முறைகளோடும் சம்பந்தப்பட்டது அல்ல. உண்மையான பிரார்த்தனை இந்துவாகவோ, அல்லது கிறிஸ்தவனாகவோ அல்லது முகமதியனாகவோ இருக்காது. மௌனம் எப்படி இந்து அல்லது முகமதியனாக இருக்கமுடியம்? மௌனம், மௌனம்தான். வார்த்தைகள் இந்துவாக இருக்கமுடியும். வார்த்தைகள் முகமதியனாக இருக்க முடியும். அதனால் தான் வார்த்தைகள் சண்டையை உருவாக்குகின்றன. அதனால்தான் வார்த்தைகள் இந்த உலகில் வன்முறையை உருவாக்குகின்றன. மக்கள் உண்மை நிலைக்காக சண்டை போடவில்லை. அவர்கள் வார்த்தைகளுக்காகத்தான் சண்டை போட்டுக் கொண்டு இருக்கிறார்கள்.

ஆயிரக்கணக்கான போர்கள் நடந்துள்ளன. இவை உண்மையான விஷயத்திற்காக நடக்கவில்லை. ஆனால் வெறும் வார்த்தைகளுக்காகவே நடந்துள்ளன. ஒருவர் குர்ஆனை நம்புகிறார். மேலும் ஒருவர் கீதையை நம்புகிறார். இதுவே பல மில்லியன் மக்களை கொல்வதற்கு போதுமானதாகும். மேலும் இரண்டுமே வார்த்தைகள்தான்; குர்ஆனும் உண்மைநிலை அல்ல, அல்லது கீதையும் உண்மை நிலை அல்ல.

ஒரு ரோஜா மலருக்கோ அல்லது நிலாவுக்காகவோ அல்லது சூரியனுக்காகவோ மக்கள் கொல்லப்பட்டதை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? இவை எல்லாம் உண்மை நிலைகள். ஆனால் அவர்கள் நிலவின் பெயராலும் கூட கொலை செய்வார்கள். யாராவது ஒருவர், ''நிலவு எங்களது கடவுள்'' என்று கோரினால், அதன்பின்னர் அவர் கடவுள் என்கிற ஒரு வார்த்தையை நிலவின் மீது திணித்துவிட்டார். அதன்பிறகு யாரோ ஒருவர், ''நீ ஒரு முட்டாள். நிலவு உண்மையான கடவுள் கிடையாது. உண்மையான கடவுள் சூரியன் தான்,'' என்று கூறுகிறார். உடனே சண்டை ஆரம்பமாகிறது. மேலும் வாய்த் தகராறு ஆரம்பமாகிறது.

அரசியல் போர்கள், மதப்போர்கள், ஆகிய போர்களுக்கு எல்லாம் வார்த்தைகள் தான் காரணமாக இருந்து வந்துள்ளன.

வன்முறையின் மூலகாரணம் கொள்கைகள்தான். மேலும் மக்கள் இப்போது உலகிற்கு அமைதியை கொண்டுவர முயற்சி செய்கின்றனர். எனவே மீண்டும் அவர்கள் மற்றொரு கொள்கையை உருவாக்குகிறார்கள்.

உதாரணமாக, மகாத்மா காந்தியை பின்பற்றுபவர்கள், இந்த கொள்கையானது உலகிற்கு அமைதியைக் கொண்டுவரும் என்று நினைக்கின்றனர். வரலாற்றில் இருந்து நீங்கள் ஒரு சிறு பாடம்கூட கற்றுக் கொள்ளவில்லை. எந்த ஒரு கொள்கையும் இந்த உலகிற்கு அமைதியைக் கொண்டு வராது. எல்லாக் கொள்கைகளும் அவற்றின் வழியில் இந்த உலகிற்கு போர்களைத்தான் கொண்டு வருகிறது.

இந்த உலகில் ஒரு போரைக் கொண்டு வரவேண்டும் என்று தெரிந்தே முகமது அவர்கள் இந்த கொள்கையைக் கொடுத்தார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவர் தனது மதத்திற்கு கொடுத்த பெயர் இஸ்லாம். இஸ்லாம் என்றால் அமைதி, சமாதானம் என்று அர்த்தம். ஆனால் அந்த கொள்கை அமைதியைக் கொண்டு வரவில்லை. அது ஆயிரக்கணக்கான போர்களைக் கொண்டு வந்துவிட்டது.

இயேசு ஒரு சமாதான மனிதர். வாழ்க்கை குறித்து இயேசுவை விடவும் அதிக சமாதான மனப்பாங்கினை கொடுத்ததாக வேறு யார் கோரமுடியும்? ஆனால் கிறிஸ்தவமதம், இயேசுவைச் சுற்றி உருவாக்கப்பட்ட கொள்கையானது ஒரு பேரழிவாக இருந்துவிட்டது.

எல்லா கொள்கைகளும் அதாவது அமைதியில், அமைதியை அடிப்படையாக கொண்ட கொள்கைகளும் கூட கண்டிப்பாக போரினைக் கொண்டு வரும். அதன்பின்னர் அமைதி எப்படி வரும்? மனிதன் இந்த எல்லாக் கொள்கைகளின் முட்டாள் தனத்தை புரிந்துகொண்டு அவற்றைக் கைவிட்டால் மட்டுமே அமைதியானது வரமுடியும். மற்றபடி இங்கு அமைதி என்பது இருக்கமுடியாது.

மேலும் நினைவில் கொள்ளுங்கள், இதைக்கூட அதாவது ''இதுதான் எங்களது கொள்கை, நாங்கள் எந்த ஒரு கொள்கையையும் நம்பமாட்டோம்,'' என்பதைக்கூட ஒரு கொள்கையாக உண்டாக்கி விடமுடியும். அதன்பின்னர் மீண்டும் போர் வரும். அப்போது உங்களை நம்பாதவர்கள், உங்களோடு ஒத்துப் போகாதவர்கள் உங்களோடு சண்டை போட ஆரம்பித்து விடுவார்கள்.

இதை ஒரு கொள்கையாக ஆக்க வேண்டும் என்று நான் உங்களிடம் கூறவில்லை. எந்த ஒரு கொள்கையும் தேவை இல்லை என்றும் கூறவில்லை. கொள்கைகள், வார்த்தைகள், தத்துவங்கள் மூலம் என்ன நடந்துள்ளது என்பதை புரிந்து கொள்ள முயற்சி செய்யுங்கள் என்று தான் நான் கூறுகிறேன். வெறுமனே இதில் உள்ள உண்மையைப் பாருங்கள். அதைப் பார்த்தபின், அதுவாகவே கையைவிட்டு போகட்டும். கொள்கைகளுக்கு எதிராக கொள்கைகளை உருவாக்காதீர்கள். வெறுமனே அதில் உள்ள கருத்தை பாருங்கள், அதை கைவிடுங்கள் அல்லது அது உங்களைவிட்டு போகட்டும். அதோடு முடிந்து போகட்டும்.

... **அப்படித்தான் செய்துள்ளது!** சனாய் கூறுவது சரியானது தான். **''அப்படித்தான் செய்துள்ளது!''** என்று அவர் கூறுகிறார். எனவே அதன் பின்னர் கொள்கைகள் இல்லாமல் வாழுங்கள். எப்படி வாழ வேண்டும் என்று எந்த கொள்கையும் இல்லாமல் வாழுங்கள். எந்த லட்சியங்களும் இல்லாமல், எந்த ஒரு வேண்டுதல் மற்றும் வேண்டாமை இன்றி வாழுங்கள்.

ஒவ்வொரு உண்மையும் கூடிய விரைவில் கண்டிப்பாக செய்யப்பட வேண்டியதாகிறது. எனவே அதன் பின்னர் அது ஆபத்தானதாக ஆகிவிடுகிறது. ஒவ்வொரு உண்மையும் கூடிய விரைவில் ஒரு கொள்கையாக ஆகிவிடுகிறது. எனவே அதன்பின்னர் அது தீங்கானது, மற்றும் விஷம் போன்றது.

மனிதன் கொள்கைகள் இன்றி வாழ முடியாதா? அதில் எந்த ஒரு பிரச்சினையும் இருப்பதை என்னால் பார்க்க முடியவில்லை.

எந்த ஒரு கொள்கையும் இல்லாமல் மரங்கள், மிருகங்கள் மற்றும் பறவைகள் ஆகியவை வாழும்போது மனிதனாலும் வாழ முடியும். ஒரு கத்தோலிக்க மரத்தையோ அல்லது கம்யூனிஸ்ட் மயிலையோ நீங்கள் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா? இந்த ஒட்டு மொத்த பிரபஞ்சமும் கொள்கைகள் இல்லாமல் வாழும்போது, மனிதனால் ஏன் முடியாது?

எனவே, மனிதன் கொள்கைகள் இல்லாமல் வாழ்கின்ற அந்த நொடிப்பொழுதில் அவன் பிரார்த்தனை நிறைந்து இருக்கிறான். அதன்பிறகு அவனது ஒட்டுமொத்த வாழ்க்கையும் பிரார்த்தனை யாக இருக்கிறது. கொள்கை உள்ள ஒரு மனிதன் அரசியலோடு இருக்கிறான். எல்லா கொள்கைகளும் அரசியல் நிறைந்தவை.

மதப்பற்றுள்ள ஒரு மனிதன் எந்த ஒரு கொள்கையும் இல்லாமல் வாழ்கிறான். அவன் வார்த்தைகளின் மூலமாக அல்லாமல், ஒழுங்கு நடவடிக்கைகளின் மூலமாக அல்லாமல், குறிப்பிட்ட மனப்பாங்கு, முடிவுகள் மூலமாக அல்லாமல், உண்மைநிலைக்கு பதில் செயல் புரிந்துகொண்டு நொடிக்கு நொடி வெறுமனே வாழ்கிறான். நிலைமை என்னவாக இருக்கிறதோ மேலும் அந்த நொடிப்பொழுதில் என்ன சரியானதாக இருக்குமோ அதற்கு வெறுமனே பதில் செயல் புரிகிறான். சில கருத்துகளின் அடிப்படையில் செயல் புரிவதில்லை.

நிச்சயமாக, ஒரு மதப்பற்றுள்ள மனிதன் மிகவும் உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் அவனால் பதில் செயல் செய்யமுடியும். கொள்கைகள் உள்ள மனிதன் விழிப்புணர்வுடன் இருக்கவேண்டிய அவசியம் கிடையாது. அவன் தூக்கத்தில் இருக்கலாம். அவன் குறிப்பிட்ட கொள்கையை வைத்திருக் கிறான். ஏதாவது ஒரு சூழ்நிலை எழுந்தால் அவன் அதற்கு ஏற்கனவே தயாராக உள்ள பதிலை வைத்திருக்கிறான். அவன் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டிய அவசியம் என்ன? அதனால்தான் மக்கள் தூக்கத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர். அவர்கள் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. எல்லாவற்றிற்கும் ஏற்கனவே தயாராக உள்ள பதில்கள் உங்களுக்கு கொடுக்கப்பட்டு விடுகின்றன.

ஒவ்வொரு நொடிப்பொழுதும் நீங்களே சொந்தமாக பதிலைத் தேடி கண்டுபிடிக்க வேண்டும் என்றால் உங்களால் எப்படி தூக்கத்தில் இருக்கமுடியும்? உண்மை நிலையானது சவால்களை உருவாக்கிக் கொண்டே போகிறது. எனவே உங்க ளிடம் ஏற்கனவே தயார் செய்யப்பட்ட பதில்கள் இல்லாதபோது நீங்கள் உஷாராகவும், கவனமுடனும் இருக்கவேண்டும்.

ஒருவர் வார்த்தைகளையும், கொள்கைகளையும் கைவிடும் போது திடீரென்று ஒருவர் மிகமிக விழிப்புணர்வு மிக்கவராக ஆகிறார். எனவே அந்த விழிப்புணர்வு தான் பிரார்த்தனை. அமைதி என்பது எப்போதும் விழிப்புணர்வு நிறைந்துள்ளது. மேலும் வீண்பேச்சு பேசுகின்ற மனமானது எப்போதும் விழிப்புணர்வு இழந்தநிலையில் இருக்கிறது.

*நம்பிக்கையும், நம்பிக்கையின்மையும்*
*இரண்டும், உனது வேஷதாரி இதயத்தைத்தான்*
*ஆரம்ப இடமாகக் கொண்டுள்ளன.*

இந்த வார்த்தைகளில் உள்ள புரட்சிகரமான வாக்குமூலத்தை பாருங்கள்: **நம்பிக்கையும், நம்பிக்கை இன்மையும், இரண்டும் உனது வேஷதாரி இதயத்தைத் தான் ஆரம்ப இடமாகக் கொண்டுள்ளன...** நம்பிக்கை எங்கிருந்து வருகிறது? நம்பிக்கையின்மை எங்கிருந்து வருகிறது? அவை வேறு பட்டவை அல்ல. அவை ஒரே மூலத்தில் இருந்து வருகின்றன. அதுதான் வேஷதாரியின் இதயம்.

வேஷதாரிகளை நீங்கள் கோயில்கள், மசூதிகள், தேவால யங்களில் காணமுடியும். நீங்கள் அவர்களை வெவ்வேறு வடிவங்களில், வெவ்வெறு அளவுகளில், வெவ்வேறு விதமான வார்த்தைகளோடு காணமுடியும். ஆனால் அது போலித்தனம் என்றும் அதே ஆரம்ப இடத்தில் இருந்து தான் வருகிறது.

போலித்தனம் ஏன் நம்பிக்கை மற்றும் நம்பிக்கையின்மை ஆகியவற்றின் ஆரம்ப இடமாக இருக்கிறது? ஒரு மனிதன் கடவுளைப்பற்றி எதுவுமே அறியாமல், ''நான் கடவுளை நம்புகிறேன்,'' என்று கூறுகிறான். கடவுளை ஒருபோதும்

அனுபவிக்காமல், கடவுளை ஒருபோதும் ருசித்துப் பார்க்காமல் அவன், ''நான் கடவுளை நம்புகிறேன்'' என்று கூறுகிறான். இந்த நம்பிக்கை எங்கிருந்து வந்தது? இது போலித்தனம். அவன் பாசாங்கு செய்கிறான். அவன் மற்றவர்களை ஏமாற்றிக் கொண்டு இருக்கிறான். அவன் தன்னையும் ஏமாற்றிக் கொண்டு இருக்கிறான்.

நீங்களே சொந்தமாக கடவுளை அறியாதபோது, கடவுள் மீது எப்படி உங்களுக்கு நம்பிக்கை வரும்? ஆனால் உங்களது தந்தை உங்களுக்கு சொல்லி இருக்கிறார், உங்களது தாயார் உங்களிடம் கூறி இருக்கிறார், மதகுருக்களால், அரசாங்கத்தால் நீங்கள் கற்பிக்கப்பட்டு இருக்கிறீர்கள். அவர்கள் உங்களுக்கு நம்பிக்கைகளை கொடுத்துக் கொண்டே போகிறார்கள். நீங்கள் ஒரு கத்தோலிக்க நாட்டில் பிறந்தால், கத்தோலிக்க நம்பிக்கை உங்களுக்கு கொடுக்கப்படும். நீங்கள் ஒரு கம்யூனிஸ நாட்டில் பிறந்தால் கம்யூனிச நம்பிக்கை உங்களுக்கு கொடுக்கப்படும்.

அந்த குழந்தைக்கு தெரிவதற்கு முன்பே, அவன் ஏற்கனவே கட்டுத்திட்டம் செய்யப்படுகிறான், ஏற்கனவே விஷமேற்றப் படுகிறான். எனவே அவன் தனது வாழ்நாள் முழுவதும் தனக்குள் போடப்பட்ட அந்த நம்பிக்கையை திரும்பத் திரும்ப கூறிக்கொண்டு இருப்பான் மேலும் இந்த நம்பிக்கையினால் அவன் ஒரு வேஷதாரியாக இருப்பான்.

''கடவுள் இல்லை'' என்று கூறுகின்ற ஒருமனிதன் கடவுளை அறிந்திருக்கிறானா? அவன் விசாரித்து இருக்கிறானா? இந்த பிரபஞ்சம் முழுவதும் தேடிப்பார்த்துவிட்டு கடவுள் இல்லை என்று கண்டுகொண்டானா? கிடையாது. அவன் அப்படி செய்யவில்லை. இது மீண்டும் அவனது போலித்தனத்தினால் வருகிறது.

ஆகவே நம்பிக்கை மற்றும் நம்பிக்கையின்மை ஆகியவை எவ்வளவுதான் முரண்பட்டதாக தோன்றினாலும், ஆத்திகனும் நாத்திகனும் என்னதான் எதிரிகளாக தோன்றினாலும், அவர்கள் ஒரே மாதிரியானவர்கள். அவர்கள் ஒரே மூலஸ்தானத்தில்

இருந்து வருகின்றனர். தாங்களே சொந்தமாக எதையும் அனுபவிக்காமல், எதையும் அறிந்து கொள்ளாமல், அவர்கள் நம்பிக் கொண்டே போகின்றனர். அவர்கள் அறிவித்துக் கொண்டே போகின்றனர்.

உங்களுக்கு தெரியாத ஒன்றினைக் கூறுவதும், உண்மையாக உங்களது சொந்த அனுபவமாக இல்லாத ஒன்றினைப் பற்றி ஏதாவது கூறுவதும் தான் போலித்தனம் என்பதாக இருக்கிறது. மற்றவர்களிடம் இருந்து பெறப்பட்ட அறிவில் வாழ்வது போலித்தனமானது. உங்களுக்குள் அடி ஆழத்தில் நீங்கள் ஒரு விஷயமாக இருக்கிறீர்கள். மேற்பரப்பில் நீங்கள் வேறு ஒன்றாக இருப்பது போன்று பாசாங்கு செய்கிறீர்கள். இதுதான் போலித்தனம்.

சனாயின் இந்த வாக்குமூலம் அபரிமிதமான புரட்சி மிக்கது ஏனெனில் அவர் நம்புகிறவனையும், நம்பாதவனையும் ஒரே பிரிவில் போட்டு விடுகிறார்.

மதப்பற்றுள்ள மனிதன் நம்புகிறவனாகவும் இருப்பதில்லை அல்லது நம்பாதவனாகவும் இருப்பதில்லை. ஏனெனில் அவன் ஒரு வேஷதாரி அல்ல. அவனுக்கு என்ன தெரிகிறதோ அதை மட்டுமே அவன் கூறுவான். அவனுக்கு தெரியாத ஒன்றினைப் பற்றி அவன் ஒரு சிறு வார்த்தை கூட கூறமாட்டான். அவனுக்கு தெரியவில்லை என்றால் அவன் எனக்கு தெரியவில்லை என்று கூறுவான்.

சாக்ரட்டீஸ் ஒரு மதப்பற்றுள்ள மனிதர் ஏனெனில் அவர், ''எனக்கு எதுவுமே தெரியாது என்பது மட்டுமே எனக்கு தெரிந்த ஒரு விஷயமாகும்'' என்று கூறுகிறார். இதுதான் மதப்பற்று. இதுதான் உள்ளத்தின் நேர்மை, இதுதான் எளிமை, இதுதான் பணிவு.

*பாதையானது நெடியதாகத்தான் இருக்கிறது.*
*ஏனெனில் அதில் பயணத்தை ஆரம்பிக்க நீ*
*தாமதப்படுத்துகிறாய்...*

மேலும், பாதையானது நெடியதாகத்தான் இருக்கிறது. ஏனெனில் அதில் பயணத்தை ஆரம்பிக்க நீ தாமதப்படுத்து கிறாய்... மற்றபடி அது நெடிய பாதை அல்ல. உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே ஒரே ஒரு அடி மட்டும் எடுத்து வைத்தால் போதும். வெறுமனே ஒரே ஒரு அடி. ஆனால் மக்கள் ஒத்தி போட்டுக் கொண்டே போகின்றனர். மேலும் அவர்களால் ஒத்தி போட்டுக் கொண்டே போகவும் முடியும். ஏனெனில் அவர்களிடம் நம்பிக்கைகள் உள்ளது; நம்பிக்கைகள் அவர்கள் ஒத்தி போட உதவுகின்றன.

மதப்பற்றுள்ளவர் என்று அழைக்கப்படுபவர், அவராக அறிந்து கொள்ளாமலேயே இங்கு கடவுள் இருக்கிறார் என்று அறிகிறார். அவர் கடவுள் இருக்கிறார் என்று அறிந்து கொள்கிறார். எனவே ஏன் அவசரப்பட வேண்டும்? நாளையோ அல்லது நாளை மறுநாளோ நான் கங்கையில் போய் ஒரு முழுக்கு போட்டு விடுவேன் அல்லது நான் கப்பாவிற்கு சென்று பிரார்த்தனை செய்து விடுவேன் அல்லது நான் சாகும்போது கடைசி நேரத்தில் நான் அவரை நினைவில் வைத்திருப்பேன். அவர் இங்கு இருக்கிறார். எனவே ஏன் கவலைப்பட வேண்டும், ஏன் அவசரத்தில் இருக்க வேண்டும்?'' அதை ஒத்தி போட்டு விடமுடியம். நம்பிக்கை என்பது இருப்பதால் நாம் விசாரிக்க வேண்டிய, கண்டுபிடிக்க வேண்டிய, புலன் விசாரணை செய்யவேண்டிய அவசியம் கிடையாது.

மேலும் ''கடவுள் இல்லை'' என்று கூறுகிற ஒருவருக்கும் கூட புலன்விசாரணை செய்ய வேண்டும் என்கிற கேள்விக்கு இடமில்லை.' கடவுளே இல்லை என்னும்போது புலன் விசாரணையிலும், தேடிக் கண்டுபிடிப்பதிலும் என்ன அர்த்தம் உள்ளது? இரண்டுமே விசாரணையோடு முடிந்து போய்விட்டது.

தூரம் நெடுந்தூரமாக இல்லாவிட்டாலும்கூட, தூரமானது வெறும் ஒரு அடிமட்டுமே இருந்தும்கூட, இடைவிடாமல் விசாரிக்கின்ற மனிதன் கடவுளை தவறவிட்டுக் கொண்டே போகிறான். எனவே அந்த அடி என்ன? போலித்தனத்தில் இருந்து நேர்மைக்கு வரவேண்டும். அதுதான் அந்த ஒரு அடி.

உங்களுக்கு தெரியாத ஆனால் நீங்கள் தெரிந்தது போன்று பாசாங்கு செய்கின்ற எல்லாவற்றையும் விட்டுவிடுங்கள். பிறரிடம் இருந்து பெறப்பட்ட எல்லா அறிவும் மறைந்து போகட்டும். மேலும் உங்களது சொந்த அனுபவம் என்கிற ஒரே ஒரு விஷயத்திற்கு மட்டும் உண்மையானவராக இருங்கள். உங்களது சொந்த அனுபவமாக உள்ளது மட்டுமே உங்களுக்கு உதவப்போகிறது. மேலும் மற்றவை எல்லாம் இடையூறுகள். வெறுமனே இதில் உள்ள கருத்தைப் பாருங்கள். உண்மையில் சனாய் அபரிமிதமாக சிறப்பான வாக்குமூலங்களைக் கொடுக்கிறார்.

*ஒரு அடி எடுத்து வைத்தால் போதும்*
*அது அவரை உன்னிடம் கொண்டு வந்து விடும்...*

போலித்தனத்தில் இருந்து நேர்மைக்கு அடி எடுத்து வைத்தால் போதும். மேலும் இது ஒரு நீண்ட, நெடிய பயணம் அல்ல. நீங்கள் இதை இந்த நொடிப்பொழுதில், இப்போதே செய்ய முடியும். உங்களது அனுபவம் என்ன? என்றும் மேலும் உங்களது அனுபவமாக என்ன இல்லை என்றும் நீங்கள் ஏற்கனவே அறிவீர்கள் அல்லது அறியமாட்டீர்களா? எல்லாரும் அறிவோம். நம்புகின்ற ஒருவன், ''நான் நம்புகிறேன், ஆனால் எனக்கு தெரியாது,'' என்று அறிகிறான். நம்பாத ஒருவர், ''நான் நம்பவில்லை ஆனால் எனக்குத் தெரியாது ஒருவேளை கடவுள் இருக்கலாம்,'' என்று அறிகிறான், நம்புகிறவன், ''ஒருவேளை கடவுள் இல்லாமல் போகலாம்,'' என்று சந்தேகப்பட்டுக் கொண்டே போகிறான்.

மற்றவர்களிடம் இருந்து பெறப்பட்ட அறிவைப் பற்றி உங்களுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அதை ஏன் பற்றிக் கொண்டு இருக்கிறீர்கள்? ஏனெனில் அது உங்களது நான் என்னும் ஆணவத்திற்கு ஒரு நல்ல அலங்காரத்தை கொடுக்கிறது. அது உங்களது ஆணவத்திற்கு திருப்தி அளிக்கிறது. நீங்கள் அறிவாளி என்று பாசாங்கு செய்யமுடியும். நீங்கள் நெஞ்சை நிமிர்த்தி நடக்கமுடியும். நீங்கள் மக்களிடம், ''எனக்கு தெரியும் ஆனால் உங்களுக்கு தெரியாது,'' என்று கூறமுடியும். அவனை

விடவும் நான் புனிதமானவன் என்னும் முகத்தை நீங்கள் சுமந்துகொண்டு செல்ல முடியும். இந்த பயணத்தை உங்களால் சந்தோஷமாக அனுபவிக்க முடியும். ஏனெனில் ஒரு கிளியைப் போன்று கீதையை ஒப்பிக்க முடியும் மேலும் குர்ஆனை நீங்கள் ஒரு கணிணி போன்று அறிவீர்கள். இது அறிவு அல்ல. இதை எல்லாம் விட்டு விடுங்கள். எனவே ஒரே ஒரு அடி எடுத்து வைத்தால் போதும்.

*அது அவரை உன்னிடம் கொண்டு வந்துவிடும்.*
*ஒரு அடிமையாக ஆகிவிடு,*
*அப்போது நீ ஒரு அரசனாகி விடுவாய்.*

போலித்தனத்தில் இருந்து நேர்மைக்கு நீங்கள் நகர்ந்துவிடும் போது, அந்த நொடிப்பொழுதில் திடீரென்று உங்களது ஒட்டுமொத்த ஆணவமும் மறைந்துவிடும். ஏனெனில் போலித் தனம் தான் உங்களது ஆணவமானது அங்கு இருப்பதற்கு உதவுகிறது. நீங்கள் மற்றவர்களிடம் இருந்து பெற்ற எல்லாவற்றையும் கைவிட்டு விடும்போது, நீங்கள் ஆணவத்தின் எல்லா ஆதரவுகளை வெளியே எடுத்து விடுகிறீர்கள். உங்களது ஆணவம் காற்றுப்போய் கீழே விழுந்துவிடும். மேலும் ஆணவத்தின் இந்த வீழ்ச்சியில் தான் உண்மையான வாழ்க்கையின் ஆரம்பம் உள்ளது. உங்களது ஆணவம் வீழ்ந்துவிடும் போது நீங்கள் சரணாகதி நிலையில் இருக்கிறீர்கள். நீங்கள் ஒரு அடிமை ஆகிவிட்டீர்கள்.

அடிமை என்கிற இந்த வார்த்தைக்கு மேலைநாடுகளில் உள்ள அர்த்தத்தைவிட கீழை நாடுகளில் உள்ள அர்த்தமானது முற்றிலும் வேறுபட்டதாக உள்ளது. மேலை நாடுகள் ஒரே ஒரு வகை அடிமைத்தனத்தை, ஒருவர்மீது வலுக்கட்டாயமாக திணிக்கப்பட்ட அடிமைத்தனத்தை மட்டுமே அறிந்துள்ளது. அதனால் தான் எந்த ஒரு மேல்லைநாட்டு மொழியிலும் அடிமை என்பது அசிங்கமான வார்த்தையாக உள்ளது.

ஒருநாள், ஒரு இளைஞனுக்கு நான் சந்நியாசம் கொடுத் தேன். எனவே நான் அவனுக்கு தேவ தஸ்யோ, தெய்வத்தின் அடிமை என்னும் பெயரைக் கொடுத்தேன். உடனடியாக அவனது

முகத்தில் கோப உணர்வை காணமுடிந்தது. ''அடிமையோ?''. அந்த தருணத்தில் அவன் எதுவும் சொல்லவில்லை என்றாலும் கூட அடுத்தநாள் அவன், ''அன்புள்ள ஒஷோ, நானும் விசாரித் தேன். அடிமை என்ற வார்த்தைக்கு வெறுமனே வேலைக்காரன் என்று அர்த்தம் என்றால் அது மிகவும் பாராட்டுக்குரியது. அடிமை அல்ல வெறும் வேலைக்காரன் என்பது நல்லது. நான் அதை வெறும் வேலைக்காரன் என்று ஆக்கிக் கொள்ளலாமா? நானும் விசாரித்துப் பார்த்தேன் அப்போது மக்கள் என்னிடம் இரண்டு அர்த்தங்களும் சாத்தியமாகும் என்று கூறினார்கள்,'' என்றுகூறி ஒரு கடிதம் எழுதினான்.

அடிமை என்கிற அந்த வார்த்தைக்கு அவ்வளவு பயம். ஏனெனில் மேலை நாடுகளில் அதற்கு ஒரே ஒரு பரிமாணம் தான் உள்ளது. அடிமைத்தனமானது யார் மீதாவது திணிக்கப்படும் போது அடிமை என்று அழைக்கப்படுகிறது. மேலைநாட்டில் அது ஒரு அழகான வார்த்தை அல்ல. கீழைநாட்டில் அடிமை என்பதற்கு இரண்டு அர்த்தங்கள் உள்ளன. ஒன்று உங்களுக்கு தெரியும். கட்டாயப்படுத்தப்பட்ட அடிமைத்தனம். அது அசிங்கமானது. அடுத்தது மனம் உகந்து ஏற்றுக் கொள்ளப்பட்ட அடிமைத்தனம். அது அழகானது. தானாகவே முன்வந்து ஏற்றுக் கொள்ளப்படுவது, ''இந்த முழுமையின் ஒரு பகுதித்தான் நான், தனியானவன் அல்ல. அப்படி இருக்கும்போது நான் ஒரு எஜமானாக எப்படி இருக்கமுடியும்?'' என்று கண்டு கொள்வ தாகும். ஒருவர் சரணாகதி அடைகிறார். சரணாகதி என்பதற்கு இது முற்றிலும் வேறுபட்ட அர்த்தமாகும். இது முற்றிலும் அழகானது.

சரணாகதி அடைவதற்கு நீங்கள் நிர்ப்பந்திக்கப்படவில்லை. நீங்கள் நிர்ப்பந்திக்கப்பட்டால், அதன்பின்னர் அது சரணாகதி அல்ல. நீங்கள் உங்களது சொந்த விருப்பத்தில் செய்கிறீர்கள். நீங்கள் வெறும் ஒரு பகுதிதான் என்பதைக் கண்டு கொண்டு, கடலில் ஒரு அலை என்பதை கண்டு கொண்டு, அலையானது கடலிடம் சரணாகதி அடைகிறது ஏனெனில், ''நான் தனியானவன் அல்ல, எனவே நான் தனியானவன் என்று ஏன் பாசாங்கு செய்து கொண்டே போக வேண்டும்? கடல்தான் எஜமான், முழுமைதான்

எஜமான், மேலும் நான் வெறும் ஒரு அலையாக மட்டுமே இருக்கிறேன். நான் சரணாகதி அடைந்துவிட்டேன். கடல் அதைப்பற்றி சொல்லட்டும்,'' என்று கண்டு கொள்கிறது.

அதனால்தான் சிலுவையில் இயேசு, ''உமது ராஜ்ஜியம் வருவதாக, உமது விருப்பப்படி நடக்கட்டும்,'' என்று கூறுகிறார். அதுதான் சரணாகதி, அதுதான் ஒரு அடிமை ஆதல். அந்த தருணத்தில் இயேசு தன்னிடம் மிச்சம் இருந்த ஆணவத்தின் இறுதி நிழலை கைவிடுகிறார். **ஒரு அடிமையாக ஆகிவிடு, அதன்பிறகு நீ ஒரு அரசனாக ஆகிவிடுவாய்.**

மேலும் இதுதான் அற்புதம். நீங்கள் அடிமை ஆகும்போது நீங்கள் அரசராக ஆகிவிடுகிறீர்கள். ஏன்? எப்படி? நீங்கள் ஒரு அலையாக கடலிடம் சரணாகதி அடைந்து விடும்போது நீங்கள் ஒரு கடலாக ஆகிவிடுகிறீர்கள். கடலில் இருந்து தனியாக இருந்தால் வெறுமனே ஒரு அலையாக இருக்கிறீர்கள். இடைவிடாமல் போராடிக் கொண்டும், மரணத்திற்கு பயந்து கொண்டும் இருக்கிறீர்கள். கடலில் இருந்து தனியாக இருக்கும்போது வெறும் ஒரு கவலையாக, ஒரு துக்கமாக மட்டுமே இருக்கிறீர்கள், வேறு எதுவாகவும் இல்லை.

கடலோடு ஒன்றாகி விடும்போது மரணம் என்கிற கேள்விக்கே இடமில்லை. அலை மறைந்து விடும். ஆனால் நீங்கள் அந்த கடலோ எப்போதும், எல்லாக் காலத்திற்கும் இருப்பீர்கள். இப்போது அங்கு கவலை இருக்காது. மேலும் எந்த ஒரு இலக்கு கூட இருக்காது. கடல் எங்கெல்லாம் போகிறதோ அது சரியானதாக இருக்கும். அதுதான் போவதற்கான ஒரே இடமாக மட்டுமே இருக்கும். இப்போது தனிப்பட்ட தலைவிதி கிடையாது. எனவே கவலை கிடையாது.

மறைதல் என்பதும் கூட ஒருபோதும் மறைதலாக இருக்காது. ஏனெனில் நீங்கள் ஏற்கனவே தனியானவர் அல்ல என்கிற கருத்தை கண்டுவிட்டீர்கள். நீங்கள் இருக்கும்போது, நீங்கள் கடலில் இருக்கிறீர்கள். நீங்கள் இல்லாதபோதும் கடலில் இருக்கிறீர்கள். மேலும் கடல் அப்படியே இருக்கிறது. அலை

மட்டுமே வந்து போய்க்கொண்டு இருக்கின்றது. அலை வெறும் உருவம் மட்டுமே. உருவங்கள் வந்து போய்க்கொண்டு இருக்கின்றன. ஆனால் பொருள் அப்படியேதான் இருக்கிறது. அலையானது கடலோடு ஒன்றாகி விடும்போது அல்லது தான் கடலோடு ஒன்றாகி விட்டோம் என்றாகி விடும்போது, ஒன்றாகி விட்டது குறித்து விழிப்புணர்வு கொண்டதாக ஆகிவிடும்போது அது ஒருபோதும் அடிமையாக இல்லை. அது ஒரு அரசனாக இருக்கிறது. அது மரணமில்லாததை, முடிவில்லாததை அடைந்து விட்டது.

*தனது ஆன்மாவில் இருந்து*
*வாழ்க்கையின் மணமானது அவற்றை சென்றடையும்போது*
*ஊமை தனது நாவுகளைக் கூட கண்டு கொள்கிறான்.*

எனவே இது நடக்கும்போது, ஊமையாக இருப்பவர் கூட தனது நாவினைக் கண்டு கொள்கிறார். இதற்கு முன்பு ஒரு வார்த்தை கூட சொல்லாதவர்களாக இருந்தாலும் கூட, தங்களது வாழ்க்கையானது பிரார்த்தனையாக மட்டுமே இருந்தாலும்கூட, மௌனமே தங்களது வாழ்க்கையாக இருந்தாலும் கூட, திடீரென்று அவர்கள் பாட ஆரம்பிக்கின்றனர். அவர்களது மௌனம் ஒரு சங்கீதமாகி விடுகிறது.

அடிமை மறைந்து அரசன் வருகின்ற அந்த நொடிப் பொழுதில், அலையானது மறைந்து கடல்; அதை எடுத்துக் கொள்ளும்போது, அங்கே மிகப்பெரிய படைப்பாற்றல் இருக் கிறது. உங்களது வாழ்க்கையானது ஒருபோதும் சாதாரண மானதாக இருக்காது. இப்போது அது புனிதத்தின், தெய்விகத்தின் சுவையை பெற்றுவிடுகிறது.

**ஊமை தனது நாவுகளைக் கண்டு கொள்கிறான்...** அதுவரை பேசாதவர்கள் நம்பமுடியாத விஷயங்களை, அற்புதமான விஷயங்களை பேச ஆரம்பிக்கிறான். அவனது வார்த்தைகள் ஒளி வீசுவதாகவும், சூல்கொண்டதாகவும் இருக்கிறது. அவர்களின் அசைவுகள் இப்போது ஒரு சக்தியை பெற்று விடுகின்றன. அவர்கள் உங்களைத் தொட்டால், அவர்களின் தொடுதலால் அவர்கள் உங்களை மாற்றி

விடுவார்கள். அவர்கள் உங்களது கண்களுக்குள் உற்றுப் பார்த்தால், அதன்பிறகு நீங்கள் மீண்டும் அதே மனிதராக ஒருபோதும் இருக்க மாட்டீர்கள். **அவரது ஆன்மாவில் இருந்து வாழ்க்கையின் மணமானது சென்றடையும் போது அது நடக்கிறது.**

மாபெரும் சூஃபி குருவாகிய, ஜலாலுதீன் ரூமி கீழ்க்கண்ட மூன்று வரிகளை அவரது சொந்த சமாதி வாக்கியங்களாக எழுதினார்.

மூன்று வார்த்தைகளுக்குமேல் இல்லை,

எனது ஒட்டுமொத்த வாழ்க்கையும் இந்த மூன்று வார்த்தைகளில் அடங்கிவிட்டது.

நான் பச்சைக் காயாக இருந்தேன், இப்போது நான்

சமைக்கப்பட்டு, எரிக்கப்பட்டு விட்டேன்.

இந்த மரணம் தான் உயிர்த்தெடுதலைக் கொண்டு வருகிறது. ''நான் பச்சைக்காயாக இருந்தேன்.இப்போது நான் சமைக்கப் பட்டு எரிக்கப்பட்டு விட்டேன்.'' இந்த மூன்று வார்த்தைகள் தான் எனது ஒட்டு மொத்த வாழ்க்கையில் அடங்கி உள்ளது என்று மாபெரும் சூஃபி ஜலாலுதீன் கூறுகிறார்.

நீங்கள் தனியாக இருக்கும்போது பச்சையாக இருக்கிறீர்கள். நீங்கள் இந்த இயற்கையோடு ஒன்று சேரும்போது நீங்கள் சமைக்கப்படுகிறீர்கள். மேலும் உங்களது ஆணவத்தின் ஒரு நிழல் கூட இல்லாமல் நீங்கள் முழுவதும் மறைந்து விடும்போது, நீங்கள் எரிக்கப்பட்டு விடுகிறீர்கள்.

விதையானது எரிக்கப்படும் போது உள்ள நிலையை பதஞ்சலி நிர்பீஜ சமாதி, விதையற்ற சமாதி என்று அழைக்கிறார். இப்போது துன்பம் என்பது இருக்காது, வருவதும் போவதும் இருக்காது. உருவங்களை இடைவிடாமல் மாற்றுவது கிடையாது. இப்போது முடிவில்லாத ஒன்றில் நீங்கள் முடிவில்லாமல் இருந்து விடுவீர்கள்.

ஜலாலுதீன் மேலும் கூறுகிறார்:

தக்கை சொல்வதைக் கேளுங்கள். அது புகார் அளிக்கிறது.

தனியாகப் பிரிக்கப்பட்டதைப் பற்றி அது கூறுவதாவது,

''என்னை தக்கை படுகையில் இருந்து அவர்கள் கிழித்த போதில் இருந்து, எனது அழுகையானது ஆணையும், பெண்ணையும் கண்ணீர் விடும்படி செய்துவிட்டது.

தனது மூலத்தில் இருந்து வெளியேறியவர் யாராயினும் திரும்பவும் ஒன்று சேரும் நேரத்தை விரும்புகிறார்கள்.

''தக்கை சொல்வதைக் கேளுங்கள். தனது மூலத்தில் இருந்து வெளியேறிவர் யாராயினும் திரும்பவும் ஒன்று சேரும் நேரத்தை விரும்புகிறார்கள். நாம் அனைவரும் நமது ஆரம்ப இடத்தை தேடிக்கொண்டு இருக்கிறோம். நாம் அனைவரும் தக்கையில் ஊதும் இசைக்கருவியின் தக்கையில் இருந்து அந்த தக்கையின் படுகையைத் தேடிக்கொண்டு இருக்கிறோம். அந்த தக்கைப் படுகையில் இருந்துதான் நாம் கிழித்து எடுக்கப்பட்டோம்.

ஜலாலுதீன் ரூமிக்கு மூங்கில் புல்லாங்குழல் மீது ஒரு தனி அன்பு உண்டு. ''புல்லாங்குழலை கடவுள் ஏன் படைத்தார் என்று கேட்காதீர்கள்'' என்று ஒரு நாட்டுப்புறப்பாடல் கூறுகிறது. ''அவர் ரூமியைப் புரிந்து கொள்ளும்படி விரும்பினார்''. மற்றபடி மக்கள் எப்படி ரூமியைப் புரிந்து கொள்வார்கள்? அதனால்தான் அவர் புல்லாங்குழலை உருவாக்கினார்.

ஒரு மனிதன் இறுதி நிலையை அடையும்போது அவன் ஒரு புல்லாங்குழலின் நிலையை அடைகிறான். ஒரு பாடல் பிறக்கிறது, ஒரு பாடல் போய்க் கொண்டே இருக்கிறது. புத்தர் அந்த பாடலை நாற்பத்து இரண்டு வருடங்கள் பாடினார். இரவும் பகலும், வருடம்முழுவதும், நாற்பத்து இரண்டு ஆண்டுகளாக அவர் ஒரு பாடலை தொடர்ந்தார். மகாவீரர், முகமது, பகாவுதீன், ஜலாலுதீன் ஆகியவர்களும் அதையே செய்தார்கள். இப்போது நாம் கேட்டுக் கொண்டு இருக்கிற இந்தப் பாடலை ஹக்கிம் சனாய் பாடினார்.

இந்தப் பாடல் எங்கிருந்து வருகிறது? இது மௌனத்தில் இருந்து வருகிறது. இது கெட்டிப்படுத்தப்பட்ட மௌனம். இது உங்களது முழு வெறுமையில் இருந்து வருகிறது. நீங்கள் ஒரு புல்லாங்குழலாக, ஒரு வெற்று மூங்கிலாக, இந்த பிரபஞ்சத்திற் கான ஒரு வழியாக ஆகிவிடும்போது பிரபஞ்சமானது உங்கள் மூலமாக பாடுவதற்கு ஆரம்பிக்கிறது.

உலகின் மாபெரும் புனித நூல்கள் அனைத்தும் தெய்வத்தின் பாடல்களாக உள்ளன. ஆனால் நீங்கள் மௌனத்தை புரிந்து கொண்டால் மட்டுமே உங்களால் அவற்றைப் புரிந்து கொள்ளமுடியும். அந்த புனித நூல்களுக்குள் நீங்கள் செல்லதால் அதைப் புரிந்து கொள்ள மாட்டீர்கள். ஆனால் உங்களது சொந்த மௌனத்தில் செல்வதன் மூலமே புரிந்து கொள்வீர்கள். கிருஷ்ணர் இருந்த அதேநிலையில் நீங்கள் இருக்கும்போது உங்களால் பகவத்கீதையைப் புரிந்து கொள்ளமுடியும். பகவத்கீதை என்றால் தெய்வத்தின் பாடல், வானுலகப்பாடல், என்று அர்த்தம். ஆனால் மௌனத்தை புரிந்து கொள்ளாமல் உங்களால் எப்படி இந்த பாடலை புரிந்து கொள்ளமுடியும். அது எங்கிருந்து வருகிறது? அது மௌனத்தைக் கொண்டுள்ளது, அது கட்டியாக ஆக்கப்பட்ட மௌனம், அமைதி.

ஃபானா என்ற நிலையில் முகமது மீது குர்ஆன் இறங்கி வந்த அந்த நிலையை நீங்கள் அடையாதவரையில் உங்களால் குர்ஆனைப் புரிந்து கொள்ளமுடியாது. அதன் பின்னர் மட்டுமே உங்களால் குர்ஆனைப் புரிந்து கொள்ள முடியும். ஆனால் இதில் உள்ள அழகு என்னவென்றால் உங்களது ஆன்மாவின் மௌனத்தை நீங்கள் புரிந்து கொண்டால் அதே நேரத்தில் உலகின் மாபெரும் புனித நூல்களை எல்லாம் நீங்கள் புரிந்து கொள்வீர்கள். மேலும் அவற்றில் எந்தவிதமான முரண்பாடு களையும் நீங்கள் காணமாட்டீர்கள்.

ஆனால் இப்போது நீங்கள் குர்ஆனையும், பைபிளையும், கீதையையும் படிக்க ஆரம்பித்தால் நீங்கள் ஆச்சரியமும் குழப்பமும் அடைவீர்கள். அதில் முரண்பாடுகளைத் தான் காண்பீர்கள் வேறு எதையும் காண மாட்டீர்கள். கீதை மற்றும்

குர்ஆன் பற்றி என்ன சொல்வது? நீங்கள் கீதையைப் படித்தாலே அதில் ஆயிரம் முரண்பாடுகளைக் காண்பீர்கள். எனவே அதை குர்ஆனோடு ஒப்பிடுதல் என்கிற கேள்விக்கே இடமில்லை. நீங்கள் விமர்சனக் கண்ணோடு கீதையைப் படித்துக் கொண்டே போனால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். கிருஷ்ணர் தான் கூறியதையே மறுத்துக்கூறி கொண்டு இருப்பார். அதை நீங்கள் புரிந்து கொள்ளவே முடியாது. தியானத்தின் மூலமாக மட்டுமே புரிதல் என்பது எழுகிறது.

எனவே நீங்கள் தியானத்தை அடைந்து விடும்போது உங்களது வார்த்தைகளும் கூட குர்ஆன் மற்றும் கீதையின் இனிமையைக் கொண்டிருக்கும். எப்போதும் ஊமையாக இருந்த நீங்கள் திடீரென்று பேசுவதற்கு ஆரம்பித்து விடுவீர்கள். அது மற்றவர்களை ஆச்சரியப்பட வைப்பதோடு மட்டுமல்லாமல் உங்களையும் கூட ஆச்சரியப்பட வைக்கும். ஏனெனில் அவை எங்கிருந்து வருகின்றன என்பதை உங்களால் புரிந்து கொள்ள முடியாது. அவை அப்பால் இருந்து வருகின்றன. நீங்கள் அதை வெறுமனே பெறுபவராக இருக்கிறீர்கள்.

*தனது ஆன்மாவில் இருந்து*
*வாழ்க்கையின் மணமானது அவற்றை சென்றடையும்போது*
*ஊமை தனது நாவுகளைக் கண்டு கொள்கிறான்.*

*உண்மையுடன் கவனி*
*மேலும் முட்டாளாக ஆக்கப்பட்டு விடாதே*
*இது முட்டாள்களுக்கு உரியது அல்ல.*

எனவே மௌனத்தில் உங்களுக்குள் ஏதாவது பேச ஆரம்பித்தால் அதை **உண்மையுடன் கவனியுங்கள். முட்டாளாக ஆக்கப்பட்டு விடாதீர்கள். உண்மையுடன் கவனியுங்கள்** என்று சனாய் எந்த அர்த்தத்தில் கூறுகிறார்? உங்களது பழைய மனதினை உள்ளே கொண்டு வராதீர்கள். அதற்கு பொருள் விளக்கம் கொடுக்க ஆரம்பித்து விடாதீர்கள். அப்படி செய்தால் நீங்கள் தவறவிட்டு விடுவீர்கள். என்ன நடந்தாலும் வெறுமனே காது கொடுத்து கேளுங்கள். நீங்கள் அதற்கு பொருள் விளக்கம் கொடுக்க வேண்டும் என்பதை மறந்து

விடுங்கள். அதைப் புரிந்து கொள்ளவேண்டும் என்கிற எண்ணத்தையே மறந்து விடுங்கள். உங்களது புத்தியை அதில் கொண்டு வரவேண்டும் என்பதை முழுவதும் மறந்துவிடுங்கள். பறவைகளின் ஒலியைக் கேட்பது போன்று, ஓடிக்கொண்டு இருக்கும் நீரின் ஓசையைக் கேட்பது போன்று, மரங்களுக்கு இடையே கடந்து செல்லும் காற்றின் ஒலியை கேட்பது போன்று வெறுமனே கவனியுங்கள்.

நீங்கள் எப்படி கவனிக்கிறீர்கள்? அதன் அர்த்தத்தை வெளிப்படுத்த நீங்கள் முயற்சிக்கிறீர்களா? கிதார் கருவியில் யாராவது பாடும்போது நீங்கள் எப்படி கேட்கிறீர்கள்? நீங்கள் உங்களது அறிவை உள்ளே கொண்டு வராதீர்கள். நீங்கள் உங்களது இதயத்தில் இருந்து கேளுங்கள். நீங்கள் வெறுமனே அதைக் கேட்க மட்டுமே செய்யுங்கள். வேறு எந்த நோக்கத்திற் காகவும் அதைக் கேட்காதீர்கள். வெறுமனே கேட்பது அபரிமிதமான மகிழ்ச்சி மிக்கது. நீங்கள் அந்த இசையோடு அசைய ஆரம்பித்து விடுவீர்கள். அந்த இசைக்கு ஆடவேண்டும் என்று உணர்வீர்கள். இதுதான் சரியான வழியில் கேட்பதாகும். அப்போது எல்லையற்ற ஒன்றானது உங்களுக்குள் கடந்து செல்ல ஆரம்பிக்கிறது. அப்போது அப்பால் உள்ள உற்பத்தி ஸ்தலத்தில் இருந்து உங்களுக்குள் கொட்ட ஆரம்பிக்கிறது.

தயவுசெய்து விழிப்புடன் இருங்கள், ஒரு முட்டாளாக இருக்காதீர்கள். நீங்கள் உங்களது மனதை உள்ளே கொண்டு வந்தால் அந்த ஒட்டுமொத்த செயல்முறையையும் கலைத்து விடுகிறீர்கள. அதன்பின்னர் சொல்லப்படாத ஒன்றினை நீங்கள் கேட்பீர்கள் மற்றும் நீங்கள் கேட்காத ஒன்றினைப் பற்றி பேசுவீர்கள். எனவே மிகப்பெரிய தயார்படுத்துதல் என்பது மௌனமாக இருத்தல் என்றாகிறது. அது மனம் அற்ற நிலையின் அமைதி. மேலும் அந்த அமைதியானது முற்றிலும் பழுத்தபோது மட்டுமே உங்களால் அதை காது கொடுத்து கேட்கமுடியம். அந்த இசை இன்னமும் போய்க்கொண்டு இருக்கிறது. ஆனால் உங்களால் அதை காது கொடுத்து கேட்கமுடியவில்லை ஏனெனில் நீங்கள் அந்த அமைதியோடு சுருதி சேராமல் இருக்கிறீர்கள்.

இருபத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன்பு ஒரு நாள் திடீரென்று போதி மரத்தின் அடியில் பிரபஞ்சமானது புத்தரிடம் பேசவில்லை. அல்லது பதினான்கு நூற்றாண்டுகளுக்கு முன்பு திடீரென்று ஒருநாள் மலையில் இயற்கையானது முகமதுவின் மீது பொழியவில்லை.

கிடையாது. அப்படி அல்ல. இயற்கை ஒவ்வொரு நொடிப் பொழுதும் பொழிந்து கொண்டு இருக்கிறது. அது பொழிவதை நிறுத்த முடியாது. அதற்கு வேறு வழியில்லை. அதுதான் அதன் இருப்புநிலை. குர்ஆன் ஒவ்வொரு நொடிப்பொழுதும் உங்கள் மீது பொழிந்து கொண்டு இருக்கிறது. கீதை வெறமனே உங்களைச் சுற்றிலும் பொழிந்து கொண்டு இருக்கிறது. ஆனால் நீங்கள்தான் அதோடு சுருதி சேரவில்லை. இணக்கமாக இல்லை. நீங்கள் கவிழ்த்து வைத்த பானை போன்று இருக்கிறீர்கள். மழை பெய்து கொண்டே இருக்கிறது. ஆனால் பானை காலியாகவே இருக்கிறது.

இது சூரியன் உதித்தபோதும் நீங்கள் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருப்பது போன்றதாகும். எந்த நொடியில் நீங்கள் கண்களைத் திறந்து பார்த்தாலும் அப்போது உங்களுக்கு சூரியன் அப்போதுதான் உதித்தது போன்று தெரியும்;. ஏனெனில் நிங்கள் உங்களது கண்களை திறந்துவிட்டீர்கள். அது அப்படி அல்ல, சூரியன் எப்போதும் அங்கே தான் இருந்து வந்துள்ளது. இயற்கையானது ஒரு சிறு நொடிப்பொழுதுகூட இல்லாமல் இருக்கமுடியாது. ஏனெனில் அது இல்லாமல் போய்விட்டால் இந்த ஒட்டுமொத்த உலகமும் அழிந்துவிடும்.

**உண்மையுடன் கவனி - முட்டாளாக ஆக்கப்பட்டு விடாதே - இது முட்டாள்களுக்கு உரியது அல்ல...** மேலும் முட்டாள்கள் யார்? நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். பண்டிதர்கள், அறிவாளிகள், கற்றறிந்த மக்கள் இவர்கள் தான் முட்டாள்களாக இருக்கின்றனர். ஏனெனில் அவர்கள் கல்வி அறிவு நிறைந்து இருக்கின்றனர். ஆனால் அவர்களால் அதைக் காது கொடுத்து கேட்க முடிவதில்லை. இந்த பிரபஞ்சமானது அவர்கள் மீது

பொழிந்தாலும், அவர்கள் அதை திருத்துவார்கள். அவர்கள் திருத்தியே தீரவேண்டும். அவர்களால் அதில் தலையிடாமல் இருக்கவே முடியாது. யாராவது ஒருவர் கீதையைப் பின்பற்றுபவராக இருந்தால், இந்த பிரபஞ்சமானது அவர் மூலமாக பேசும்போது, அவர் இந்த பிரபஞ்சத்தை கீதையேயோடு பொருந்திப் போகும்படி செய்வார். அதுதான் அவரை முட்டாள் என்று நிரூபிக்கிறது.

பிரபஞ்சமானது எப்போதும் ஒரு புதிய வழியில் பேசுகிறது. அது எப்போதுமே அதுவானதாகவும், புத்துணர்ச்சியுடனும் இருக்கும். அது பழையவற்றை திரும்ப கூற வேண்டிய அவசியம் கிடையாது. கீதையினைப் போன்று அது ஒருமுறை மட்டுமே பேசியது. இப்போது அதே விதத்தில் மீண்டும் ஒருபோதும் பேசாது. ஒருமுறை தம்மபதத்தில் புத்தர் பேசியது போன்று பேசியது. இப்போது மீண்டும் அதே விதத்தில் ஒருபோதும் பேசாது. ஆனால் இப்படித்தான் மனிதன் எதிர்பார்த்துக் கொண்டே இருக்கிறான்.

எனக்கு ஆயிரக்கணக்கான கடிதங்கள் வருகின்றன. மேலும் அந்த ஆயிரக்கணக்கான கடிதங்களில், ''உங்களால் ஏன் ஒரு புத்தர் போன்று நடந்து கொள்ள முடியவில்லை?'' என்பதே அடிப்படை விஷயமாக இருக்கிறது. ஆனால் நான் ஏன் புத்தர் போன்று நடந்து கொள்ள வேண்டும்? அவர்கள் ஒரு நிலையான எதிர்பார்ப்பை வைத்திருக்கின்றனர். நான் கூறுகின்ற விஷயம் புத்தரில் இருந்து வித்தியாசப்பட்டு போவதை அவர்கள் கண்டால், அவர்கள் உடனடியாக, உஷாராகி விடுகின்றனர். எச்சரிக்கையாகி விடுகின்றனர். அவர்கள் பயப்படுகின்றனர். ஏதோ தவறாகப் போய் விட்டது என்று நினைக்கின்றனர்.

ஆனால் உங்களுக்கு தெரியுமா? புத்தர் அவருடைய வழியில் தான் பேசினார். அவர் கிருஷ்ணர் கூறியதை அப்படியே திரும்பவும் கூறவே இல்லை. மேலும் அப்போதும் கூட அவரிடம் வந்த மக்கள், ''நீங்கள் ஏன் கிருஷ்ணரைப் போல பேசக்கூடாது?'' என்று அவரிடமும் கூட கேட்டார்கள். ஆனால்

கிருஷ்ணர் அவருக்கு உரிய வழியில் பேசினார். அவர் ராமர் கூறியதைப் போல திரும்பவும் கூறவில்லை. மேலும் அவரிடமும் மக்கள் வந்து, ''நீங்கள் ஏன் ராமரைப் போல் பேசக்கூடாது? நீங்கள் ஏன் ராமரைப் போல வாழக்கூடாது?'' என்று கேட்டிருப்பார்கள். இவர்கள் முட்டாள்கள். இவர்கள் படித்த முட்டாள்கள். அவர்கள் புனித நூல்களைப் பற்றி அதிகம் அறிந்து வைத்துள்ளனர். ஆனால் வாழ்க்கை பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியாது. வாழ்க்கை எப்போதும் புதிதாகவே இருக்கிறது.

ஒரு ரோஜாச் செடியில் ஒரு ரோஜா மலர் பூக்கும்போது, இதற்கு முன்பு பூத்த எந்த ஒரு ரோஜா மலரைப் போன்றும் அது பூப்பதில்லை. அது தனித்துவம் வாய்ந்தது, ஒப்பிட்டு பார்க்க முடியாதது. எனவே அதேபோன்று தான் இந்த பிரபஞ்சமானது ஒவ்வொரு தடவையும் யார் மூலமாகவாவது பொழியும்போது நடக்கிறது. அது எப்போதும் தனித்துவம் வாய்ந்ததாக இருக்கிறது. அது ஒருபோதும் தனது கடந்த வெளிப்பாடுகளோடு ஒருபோதும் பொருந்திப் போகாது. அது தனது சொந்த கடந்த காலத்தை கடந்துதான் எப்போதும் போய்க்கொண்டு இருக்கும். அதுமேலே எழுந்து போய்க் கொண்டே இருக்கும். அது ஒருபோதும் கடந்த காலத்தோடு நிறைவடைந்து விடாது. ஏனெனில் அது உயிரற்றது அல்ல.

கிருஷ்ணரிடம் பேசியது போன்று அது உங்களிடமும் பேசினால் இந்த ஐயாயிரம் ஆண்டுகளாக அது வளர்ச்சியே அடையவில்லை என்று தான் அர்த்தம். அதன்பின்னர் இந்த ஐயாயிரம் ஆண்டுகளில் அது உயிரற்று தான் இருந்துள்ளது. அதன் பின்னர் அவன் நமக்கு தேவை இல்லை. ஒரு குர்ஆன் இசைத்தட்டு போதுமானது.

இதை நினைவில் கொள்ளுங்கள். ஏதாவது ஒன்று உங்களுக்குள் பைபிளோடு பொருந்தி போனால், கீதையோடு பொருந்திப் போனால், வேறு எதனோடும் பொருந்திப் போனால் ஜாக்கிரதையாக இருங்கள்! அது உங்களது மனமானது உங்கள் மீது விளையாடும் தந்திரமாக இருக்கும். பிரபஞ்சமானது

ஒருபோதும் எதனோடும் பொருந்திப் போகாது. அது எப்போதும் தனித்துவம் வாய்ந்தது. அதன் பாடல் எப்போதும் புதியது.

*உண்மையுடன் கவனி*
*மேலும் முட்டாளாக ஆக்கப்பட்டு விடாதே.*
*இது முட்டாள்களுக்கு உரியது அல்ல.*
*ஒற்றுமை என்னும் ஜாடியில்*
*இந்த பல்வேறு நிறங்களும்*
*ஒரே நிறமாக ஆகிவிடுகின்றன...*

எனவே நீங்கள் நன்றாக கேட்டால், நீங்கள் ஆச்சரியம் அடைவீர்கள். **இந்த பல்வேறு நிறங்களும் ஒரே நிறமாக ஆகிவிடுகின்றன.** குர்ஆன், கீதை, பைபிள், தம்மபதம், தாவோ தி சிங் இவை எல்லாம் ஒரே நிறமாக ஆகிவிடுகின்றன. எல்லா நிறங்களும் ஒரே நிறத்தில் கரைந்து விடுகின்றன. ஒட்டுமொத்த நிறமாலையின் ஏழு நிறங்களும் மறைந்து அவை எல்லாம் ஒரே நிறமாக, வெள்ளை நிறமாக ஆகிவிடுகின்றன. எனவே தான் வெள்ளை நிறம் எப்போதுமே ஒற்றுமையின் அடையாளமாக, தூய்மையான அடையாளமாக இருந்துள்ளது.

*கயிறானது ஒற்றைப் புரியாக குறைக்கப்படும்போது*
*அது பலமில்லாததாக ஆகிவிடுகிறது.*

இதுதான் ஞானியின் ஒன்றுபடுதல், நீங்கள் உங்களை இந்த முழுமையோடு கரைத்து விடும்போது, எல்லா வேறுபாடுகளும் மறைந்து விடுகின்றன. அதன்பின்னர் எல்லாமே தனித்தனியாக உள்ளது என்றாலும்கூட தனித்தனியாக இருப்பதில்லை. வேறுபட்டு இருக்கும் ஆனாலும்கூட வேறுபட்டு இருக்காது. அதன்பிறகு பாடல்கள் வேறுபடும் ஆனால் இன்னிசை, இனியராகம் அதே போன்றுதான் இருக்கும்.

*உனது அறிவானது, யூகம் மற்றும் சிந்தனையின்*
*வெறும் தாறுமாறான கலப்பாகும்*
*பூமியின் முகத்தில் இணக்கமுள்ளதாக இருப்பதாகும்.*

ஜாக்கிரதையாக இருங்கள்! உங்களது அறிவுதான் நீங்கள் வழிமாறிப் போவதற்கான மூலகாரணமாக இருக்கிறது. உங்களது அறிவினால் மிஞ்சி மிஞ்சிப் போனால் நீங்கள் யூகம்

கொள்ளலாம், அனுமானிக்கலாம். ஆனால் உண்மை என்பது அனுமானமும் அல்ல. மேலும் அது யூகமும் அல்ல. அதில் யூகித்தல் என்கிற கேள்விக்கே இடமில்லை. ஒன்று உண்மையை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். அல்லது நீங்கள் தெரிந்து கொள்ளாமல் இருப்பீர்கள்.

அறியாத ஒன்றினைப் பற்றி நீங்கள் எப்படி யூகிக்க முடியும்? அறிந்த ஒன்றினைப் பற்றி நீங்கள் யூகிக்கலாம். ஆனால் அறியாத ஒன்றினைப் பற்றி உங்களால் யூகிக்க முடியாது. அறியாதது என்பதற்கு வெறுமனே அதைப் பற்றி உங்களுக்கு எந்த ஒரு கருத்தும், எண்ணமும் இல்லை என்று அர்த்தம். அதைப்பற்றி நீங்கள் எப்படி யூகிக்க போகிறீர்கள்? அறியாததைப் பற்றி நீங்கள் எப்படி சிந்திக்கப் போகிறீர்கள்? தெரிந்ததை சிந்திக்க முடியும். எனவே சிந்தித்தல் என்பது திரும்பச் செய்கின்ற செயல்முறை, அது ஒரு வட்டத்தில் நகர்ந்து கொண்டே போகும். அது புதிய உண்மைகளுக்கு உங்களை ஒருபோதும் வழிநடத்தி செல்லாது; புதிய கண்டுபிடிப்புகளுக்கு அது ஒருபோதும் உங்களை வழி நடத்தி செல்லாது.

மேலும் மதத்தில் மட்டுமே இது இப்படி இல்லை, எங்குமே இப்படித்தான் இருக்கிறது. அறிவியலிலும் கூட இப்படித்தான் இருக்கிறது. அறிவியலின் மிகப்பெரிய கண்டுபிடிப்புகள் எல்லாம் சிந்திக்கின்ற செயல்பாட்டினால் நடக்கவில்லை. எல்லா மாபெரும் கண்டுபிடிப்புகளும் மனம் அற்ற நிலையின் மூலமாகத்தான் நடந்துள்ளது. இப்போது விஞ்ஞானிகள் இந்த விஷயத்தை தெரிந்து கொண்டு இருக்கிறார்கள்.

உதாரணமாக மேடம் கியூரி ஒன்றைக் கண்டுபிடித்தார். மூன்று ஆண்டுகளாக அவள் ஒரு பிரச்சினை குறித்து கடினமாக ஆராய்ச்சி செய்தாள். எல்லா யூகங்களையும் முயற்சி செய்து பார்த்தாள். ஆனால் பிரச்சினை அப்படியே இருந்தது. ஒரு நாள் மாலையில் அவள் முற்றிலும் களைப்படைந்து, ''இப்போது இது போதும். கண்டுபிடித்தது போதும்!'' என்று அவள் நினைத்தாள்.

ஒருநாள் இரவில் புத்தருக்கு நடந்த அதே விதத்தில் நடந்தது. தான் யார் என்பதை தெரிந்து கொள்ள அவர் ஆறு ஆண்டுகள்

முயற்சி செய்தார். ஆனால் மீண்டும் மீண்டும் தோல்வி அடைந்தார். எதற்கும் எல்லை உண்டு. அன்று மாலை அவர், "இது முடிந்துவிட்டது. வேறு வழியே இல்லை. எல்லாமே வீணாகி விட்டது." என்று நினைத்து ஒட்டுமொத்த எண்ணத்தையும் கைவிட்டு தூங்குவதற்கு சென்றுவிட்டார். ஆனால் காலையில் அவர் மெய்ஞானம் அடைந்து விட்டார். ஏனெனில் இரவு தூக்கத்தில் ஏதோ ஒன்று மேலே எழுந்து வந்துவிட்டது.

இப்போது எந்தவிதமான முயற்சியும் இல்லை. அவர் முயற்சி செய்தார். ஆனால் அதனால் ஒன்றும் நடக்கவில்லை என்று நிறுத்திவிட்டார். அன்று இரவு அவர் ஓய்வுடன், முழு ஓய்வுடன் இருந்தார். ஒரு சிறு கனவு கூட அவரை தொந்தரவு செய்யவில்லை. ஏனெனில் எல்லா ஆசைகளும் கைவிடப்பட்டு விட்டன. களவுகள் மறைந்துவிட்டது. கனவுகள் உங்களது ஆசைகளின் நிழல்கள்.

அந்த இரவு முழுவதும் வெறுமனே அமைதியான ஒரு பிரார்த்தனையாக இருந்தது. முயற்சியின் மூலம் நடக்காத ஒரு தியானம் அந்த நொடிப்பொழுதில் நடந்தது. உங்களது முயற்சிகள் தோல்வி அடையும் போதுதான் அது எப்போதுமே நடக்கிறது. நீங்கள் உங்களது முயற்சியின் அதிகபட்ச நிலையை அடைந்து விடும்போது அது நடக்கிறது. அது வெறுமனே இப்போது நடக்காது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

நீங்கள் அங்கு சென்று பார்க்கலாம். புத்த கயாவில் அந்த மரம் இன்னமும் இருக்கிறது. நீங்கள் சென்று அந்த மரத்தின் அடியில் இரவு முழுவதும் படுத்து இருக்கலாம். எதுவும் நடக்காது. நீங்கள் உங்களின் பெண் தோழி அல்லது ஆண் தோழர் பற்றி கனவு காண்பீர்கள். மேலும் பயங்கரமான கனவுகள் கூட வரலாம். எனவே அந்த இரவு உங்களது இரவாக மட்டுமே இருக்கும். அது புத்தரின் இரவாக இருக்காது. அதை அடைவதற்கு நீங்கள் இன்னமும் எதுவும் செய்யவில்லை.

அதை அடைவது முரண்பாடானது. முதலில் ஒருவர் தன்னால் முடிந்த அனைத்தையும் செய்ய வேண்டும். அதன்பிறகு

அவர் செய்வதைக் கைவிட வேண்டும். அதன்பின்னர் அது வருகிறது. அதன்பின்னர் அது பாய்ந்து வருகிறது.

அதே நிலைதான் மேடம் கியூரிக்கு நடந்தது. அவர்களின் வார்த்தைகள் முற்றிலும் வேறுபட்டவை. புத்தர், ''நான் யார்?'' என்பதைத் தேடினார். மேடம் கியூரி ஒரு குறிப்பிட்ட பிரச்சினையின் கணிதமுடிவை தேடிக் கொண்டு இருந்தாள். அவள் ஒரு கணிதமேதை, விஞ்ஞானி. அன்று இரவு அவள் களைப்படைந்து, ஓய்ந்து போய் விட்டாள். எந்த ஒரு நம்பிக்கையும் இல்லாமல் நம்பிக்கையற்று இருந்தாள். அவள் அந்த எண்ணத்தையே கைவிட்டு விட்டாள். ''அந்த மூன்று வருடங்களும் வீணாகிவிட்டது. எனவே இப்போது எதுவும் இல்லை. நாளைக் காலையில் நான் ஒரு புதிய திட்டத்தை ஆரம்பிப்பேன்'' என்று முடிவு செய்தாள்.

இப்போது அங்கு ஒரு இடைவெளி ஏற்பட்டது. நாளைக் காலை அவள் ஒரு புதிய திட்டத்தை ஆரம்பிப்பாள். எனவே பழைய திட்டம் போய்விட்டது. எனவே இந்த இரவு, எட்டு அல்லது பத்து அல்லது பன்னிரண்டு மணிநேர இடைவெளி இருந்தது. எனவே அந்த இரவு, அது நடந்தது. அமைதியாக அவளது தன்னுணர்வின் ஆழமான அடுக்கில் ஊடுருவிச் சென்றது. உள் உணர்வில் இருந்து புத்திக்கு ஏதோ ஒன்று ஊடுருவிச் சென்றது.

அவளது தூக்கத்தில் அவள் தனது மேஜைக்கு சென்று அந்த கணக்கிற்கான விடையை தனது தூக்கத்தில் எழுதினாள். மீண்டும் திரும்பிச் சென்று தூங்கிவிட்டாள். காலையில் தனது சொந்த கையெழுத்தில் விடைகள் எழுதப்பட்டு இருப்பதை அவள் கண்டாள். தான் அதைச் செய்தோம் என்று அவளால் உடனடியாக ஞாபகப்படுத்தி பார்க்க முடியவில்லை. அதன்பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக, ஆம், ஒரு கனவு ஒன்று வந்தது என்பது நினைவுக்கு வந்தது. கனவில் அவள் மேஜைக்கு சென்று எதையோ எழுதுவதைக் கண்டாள். இப்போது அது ஒரு கனவு அல்ல என்று அவள் தெரிந்து கொண்டாள். அது உண்மையிலேயே நடந்தது மேலும் விடையானது அங்கு இருந்தது. ஆனால் மூன்று

ஆண்டுகளாக அவள் முயற்சி செய்தாள். ஆனால் விடை கிடைக்கவில்லை.

என்ன நடந்து? இதுவும் அதே விஷயம்தான். கல்வி அறிவானது அறியாத ஒன்றினை அடைய முடியாது. அறியாத ஒன்றானது உள் உணர்விற் கிடைக்கக் கூடியது. அறிந்த உலகின் மீதுதான் கல்வி அறிவானது வேலை செய்ய முடியும். எனவே அது நல்லது. ஆனால் அதற்கு எல்லைகள் உள்ளன.

*உனது அறிவானது யூகம் மற்றும் சிந்தனையின்*
*வெறும் தாறுமாறான கலப்பாகும்.*
*பூமியின் முகத்தில் இணக்கமுள்ளதாக இருப்பதாகும்.*
*அவர்கள் எங்கு இருந்தாலும் அவர் இருக்க மாட்டார்.*

மேலும் எங்கெல்லாம் எண்ணங்கள் இருக்கின்றனவோ, எங்கெல்லாம் உங்களது கற்றறிவு இருக்கிறதோ அங்கு கடவுள் இருக்க மாட்டார். உங்களது கற்றறிவு அவரை உள்ளே நுழையவிடாது. அது உங்களை ஏதாவது ஒன்றில் ஈடுபடும்படி செய்துவிடும். அவர் வருகிறார், மீண்டும் மீண்டும் வருகிறார்; அவர் கதவைத் தட்டுகிறார்; ஆனால் நீங்கள் கிடைக்கக் கூடிய வராக இருப்பதை அவரால் கண்டு கொள்ள முடியவில்லை. நீங்கள் இடைவிடாது உங்களது கற்றறிவில் மூழ்கி இருக்கிறீர்கள். அவர் திரும்பி செல்ல வேண்டியதாகி விடுகிறது.

*அவர்கள் அவரது படைப்பில் இருக்கின்றனர்.*

உங்களது எண்ணங்கள், உங்களின் மனம், உங்களின் கற்றறிவு. இவை எல்லாம் அவரது படைப்பிற்குள் உள்ளன. எனவே ஒரு பகுதியானது எப்படி முழுமையை அறிந்து கொள்ளமுடியும்? உங்களது கைகள் உங்களது முழுமையையும் அறிந்து கொள்ள முடியுமா? உங்களது தலையில் உள்ள ஒரு முடியானது உங்களது முழுமையை அறிந்து கொள்ளமுடியுமா? அது சாத்தியப்படாது.

இந்த அளவுகடந்த பிரபஞ்சத்தில் கல்வி அறிவு என்பது மிகவும் சிறிய விஷயம். உங்களது கற்றறிவு என்பது என்ன? மேலும் அது சாத்தியப்படாத ஒன்றினை செய்வதற்கு

முயற்சிக்கிறது. அது முழுமையை அறிந்து கொள்ள முயற்சிக் கிறது. அதன் முழு முயற்சியும் பயனற்றது.

இப்படி உங்களது முழு முயற்சியும் பயனற்றது என்று நீங்கள் புரிந்துகொண்டால், நீங்கள் இளைப்பாறுகிறீர்கள். மேலும் அதன்பின்னர் அற்புதம் நடக்கிறது; கிடைக்க முடியாதது கிடைக் கிறது. ஆனால் அதை நீங்கள் பிடிக்கமுடியாது. அதற்கு மாறாக, நீங்கள் அமைதியாக இருக்கும்போது அது உங்களை தனக்கு சொந்தமாக ஆக்கிக் கொள்கிறது. அது உங்களைப் பிடித்துக் கொள்கிறது.

*அவரது தோட்டத்தில் மனிதனும் பகுத்தறிவும்*
*தற்போதைய பழுக்கும் செடிகள்.*
*அவரது இயல்பு பற்றி நீ என்ன முடிவு செய்தாலும்*
*நீ கண்டிப்பாக உனது ஆழத்திற்கு வெளியே இருப்பாய்*
*ஒரு குருடன் தனது தாயின் தோற்றத்தை விவரிக்க*
*முயல்வது போன்று இருப்பாய்.*

இது, ஒரு குருடன் தான் ஒருபோதும் பார்த்திராத ஒன்றினை விவரிப்பது போன்றதாகும். அவன் தாயிடமிருந்து தான் வந்திருந்தாலும்கூட, அவன் தாயின் கருவறையில் ஒன்பது மாதங்கள் வசித்திருந்தாலும்கூட, இன்னமும் அவனால் தனது தாயைப்பற்றி விவரிக்க முடியாது. ஏனெனில் அவனுக்கு கண்கள் கிடையாது.

நாம் கடவுளில் வசித்திருக்கிறோம், நாம் கடவுளில் வசித்துக் கொண்டு இருக்கிறோம். இது நமது கருவறைஃ முடிவில்லாத காலம் முதல் முடிவில்லாத காலம் வரையில் நாம் அவரது கருவறையை விட்டு ஒருபோதும் வெளியேறுவது கிடையாது என்றாலும்கூட நம்மால் அவரை விவரிக்க முடியாது. அவரைக் காண்கின்ற கண்களை நாம் இன்னமும் பெற்றிருக்கவில்லை. அதனால்தான் மூன்றாம் கண் என்னும் அடையாளம் குறியீடு வந்துள்ளது.

இந்த இரண்டு கண்களும் அவரது உலகைப் பார்க்க முடியும். இந்த இரண்டு கண்களும் வெளி உலகைப் பார்க்க முடியும். இந்த

இரண்டு கண்களும் பகல், இரவு, கோடைக்காலம், குளிர்காலம் என்கிற இரட்டை தன்மையைப் காணமுடியும். வாழ்வு, சாவு, ஆண், பெண், நேர்மறை எதிர்மறை என்று இந்த இரண்டு கண் களும் எல்லாவிதமான இரட்டைத் தன்மைகளையும் காண முடியும். இரண்டு என்றால் இரட்டைத் தன்மை என்று அர்த்தம்.

மூன்றாம் கண் என்றால் ஒரு தனிக்கண் என்று அர்த்தம். அந்த ஒரு தனிக்கண். உங்களுக்குள் வேலை செய்யாமல் இன்னமும் மறைந்து இருக்கிறது. இது ஒரு உருவகம் என்பதை நினைவில் கொள்ளுங்கள். உண்மையில் ஏதோ மூன்றாவதாக ஒரு கண் உள்ளது என்பதாகாது. இது ஒரு உருவகம். ஆனால் மிகவும் மதிப்புள்ள, சிறப்பு வாய்ந்தது. இது ஒற்றுமையை, ஒன்றினைக் குறிக்கிறது. ஒன்று மட்டுமே ஒன்றினை அறிந்து கொள்ள முடியாது. இரண்டு எப்போதும் இரண்டை மட்டுமே அறியும்.

இந்த இரண்டு கண்களுக்கு பின்னால் ஒரு கண் உள்ளது. இந்த இரண்டும் வெளியே போகிறது. அந்த ஒன்று உள்ளே போகிறது. அந்தக் கண் உங்களுக்குள் எழாத வரையில், உங்க ளால் கடவுளை அறிந்து கொள்ள முடியாது. நம்பிக்கையினால் எந்த பயனும் கிடையாது. அது போலித்தனம். நம்பிக்கை இல்லாமையினாலும் எந்த பயனம் கிடையாது. மீண்டும் அதுவும் போலித்தனம்.

ஆத்திகனாகவும் இருக்காதே, நாத்திகனாகவும் இருக் காதே,ஒரு விசாரிப்பாளனாக இரு. கடவுளைப் பற்றிய இந்த விசாரணையில் மிகப்பெரிய தீவிர ஆசையோடு நகர்ந்து செல்லுங்கள். அவர் இருக்கிறார் என்றும் கூறாதீர்கள், அவர் இல்லை என்றும் கூறாதீர்கள். நாம் பார்க்காமலும், அறிந்து கொள்ளாமலும் எதையாவது எப்படி சொல்ல முடியம்?

இந்த பிரபஞ்சத்திற்குள் செல்லுங்கள். ஆனால் ஆரம்ப மானது உங்களுக்குள் உள்ள மையத்தில் இருந்து இருக்க வேண்டும். அந்த ஒரு கண்ணானது தியானத்தினால், அமைதி யினால் உருவாக்கப்படுகிறது.

*பகுத்தறிவானது இன்னமும் ரகசியத்தின் கீழ்*
*போய்க்கொண்டு இருந்தாலும்*
*நீ உனது தேடுதலை அன்பு என்னும் திறந்த வெளியில்*
*முடிக்கிறாய்.*

எப்படிப்பட்டதொரு அழகான வாக்குமூலம்! நீங்கள் ஒருநாள் ஆச்சரியமடைவீர்கள். உங்களது இரண்டு கண்களும் தேடித் தேடிப் பார்த்து அவரைக் காணமுடியாமல் இருந்தன. ஆனால் திடீரென்று ஒருநாள் மூன்றாம்கண் திறந்தது. அப்போது நீங்கள் அதைக் கண்டு கொண்டீர்கள். உங்களது கற்றறிவு தேடித் தேடிப் பார்த்தது. ஆனால் உங்களது உள்உணர்வு ஒருநாள் பழுத்துவிட்டது. அப்போது இதயம் அதை அறிந்து கொண்டது.

கற்றறிவு சிந்தித்துக் கொண்டே போகிறது. ஆனால் ஒருபோதும் அறிவதில்லை. ஆனால் இதயம் ஒருபோதும் சிந்திப்பதில்லை. அது அறிந்துகொள்ள மட்டுமே செய்கிறது. இதயம்தான் உண்மையான அறிதலின் இருப்பிடம். உள்ளத்தின் உலகில், அறிதல் என்றால் இருத்தல். அங்கே அறிதலுக்கும், இருத்தலுக்கும் இடையே வேறுபாடு கிடையாது.

விஞ்ஞானி தன்னிலிருந்து தனியாக அங்கு ஒரு பொருள் இருப்பதை அறிகிறார். ஆனால் ஞானி கடவுளை ஒரு பொருளாக அறிவதில்லை. ஆனால் அவரது சொந்த அகநிலையாக அறிகிறார். இங்கு அவருக்குள், அவரைப் போய் அறிகிறார்.

தூய மனிதன், தியானம் செய்பவன், இரண்டும் ஒன்றாவதை அறிகிறான் என்று ஹக்கிம் சனாய் கூறுகிறார். மேலும் காதலன் மூன்றில் ஒன்றாக இணைகிறான். அதாவது காதலன், காதலி, காதல் ஆகிய மூன்றையும் ஒன்றாக இணைக்கிறான். எல்லாம் ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு இடம் ஒன்றுபடுகிறது. எண்ணங்கள் உங்களை துண்டுதுண்டாக, பிரித்து வைக்கின்றன. எல்லா எண்ணங்களும் மறைந்து விடும்போது, நீங்கள் எப்படி பிளவுபட்டு இருக்கமுடியம்? ஒருங்கிணைப்பு வருகிறது; நீங்கள் மையத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் ஒன்றாக இருக்கிறீர்கள். மேலும் அந்த ஒன்றுதலில் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். நீங்கள் ஏற்கனவே அறிந்து கொண்டு விட்டீர்கள்.

உள்ளம் அறிந்து கொள்கிறது. அதன்பிறகு உள்ளமானது கற்றறிவிடம், ''இப்போது வேறு எதுவும் தேவை இல்லை. அதைப்பற்றி கவலைப்படாதீர்கள். அது நடந்துவிட்டது. இப்போது தேடி விசாரிக்க வேண்டிய அவசியம் இல்லை. நின்று விடுங்கள்! நான் அறிந்துவிட்டேன்.'' என்று தகவல் கொடுக்கிறது.

எப்போதுமே உள்ளம்தான் அறிந்து கொள்கிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். அதனால்தான் திடநம்பிக்கையானது அந்த அளவுக்கு வலியுறுத்தப்படுகிறது. சரணாகதியானது வலியுறுத்தப்படுகிறது. நீங்கள் ஒரு குருவிடம் வரும்போது நீங்கள் உள்ளத்தின்மூலம் ஒன்று சேரவேண்டும். கற்றறிதலின் மூலம் சேரக்கூடாது. நீங்கள் கற்றறிலின் மூலமாக ஒன்று சேர்ந்தால் அதன்பின்னர் அது ஒரு இணைப்பு பாலமாக இருக்காது. ஏனெனில் கற்றறிலிதற்கு ஒரு பாலத்தை எப்படி உருவாக்குவது என்று தெரியாது; அதற்கு சுவர்களை உருவாக்குவது எப்படி என்பது தெரியும். அப்போது சுவர்களை உருவாக்குவதற்கு வெறுமனே சிறிய விஷயங்களே போதுமானதாகும்.

சில தினங்களுக்கு முன்பு ஒரு பெண் சந்நியாசம் வாங்கி னாள். அடுத்தநாள் அவள், ''மதகுருக்கள் பற்றிய உங்களது விமர்சனம் அசிங்கமாக உள்ளது,'' என்று கூறி கடிதம் எழுதினாள். இப்போது, அவள் ஒரு சுவற்றினை உருவாக்கி கொள்கிறாள் என்பதை அவள் அறியவில்லை. இப்போது அவள் என்னை உணர்வதற்கு மிகவும் கடினமாக இருக்கும். அவள் தனது சொந்த மனதினை உள்ளே கொண்டு வந்துவிட்டாள். மேலும் அவள் ஒருசில தினங்கள் மட்டுமே இங்கு இருந்தாள். கொஞ்சம் பொறுத்திருக்கலாம். நான் மதகுருக்களை விமர்சனம் செய்திருந்தால் அதற்கு ஏதாவது காரணம் இருக்கும். கொஞ்சம் பொறுத்திரு, பொறுமையாக இரு. நான் என்ன கூறுகிறேன், அதை ஏன் கூறுகிறேன் என்பதைக் கவனி. இப்படி அவசரப்படாதே. அப்படி செய்தால் நீ சுவர்களை உருவாக்க ஆரம்பித்து விடுகிறாய்.

மேலும் இப்படி நீ சுவர்களை உருவாக்கினால் அதன்பின்னர் உனது ஆன்மா எனது ஆன்மா தொடர்பு கொள்வது

சாத்தியமில்லாமல் போய்விடும். அதன்பின்னர் நீ எங்கு இருக்கிறாய் என்று என்னால் கண்டு கொள்ளமுடியாது. நீ சுவர்களின் பின்னால் மறைந்து கொண்டு இருப்பாய். நான் வந்து தட்டுவேன். ஆனால் நீ எனது குரலைக் கேட்க மாட்டாய். அதுவும் தேவையற்ற காரணங்களுக்காக கேட்க முடியாமல் போய்விடும்.

இப்போது, மதகுருக்களோடு நீ என்ன செய்யப் போகிறாய்? மதகுருக்கள் பற்றி நீ ஏன் அக்கறை கொள்ள வேண்டும்? உனது மதகுருக்களை நான் பாராட்டுவதை கேட்பதற்காகவா நீ இங்க வந்தாய்? மாற்றம் அடைவதற்கு தான் நீ இங்கு வந்தாய். இப்போது அதற்கும் மதகுருக்களுக்கும் என்ன சம்பந்தம்? ஆனால் இது வெறும் சிறிய விஷயம்!

மேலும் அந்த பெண்மணி, ''நீங்கள் அசிங்கம் என்கிற வார்த்தையை பயன்படுத்தும் போதெல்லாம் அந்த அசிங்கம் என்கிற அந்த வார்த்தையின் பயன்பாடே எனக்கு அசிங்கமாக தெரிகிறது'' என்றும் எழுதி இருக்கிறாள். இப்போது, நான் அசிங்கம் என்கிற வார்த்தையை பயன்படுத்துவது உனக்கு அசிங்கமாக இருக்கின்ற ஒரு மனநிலையில் நீ இருந்தால் அதன்பின்னர் நீ இங்கு இல்லை. அதன்பிறகு நீ வேறு எங்கோ தொலைதூரத்தில் உள்ள ஒரு கிரகத்தில் இருக்கிறாய். நீ உனது கற்றறிவில் இருக்கிறாய். அசிங்கம் என்கிற வார்த்தையில் என்ன அசிங்கம் உள்ளது? அது நன்றாக வெளிப்படுத்துகிறது. மேலும் அழகாக உள்ளது. அந்த பெண்மணியும் கூட அசிங்கம் என்கிற வார்த்தையை பயன்படுத்த வேண்டியதுள்ளது. ''நீங்கள் அசிங்கம் என்கிற வார்த்தையை பயன்படுத்துவது அசிங்கமாக உள்ளது'' என்று அவள் கூறுகிறாள். அது ஒன்றை வெளிப்படுத்துகிறது. அதுதான் ஒரு வார்த்தையின் வேலை. அது அர்த்தத்தை வெளிப்படுத்த வேண்டும். எனவே அந்த வார்த்தை உண்மையில் வெளிப்படுத்துகிறது. அது தனது செயலை நிறைவேற்றுகிறது.

ஆனால், எனது வார்த்தைகளைப் பற்றி முடிவு செய்வதற்காக நீ இங்க இருக்கிறாயா? நீ ஒரு பரிசோதகர் போன்று இங்கு இருக்கிறாயா? அப்படியானால் நீ வெறுமனே முட்டாள்தனமாக நடந்து கொள்கிறாய். அதன்பின்னர் ஹக்கிம் சனாய் கூறுகின்ற

அந்த முட்டாளாக இருக்கிறாய். அதன்பிறகு நீ தவறவிட்டு விடுவாய். நீ முழு போதனையையும் தவறவிட்டு விடுவாய். நீ தேவையற்ற விஷயங்களில் அக்கறை கொண்டு விடுவாய். எனவே இதன் பின்னால் மிகப்பெரிய ஆணவம் இருந்தாக வேண்டும்.

உன்னால் சரணாகதி அடைய முடியாது. உன்னால் திடமாக நம்பிக்கை கொள்ளவே முடியாது. ஆனால் இதயம்தான், திடமாக நம்புகின்ற உள்ளம் தான் உண்மைநிலையை அடையாளம் கண்டு கொள்கிறது. சந்தேக மனம் கண்டு கொள்ளாது.

*பாதையானது சொல்லிலும் இல்லை செயலிலும் இல்லை*
*இவற்றில் இருந்து வெறும்; தனிமை மட்டுமே வரும்...*

ஹக்கிம் சனாய் மூன்று பாதைகள் உள்ளன என்று கூறுகிறார். ஞானயோகம், ஞானத்தின் பாதை; கர்ம யோகம், அது செயல்களின் பாதை, மற்றும் பக்தி யோகம், அன்பின் பாதை. அவர் **பாதையானது சொல்லிலும் இல்லை செயலிலும் இல்லை** என்று கூறுகிறார்.

ஆகவே ஞானத்தின் பாதையும் உங்களுக்கு உதவாது அல்லது செயல்களின் பாதையும் உங்களுக்கு உதவாது. ஏனெனில் செயல் என்பது உங்களது மனதில் இருந்து வருகிறது. மேலும் அறிவும் உங்களது மனதில் இருந்து வருகிறது. மூன்றாம் விஷயம் மட்டுமே உங்களுக்கு உதவ முடியும். அன்பும், அமைதியும். அவை உங்களது மனதின் அங்கம் அல்ல.

*பாதையானது சொல்லிலும் இல்லை, செயலிலும் இல்லை,*
*இவற்றில் இருந்து வெறும் தனிமைதான் வரும்.*
*நிலைக்கும் மாளிகை வராது*
*இனிமையும், வாழ்க்கையும் தான்*
*இந்த பாதையில் மௌனமாக நடக்கின்ற மனிதனின்*
*வார்த்தைகளாக இருக்கும்...*

**வார்த்தைகளும் அல்ல செயல்களும் அல்ல.** ஆனால் முழு அமைதி. அதன்பிறகு உங்களது வாழ்க்கை இனிமையான தாக ஆகிறது. மேலும் உங்களது வாழ்க்கை வெளிப்படுத்துவதாக

ஆகிறது. அதன்பிறகு உங்களது இருப்புநிலையே ஒரு அருள். மேலும் அதுதான் உங்களது பாடல், அதுதான் உங்களது பிரசங்கம்.

**இனிமையும், வாழ்க்கையும் தான் இந்த பாதையில் மௌனமாக நடக்கின்ற மனிதனின் வார்த்தைகளாக இருக்கும்...** மேலும் உங்களுக்குள் உள்ள அமைதியில் யார் ஊடுருவிச் செல்கிறார்களோ, அன்பில் இருப்பது எப்படி என்றும், பிரார்த்தனையில் இருப்பது எப்படி என்று யார் அறிந்து கொள்கிறார்களோ மேலும் மௌனத்தில் இருப்பது எப்படி என்று யார் அறிந்து கொள்கிறார்களோ மேலும் யார் முழு மனதையும் அதன் வழிகளையும் கைவிட்டு விடுகிறார்களோ, அதன்பின்னர் அவர்களின் வாழ்க்கையின் இனிமை என்பது அவரது பேச்சில் இருக்கிறது. அவரது வாழ்க்கையின் உயிர்த்துடிப்பு, அவரது வாழ்க்கையின் ஒளி வீச்சு அவரது வார்த்தைகளாக உள்ளது.

*அவன் பேசும்போது அது அவனது அறியாமையில் இருந்து வருவதில்லை. மேலும் அவன் மௌனமாக இருப்பது அவனது சோம்பேறித்தனத்தில் இருந்து வருவதில்லை.*

இப்படிப்பட்ட மனிதன் சிலசமயம் பேசுகிறான். ஆனால் அவனது பேச்சு அவனது அறியாமையில் இருந்து வருவதில்லை. உங்களது பேச்சு அறியாமையில் இருந்து வருகிறது. உங்களது அறியாமையை மறைப்பதற்காகவே நீங்கள் பேசுகிறீர்கள். நீங்கள் உங்களது அறிவைக் காட்டவே பேசுகிறீர்கள்.

''மதகுருக்கள் பற்றிய உங்களது விமர்சனம் அசிங்கமாக உள்ளது'' என்று இப்போது இந்த பெண்மணி எனக்கு எழுதி இருக்கிறாள். அவள் இப்போது மதகுருக்கள் பற்றி அவளது அறிவை காட்டுவதற்கு முயற்சிக்கிறார். என்னைவிட அவள் நன்றாக அறிவதாக நினைக்கிறாள். அவர் எனக்கு புத்திமதி கூறுகிறாள்.

நீங்கள் பேசும்போது, அது உங்களது அறிவாற்றலைக் காட்டுவதாக இருக்கக்கூடாது என்பதை நினைவில் கொள் ளுங்கள். ஏனெனில் உங்களது அறிவாற்றலைக் காட்டுவதற்காக

நீங்கள் எடுக்கின்ற ஒவ்வொரு முயற்சியும் உங்களது அறியாமையை மூடிமறைப்பதற்காக மட்டுமே அன்றி வேறு எதுவும் அல்ல. மௌனம் என்றால் என்ன மேலும் அன்பு என்றால் என்ன என்று தெரிந்து கொண்ட மனிதன் தனது அறியாமையில் இருந்து பேசுவதில்லை. அவன் அறிந்து கொண்டதால் அவன் பேசுகிறான். ''அவன் பேசுகிறான்'' என்பது சரியான வெளிப்பாடாக இருக்காது. இந்த பிரபஞ்சம் அவன் மூலமாக பேசுகிறது. அவன் அங்கு இல்லவே இல்லை. அவன் பேசுபவன் அல்ல. அவன் வெறும் ஒரு ஊடகம்; மட்டுமே, ஒரு வாகனம் மட்டுமே.

**மேலும் அவன் மௌனமாக இருப்பது அவனது சோம்பேறித்தனத்தில் இருந்து வருவதில்லை.** ஆனால் நீங்கள் மௌனமாக இருப்பது உங்களது களைப்பினால், உங்களது சோம்பேறித்தனத்தால், அவன் மௌனமாக இருப்பது அவனது சோம்பேறித்தனத்தினால் அல்ல. அவன் பிரார்த்தனை யினால், அன்பினால் மௌனமாக இருக்கிறான். அவன் அமைதியாக இருக்கிறான். ஆனால் அவன் தனது அமைதியில் அபரிமிதமான உயிர்த்துடிப்புடன் இருக்கிறான். அவன் சோம்பலாக இருப்பதில்லை. அவனது அமைதி புத்திக்கூர்மை இல்லாதது அல்ல. அவனது மௌனம் சோம்பேறித்தனம் அல்ல. அவனது அமைதி சாதாரணமானது அல்ல.

அவனது அமைதி பாடல்கள் நிறை;து இருக்கிறது. மிகவும் சூல் கொண்டு உள்ளது. அவனது மௌனம் ஒரு விதை போன்றது. எனவே அவன் வார்த்தைகளைப் பயன்படுத்தும் போது அந்த வார்த்தைகள் விதையில் இருந்து வருகின்ற மலர்கள் போன்றது. அவனது அமைதி அழகானது. அவனது பாடல்கள் அழகானவை, ஏனெனில் அந்த பாடல்கள் மௌனத்தில் இருந்து வருகின்றன. எனவே அந்த பாடல்கள் அமைதியின் நறுமணத்தை சுமந்து கொண்டு வருகின்றன.

அமைதியைச் சுமந்து வருகின்ற விதத்தில் வார்த்தைகள் பேசப்படும்போது, வார்த்தைகளை எப்படி பயன்படுத்துவது என்பதை நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். அதன்பின்னர் நீங்கள்

ஒருபோதும் ஊமை அல்ல. **தனது ஆன்மாவில் இருந்து வாழ்க்கையின் மணமானது அவற்றை சென்றடையும்போது ஊமை தனது நாவுகளைக் கண்டு கொள்கிறான்.** ஆனால் இவை எல்லாம் அவரிடம் இருந்து வருகிறது. அப்பால் இருந்து வருகிறது.

புத்தர், பாகாவுதீன், கபீர், கிறிஸ்து, முகமது, மகாவீரர், சோசன் மற்றும் சனாய் ஆகியவர்கள் தாங்களாகப் பேசுவது கிடையாது. அவர்கள் வெற்று மூங்கில்கள், புல்லாங்குழல்கள். அவர்கள் மூலமாக வருகிற ஒரு பாடலை பாடுகிறார்கள். ஆனால் அது அவர்களுக்கு சொந்தமானது அல்ல. அவர்களது பாடல் அதில் உள்ள கையெழுத்தானது கடவுளுடையதாக இருக்கிறது.

இன்று ஒருபோதும்.

*முதல் கேள்வி:*

*ஓஷோ,*

> *கோழைத்தனமும், போலித்தனமும் கூட அழகான தாக இருக்க முடியுமா? எனது கோழைத்தனத்தை, எனது போலித்தனத்தை, எனது கஞ்சத்தனத்தை கூட நான் ஏற்றுக் கொள்ளமுடியுமா மேலும் நீங்கள் முட்டாள்தனம் என்று அழைக்கின்ற அந்த தனிப்பட்ட மனப்பாங்கினையும் ஏற்றுக் கொள்ள முடியுமா? மேலும்; இப்படிப்பட்ட குணங்களை நான் ஏற்றுக் கொண்டு விட்டால் இவை எல்லாம் என்னை அடைத்துவிட முயற்சிக் கின்றன, நான் எப்படி விடுதலை அடைவது?*

அசோகா, சுதந்திரமாக இருக்கவேண்டும் என்கிற எண்ணமே ஒருவரை அடிமையாக வைத்திருக்கிறது. ஒவ்வொரு ஆசையும் ஒரு சங்கிலி,ஒரு அடிமைத்தளை, ஒரு சிறைவாசம். எந்த ஒரு ஆசையும் ஒருபோதும் நிறைவேற்றப்பட முடியாது. ஆசையை கைவிடுவதன் மூலமே அதன் நிறைவு நிகழ்கிறது.

இந்த உலகில், நமக்குள் மாற்றம் அடையவேண்டும் என்பது தான் மிகப்பெரிய ஆசையாக இருக்கிறது. பணத்திற்கான ஆசை ஒன்றுமில்லாதது; அதிகாரத்திற்கான ஆசை ஒன்றுமில்லாதது, அதீத புகழுக்கான ஆசை ஒன்றுமில்லாதது. ஆன்மிக ஆசைதான் மிகப்பெரிய ஆசையாக இருக்கிறது. மேலும் நீ அந்த ஆசைக்குள் பிடிபட்டு விட்டால் நீ எப்போதும் துன்பத்தில் இருப்பாய்.

மாற்றம் என்பது சாத்தியப்படும்ஆனால் அதற்காக ஆசைப்படுவதால் அது நடக்காது. என்னவாக இருந்தாலும், அது எப்படி உள்ளதோ அதில் ஓய்வுடன் இருப்பதால் மட்டுமே மாற்றம் என்பது சாத்தியப்படும். எந்த நிபந்தனையும் இன்றி உன்னை. நீ ஏற்றுக் கொள்வது தான் மாற்றத்தைக் கொண்டு வருகிறது. நாம் இந்த விஷயத்திற்குள் ஆழ்ந்து செல்லவேண்டும். ஏனெனில் இது அசோகாவின் கேள்வி மட்டுமல்ல, இது ஒவ்வொருவரின் கேள்வியாகும்.

மனிதன் துன்பத்தில் இருக்கிறான், மனிதன் துக்கத்தில் இருக்கிறான். எனவே ஒவ்வொருவரும் பேரானந்த நிலையை இந்த பிரபஞ்சத்தோடு ஒன்றுபட்டு இருக்கின்ற நிலையை தேடிக்கொண்டு இருக்கிறோம். மனிதன் அந்நியனாக ஆகிவிட்டது போன்றும், வேரோடு பிடுங்கப்பட்டு விட்டது போன்றும் உணர்கிறான். எனவே இந்த ஆசை இயல்பானதாக இருக்கிறது. இந்த பிரபஞ்சத்தோடு மீண்டும் வேர்களைப் பெறுவது எப்படி, மீண்டும் பசுமையாக இருப்பது எப்படி, மீண்டும் மலர்வது எப்படி?

இந்த சில விஷயங்கள் தியானம் செய்யப்பட வேண்டியவை. முதலாவதாக, நிறைவான ஒற்றுமையை நிலைநாட்டுவதற்கு, தன்னுணர்வானது முதலில் அதன் உண்மையான அனுபவங்கள் எதையும் ஒதுக்கிவிடாமல் அதன் தனிப்பட்ட நோக்கங்களை எல்லாம் கண்டிப்பாக ஒன்றுபடுத்த வேண்டும். இதுதான் புரிந்துகொள்ள வேண்டிய முதல் விஷயமாகும்.

நீ பயத்தை உணர்கிறாய், இப்போது இந்த பயம் என்பது உன்னிடம் இருக்கின்ற உண்மைநிலை, நீ அனுபவிக்கின்ற உண்மைநிலை. அது அங்கு உள்ளது. நீ அதை மறுக்க முடியாது. அதை மறுப்பதன் மூலம் நீ அதை அடக்கி வைத்துக் கொண்டு இருக்கிறாய். அதை அடக்கி வைப்பதன் மூலம் நீ உனது உயிர் உணர்வில் ஒரு காயத்தை உருவாக்குகிறாய்.

எனவே நீ கோழை என்று உணர்கிறாய். அதை நீ கண்டு கொள்ளாமல் சமாளிக்கலாம். ஆனால் அது ஒரு உண்மை, ஒரு

உண்மைநிலை. வெறுமனே அதைப் பார்ப்பதால், அது மறையப் போவது இல்லை. நீ ஒரு நெருப்புக் கோழி போன்று நடந்து கொள்கிறாய். எதிரியைக் கண்டதும், மரணத்தின் ஆபத்தைக் கண்டதும், நெருப்புக் கோழியானது மணலில் தனது தலையை மறைத்துக் கொள்கிறது. ஆனால் அது தனது தலையை மணலில் மறைப்பதாலோ, தனது கண்களை மூடிவிடுவதாலே, எதிரி மறைந்து விடப் போவதில்லை. உண்மையில் இப்போது அந்த நெருப்புக் கோழியானது எதிரிக்கு எளிதில் கிடைக்கக்கூடியதாக ஆகிவிடுகிறது. யாரையும் பார்க்க முடியாததால் இப்போது இங்கு எதிரி இல்லை என்று நினைப்பது, பார்ப்பது தான் எதிரி இருப்பதைக் காட்டுகிறது என்று நினைப்பது ஆகியவற்றின் மூலம் இப்போது அந்த நெருப்புக் கோழியானது பயத்தில் இருந்து விடுபடுகிறது. ஆனால் அது இப்போது அதிக ஆபத்தில் இருக்கிறது. எதிரி மிகவும் பலம் நிறைந்து விடுகிறது. ஏனெனில் எதிரி இப்போது பார்க்கப்படவில்லை. நெருப்புக் கோழி தனது தலையை மறைத்துக் கொண்டால் இப்போது அதனை ஏதாவது எதிரி செய்யமுடியும்.

ஆனால் இதைத்தான் மக்கள் செய்து கொண்டு இருக்கிறார்கள். நீ கோழைத்தனத்தைப் பார்க்கிறாய், அதை கவனிக்காமல் இருப்பதற்கு நீ முயற்சி செய்கிறாய். ஆனால் அது ஒரு உண்மை. அதை கவனிக்காமல் இருப்பதன் மூலம், உன்னுடைய உயிர் உணர்வின் ஒரு பகுதியை அது பார்க்க முடியாதபடி செய்து விடுகிறாய். நீ உன்னை பல பகுதிகளாக பிரித்துவிட்டாய். அதன் பின்னர் ஒரு நாள் உனக்கு கோபம் வருகிறது. உனக்குள் உள்ள அந்த கோபத்தை நீ ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை. நீ அதைப் பார்ப்பதை நிறுத்தி விடுகிறாய். அடுத்து வேறு ஒரு நாளில் உனக்குள் பேராசை இருக்கிறது. இப்படி பல விஷயங்கள் இருக்கின்றன. ஆனால் நீ பார்க்காமல் விட்டு விடுகின்றவை எல்லாம் அப்படியே உனக்குள் இருக்கின்றன. எனவே நீ இப்போது சுருங்கிக் கொண்டே போகிறாய். உனது உயிர் உணர்வில் இருந்து அநேக பகுதிகள் உன்னிலிருந்து தனித்து விடப்படுகின்றன. நீயாகவே அவற்றை பிரித்து விட்டுவிட்டாய். எனவே நீ எந்த அளவுக்கு அதிக

துண்டுகளாக ஆகிவிடுகிறாயோ, அந்த அளவுக்கு நீ அதிக துன்பத்தில் இருப்பாய்.

பேரானந்தத்தில் இருப்பதற்கான முதல் அடி நீ ஒன்றாக இருப்பதாகும். அதைத்தான் ஹக்கிம் சனாய் மீண்டும் மீண்டும் வலியுறுத்திக் கொண்டு இருக்கிறார். ''ஒன்றாக இருப்பது பேரானந்தத்துடன் இருப்பதாகும். உனக்குள் அநேக பிரிவுகளாக இருப்பது நரகத்தில் இருப்பதாகும்'' எனவே அனுபவரீதியாக என்னவெல்லாம் உண்மையாக உள்ளதோ அதை ஏற்றுக்கொள். அதை மறுப்பதன் மூலம் உன்னால் எதுவும் செய்யமுடியாது. அதை மறுப்பதன் மூலம் நீ பிரச்சினையை உருவாக்குகிறாய். அப்போது பிரச்சினை மேலும் சிக்கலானதாக ஆகிறது. அது எளியதாகத்தான் இருந்தது.

நீ ஒரு கோழை என்று உணர்கிறாய். அதனால் என்ன? எனவே ''நான் ஒரு கோழை'' என்று நீ ஏற்றுக்கொள்ளும் போது நீ ஏற்கனவே தைரியம் உள்ளவனாக ஆகிவிடுகிறாய். தைரியம் உள்ள மனிதன் மட்டுமே தான் ஒரு கோழையாக இருப்பதை ஏற்றுக் கொள்ளமுடியும். எந்த ஒரு கோழையும் அதைச் செய்யமுடியாது. நீ ஏற்கனவே உருமாற்றத்தின் வழியில் இருக்கிறாய். எனவே முதல் விஷயமாவது: உண்மையாக அனுபவிக்கின்ற எதையும் உண்மை அல்ல என்று மறுக்கக்கூடாது.

இரண்டாவதாக, அதை நடைமுறைப்படுத்துவதற்கு, தன்னுணர்வானது இதுவரை தன்னை ஐக்கியப்படுத்திக் கொண்டுள்ள நிலையான கருத்துக்களில் இருந்து தனது ஐக்கியபடுதலை கண்டிப்பாக விட்டுவிடவேண்டும். ஏனெனில் தன்னுணர்வானது தன்னை ஒரு நிலையான, கருத்துக்களால் ஆன ஆன்மாவாக பிடித்துக் கொண்டு இருந்தால் அந்த நிலையான கருத்திற்கு முரண்பாடாக வருகின்ற உண்மை அனுபவங்களை அதனால் சகித்துக் கொள்ள முடியாது.

நீ எப்படி இருக்கவேண்டும் என்று ஒரு குறிப்பிட்ட எண்ணத்தை வைத்திருந்தால், அதன் பின்னர் உனது உயிர் உணர்வின் அனுபவ உண்மைகளை உன்னால் ஏற்றுக்

கொள்ளமுடியாது. ஒரு தைரியமுள்ள மனிதனாக நான் இருக்கவேண்டும் என்கிற எண்ணம் உன்னிடம் இருந்தால், அந்த தைரியம் என்பது ஒரு மதிப்பாக ஆகிவிடுகிறது. அதன் பின்னர் உனது கோழைத்தனத்தை ஏற்றுக் கொள்வது மிகவும் கடினம். நீ ஒரு புத்தரைப் போன்று கருணையுடன் இருக்கவேண்டும் என்கிற எண்ணத்தை வைத்திருந்தால், அதன்பின்னர் உனது கோபத்தை உன்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. அந்த லட்சியம் தான் பிரச்சினையை உருவாக்குகிறது.

உனக்கு லட்சியங்கள் ஏதும் இல்லை என்றால், அதன் பின்னர் பிரச்சினையே இல்லை. நீ ஒரு கோழையாக இருக்கிறாய். எனவே நீ ஒரு கோழை. எனவே ஒரு தைரிய மனிதனாக இருக்கவேண்டும் என்கிற லட்சியம் இல்லை என்றால், நீ அந்த உண்மையை கண்டனம் செய்யமாட்டாய். நீ அதை மறுக்கவும் மாட்டாய், நீ அதை அடக்கிவைக்கவும் மாட்டாய், உனது உயிர் உணர்வின் அடித்தளத்தில் அதை தூக்கி வீசவும் மாட்டாய். எனவே அதை நீ எப்போதாவது பார்க்கவேண்டிய அவசியம் இருக்காது. உங்களது தன்னுணர்வு இழந்த பகுதிக்குள் நீங்கள் ஏதாவது ஒன்றை தூக்கி வீசினால் அது அங்கிருந்து வேலை செய்து கொண்டே இருக்கும். அது அங்கிருந்து கொண்டு உனக்கு பிரச்சினையை உருவாக்கிக் கொண்டே இருக்கும்.

அது நீ உள்பக்கமாக தள்ளிவிட்ட ஒரு நோய் போன்றது. அது மேற்பரப்பிற்கு வந்தது, மேலும் அந்த மேற்பரப்பில் இருந்து அது மறைந்து போவதற்கான சாத்தியங்கள் இருந்தது. ஒரு காயமானது மேற்பரப்பிற்கு வந்தால் அது நல்லது. அது குணப்படுத்தப் படுவதற்கான வழியில் உள்ளது. அது மேற்பரப்பில் இருப்பதால் அது புதிய காற்று மட்டும் சூரியனின் தொடர்போடு குணப் படுத்தப்படும். நீ அதை உள்பக்கமாக திணித்தால், அதை மேற்பரப்பிற்கு வர நீ அனுமதிக்கவில்லை என்றால், அதன்பின்னர் அது ஒரு புற்றுநோயாக ஆகப்போகிறது. ஒரு சிறிய நோயும் கூட, அடக்கி வைக்கப்பட்டால், ஒரு ஆபத்தான நோயாக ஆகிவிட முடியும். எந்த ஒரு நோயும் ஒருபோதும் அடக்கி வைக்கப்பட கூடாது.

ஆனால் ஏதாவது ஒரு லட்சியத்தை நீ வைத்திருந்தால் அடக்கி வைத்தல் என்பது இயற்கையானதாக ஆகிவிடும். எந்த ஒரு லட்சியமும் அதற்கு போதும். நீ ஒரு பிரம்மச்சாரியாக இருக்கவேண்டும் என்ற லட்சியத்தோடு இருந்தால் அதன் பின்னர் காமம் என்பது பிரச்சினையாக ஆகிறது. நீ பிரம்மசாரியாக ஆகவேண்டும் என்கிற லட்சியத்தோடு இல்லை என்றால் உன்னால் காமத்தை கவனிக்க முடியும். அதன்பின்னர் காமம் மறுக்கப்படுவதில்லை. அதன்பின்னர் உனக்கும் உனது காமகமனத்திற்கும் இடையே பிரிவினை இல்லை. அதன்பின்னர் அங்கு தோழமை இருக்கிறது. மேலும் அந்த தோழமை மகிழ்ச்சியை கொண்டு வருகிறது. தன்னோடு தோழமையாக இருப்பதுதான் எல்லா மகிழ்ச்சிக்கும் அடிப்படை.

எனவே, லட்சியங்களை சுமந்து கொண்டு செல்லாதே என்பது தான் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டிய இரண்டாம் விஷயமாக உள்ளது. உனக்கு மூன்று கண்கள் இருக்கவேண்டும் என்கிற லட்சியத்தை நீ கொண்டிருப்பதாக வெறுமனே கற்பனை செய்து பார். உடனடியாக பிரச்சினை எழுந்துவிடும். ஏனெனில் உன்னிடம் இரண்டு கண்கள் மட்டுமே உள்ளன. ஆனால் உனது லட்சியமோ உனக்கு மூன்று கண்கள் இருக்க வேண்டும் என்று கூறுகிறது. நீ மூன்று கண்களை பெறவில்லை என்றால் ஏதோ ஒன்றைத் தவறவிட்டு விட்டதாக இருக்கிறது. இப்போது நீ மூன்றாவதற்காக ஏங்குகிறாய். உனக்கு சாத்தியபடாத ஒரு பிரச்சினையை இப்போது நீ உருவாக்கி விட்டாய். இதைத் தீர்க்க முடியாது. அதிகபட்சமாக நீ ஒரு மூன்றாம் கண்ணை உனது நெற்றியில் ஓவியமாக தீட்டிக் கொள்ளலாம். ஆனால் ஓவியம் போன்ற மூன்றாம் கண் ஒரு ஓவியக் கண்தான். அது ஒரு போலித்தனம்.

லட்சியங்கள் மக்களிடம் போலித்தனத்தை உருவாக்குகின்றன. மேலும் இதில் உள்ள அர்த்தமற்ற செயலை இப்போது பாருங்கள். போலித்தனமாக இருக்கக்கூடாது என்கிற லட்சியத்தை மக்கள் வைத்துள்ளனர். ஆனால் போலித்தனமானது லட்சியங்களின் மூலம் தான் வருகிறது. எல்லா லட்சியங்களும்

மறைந்துவிட்டால், இங்கு போலித்தனம் இருக்காது. போலித் தனம் எப்படி இருக்க முடியம்? அது லட்சியத்தின் நிழல். லட்சியம் பெரிதாக இருந்தால், போலித்தனமும் பெரிதாக இருக்கிறது. ஆகவே இந்த உலகில் வேறு எங்கேயும் விடவும் இந்தியாவில் அநேக பாசாங்குக்காரர்களை காண்பாய். ஏனெனில் இந்தியா பல நூற்றாண்டுகளாக மிகப்பெரிய லட்சியங் களுக்காக வாழ்ந்து விட்டது. விநோதமான, வெறிகொண்ட லட்சியங் களோடு வாழ்ந்துவிட்டது.

உதாரணமாக ஒரு சமண முனிவர் புராணத்தில் வருகிற மகாவீரர் போன்று எப்போதாவது மட்டுமே சாப்பிடாமல் இருக்க முடியவில்லை என்றால் அவரால் திருப்தியுடன் இருக்க முடியாது. பன்னிரண்டு வருடகாலத்தில் மகாவீரர் ஒரே ஒரு வருட காலம்; மட்டுமே சாப்பிட்டதாக சொல்லப்படுகிறது. அதற்கு பன்னிரண்டு நாட்களுக்கு ஒருமுறை சாப்பிட்டார் என்று அர்த்தம். ஒருநாள் சாப்பிட்டுவிட்டு பன்னிரண்டு நாட்கள் உண்ணா நோன்பு இருந்தாக வேண்டும். இப்போது, இது உனது லட்சியமாக இருந்தால் நீ மிகப்பெரிய துன்பத்தில் தான் இருக்கப் போகிறாய். இது உனது லட்சியம் இல்லை என்றால் அதன் பின்னர் பிரச்சினை இல்லை.

இதை நன்றாகப் பார். லட்சியத்தில் இருந்துதான் பிரச்சினை எழுகிறது. இப்போது ஒரு கிறிஸ்தவ துறவி இதனால் ஆச்சரியப்பட மாட்டார். இது குறித்து அவருக்கு பிரச்சினை இல்லை. ஆனால் ஒரு சமணதுறவி இடைவிடாமல் கஷ்டப்படு கிறார். ஏனெனில் அவரால் இந்த லட்சியத்தை அடைய முடியாது. அவர் லட்சியத்தை நிறைவேற்ற முடியாமல் இருக்கிறார். நீங்கள் உண்மையில் தூய்மையாக இருந்தால் உங்களது உடலில் வியர்வை வராது என்பது சமணர்களின் எண்ணம். இப்போது இங்கு நீ ஒரு முட்டாள்தனமான எண்ணத்தை வைத்துக் கொள்கிறாய். உனது உடல் தொடர்ந்து வியர்வையை வெளியேற்றும். எனவே நீ தொடர்ந்து கஷ்டப்படுவாய்.

நீ அதிக லட்சியங்களைக் கொண்டிருந்தால், நீ அதிகம் கஷ்டப்படுவாய். மேலும் உனது போலித்தனமும் அதிகமாகும்.

ஏனெனில் உன்னால் அந்த லட்சியங்களை நிறைவேற்ற முடிய வில்லை என்றால் குறைந்தபட்சம் பாசாங்காவது செய்யலாம். அப்படித்தான் போலித்தனம் உள்ளே வருகிறது.

நாம் அனுபவரீதியான உண்மைகளை ஏற்றுக்கொண்டால், எந்தவிதமான தீர்ப்புகளும் இன்றி ஏற்றுக்கொண்டால் இந்த உலகம் போலித்தனமானதாக இருக்காது. என்ன இருக்கிறதோ அது இருக்கிறது. இப்படி இருக்கவேண்டும், இப்படி இருக்கக் கூடாது என்று எதுவும் இல்லாமல் இந்த இயற்கையின் இருப்போடு நாம் வாழ்ந்து விட்டால், போலித்தனமானது எப்படி எழமுடியும்?

முந்தைய தினம் யாரோ ஒருவர், ''ஓஷோ, நீங்கள் ஒரு போலித்தனமானவர் இல்லையா?'' என்று கேட்டார். ''நீங்கள் சௌகரியமாக வாழ்கிறீர்கள், நீங்கள் அழகான வீட்டில் வசிக்கிறீர்கள், நீங்கள் அழகான காரை ஓட்டிக் செல்கிறீர்கள், நீங்கள் ஒரு ராஜா போன்று வாழ்கிறீர்கள்'' என்று கேட்டார். இப்போது, போலித்தனம் என்ற வார்த்தைக்கு என்ன அர்த்தம் என்பதை அவர் புரிந்து கொள்ளவில்லை. சாத்தியப்படுகின்ற விதத்தில் அழகாக வாழவேண்டும் என்பது தான் எனது ஒட்டுமொத்த போதனையாகும். நான் ஒரு பாசாங்குகாரன் அல்ல. உண்மையில் நான் போதிக்கின்ற விதத்தில் தான் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். நான் உனக்கு வறுமையில் இருக்கும்படி போதித்து விட்டு, நான் மாளிகையில் வாழ்ந்தால் அது போலித்தனமாக இருக்கும். ஆனால், நான்உன்னை வறுமையில் வாழும்படி கூறவில்லையே, வறுமை எனது குறிக்கோள் அல்ல.

நீ மொரார்ஜி தேசாயிடம் போய் அவர் ஒரு பாசாங்குகாரர் என்று கூறு. அல்லது இந்த நாட்டின் பிரதமாகிய சஞ்சீவ ரெட்டியிடம் சென்று ''நீங்கள் ஒரு போலித்தனமானவர்,'' என்று கூறு, என்னிடம் நீ அதை கூறமுடியாது. பிரதமர் சஞ்சீவ ரெட்டியிடம், ''நீங்கள் ஒரு போலித்தனமானவர்,'' என்று கூறமுடியும். ஏனெனில் நீங்கள் காந்திய கொள்கைகளைக் கற்பிக்கிறீர்கள் என்றாலும் கூட நீங்கள் மாமிசம் சாப்பிடுகிறீர்கள். நீங்கள் அகிம்சை பற்றி பேசுகிறீர்கள். ஆனால் மாமிசம்

சாப்பிடுகிறீர்கள். இது போலித்தனம். சுத்தமான போலித்தனம், மாசுபடாத போலித்தனம்!'' என்று கூறு.

ஆனால் இதை நீ இயேசுவிடம் கூறமுடியாது. அவர் மாமிசம் சாப்பிடுகிறார். ஆனால் அவர் சைவமாக இருப்பதை போதிக்கவில்லை. அவர் அந்த விதமான அகிம்சையைப் பற்றி ஒரு போதும் பேசவில்லை. அவர் ஒரு போலித்தனமானவர் என்று உன்னால் கூற முடியாது. இயேசு திராட்சை ரசம் அருந்துகிறார். அவர் போலித்தனமானவர் என்று உன்னால் கூறமுடியாது. அவர் திராட்சை ரசம் குடிக்கக் கூடாது என்று போதிக்கவில்லை.

வாழ்க்கை குறித்த எனது ஒட்டுமொத்த அணுகுமுறையும் முழுமையாக ஏற்றுக்கொள்தல், துறவறம் செல்லாமல் வாழ்க்கையைக் கொண்டாடுதல் என்பதாக உள்ளது. நான் ஒரு பாசாங்குகாரன் என்று எப்படி நீ என்னிடம் கூறமுடியும்? இந்த உலகில் போலித்தனம் இல்லாத ஒரே மனிதன் நானாக மட்டுமே இருக்கலாம். ஏனெனில் எனக்கு எந்த ஒரு லட்சியமும் கிடையாது.

போலித்தனமானவருக்கு முதல் தேவை லட்சியங்களை வைத்திருப்பதாகும். எனக்கு ஒன்றும் இல்லை. நான் லட்சியங்கள் இல்லாதவன். நான்; இயற்கையாக வாழ்கிறேன். எனவே வசதி மற்றும் சௌகரியத்துடன் வாழ்வது இயற்கையானது. சௌகரியம் கிடைத்தால் அதில் வாழாமல் இருப்பது வெறுமனே முட்டாள்தனமானது. அது கிடைக்கவில்லை என்றால் அது வேறு விஷயம். அதன்பின்னர் என்ன கிடைக்கிறதோ அதில் சௌகரியமாக வாழ்ந்துகொள். அதில் சௌகரியமாக வாழ்வதற்கு நிர்வாகத் திறனுடன் இரு. நான் பலவிதமான சூழ்நிலைகளில் வாழ்ந்து விட்டேன். ஆனால் எப்போதும்; நான் சௌகரியமாகவே வாழ்ந்திருக்கிறேன்.

நான் மாணவனாக இருந்தபோது தினமும் பல்கலைக் கழகத்திற்கு நான்கு மைல் தூரம் நடந்து செல்வது வழக்கம். ஆனால் நான் அதை நேசித்தேன். தினமும் அந்த நான்கு மைல் தூரத்தையும். மிகுந்த சுகத்துடன் நடந்தேன். அதை சந்தோஷமாக அனுபவித்தேன். நான் ஒரு ஆசிரியராக இருந்தபோது பல்கலைக்

கழகத்திற்கு சைக்கிளில் செல்வது வழக்கம். அதையும் கூட நான் சந்தோஷமாக அனுபவித்தேன். சூழ்நிலை என்னவாக இருந்தாலும், என்னிடம் ஒரு சைக்கிளோ அல்லது ஒரு பென்ஸ் காரோ எந்த ஒரு வேறுபாட்டையும் உண்டாக்கவில்லை. நான் சௌகரியமாக வசித்தேன்.

சௌகரியம் என்பது மனதின் ஒரு நிலைப்பாடு. அது வாழ்க்கை நோக்கிய ஒரு அணுகுமுறை. நான் மிகமிக ஏழ்மை யான வீடுகளிலும் வசித்திருக்கிறேன். நான் பல்கலைக்கழகத்தில் ஒரு ஆசிரியராக ஆனபோது, ஜன்னல் இல்லாத, காற்றுவசதி இல்லாத ஒரு சிறு அறையில் வாழ ஆரம்பித்தேன். அப்போது அதற்கு மாத வாடகை வெறும் இருபது ரூபாய் மட்டுமே. ஆனால் அதை நான் நேசித்தேன். அதை சந்தோஷமாக அனுபவித்தேன். அது பிரச்சினையாகவே இருந்ததில்லை.

எந்த ஒரு தருணம் கிடைத்தாலும் அந்த தருணத்தை நான் முழுமையாக சாறு பிழிந்து எடுத்துவிட்டேன். அந்த தருணத்தை முழுவதுமாக நான் குடித்துவிட்டேன். நான் ஒருபோதும் மனம் வருந்தியதில்லை. வேறு எதையும் நான் விரும்பியதும் கிடையாது. வேறு ஏதாவது நடக்க ஆரம்பித்தால் அதையும் கூட நான் சந்தோஷமாக அனுபவித்தேன்.

நான் ஒரு பாசாங்குகாரன் என்று என்னிடம் ஒருபோதும் நீ கூறமுடியாது. என்னால் போலித்தனமானவனாக இருக்க முடியாது. ஏனெனில் இப்படி இருக்கவேண்டும், இப்படி இருக்கக் கூடாது என்று எந்த லட்சியத்தையும் நான் நிறைவேற்ற வேண்டியதில்லை. 'இருக்கிறது' எதுவோ அதுதான் இருப்பது எல்லாமாக இருக்கிறது. எனவே நான் அதில் வாழ்கிறேன்.

எனவே, உன்னைப் பற்றி குறிப்பிட்ட எண்ணங்களை வைத்துக் கொள்ளாதே என்பதுதான் நினைவில் கொள்ள வேண்டிய இரண்டாம் விஷயமாகும். நீ எப்படி இருக்க வேண்டும் என்று நீ அநேக எண்ணங்களைச் சுமந்து கொண்டிருப்பாய். அதனால்தான் பிரச்சினை எழுகிறது. ''கோழைத்தனமும், போலித்தனமும் கூட எப்படி அழகானதாக இருக்கமுடியும்?''

இப்போது நீ ஒரு தைரியமானவனாக இருக்கவேண்டும் என்கிற எண்ணத்தைக் கொண்டிருந்தால் அதன்பிறகு ஒரு கோழையாக இருப்பது அசிங்கமானதாக தெரிகிறது. ஆனால் கோழைத்தனம் என்பது ஒரு உண்மை. ஆனால் லட்சியம் என்பது ஒரு லட்சியம்தான், மனதில் உள்ள ஒரு கற்பனை தான்.

உண்மை நிலைக்காக கற்பனைகளை தியாகம் செய், எல்லா லட்சியங்களையும் கைவிட்டுவிடு அதன்பிறகு வாழ்க்கை ஒருங்கிணைந்ததாக இருக்க ஆரம்பித்து விடுகிறது. உன்னால் ஒதுக்கப்பட்ட பகுதிகள் எல்லாம் திரும்பவும் வீட்டினைத் தேடி வர ஆரம்பிக்கின்றன. நீ அடக்கி வைத்தவை மேலே எழுந்துவர ஆரம்பிக்கிறது. முதல் முறையாக ஒருவிதமான ஒருங் கிணைப்பை நீ உணர ஆரம்பிக்கிறாய். அதன்பின்னர் நீ ஒருபோது தனித்தனியாக வீழ்ந்து கிடக்கமாட்டாய்.

உதாரணமாக, நான் ஒரு அன்பான மனிதனாக இருக்க வேண்டும் என்று என்னை பிடித்து இழுத்துவைத்தால் எனது தன்னுணர்வில் கோப உணர்வுகள் எழும்போது அதை அடையாளம் கண்டு ஏற்றுக்கொண்டு அனுமதிப்பதற்கு என்னால் முடியாது. ஏனெனில் அன்பான மக்கள் கோபம் கொள்வதில்லை. ஆகவே, எனது தன்னுணர்வில் ஒரு தனிப்பட்ட ஒற்றுமையைக் கொண்டு வருவதற்கு, எதுவுமே நிலையாக இல்லாத ஒரு நிலைப்பாட்டினை நான் கண்டிப்பாக எடுத்ததாக வேண்டும். அதேசமயம் எனது தன்னுணர்வில் நொடிக்கு நொடி எழுகின்ற அனுபவரீதியான உண்மைநிலைகளை மட்டுமே நான் பற்றிக்கொள்ள வேண்டும். அப்படி இருக்கும்போது சில தருணங்களில் நான் கோபமாக இருக்கிறேன். அதன்பின்னர் சில தருணங்களில் நான் சோகமாக இருக்கிறேன். வேறு சில தருணங்களில் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன். நொடிக்கு நொடி என்ன நடக்கிறதோ அதை ஏற்றுக் கொள்ளவேண்டும். அப்போது நீ ஒன்றாகி விடுகிறாய். மேலும் இந்த ஒன்றாகுதல் தான் புரிந்து கொள்ளவேண்டிய அடிப்படை விஷயமாகும்.

ஒரு குருவானவர், ஒரு சீடன் குறிப்பிட்ட தருணத்தில் அது எப்படி இருந்திருக்க வேண்டும் என்றோ அல்லது அதை

பாதுகாக்கவோ, அதிகப்படுத்தவோ முயற்சி செய்தால் அது செயல்வடிவம் பெறுவதற்கு அவனுக்கு உதவுவதற்கு பதிலாக அந்த தருணத்தில் அவனால் மறுக்கப்பட்ட அனுபவரீதியான மனப்பாங்கோடு ஒருங்கிணைந்து இருப்பதற்கு உதவி செய்பவராக இருக்க வேண்டும்.

உன்னிடமிருந்து எல்லா லட்சியங்களையும் வெளியே எடுத்து விடுவதுதான் இங்கு எனது ஒட்டுமொத்த நோக்க மாகவும், செயல்பாடாகவும் உள்ளது. நீ இங்கு உனது லட்சியங் களோடு வருகிறாய். உனது லட்சியங்களை அதிகப்படுத்த வேண்டும் என்று நீ விரும்பிவாய், உனக்கு ஆதரவு அளிக்க வேண்டும் என்று நீ விரும்புவாய், நீ என்னவாக ஆக வேண்டும் என்று விரும்புகிறாயோ அதற்கு உனக்கு உதவவேண்டும் என்று விரும்புவாய். இங்கு நீ வந்ததன் உள்நோக்கம் அதுவாக இருக்கலாம். ஆனால் அது எனது வேலை இல்லை.

எனது வேலை அதற்கு நேர் எதிரானது. ஏற்கனவே உன்னிடம் எது உள்ளேதோ அதை ஏற்றுக்கொண்டு, உனது கற்பனைகளை எல்லாம் மறக்கச் செய்வதற்கு உனக்கு உதவி செய்வதுதான் எனது வேலையாகும். நீ அதிக உண்மையான வளாக ஆகவேண்டும் என்று நான் விரும்புகிறேன். நீ இந்த பூமியில் வேர்விட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆனால் நீ வானத்திற்கு ஆசைப்படுகிறாய். மேலும் இந்த பூமியை நீ முற்றிலும் மறந்துவிட்டாய்.

ஆம், அந்த வானமும் கூட உனக்கு கிடைக்கும். ஆனால் இந்த பூமிக்குள் ஆழமாக வேர் ஊன்றியவர்களுக்கு மட்டுமே கிடைக்கும். ஒரு மரமானது வானம் வரை உயர்ந்து வளர விரும்பினால், மேகங்களோடு மெல்லிய குரலில் பேச விரும்பினால், காற்றோடு விளையாட விரும்பினால், நட்சத்திரங்களோடு கொஞ்சம் தொடர்பு கொள்ள விரும்பினால், அதன்பின்னர் அந்த மரமானது தனது வேர்களை இந்த பூமிக்குள் ஆழத்திற்கு, மிகுந்த ஆழத்திற்கு அனுப்பவேண்டும். வேர்களை ஆழத்திற்கு அனுப்பவேண்டியது தான் முதல் விஷயமாகும். இரண்டாம் விஷயம் தானாகவே நடக்கும். வேர்கள் ஆழமாக

செல்லும்போது மரம் உயரமாக வளர்கிறது. வேறு எதையும் செய்ய வேண்டிய அவசியம் கிடையாது.

உண்மை என்னும் மண்ணிற்குள் உனது வேர்களை ஆழத்திற்கு அனுப்புவதுதான் எனது முயற்சியாக உள்ளது மேலும் உண்மை என்பது நீ எப்படி இருக்கிறாயோ அதுதான் உண்மையாகும். அதன்பின்னர் திடீரென்று விஷயங்கள் நடக்க ஆரம்பிக்கும். நீ எழுந்து நிற்க ஆரம்பிப்பாய். நீ எப்போதும் முயற்சி செய்த ஆனால் உன்னால் ஒருபோதும் சாதிக்கமுடியாமல் போன உனது லட்சியங்கள் தானாகவே நடக்க ஆரம்பிக்கும்.

ஒருவன் தனது உண்மை நிலையானது எப்படி உள்ளதோ அதை அப்படியே ஏற்றுக் கொண்டால், அந்த ஏற்றுக் கொள்ளுதலில் எல்லா மனப் பதற்றங்களும் மறைந்து விடுகிறது. துக்கம், துன்பம், கவலை எல்லாம் வெறுமனே ஆவியாகப் போய்விடும். கவலை இல்லாமல், மனப்பதற்றம் இல்லாமல், பிரிவுகளாக இருக்காமல், பிளவுகள் இல்லாமல் இருந்தால் அதன்பிறகு திடீரென்று அங்கு மகிழ்ச்சி இருக்கிறது. அங்கு அன்பு இருக்கிறது. அங்கு கருணை இருக்கிறது. இவை எல்லாம் அடைய வேண்டிய லட்சியங்கள் அல்ல. இவை மிகவும் இயற்கையான விஷயங்கள். நீ செய்யவேண்டியதெல்லாம் அந்த லட்சியங்களை விலக்கிவிடுவதல் ஒன்றேயாகும். ஏனெனில் அந்த லட்சியங்கள் தான் தடைகள் போன்று செயல்புரிந்து வருகின்றன. ஒருவன் எந்த அளவுக்கு அதிக லட்சியங்களோடு இருக்கிறானோ அந்த அளவுக்கு அவன் அதிக தடைகளோடு இருக்கிறான்.

கேட்பதற்கு இது மிகவும் முரண்பாடானதாக இருக்கலாம். ஆனால் அமைதி என்பது வேதனைக்கு நடுவில் மட்டுமே கண்டுகொள்ளப்பட வேண்டும். ஆனால், வேதனை அல்லது எதிர்மறையான விஷயம் என்று எது கருதப்படுகிறதோ அதில் இருந்து தப்பி ஓடுவதோ—அல்லது அதற்கு எதிராக போராடுவதோ ஒருபோதும் அமைதியைக் கொண்டுவராது.

ஆம், தோழைத்தனம் உனக்கு வேதனையைப் கொடுக்கிறது. பயம் உனக்கு வலியைக் கொடுக்கிறது. கோபம் உனக்கு

வேதனையைக் கொடுக்கிறது. இவை எல்லாம் எதிர்மறை உணர்வுகள். ஆனால் அமைதி என்பது வேதனையை ஏற்றுக் கொண்டு அதை உள்வாங்கி கொள்வதால் மட்டுமே அடையப் படுகிறதே தவிர அந்த வேதனையை ஒதுக்கித் தள்ளுவதால் அல்ல. அதை ஒதுக்கித் தள்ளுவதால் நீ சிறுத்துப் போய்க் கொண்டே இருப்பாய், உன்னிடம் குறைந்த பலம் மட்டுமே இருக்கும். உனக்குள் இடைவிடாத யுத்தத்தில் இருப்பாய். அதில் உனது ஒரு கையானது அடுத்த கையோடு சண்டை போட்டுக் கொண்டு இருக்கும். அதில் நீ உனது சக்தியை வெறுமனே இழந்து கொண்டே வருவாய்.

மனவேதனையோடு தோழமையோடு இருப்பது மட்டுமே அதிலிருந்து விடுதலை பெற்று அதை கடந்து செல்வதற்கான வாசலைத் திறக்கிறது என்கிற மிகவும் அடிப்படையாக விஷயத்தை நீ நினைவில் வைத்திருக்க வேண்டும். வேதனை தருகின்ற எல்லாமும் ஏற்றுக் கொள்ளப்படவேண்டும். அதோடு ஒரு பேச்சுவார்த்தை உருவாக்கப்பட வேண்டும். அதுவும் நீதான் அதற்கு அப்பால் செல்வதற்கு வேறு ஒரு வழியும் கிடையாது. அதை உள்வாங்கி கொள்வது மட்டுமே ஒரே வழியாகும்.

மேலும் அது அபரிமிதமான சக்தி உள்ளது. கோபம் என்பது சக்தியாக இருக்கிறது. பயம் சத்தியாக இருக்கிறது. அதேபோன்று கோழைத்தனமும் சத்தியாக உள்ளது. உனக்குள் நிகழ்கின்ற எல்லாமும் மிகப்பெரிய இயக்கநிலையுடன் உள்ளது. மாபெரும் அளவிலான சத்தியானது அதன்பின் மறைந்துள்ளது. நீ அதை ஏற்றுக்கொள்ளும் போது அந்த சத்தி உன்னுடையதாக ஆகிறது. நீ பலம் மிக்கவனாக ஆகிறாய். நீ அகலமானவனாக ஆகிறாய். நீ நகர்ந்து செய்ய நிறைய இடம் கிடைக்கிறது. அதன்பின்னர் நீ ஒரு பெரிய அக உலகினை பெற்று விடுகிறாய்.

அதற்கு இணங்கி போகின்ற, அதை இருப்பதற்கு விட்டுவிடுகின்ற அல்லது அதை முழுமையாக ஏற்றுக் கொள்தல் மட்டுமே அதன் முடிவாக இருக்கிறது. மன வேதனையானது அதை அதன் முழுமையோடு ஏற்றுக் கொள்வதால் மட்டுமே முடிவுக்கு வருகிறது. ஏதோ சில தூண்டுதல்கள் மட்டும்

இருப்பதாலோ அல்லது ''வேதனை'' என்று பெயரிடப்பட்ட உண்மைநிலை அங்கு இருப்பதாலோ, மனவேதனையானது அங்கு இல்லை. அதற்கு மாறாக, உண்மை அல்லது உண்மை நிலையானது அதை தவிர்க்க வேண்டும். அல்லது அந்த உண்மையை எதிர்க்க வேண்டும் என்கிற பொருள் விளக்கத்தை உண்டாக்குவதால் தான் வேதனை என்பது இருக்கிறது.

இதைப் புரிந்து கொள்ள முயற்சி செய். மனவேதனை என்பது உனது சொந்த படைப்பு. கோழைத்தனம் வேதனைக் குரியது அல்ல. ஆனால் கோழைத்தனம் தவறானது என்கிற உனது எண்ணம். கோழைத்தனம் அங்கு இருக்கக்கூடாது என்கிற உனது உண்மைநிலையை திரித்து கூறுதல்தான் வேதனையாக உள்ளது. அசோகன் தனக்குள், ''அசோகா, நீ ஒரு கோழையா? கூடாது. நீ எப்படி கோழையாக இருக்கமுடியும்? நீ ஒரு தைரியமான மனிதன்'', என்று கூறிக்கொண்டிருக்க வேண்டும்.

உன்னிடம் குறிப்பிட்ட ஆணவம் உள்ளது. மேலும் அந்த ஆணவம் கோழைத்தனத்தை கண்டனம் செய்து கொண்டே போகிறது. அந்த கண்டனம் மற்றும் உண்மையை திரித்து கூறுவதால்தான் வேதனை எழுகிறது. எனவே கோழைத்தனம் அங்கு இருக்கும்போது, அது ஒரு காயம் போன்று ஆகிவிடுகிறது. உன்னால் அதை ஏற்றுக் கொள்ளுதல் முடியாது. அதை வெறுத்து ஒதுக்குவதன் மூலம் உன்னால் அதை அழிக்கவும் முடியாது. வெறுத்து ஒதுக்குவதால் எதுவும் அழிக்கப் படுவதில்லை. கூடிய விரைவில் நீ அதோடு ஒத்துழைத்தாக வேண்டும். மீண்டும் மீண்டும் அது வெடித்து கிளம்பும், மீண்டும் மீண்டும் அது உனது அமைதியைக் குலைத்துவிடும்.

ஒரு உண்மை அல்லது உண்மைநிலையில் இருந்து மனமானது பின்புறமாக தாக்குவதால் தான் அங்கு வேதனை இருக்கிறது. கோழைத்தனம், பயம், கோபம், சோகம் போன்ற உண்மைநிலையில் இருந்து நீ பின்வாங்கி விடுகிறாய். பின்வாங்காதே. ஒரு உண்மையில் இருந்து பின்வாங்குதல் வேதனையை உருவாக்குகிறது.

மனவேதனை என்பது உண்மை நிலையில் இருந்து தப்பி ஓடுதல் அல்லது எதிர்த்தல் என்கிற செயல்முறையின் அங்கமாக இருக்கிறது. எந்த ஒரு உணர்விலும் வேதனை என்பது உள்ளடங்கி இல்லை. ஆனால் அதை வெறுத்து ஒதுக்க வேண்டும் என்று நினைப்பதற்கு பிறகு மட்டுமே எழுகிறது. எது ஒன்றையும் நீ வெறுத்து ஒதுக்க முடிவு செய்கின்ற நொடிப்பொழுதில், வேதனை எழுகிறது.

உனக்குள் அதை கவனி, மாபெரும் பரிசோதனைகள் செய்கின்ற பரிசோதனைக் கூடமாக ஆகிவிடு. நீ பயத்தை உணர்கிறாய் என்பதை வெறுமனே பார். இருள் நிறைந்து உள்ளது, நீ தனியாக இருக்கிறாய். பலமைல் தூரத்திற்கு யாருமே இல்லை. நீ காட்டில் வழி தவறிவிட்டாய். இரவின் இருளில் மரத்தின் அடியில் உட்கார்ந்து கொண்டு இருக்கிறாய். அப்போது சிங்கங்கள் கர்ஜிக்கின்றன. எனவே உனக்கு பயம் வருகிறது.

இப்போது இதில் இரண்டு சாத்தியக்கூறுகள் உள்ளன. ஒன்று அதை வெறுத்து ஒதுக்குதல். பயத்தினால் நீ நடுங்கிவிடாமல் இருக்கும்படி உன்னை மிகவும் இறுக்கமாக பிடித்துக் கொள்தல். அப்போது அந்தபயம் ஒரு வேதனையான விஷயமாக ஆகிறது. அது அங்கே உள்ளது மேலும் அது மனவேதனையைக் கொடுக்கிறது. நீ உன்னை இறுக்கமாக பிடித்துக் கொண்டாலும்கூட அது அங்கே இருப்பதால் அது மனதைக் காயப்படுத்துகிறது.

இரண்டாவதாக நீ அதை சந்தோஷமாக அனுபவிப்பது. நடுக்கம் வந்தால் நடுங்கு. அதுவே ஒரு தியானமாக இருக்கட்டும். அது இயற்கையானது. சிங்கம் கர்ஜிக்கிறது. இரவு இருள் நிறைந்து உள்ளது. ஆபத்து அருகில் உள்ளது. எந்த நேரமும் மரணம் நடக்கலாம். இதை சந்தோஷமாக அனுபவி! உனது நடுக்கம் ஒரு நடனமாக ஆகட்டும். நீ அதை ஏற்றுக்கொண்டு விட்டால் அதன்பின்னர் நடுக்கம் நடனமாகி விடுகிறது. அந்த நடுக்கத்தோடு ஒத்துழைப்பு கொடு அப்போது நீ ஆச்சரியப்படுவாய். நடுக்கத்தோடு நீ ஒத்துழைத்தால், நீ நடுக்கமாக ஆகிவிட்டால், எல்லா வேதனையும் மறைந்து விடுகிறது.

உண்மையில், நீ நடுங்கினால், வேதனைக்கு பதிலாக உனக்குள் மிகப்பெரிய சக்தி எழுவதை நீ காண்பாய். அதைத்தான் உனது உடலானது மிகச்சரியாக செய்ய விரும்பியது. பயத்தில் ஏன் நடுக்கம் வருகிறது? நடுக்கம் என்பது ஒரு ரசாயன செயல்முறை. அது சக்தியை வெளியிடுகிறது. அது உன்னை சண்டை போடவோ அல்லது தப்பி ஓடவோ தயார்படுத்துகிறது. அது உனக்கு திடீர் உந்துதலைக் கொடுக்கிறது. அது ஒரு அவசரக்கால ஏற்பாடு. நீ நடுங்கும்போது நீ கதகதப்பாக இருக்க ஆரம்பிக்கிறாய்.

அதனால்தான் குளிராக இருக்கும்போது நீ நடுங்குகிறாய். அப்போது அங்கு பயம் இல்லை. எனவே குளிரில் நீ ஏன் நடுங்குகிறாய்? குளிரில் உடலானது தானாகவே நடுங்குகிறது. அப்போதான் உடல் சூடாகிறது. இது உடலின் ஒருவிதமான இயல்பான உடற்பயிற்சி. உள்ளே உள்ள திசுக்கள் சூடாவதற்காக நடுங்க ஆரம்பிக்கின்றன. அப்போது தான் அவைகளால் குளிரை எதிர்கொள்ள முடியும்.

இப்போது, நீ குளிரை உணரும்போது அந்த நடுக்கத்தை அடக்கி வைத்தால் அது வேதனையாக ஆகிவிடும். இதே விதமாகத்தான் நீ பயத்தில் இருக்கும் போதும் நடுங்குகிறது. உடல் முயற்சி செய்கிறது. அது ரத்தத்தில் ரசாயனங்களை வெளியிடுகிறது. ஆபத்தை எதிர்கொள்வதற்கு உன்னை அது தயார்படுத்துகிறது. ஒருவேளை நீ சண்டை போடவேண்டியது இருக்கலாம் அல்லது நீ ஓடிப்போக வேண்டியது இருக்கலாம். இரண்டிற்கும் சக்தி தேவை.

பயத்தின் இந்த அழகினைப் பார், பயத்தின் இந்த ரசவாத வேலையைப் பார். அது உன்னை அந்த சூழ்நிலைக்கு தயார் செய்ய முயற்சிக்கிறது. அப்போதுதான் நீ அந்த சவாலை ஏற்றுக் கொள்ளமுடியும். ஆனால் அந்த சவாலை ஏற்பதற்கு மாறாக, அந்த பயத்தை புரிந்து கொள்வதற்கு மாறாக நீ அதை வெறுத்து ஒதுக்கிறாய். நீ உன்னிடம், "அசோகா, நீ எப்படிப்பட்ட பெரிய மனிதன், மிகப்பெரிய சந்நியாசி, நீ நடுங்குவதா? மரணம் என்பது கிடையாது. மேலும் ஆன்மா அழிவில்லாதது என்று ஓஷோ

கூறியதை நினைவு கொள். அழிவில்லா ஆன்மா நடுங்குவதா? 'மரணம் உன்னை அழித்துவிடாது, நெருப்பு உன்னை எரித்து விடாது, ஆயுதங்கள் உன்னை ஊடுருவிச் செல்லமுடியாது'' என்று கிருஷ்ணர் கூறியதை நினைவில் கொள். நடுங்காதே. உன்னைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்து விடு'' என்று கூறுகிறாய்.

இப்போது நீ ஒரு முரண்பாட்டினை உருவாக்கி கொண்டு இருக்கிறாய். உனது இயற்கையான செயல்பாடாக பயம் இருக்கிறது. ஆனால் அந்த பயத்திற்கு முரண்பாடாக ஒரு செயற்கையாக செயல்முறையை நீ உள்ளே கொண்டுவருகிறாய். இயற்கையான செயல்முறையில் குறுக்கிடும்படியாக நீ லட்சியங்களைக் கொண்டு வருகிறாய். அப்போது அங்கு வேதனை இருக்கும் ஏனெனில் அங்கு சண்டை இருக்கும்.

உனது ஆன்மா அழிவற்றதா அல்லது இல்லையா என்பதைப் பற்றி நீ கவலைப்படாதே. இப்போது உள்ள உண்மை உனக்குள் பயம் இருக்கிறது. இந்த நொடிப்பொழுதில் உள்ளதைக் கவனி மேலும் இந்த நொடிப்பொழுது உன்னை எடுத்துக்கொள்ள விட்டுவிடு, இந்த நொடிப்பொழுது உன்னை ஆட்கொள்ளும்படி விட்டுவிடு. அதன்பிறகு அங்கு வேதனை இருக்காது. பயம் என்பது உனக்குள் உள்ள கண்ணுக்கு தெரியாத சக்திகளின் நடனம். மேலும் அது உன்னை தயார்படுத்துகிறது. அது ஒரு நண்பன், அது உனது எதிரி அல்ல. ஆனால் உனது தவறான பொருள் விளக்கம் உனக்கு ஏதோ தவறைச் செய்து கொண்டே போகிறது.

முக்கியமாக, மனவேதனை உணர்வானது உனது தன்னுணர்வை அதனிடம் இருந்து பிரிப்பதற்கான முயற்சியினால் உருவாக்கப்படுகிறது. உனது தன்னுணர்வின் ஒற்றுமையை இரண்டாக பிரிப்பதற்கு முயற்சி நடக்கிறது. பயத்தை கவனிக்கின்ற உணர்ச்சியாகவும், பயத்திலிருந்து ஓடிப்போக நினைக்கின்ற கருத்தளவிலான விஷயமாகவும் அல்லது வெறுத்து ஒதுக்கப்பட்ட உணர்ச்சியை ஆதிக்கம் செலுத்துவதாகவும் உனது தன்னுணர்வை பிரிக்க நினைக்கின்ற முயற்சியால்

தான் மனவேதனை உருவாக்கப்படுகிறது. தன்னுணர்வானது இரட்டைத் தன்மையுடன் இருப்பதுதான் வேதனைக்கான காரண மாக இருக்கிறது. அப்படி இருக்கும்போது தன்னுணர்விற்குள் ஒற்றுமையை உண்டாக்குவது மட்டுமே வேதனையைப் போக்கும். ஒன்றுபடுதலில்தான் வேதனை முடிவுக்கு வருகிறது.

பயம், கோபம் போன்ற உணர்ச்சிகளுக்கும் உனக்கும் இடையே நீ உருவாக்கிவிட்ட அந்த பிரிவினால் நீ இரண்டாக ஆகிவிடுகிறாய். நீ கவனிப்பவனும், கவனிக்கப்படுவதுமாக ஆகிவிடுகிறாய். ''நான் இங்கு இருக்கிறேன், கவனிப்பவனாக இருக்கிறேன். வேதனை அங்கு இருக்கிறது, கவனிக்கப் படுவதாக இருக்கிறது. ஆனால் நான் அந்த வலி அல்ல'' என்று நீ கூறுகிறாய். இப்போது இந்த இரட்டைத் தன்மை வேதனையை உருவாக்குகிறது. கவனிப்பவனும் நீ அல்ல, கவனிக்கப்படு வதும் நீ அல்ல, நீ இரண்டுமாக இருக்கிறாய். கவனிக்கப்படு வதும், கவனிக்கிறவனும் ஆகிய இரண்டுமாக இருக்கிறாய்.

''நான் பயத்தை உணர்கிறேன்'' என்று சொல்லாதே. இது அதை தவறாகக் கூறுவதாகும். ''நான் பயப்படுகிறேன்'' என்று சொல்லாதே. அதுவும் கூட தவறான விதமாக கூறுவதாகும். வெறுமனே, ''நான் பயமாக இருக்கிறேன், இந்த நொடிப் பொழுதில் பயமாக நான் இருக்கிறேன்'' என்று சொல். எந்த ஒரு பிரிவினையையும் ஏற்படுத்தாதே.

''நான் பயத்தை உணர்கிறேன்'' என்று நீ கூறும்போது உன்னையே நீ அந்த உணர்ச்சியில் இருந்து தனியாக பிரித்துக் கொள்கிறாய். நீ எங்கோ தொலைவில் இருக்கிறாய். அந்த உணர்ச்சியானது உன்னைச் சுற்றிலும் உள்ளது. இதுதான் அடிப்படையில் ஒன்றுபடாமல் இருத்தல். ''நான் பயமாக இருக் கிறேன்'' என்று கூறு. அப்போது கவனி. அது தான் அப்போது உள்ள நிலை. பயம் அங்கு இருக்கும்போது நீ பயமாக இருக்கிறாய்.

சிலசமயம் நீ நேசத்தை உணர்கிறாய் என்பது கிடையாது. நேசமானது உண்மையில் உன்னிடம் இருக்கும்போது நீ நேசமாக

இருக்கிறாய். மேலும் கோபம் இருக்கும் போது நீ கோபமாய் இருக்கிறாய். ''கவனிப்பவனே, கவனிக்கப்படுவதாகவும் இருக்கிறான்,'' என்று கிருஷ்ணமூர்த்தி மீண்டும் மீண்டும் கூறுவதற்கு அதுதான் அர்த்தம். காண்பவனும், காணப்படுவதும், மேலும் அனுபவிப்பனும், அனுபவமும் நீ தான். எனவே அகப்பொருள், புறப்பொருள் என்கிற இந்த பிரிவினையை உருவாக்காதே. எல்லா பிரிவினைக்கும், எல்லாத் துன்பத்திற்கும் இதுதான் மூலகாரணமாக உள்ளது.

இப்படி, ஒருவர் நல்லது அல்லது கெட்டது என்று தீர்மானிக்க கூடாது. ஒருவரின் தன்னுணர்வில் என்ன எழுகிறதோ அது சம்பந்தமாக எந்தவிதமான குறிக்கோளோ அல்லது எந்தவிதமான ஆசையோ அல்லது அதற்கு எந்தவிதமான பெயரையோ கொடுக்கக் கூடாது. அங்கு தவிர்த்துவிடுதல், எதிர்ப்பு தெரிவித்தல், கண்டனம் செய்தல், தீர்ப்பளித்தல், கலைத்தல் அல்லது பற்றுக்கொள்தல் என எந்தவிதமான செயல்களும் இல்லாமல் இருக்கும்போது எதையும் தேர்வு செய்யாத ஒரு விழிப்புணர்வு மட்டுமே இருக்கும்போது ஆன்ம ஒன்றுபடுதல் நிறுவப்படுகிறது.

எதையும் தேர்வு செய்யாத ஒரு விழிப்புணர்வு. அதுதான் உனது உயிர் உணர்வின் உள்ளுக்குள் உள்ள புதிர்களைத் திறப்பதற்கான முடிவான திறவுகோலாக இருக்கிறது. இது நல்லது என்றும் சொல்லாதே, இது கெட்டது என்றும் சொல்லாதே. நீ ஏதாவது ஒன்றினை நல்லது என்று கூறும்போது அதன்மீது பற்றுதல் எழுகிறது, கவர்ச்சி எழுகிறது, ஏதாவது ஒன்றினை நீ கெட்டது என்று கூறும்போது, அதிலிருந்து விலகுவது எழுகிறது. பயம் என்பது பயம்தான். அது கெட்டதும் அல்ல நல்லதும் அல்ல. அதை மதிப்பீடு செய்யாதே. வெறுமனே அதை இருக்கவிடு. அது அப்படியே இருக்கட்டும்.

எந்தவிதமான கண்டனமும், தீர்மானங்களும் இல்லாமல் நீ இருக்கும்போது, எதையும் தேர்வு செய்யாத அந்த விழிப்புணர்வு இருக்கும்போது மனவேதனை வெறுமனே காலைச் சூரியனின் ஒளியில் பனித்துளியானது ஆவியாகிப் போவது போன்று

மறைந்து விடுகிறது. அதன்பின்னர் அதற்கு பின்னால் ஒரு தூய வெளி விட்டுச் செல்லப்படுகிறது. அதன் பின்னர் விட்டுச் சொல்லப்படுவது களங்கமில்லாத வெளியாக உள்ளது.

இதுதான் ஒன்று என்பது, தாவோ அல்லது நீ இதைக் கடவுள் என்றும் அழைக்கலாம். எல்லா வேதனைகளும் மறைந்துவிடும் போது, எந்த வழியிலும் நீ பிரிவுபடாமல் இருக்கும்போது, கவனிப்பவன் கவனிக்கப்படுவதாக ஆகிவிடும்போது, உன்னிடத்தில் எது விடப்பட்டுள்ளதோ அதுதான் கடவுளின் அனுபவம் அல்லது சமாதி அல்லது நீ என்ன நினைக்கிறாயோ அதுவாகும்.

மேலும் இந்த நிலையில் ஆன்மா என்பது கிடையாது. ஏனெனில் இதில் கவனிப்பாளன், கட்டுப்படுத்துபவர், தீர்மானிப்பவர் கிடையாது. நொடிக்கு நொடி எழுந்து மாறுகின்ற ஒன்றாக மட்டுமே ஒருவர் இருக்கிறார். சில நொடிப்பொழுதுகள் அது உயர்வாக இருக்கலாம். மற்ற தருணங்களில் அது சோகமாக இருக்கலாம், மென்மையாக இருக்கலாம், அழக்கக்கூடியதாக இருக்கலாம், பயம், தனிமை இப்படி மேலும் பலவாறாக இருக்கலாம்.

ஒருவர், ''நான் சோகமாக இருக்கிறேன்'' அல்லது ''நான் சோகத்தைப் பெற்றிருக்கிறேன்'' என்று கூறாமல், அதற்கு பதிலாக ''நானே சோகம்'' என்று சொல்லவேண்டும். ஏனெனில் முதல் இரண்டு வாக்குமூலங்களும் எது இருக்கிறதோ அதில் இருந்து தனியாக ஒரு ஆன்மா இருப்பதைக் குறிக்கின்றன. உண்மைநிலையில் அந்த குறிப்பிட்ட உணர்ச்சி யாருக்கு நடந்த கொண்டிருக்கிறதோ அவருக்கு வேறு ஆன்மா கிடையாது. அங்கு உணர்ச்சி மட்டுமே இருக்கிறது. இதுகுறித்து தியானம் செய். அங்கு உணர்ச்சி மட்டுமே இருக்கிறது.

பயத்தை உணர்கின்ற அசோகா அங்கு இல்லை, ஒரு குறிப்பிட்ட தருணத்தில் அசோகா பயமாக இருக்கிறான். சில குறிப்பிட்ட தருணங்களில் அசோகா பயமாக இல்லை; ஆனால் அந்த தருணத்தில் இருந்து, அதில் எழுகின்ற ஒன்றில் இருந்து

தனியாகப் பிரிந்த ஒருவன் அல்ல. அங்கு உணர்ச்சி மட்டுமே உள்ளது. இப்படியாக, அந்த தருணத்தில் அனுபவரீதியாக என்ன எழுகிறதோ அதுகுறித்து எதுவும் செய்ய இயலாது. அதைச் செய்வதற்கு அங்கு வேறு யாரும் கிடையாது.

இந்த வேதனையோடு ஒன்று கலத்தல் மிகப்பெரிய வேதனையைக் கொண்டு வராது. ஆனால் உண்மையில் விடுதலையையும், மகிழ்ச்சியையும் கொடுக்கிறது. உண்மையில் தன்னுணர்வானது, வெறும் மனவேதனையோடு மட்டுமல்ல, அது எதனுன் ஒன்று கலந்தாலும் அது அமைதியையும், மகிழ்ச்சியையும் கொடுக்கிறது. உண்மையான நிலையில் இரு அப்போது அந்த உண்மைநிலை உன்னை விடுதலை அடையச் செய்யும்.

நீ கேட்ட கேள்விய்ை நான் மீண்டும் திரும்பக் கூறுகிறேன், ''கோழைத்தனம் மற்றும் போலித்தனமும் கூட அழகானதா?'' இருக்கின்ற எல்லாரும், அசிங்கமும் கூட அழகானதுதான். ''நான் எனது கோழைத்தனத்தை, எனது போலித்தனத்தை எனது கஞ்சத்தனத்தை ஏற்றுக்கொள்ள முடியுமா மற்றும் நீங்கள் முட்டாள்தனம் என்று அழைக்கின்ற அந்த தனிப்பட்ட மனப் பாங்கினையும் ஏற்றுக்கொள்ள முடியுமா? என்றும் நீ கேட்கிறாய்.

நீ ஏற்றுக்கொள்கிறாயோ அல்லது இல்லையோ என்ன இருக்கிறதோ அது உன்னிடம் இருக்கிறது. நீ ஏற்றுக்கொள்வதும் அல்லது வெறுத்து ஒதுக்குவதும் எந்தவிதமான வேறுபாட்டையும் உண்டாக்கிவிடாது. எது உள்ளதோ அது உனக்குள் உள்ளது. நீ அதை ஏற்றுக்கொண்டால் உனக்குள் மகிழ்ச்சி எழுவதை நீ பெறுகிறாய். நீ அதை வெறுத்து ஒதுக்கினால் நீ வேதனையைப்; பெறுகிறாய். ஆனால் உண்;மை நிலையானது இன்னமும் அங்கேயே இருக்கிறது. உனக்கு மனவேதனை இருக்கலாம். அது உன்னால் உருவாக்கப்பட்டது. ஏனெனில் உனக்குள் எழுந்த ஏதோ ஒன்றினை உன்னால் ஏற்றுக் கொள்ளவோ, உள்வாங்கிக் கொள்ளவோ முடியவில்லை. நீ உண்மைநிலையை மறுத்து விட்டாய். அப்படி மறுத்தால் நீ ஒரு சிறைக் கைதி ஆகிவிட்டாய். உண்மைநிலை உன்னை விடுவிக்கும், ஆனால் நீ அதை

மறுத்துவிட்டாய். அதனால் நீ கைவிலங்கோடு இருக்கிறாய். உண்மைநிலையை மறுத்துவிட்டால், நீ மேலும் மேலும் சிறைவாசத்தில் இருப்பாய்.

உண்மை நிலை அப்படியே இருக்கிறது. நீ அதை ஏற்றுக் கொள்கிறாயா அல்லது அதை மறுக்கிறாயா என்பது ஒரு பொருட்டல்ல. அது உண்மை நிலையை மாற்றிவிடாது. அது உனது மனதின் உண்மைநிலையை மாற்றுகிறது. அப்போது அங்கு இரண்டு சாத்தியங்கள் உள்ளன. ஒன்று வேதனை அல்லது மகிழ்ச்சி, நோய் அல்லது ஆரோக்கியம். நீ அதை மறுத்தால் அங்கு நோய், அசௌகரியம் இருக்கும். ஏனெனில் நீ உனது உயிர் உணர்வில் இருந்து ஒரு கிளையை வெட்டி உன்னிலிருந்து தனியாக எடுத்து விடுகிறாய். அது உனக்குள் காயங்களையும், வடுக்களையும் விட்டுச் செல்லும். நீ அதை ஏற்றுக் கொண்டால் அங்கு கொண்டாட்டமும், ஆரோக்கியமும், முழுமையும் இருக்கும்.

''மேலும் இப்படிப்பட்ட குணங்களை நான் ஏற்றுக்கொண்டு விட்டால், இவை எல்லாம் என்னை அடைத்து விடுகின்றன. நான் எப்படி விடுதலை அடைவது? அவை உன்னை அடைத்து வைக்கவில்லை. இது உன்னுடைய தவறான பொருள் விளக்கம். எந்த உண்மைநிலையும் ஒருபோதும் யாரையும் கட்டிப் போடுவதில்லை. அது உண்மைநிலையின் குணம் அல்ல. ஆனால் நீ அதை மறுக்கும்போது உனது அந்த மறுப்பில் நீ உன்னை மூடிக்கொள்கிறாய். அந்த மறுப்பில் நீ முடங்கிப் போகிறாய், உனக்கு முடக்குவாதம் வந்து விடுகிறது.

''மேலும் இப்படிப்பட்ட குணங்களை நான் ஏற்றுக்கொண்டு விட்டால், இவை எல்லாம் என்னை அடைத்து வைத்து விடுகின்றன. நான் எப்படி விடுதலை அடைவது?'' என்று நீ கேட்கிறாய். விடுதலை அடையவேண்டும் என்கிற அந்த எண்ணமே மீண்டும் ஒரு லட்சியமாக ஆகிவிடுகிறது. விடுதலை என்பது லட்சியம் அல்ல. நீ என்னவாக இருக்கிறாயோ அதை ஏற்றுக் கொள்வதால் விளைகின்ற ஒரு உபநிகழ்வு. விடுதலை என்பது உபவிளைவு. அது உனது முயற்சி மற்றும் சாசகச்

செயலுக்கான லட்சியம் அல்ல, அது மிகப்பெரிய முயற்சியால் வருவதில்லை. நீ ஓய்வுடன் இருக்கும்போது அது நடக்கிறது.

நீ உனது கோழைத்தனத்தை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்றால் உன்னால் எப்படி ஓய்வுடன் இருக்கமுடியும்? உன்னால் உனது பயத்தை ஏற்றுக் கொள்ள முடியவில்லை என்றால், உன்னால் உனது அன்பை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்றால், உன்னால் உனது சோகத்தை ஏற்றுக்கொள்ள முடிய வில்லை என்றால், உன்னால் எப்படி இளைப்பாற முடியும்?

மக்கள் ஏன் இளைப்பாற முடிவதில்லை? அவர்களின் இடைவிடாத மனப்பதற்றத்தின் அடிப்படைக் காரணம் என்ன? இதுதான் அடிப்படைக் காரணம். காலம்காலமாக, உனது மதங்கள் எல்லாம் எல்.லாவற்றையும் மறுப்பதற்கு கற்றுக் கொடுத்துள்ளன. அவை இதையெல்லாம் துறவு கொள்வதற்கு கற்றுக் கொடுத்துள்ளன. இவை எல்லாம் தவறானவை என்று கற்றுக் கொடுத்துள்ளன. நீ இதை மாற்ற வேண்டும். நீ அதை மாற்றவேண்டும் அப்போதுதான் கடவுள் உன்னை ஏற்றுக் கொள்வார். இப்படி அவர்கள் அதிக மறுத்தல்களை உருவாக்கி விட்டார்கள். எனவே கடவுளைப் பற்றி என்ன சொல்வது? உன்னையே நீ ஏற்றுக் கொள்வதில்லை; உன்னோடு வசிக்கின்ற மக்களை நீ ஏற்றுக் கொள்வதில்லை. நீ எப்படி கடவுளால் ஏற்றுக் கொள்ளப்படுவாய்? கடவுள் உன்னை ஏற்கனவே ஏற்றுக் கொண்டு விட்டார். அதனால்தான் நீ உயிரோடு இருக்கிறாய், இல்லையெனில் நீ இங்கு இருந்திருக்க மாட்டாய்.

கடவுள் உன்னை ஏற்கனவே ஏற்றுக் கொண்டுவிட்டார். இதுதான் எனது அடிப்படை போதனை. நீ அதை சம்பாதித்து பெற வேண்டியதில்லை. நீ ஏற்கனவே அதற்கு தகுதி பெற்றுவிட்டாய். இளைப்பாறு. கடவுள் உன்னை எப்படி உண்டாக்கி இருக்கிறாரோ அந்த வழியில் சந்தோஷமாக இரு. அவர் உனக்குள் கோழைத்தனத்தை வைத்திருந்தால், அதன் பின்னர் அதில் ஏதாவது ஒன்று இருக்கவேண்டும். திடமாக நம்பு, அதை ஏற்றுக்கொள். ஒரு கோழையாக இருப்பதில் என்ன தவறு? பயப்படுவதில் என்ன தவறு உள்ளது? முட்டாள்கள் மட்டுமே

பயப்படுவதில்லை. புத்தி சுவாதீனம் இல்லாதவர்கள் தான் பயப்படமாட்டார்கள்.

ஒரு பாம்பு உனது பாதையில் வந்தால், நீ உடனடியாக துள்ளிக்குதிப்பாய். புத்தி சுவாதீனம் இல்லாதவன், முட்டாள், புத்தியற்றவன் பாம்பைக் கண்டு பயப்பட மாட்டான். ஆனால் புத்திக்கூர்மை உள்ளவன், எந்த அளவுக்கு அந்த புத்திசாலித் தனத்துடன் இருக்கிறானோ அந்த அளவுக்கு அவன் வேகமாக துள்ளிக்குதித்து விடுவான். இது புத்திசாலித்தனத்தின் பங்காகும். இது முற்றிலும் நல்லது. இது உனது வாழ்க்கைக்கு உதவுகிறது, இது உனது வாழ்க்கையை பாதுகாக்கிறது.

ஆனால் மனிதனுக்கு முட்டாள்தனமான குறிக்கோள்கள் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் நீ இங்கு இருக்கும்போதும் கூட நீ உனது பழைய பழக்கவழக்கத்திலேயே இன்னமும் இருக் கிறாய். நான் என்ன சொல்கிறேன் என்பதை நீ கேட்பதில்லை. ''நீ என்னவாக இருந்தாலும், நிபந்தனை இன்றி உன்னை ஏற்றுக் கொள். ஏற்றுக் கொள்தல் மட்டுமே உருமாற்றம் அடைவதற்கான திறவுகோல்,'' என்று நான் கூறிக்கொண்டு இருக்கிறேன்.

உருமாற்றம் அடைவதற்காக ''உன்னை நீ ஏற்றுக்கொள்'' என்று நான் கூறவில்லை. இல்லையெனில் நீ ஏற்றுக் கொள்ளப் படவே இல்லை. ஏனெனில் அடி ஆழத்தில் உருமாற்றம் அடைவதற்கான ஆசை இருக்கிறது. நீ உனக்குள், ''சரி, இது உருமாற்றத்தைக் கொண்டு வந்தால் அதன்பின்னர் நான் இதை ஏற்றுக் கொள்கிறேன்'' என்று கூறுகிறாய். ஆனால் இது ஏற்றுக் கொள்தல் ஆகாது. நீ ஒட்டுமொத்த விஷயத்தையும் தவறவிட்டு விட்டாய். நீ இன்னமும் மாற்றத்திற்கு ஆசைப்படுகிறாய். அதனால்தான் நீ கடைசியில், ''நான் இதை ஏற்றுக் கொண்டால் எப்படி விடுதலை அடைவேன்?'' என்று கேட்கிறாய்.

''இதை நான் ஏற்றுக்கொண்டால், இது விடுதலை அளிக்கும் என்று நீங்கள் உத்திரவாதம் கொடுக்கமுடியுமா?'' என்று நீ கேட்கிறாய். நான் உனக்கு உத்தரவாதம் கொடுத்து, அந்த உத்தரவாதத்தினால் நீ அதை ஏற்றுக் கொண்டால், இதில் ஏற்றுக்

கொள்தல் என்பது எங்கு உள்ளது? நீ ஏற்றுக் கொள்தலை ஒரு வழி போன்று பயன்படுத்துகிறாய். உனது குறிக்கோள் மாற்றம் அடையவேண்டும். விடுதலை பெறவேண்டும். கடவுளை அடையவேண்டும், முக்தி அடையவேண்டும் என்பதாக உள்ளது. இதில் ஏற்றுக் கொள்தல் எங்கு இருக்கிறது?

ஏற்றுக்கொள்தல் என்பது எந்த காரணமும் இல்லாமல், நிபந்தனைகள் ஏதும் இல்லாமல், எந்தவிதமான உள்நோக்கமும் இல்லாமல் இருந்தாக வேண்டும். அதன்பிறகு மட்டுமே அது உனக்கு விடுதலை அளிக்கும். அது அபரிமிதமான மகிழ்ச்சியை கொண்டு வருகிறது. அது மாபெரும் சுதந்திரத்தை கொண்டு வருகிறது. மேலும் இந்த சுதந்திரம் ஒரு முடிவு என்பதாக வருவதில்லை. ஏற்றுக்கொள்தல் என்பதே சுதந்திரத்தின் மறுபெயராக உள்ளது. நீ உண்மையாக ஏற்றுக்கொண்டு விட்டால், ஏற்றுக்கொள்தல் என்பதற்கு நான் என்ன அர்த்தம் கொடுக்கிறேன் என்பதை நீ புரிந்து கொண்டால், அங்கு விடுதலை இருக்கிறது, உடனடியாக விடுதலை இருக்கிறது.

முதலில் நீ உன்னை ஏற்றுக்கொள், ஏற்றுக்கொள்தலை கடைப்பிடி, அதன்பின்னர் ஒருநாள் விடுதலை என்பது வரும் என்பது கிடையாது. அப்படி அல்ல. நீ ஏற்றுக்கொள் அப்போது அங்கு விடுதலை கிடைக்கும் ஏனெனில் மனவேதனையானது உடனடியாக மறைந்து போய்விடுகிறது.

இதை முயற்சி செய். நான் என்ன கூறுகிறேனோ அது பரிசோதனை போன்றது. நீ அதைச் செய்து பார்க்க முடியும். நீ என்னை நம்பவேண்டும் என்கிற கேள்வியே கிடையாது, நீ உனது பயத்தோடு போராடிக் கொண்டே இருந்திருக்கிறாய். அதை ஏற்றுக் கொண்டு என்ன நடக்கிறது என்று பார். வெறுமனே உட்கார்ந்து கொண்டு அதை ஏற்றுக்கொண்டு உனக்குள் ''என்னிடம் பயம் உள்ளது. எனவே நான் பயமாக இருக்கிறேன்'' என்று சொல். ''நான் பயமாக இருக்கிறேன்'' என்கிற அந்த தியான நிலையில், விடுதலை இறங்கிவர ஆரம்பிக்கிறது. ஏற்றுக் கொள்தல் முழுமையாக இருக்கும்போது, விடுதலையானது வந்துவிட்டது.

*இரண்டாம் கேள்வி:*

*ஓஷோ,*

> *எனது மனைவி கள்ளம் கபடமற்றவர் என்று எனக்கு தெரிந்தாலும்கூட நான் எனது மனைவி மீது மிகவும் சந்தேகப்படுகிறேன். இப்படி சந்தேகப் படுவதை கைவிடுவதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?*

நீ உண்மையிலேயே சந்தேகப்படும் அளவுக்கு உனக்குள் ஏதோ ஒன்று கண்டிப்பாக இருந்தாக வேண்டும். உன்னை நீ திடமாக நம்பமுடியவில்லை என்றால், உன்னால் உனது மனைவியையே அல்லது வேறு யாரையுமோ திடமாக நம்பமுடியாது. உன் மீதே உனக்கு திடமான நம்பிக்கை இல்லை என்றால், நீ அந்த திடமான நம்பிக்கையின்மையை உன்னைச் சுற்றிலும் உள்ள மக்கள் மீதும் திரையிட்டுப் பார்ப்பாய். திருடன் அனைவரையும் ஒரு திருடன் என்றுதான் நினைக்கிறான். இது இயற்கையானது. ஏனெனில் அவனுக்கு தன்னைப்பற்றி தெரியும். எனவே அவன் மற்றவர்களை தெரிந்து கொள்வதற்கு அந்த வழியை மட்டுமே அவன் பயன்படுத்துவான்.

நீ மற்றவர்களைப் பற்றி என்ன நினைக்கிறாய் என்பது அடிப்படையில் நீ உன்னைப் பற்றி என்ன நினைக்கிறாயோ அதன் ஒரு அறிவிப்பாகத்தான் அது இருக்கிறது. உனது மனைவி உன்னை இடைவிடாமல் கவனிக்கவில்லை என்றால் நீ ஏதாவது செய்வாய் என்பது உனகது தெரியும். நீ மற்ற பெண்களோடு சுற்றித்திரிவாய். இது உனக்கு தெரியும். அதனால்தான் இந்த பயம். ''நான் அலுவலகத்தில் இருக்கும்போது, யாருக்கு தெரியும்? மனைவி பக்கத்து வீட்டுக்காரருடன் சுற்றித்திரிவாள்,'' என்கிற எண்ணம் வரும். நீ உனது செயலாளரிடம் என்ன செய்கிறாய் என்பது உனக்கு நன்றாகத் தெரியும். அதுதான் பிரச்சினையை உருவாக்குகிறது.

அதனால்தான் நீ, ''எனது மனைவி கள்ளம் கபடமற்றவள் என்று எனக்கு தெரிந்தாலும் கூட, நான் அவளைச்

சந்தேகப்படுகிறேன்,'' என்று கூறுகிறாய். நீ எதாவது ஒன்றைக் கைவிடாத வரையில் நீ எப்போதும் சந்தேகத்துடன்தான் இருப்பாய். இது உனது மனைவி பற்றிய கேள்வி மட்டுமல்ல. எல்லாக் கேள்விகளும், அவை உனக்குள் எழும்போது, உண்மையில் அவை உன்னைப் பற்றியதாகவே இருக்கும்.

எப்போதும் பயணம் செய்கின்ற ஒருவன் ஒரு சிறு பயணமாக சாலைமார்க்கத்தில் போனான். ஆனால் வெளியில் அதிக நாட்கள் தங்கிவிட்டான். சில வாரங்களுக்கு ஒருமுறை அவன் தனது மனைவிக்கு ''வீட்டிற்கு வரமுடியவில்லை, இன்னமும் வாங்கிக் கொண்டு இருக்கிறேன்'' என்று தந்தி அடிப்பான். ஒவ்வொரு தந்தியும் இதே வாசகங்களைக் கொண்டதாக இருந்தது. இது மூன்று அல்லது நானகு மாதங்களாக நடந்தது. எனவே அவனது மனைவி இறுதியாக அவனுக்கு, ''வீட்டிற்கு வருவது நல்லது. நீங்கள் எதை வாங்கிக்கொண்டு இருக்கிறீர்களோ அதை நான் விற்றுக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறி தந்தி அடித்தாள்.

வாழ்க்கையில் விஷயங்கள் இப்படித்தான் நடக்கின்றன.

முன்தினம் இரவு நடந்த பயங்கர விருந்தின் மதுபான மயக்கத்தில் இருந்த கணவன் மனைவி இப்படி பேசிக் கொண்டனர்.

கணவன் தனது மனைவியிடம், ''டார்லிங், இது எனக்கு தர்மசங்கடமாக உள்ளது. நேற்று இரவு நூலகத்தில் நான் இன்பத்தை அனுபவித்தது உன்னிடமா?'' என்று கேட்டான்.

பளீரென்று அவனைப்பார்த்த மனைவி அவனிடம், ''எத்தனை மணிக்கு?'' என்று கேட்டாள்.

அடிப்படையான அவநம்பிக்கை கண்டிப்பாக உன்னைப் பற்றியதாகவே இருக்கும். நீயே உன்னை சந்தேகப்படுகிறாய். ஒருவேளை நீ மனதிற்குள் அதிகமான விஷயங்களை அடக்கி வைத்துக் கொண்டு இருக்கலாம். எனவே யாராவது தனக்குள் ஏதாவது ஒன்றை அடக்கி வைக்கும்போது அவர் அதை மற்றவர்கள் மீது திரையிட ஆரம்பிக்கிறார். தனக்குக் கொலை

செய்யும் உள்உணர்வு அதிகம் கொண்டுள்ள மனிதன் எப்போதும் மற்றவர்கள் தன்னைக் கொலை செய்து விடுவார்கள் என்று நினைப்பது திட்டத்தட்ட எப்போதும் நடக்கிறது. அவன் ஒரு பயந்தாங்கொள்ளி ஆகிவிடுகிறான். மிகவும் வன்முறை செய்கின்ற மனிதன் எப்போதுமே, ''மற்றவர்கள் வன்முறை யாளர்களாக உள்ளனர். எனவே நான் தொடர்ந்து பாதுகாப்புடன் இருக்கவேண்டும்,'' என்று பயப்படுகிறான்.

மக்கள் தங்கள் மீது திடநம்பிக்கை இல்லாததால் அவர்களால் யாரையும் திடமாக நம்ப முடிவதில்லை. மனைவி, நண்பன், அப்பா, அம்மா, மகள், மகன், யாரையும் நம்பமுடிவதில்லை. மக்கள் கொடிய சந்தேகத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் இதற்கு அடிப்படை காரணம் நீ உன்னுடைய உண்மைநிலையை ஏற்றுக்கொள்ள முடியாமல் இருப்பது தான் ஆகும்.

நான் அசோகாவிற்கு கூறியதை நீயும் கொஞ்சம் சிந்தித்துப்பார் என்று கூறுகிறேன். நீ என்னவாக இருக்கிறாயே அதை ஏற்றுக்கொள். அப்படி ஏற்றுக் கொள்வதில் நீ மற்றவர் களையும் ஏற்றுக்கொள்வாய். ஆம், சிலசமயம் ஒரு பெண்ணைப் பார்த்தவுடன் அவர்மீது நீ ஆர்வம்; கொள்ளுவது சாத்திய மாகும்போது உனது மனைவியும் ஒரு ஆணின் மீது ஆர்வம் கொள்வது சாத்தியமில்லை என்று கூறமுடியாது. ஆனால் உன்னை நீ ஏற்றுக்கொண்டால், உன்னை நீ புரிந்து கொண்டால், நீ உனது மனைவியையும் கூட ஏற்றுக் கொள்வாய். ''சிலசமயம் நான் ஒரு பெண்ணிடம் கவர்ந்திழுக்கப்படுகிறேன்'' என்பதை நீ ஏற்றுக் கொண்டால், அதன்பின்னர் எதுவுமே தவறாகாது. அதன்பின்னர் உனது மனைவியும் கூட யாரோ ஒரு ஆணைப் பார்த்து கவர்ந்திழுக்கப்படலாம்.

ஆனால் நீ அதை உனது சொந்த உயிர் உணர்வில் மறுத்தால், உனது சொந்த உயிர் உணர்வில் நீ அதை கண்டனம் செய்தால், அதன்பின்னர் அடுத்தவர்களின் உயிர் உணர்விலும் கூட நீ அதை கண்டனம் செய்வாய்.

என்னைப் பொருத்த வரையில் ஒரு புனிதரின் அடிப்படை பண்பு என்பது எல்லாவற்றையும், எல்லாரையும் மன்னிக்கக் கூடியவராக அவர் இருப்பார் என்பதாகும். ஏனெனில் அவர் தன்னைப் பற்றி அறிந்தவர். ஆனால் உனது புனிதர்கள் மன்னிக்கும்; திறன் இல்லாமல் இருக்கின்றனர். உனது புனிதர்கள் முழுமையான நரகங்களை மேலும் மேலும் அதிக தொழில் நுட்பத்துடன் கண்டுபிடித்துக் கொண்டே இருக்கிறார்கள். ஏன்? அவர்கள் இன்னமும் தங்களையே ஏற்றுக் கொள்ளமுடியாமல் இருக்கின்றனர்.

நல்ல தோற்றமுள்ள இளம் வழக்கறிஞரின் கதை ஒன்று உள்ளது. எந்த பெண்ணாக இருந்தாலும் அவளை சாதித்து காட்டி விடுவேன் என்று அவன் கூறுவான். ஒருநாள் அவரது அலுவலகத்தில் உள்ளவர்கள் நல்ல தோற்றமுள்ள ஒரு பெண் செயலாளரை வாடகைக்கு அமர்த்தினர். பல வாரங்களாக ஒவ்வொரு ஆணும் அவளிடம் முயற்சி செய்து பார்த்துவிட்டு தோற்றுப் போய்விட்டனர்.

அந்த இளம் வக்கீல், போதுமான அளவு பணத்தை பந்தயமாக கட்டினால் தான் அந்த பெண்ணை ஜெயித்து காட்டுகிறேன் என்று பெருமையாகச் சொன்னார். அதை நீ எப்படி நிருபிப்பாய் என்று மற்றவர்கள் கேட்டதற்கு, அவன் படுக்கை யின் அடியில் மறைத்து வைத்திருக்கும் டேப்ரிக்கார்டரில் அங்கு நடக்கும் எல்லா செயல்களையும் பதிவு செய்து காட்டுவதாக கூறினான்.

பந்தயம் எல்லாம் முடிவு செய்யப்பட்ட உடன், அந்த வக்கீல் அந்த பெண்ணிடம் அதுகுறித்து பேசினான். அன்று மாலை அவன் அந்த பெண் தனது வீட்டில் இருந்ததோடு மட்டுமல்ல தனது படுக்கையில் இருந்தாள். உடனே அவள் கீழே குனிந்து டேப் ரிக்கார்டரை பதிவு செய்யும்படி செய்தான்.

ஒரு சில நொடிகளில், அவரது புகழுக்கு ஆதரவாக அந்த பெண் செயலாளர் கிளர்ச்சி நிறைந்த இன்பத்தை அனுபவித்தாள். மேலும் அதன் உச்சகட்டமாக அவள், "எனது தேனே அதன் மீது

முத்தமிடு, அதில் முத்தமிட்டுக் கொண்டே இரு,'' என்று சத்தம் போட்டு கத்தினாள்.

அப்போது, அந்த வக்கீல் தனது நீதிமன்ற பாணியில் படுக்கைக்கு கீழே குனிந்து அந்த டேப் ரிக்கார்டரில், ''தயவுசெய்து இது பதிவு செய்யப்பட்டு சாட்சியாக இருக்கட்டும். இப்போது இந்த பெண் அவளது இடது மார்பகத்தை காட்டுகிறாள்,'' என்று கூறினான்.

வக்கீலின் மனம் ஓயாமல் சந்தேகப்படும். இப்போது அவள், ''அதில் முத்தமிடு, தேனே அதில் முத்தமிடு'' என்று கத்தியதைக் கேட்டு அவன் பயம் கொண்டிருக்க வேண்டும். என்ன? இந்த டேப் ரிக்கார்டர் எதில் முத்தமிடச் சொல்கிறாள் என்று எதுவும் சொல்லவில்லை என்ற சந்தேகம் அவனுக்கு வந்ததால் அவள் அப்படிச் செய்தாள்.

ஆனால் இதுதான் நம் எல்லாரின் மனமும் ஆகும். மனம் வஞ்சகமானது, கணக்குப் போடுவது, சந்தேகப்படுவது. ஒருவிதமான இடைவிடாத அவநம்பிக்கை, சந்தேகத்தில்தான் மனம் வாழ்கிறது. மனதின் ஒட்டுமொத்த சீதோஷ்ண நிலையும் சந்தேகம் நிறைந்துள்ளது.

ஆகவே எப்படி உனது மனைவியை திடமாக நம்புவது என்பது கேள்வி அல்ல. எப்படி திடமாக நம்புவது என்பதுதான் கேள்வியாகும். மனம் சந்தேகம் என்னும் சீதோஷ்ண நிலையில் வாழ்கிறது. அது சந்தேகத்தை தான் உணவாகக் கொள்கிறது. மேலும் தேவை இல்லாத போது உனது மனதின் செயல்பாட்டை நிறுத்துவது எப்படி என்று நீ அறியாத வரையில், உனது இதயத்திற்குள் இறங்குவது எப்படி என்று நீ அறியாதவரையில், திடமாக நம்புவது எப்படி என்று உன்னால் அறிந்து கொள்ள முடியாது.

இதயத்தின் சீதோஷ்ணநிலை திட நம்பிக்கையாகும். மனமானது திடமாக நம்பமுடியாது; மனதிற்கு திடமாக நம்புகின்ற திறமை கிடையாது. மேலும் நாம் எல்லொரும் தலையில் தொங்கவிடப்பட்டு விட்டோம். எனவே நாம் திடமாக

நம்புகிறோம் என்று கூறினாலும் கூட, நாம் திடமாக நம்புவ தில்லை. நாம் திடமாக நம்புவதாக வலியுறுத்துகிறோம். ஆனால் அந்த வலியுறுத்தலே நாம் திடமாக நம்மபவில்லை என்பதைக் காட்டுகிறது. நாம் திடமாக நம்பவிரும்புகிறோம். திடமாக நம்புவதாக நடிக்கிறோம். நாம் திடமாக நம்புகிறோம் என்ற அடுத்தவர்கள் நம்ப வேண்டும் என்;று விரும்புகிறோம். ஆனால் நாம் திடமாக நம்புவது இல்லை. திடமான நம்பிக்கையை பொருத்தமட்டில் தலை என்பது சக்தியற்றது. தலையானது சந்தேகத்துக்குரிய இயந்திர அமைப்பு. தலையானது ஓயாது ஒரு கேள்விக்குறியாக இருக்கிறது.

எனவே இதயத்திற்கு வருவது எப்படி என்ற நீ தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் இதை சமுதாயம் புறம் தள்ளிவிட்டது. சமுதாயம் உனக்கு இதயத்தின் வழிகளைக் கற்றுக் கொடுப்பதில்லை. அது மனதின் வழிகளை மட்டுமே கற்றுக் கொடுக்கிறது. அது உனக்கு கணக்கு, தர்க்க அறிவு, அறிவியல் இன்னும் பலவற்றை கற்றுக் கொடுக்கிறது. ஆனால் அவை எல்லாம் சந்தேகம் என்பதை வளர்ப்பவை.

சந்தேகத்தின் மூலமாகத்தான் அறிவியல் வளர்ந்துள்ளது. அறிவியலைப் பொருத்தமட்டில் சந்தேகம் என்பது ஒரு வரப்பிரசாதம். ஆனால் அறிவியல் அதிகம் வளர வளர மனிதன் சுருங்கிப் போய்விட்டான். மனிதாபிமானம் மறைந்துவிட்டது. அன்பு என்பது கிட்டத்தட்ட ஒரு புராணக்கதையாக ஆகிவிட்டது. இந்த பூமியில் நேசம் என்பது ஒருபோதும் உண்மைநிலையாக இல்லை. அது எப்படி உண்மை நிலையாக இருக்க முடியும்? இதயமே துடிப்பதை நிறுத்திவிட்டது. நீ நேசித்தாலும் கூட, நீ நேசிப்பதாக நினைக்க மட்டுமே செய்கிறாய்; அது உனது தலையில் இருந்து வருகிறது. ஆனால் நேசத்தின் இடம் தலை அல்ல.

தியானம் செய்ய ஆரம்பி. தலையானது வீண்பேச்சு பேசுவதை நிறுத்திவிடு. மெதுவாக மெதுவாக மனம் அமைதி ஆகிறது. மனம் என்பது தேவைப்படாத விஷயங்களுக்குள் சென்றுபார். உதாரணமாக நடனமாடுதல். நடனமாடு, களைத்துப்

போகும் வரை நடனமாடு. ஏனெனில் நடனத்தில் மனம் தேவைப்படாது. நடனத்தில் நீ உன்னை இழந்துவிடலாம். நடனத்தில் நீ உன்னை இழப்பதால், இதயமானது மீண்டும் செயல்புரிய ஆரம்பித்துவிடும்.

இசையில் உன்னை மூழ்கடித்துவிடு, அதன்பிறகு மெதுவாக மெதுவாக இதயத்தின் ஒரு முற்றிலும் வேறுபட்ட உலகத்தை நீ காண்பாய். மேலும் இதயத்தில் எப்போதும் திடமான நம்பிக்கை இருக்கிறது. மனதிற்கு திடமாக நம்புவது என்று எப்படி தெரியதோ அதேபோன்று இதயத்திற்கு சந்தேகப்படுவது எப்படி என்று தெரியாது.

***மூன்றாம் கேள்வி:***

***ஓஷோ,***

> ***காமத்தில் நெறி கோணுதல் என்றால் என்ன? பாலியல் உறவில் விநோதமான பழக்கங்கள் ஏன் எழுகின்றன. எங்கிருந்து வருகின்றன? உதாரணமாக, தன்னையும் பிறரையும் துன்புறுத்தி உடல் இன்பம் காணும் தன்மை.***

மனிதன் என்னவாகத் தோன்றுகின்றானோ அது மனிதன் அல்ல. அவன் அதைவிட மிகவும் பெரியவன். மனிதனைப் பற்றி நாம் அரைகுறை வழியில் மட்டுமே அறிந்து கொண்டுள்ளோம்.

நீ புரிந்து கொள்ள வேண்டிய ஐந்து வார்த்தைகள் இங்கு இருக்கின்றன. முதலில் இருப்பது உணர்வுமனம் (Concious mind). இந்த உணர்வு மனம் மிகவும் சிறியமனம், உன்னில் மிகவும் சிறிய ஒரு பகுதி. இதனால் பகுத்தறிதல், நினைத்தல், தர்க்க அறிவு செயல்முறைகளைச் செய்தல், பகுத்தறிவுக்கு ஏற்றவாறு விளக்கம் கொடுத்தல், கொஞ்சம் விழிப்புணர்வுடன் இருத்தல் ஆகியவற்றைச் செய்யமுடியும். இது உன்னில் மிகவும் சிறிய ஒரு பகுதியாகும். மேலும் அந்தப் பகுதி மூலமாகத்தான் நாம் மனிதனை தெரிந்து கொள்கிறோம். மனித தன்னுணர்வு என்னும் மாபெரும் மாளிகையை ஒரு சிறிய துவாரத்தின் மூலம், நீ சாவித்துவாரத்தின் மூலமாக மட்டுமே காண்கிறோம். எனவே

நாம் சாவித்துவாரத்தின் வழியாக கண்டது என்னவோ அது மனிதனின் ஒட்டுமொத்த உண்மைநிலை அல்ல.

மனிதன் பரந்து விரிந்தவன். இந்த உணர்வு மனதிற்கு பின்னால் உணர்விழந்த மனம் (Unconcious mind) மறைந்திருக்கிறது. அதுதான் இந்த மனித இனத்திற்கு சிக்மண்ட் பிராய்டின் மாபெரும் பங்களிப்பாகும். இந்த உணர்விழந்த மனமானது உணர்வு மனதைவிடவும் ஒன்பது மடங்கு பெரியது. இது உனது எல்லா உள் உணர்வுகளையும், பிறவிக் குணத்தையும், கொண்டுள்ளது. இது உனது அகச்செயல்பாடுகள், உடல் இயந்திர நுட்பங்கள், தீவிர உணர்ச்சிகள், உணர்ச்சிகள் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. தர்க்க அறிவைத் தவிர இது உன்னிடம் உள்ள எல்லாவற்றையும் கொண்டுள்ளது. ஆனால் இது ஆழ்ந்த இருளில் இருக்கிறது.

மனப்பகுப்பாய்வு (Psycho anaysis) என்பதை பிராய்டு உணர்வு இழந்த மனத்தை உணர்வு மனமாக ஆக்குவதற்கான ஒரு முயற்சி என்று கூறுகிறார். அப்போது உனது தன்னுணர்வானது கொஞ்சம் பெரிதாக ஆகிறது. உனது உணர்விழந்த மனதிற்குள் அதிக வெளிச்சம் ஊடுருவ வேண்டும். ஏனெனில் உணர்விழந்த மனமானது ஒன்பது மடங்கு அதிக சக்தி நிறைந்தது. உணர்வு மனதோடு நீ என்னவெல்லாம் முடிவு செய்கிறாயோ அது உணர்விழந்த மனதை அடையும்வரையில் உனது முடிவு காரியமாக சித்திக்காது.

அதனால் தான் மனோவசியம் அல்லது அறிதுயில் நிலையானது (Hypnosis) வேறு எந்த வழிமுறையையும் விடவும் அதிக ஆழம்வரை செல்கிறது. அறிதுயில் நிலை உணர்வு இழந்த பகுதியில நேரடியாக சென்று காரியமாற்றுகிறது. பல வருடங்களாக நீ ஒரு பழக்கத்தை கைவிடுவதற்கு முயற்சிக்கலாம். ஆனால் உன்னால் முடியாமல் போய்விடும். ஏனெனில் நீ இந்த உணர் மனதில் இருந்து கொண்டு மட்டுமே முயற்சி செய்வாய். ஆனால் உணர்வு மனம் மிகவும் சிறியது. உணர்விழந்த மனதிற்கு முன்னால் இதற்கு சக்தியே இருக்காது. உணர்வு மனம் என்ன

நினைக்கிறது என்பதை அறிந்து கொள்வதற்கு அதற்கு எந்த வழியும் கிடையாது.

ஆனால் மனோவசியம் செய்பவர் ஒருசில நொடிகளிலோ அல்லது ஒரு சில அமர்வுகளிலோ அந்த பழக்கத்தை கைவிடுவதற்கு உனக்கு உதவமுடியும். ஏனெனில் அவர் உனது உணர்வு மனதை தூங்கச் செய்துவிட்டு அதன்பின்னர் உனது உணர்விழந்த மனதோடு நேரடியாக அவர் தகவல் தொடர்பு கொள்ள ஆரம்பித்து விடுவார். எனவே உனது உணர்விழந்த மனம் அந்த பழக்கத்தை கைவிடுவதற்கு சம்மதித்தால், அதன்பின்னர் அந்த பழக்கம் கைவிடப்படுகிறது. அதன்பின்னர் உணர்வு மனமானது அதற்குமேல் அதை சுமந்து கொண்டு இருப்பதற்கு வழியே கிடையாது.

உணர்விழந்த மனதில் இருந்துதான் எல்லா உண்மை நிலைகளும் மாறுகின்றன. ஆனால் இந்த உணர்விழந்த மனமும் கூட ஒரு பகுதியாக மட்டுமே உள்ளது. இன்னமும் அதற்கு பின்னால் ஒரு திரண்ட உணர்விழந்த (Collective unconcious mind) மனம் மறைந்து கொண்டு இருக்கிறது. இது உனது ஒட்டுமொத்த கடந்த காலத்தையும் கொண்டுள்ளது. மேலும் அது ஒரு சிறிய விஷயம் அல்ல. ஏனெனில் ஒருமுறை நீ ஒரு சிங்கமாக இருந்திருக்கிறாய், ஒருமுறை நீ ஒரு பாம்பாக இருந்திருக்கிறாய். மேலும் ஒரு காலத்தில் நீ ஒரு மரமாக இருந்திருக்கிறாய்.

கீழைநாட்டு கருத்தாகிய, எண்பத்து நான்கு மில்லியன் பிறவிகளைக் கடந்து வருதல் என்பது மிகவும் சிறப்பு வாய்ந்தது. இது மிகச்சரியாக துல்லியமானதாக இல்லாமல் இருக்கலாம். ஆனால் இது சிறப்பு வாய்ந்தது, இது அர்த்தமுள்ளது. நீ ஒரு மனிதனாக ஆவதற்கு முன்பு எண்பத்தி நான்கு மில்லியன் பிறவிகள் எடுத்திருக்கிறாய். எனவே அந்த எல்லாப் பிறவிகளும், மேலும் அவைகளின் அனுபவங்களும் இந்த திரண்ட உணர்விழந்த மனதில் அடங்கியுள்ளன. இதில் கிட்டத்தட்ட ஒட்டுமொத்த வரலாறும், அதாவது ஆரம்பம் என்று ஒன்று இருந்தால் அந்த ஆரம்பத்தில்; இருந்து எல்லாமும் இதில் அடங்கி உள்ளது.

மனோதத்துவ உலகிற்கு இந்த திரண்ட உணர்விழந்த மனதின் கருத்தை கொண்டு வந்த பெருமை கார்ல் குஸ்டவ் ஜுங் அவர்களைச் சேரும். ஆனால் இவை எல்லாம் வெறும் பகுதிகள் மட்டுமே. இந்த திரண்ட உணர்விழந்த பகுதியும் கூட ஒரு பகுதி மட்டுமே ஆகும்.

மேலைநாட்டு மனோதத்துவம் இன்னமும் மேல்நோக்கி நகர ஆரம்பிக்கவில்லை. இப்போது அது கீழ்நோக்கி செல்வதாகிறது. அதாவது உணர்வுமனம் அதற்குகீழ் உணர்விழந்த மனம் அதற்கும்கீழ் திரண்ட உணர்விழந்த மனம் இப்படி கீழ்நோக்கி செல்கிறது.

உணர்வு மனதிற்கு மேலே மிகவும் மேன்மையான உணர்வு மனம் (Super concious mind) இருக்கிறது. இது உணர்வு மனதைவிடவும் ஒன்பது மடங்கு பெரியது. மேலும் இந்த மேன்மையான உணர்வு மனதிற்கு இன்னமும் மேலே பிரபஞ்ச மனம் உள்ளது. நீ இதை தெய்விக மனம் அல்லது கடவுள் மனம் அல்லது தாவோ என்று அழைக்கலாம். அதாவது தன்னுணர்வின் இறுதிநிலை என்று அர்த்தம். எல்லாமே உணர்வுமிக்கதாக ஆகிவிட்டதால் அப்போது நீ இந்த பிரபஞ்சம் போன்று பெரிதாகி விடுவாய். நீ உணர்வு மனதிற்கு உள்ளே ஆழத்தில் சென்றால் நீ இருட்டினுள் நுழைவாய். நீ உணர்வு மனதிற்கு மேலே சென்றால் நீ ஒளிக்குள் நுழைந்து செல்வாய்.

எனவே உனக்குள் ஐந்து மனங்கள் உள்ளது. ஆனால், உனக்கு இந்த உணர்வு மனம் என்கிற மிகவும் சிறிய பகுதியை மட்டுமே தெரியும்.

இப்போது, உணர்வு இழந்த மனதில் இருந்தும், மேலும் திரண்ட உணர்வு இழந்த மனதில் இருந்தும் அநேக விஷயங்கள் மேலே எழுந்து வந்து கொண்டே இருக்கும். உனது கனவுகளில் அநேக விஷயங்கள் நடக்கின்றன. சிலசமயம் இது என்ன கனவு என்று கூட நீ ஆச்சரியப்பட்டு இருப்பாய். உனது கனவிற்கு ஒரு முடிவை ஒரு வால் போன்ற பகுதியை உன்னால் உண்டாக்க முடியாது. அது என்ன என்று உன்னால் நினைத்துப் பார்க்க

முடியாது. அந்த ஒட்டுமொத்த விஷயமும் அர்த்தமற்றது போலத் தோன்றுகிறது. உனது திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து ஏதோ ஒன்று மேலே எழுந்து வந்து உணர்விழந்த மனதிற்கு வந்துவிட்டது. எனவே நீ அந்த கனவைக் கண்டாய்.

ஆனால் சிலசமயம் விஷயங்கள் திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து ஊடுருவ ஆரம்பித்து உணர்வு மனதிற்கும் கூட வந்துவிடும். அதன்பின்னர் அவை மிகவும் நம்பத்தாகதாக இருக்கும். அவை நெறி கோணல்கள். அவை தான் நெறி கோணல் களாக தெரிகின்றன. உண்மையில் அவை நெறி கோணல்கள் அல்ல. மற்றவைகளைப் போலவே அவைகளும் இயல் பானவை. ஆனால் அவை இயற்கைக்கு மாறானவை. ''உதாரணமாக'' என்று சொல்லி நீ தன்னையும் பிறரையும் துன்புறுத்தி உடல் இன்பம் காண்கின்ற தன்மை பற்றி கேட்கிறாய். (SADOMASOCHISM)

இங்கு மற்றவர்களை துன்புறுத்தி இன்பம் காண்பவர்களும் இருக்கிறார்கள். மேலும் தங்களையே துன்புறுத்திக் கொண்டு இன்பம் காண்கின்ற மக்களும் இருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக உடல் இன்பம் காண்கின்ற விதம் சம்பந்தமாக அவ்வாறு உள்ளனர். மனைவி தன்னைத் துன்புறுத்த வேண்டும் என்று நினைக்கிற மனிதர்களும் உள்ளனர், மனைவியைத் துன்புறுத்துகின்ற மக்களும் இருக்கிறார்கள்.

SADISM (பிறரைத் துன்புறுத்தல்) என்கிற ஆங்கில வார்த்தை (டி-சேடோ) என்ற பெயரில் இருந்து வருகிறது. அவர் ஒரு பெண்ணை அடிக்காதவரையில் அவருக்கு காம இச்சை எழுப்பாது. எனவே அவர் எப்போதும் தன்னுடன் ஒரு பெட்டியைக் கொண்டு செல்வார். அது ஒரு மருத்துவரின் பெட்டிபோல் இருக்கும். அதில் துன்புறுத்துவதற்குரிய எல்லா கருவிகளும் இருக்கும். அவர் மிகவும் பணக்காரர். அவர் ஒரு சிற்றரசராக இருந்தார். எனவே அவரது எல்கைக்குள் உள்ள எல்லாம் பெண்களும் அவருக்கு கிடைத்தனர். அழகான பெண்ணை அவர் எங்கு பார்த்தாலும் அவர் ஒரு வெறுமனே கைஜாடை காட்டுவார். உடனே அவர் அவரது துன்புறுத்தும்

அறைக்குள் வந்தாக வேண்டும். அதை இன்பம் அனுபவிக்கும் அறை என்று அழைக்கமுடியாது. அவர் தனது அறையில் பெண்களைத் துன்புறுத்துவதற்கான எல்லா கருவிகளையும் வைத்திருப்பார். அங்கு வந்த அந்த பெண்ணின் ஆடைகள் அகற்றப்பட்டு நிர்வாணமாக ஆக்கப்படுவாள். உடனே அவர் அவளை அடிப்பார். மேலும் மிகவும் நெறிகோணிய விஷயங் களைச் செய்வார். அவளது உடலில் இருந்து ரத்தம் வராத வரையில் அவருக்கு காம இச்சை எழுப்பாது. இப்போது இது நெறி கோணல்.

இது எங்கிருந்த வருகிறது. இது மிகவும் ஆழத்தில், மிக ஆழத்தில் உள்ள திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து வருகிறது. எண்பத்தி நான்கு மில்லியன் பிறவிகளில் இருந்து வருகிறது. ஏனெனில் இது போன்ற மிருகங்கள் உள்ளன. உதாரணமாக ஒரு குறிப்பிட்ட இனத்தை சேர்ந்த ஆப்பிரிக்க சிவந்திகள் உடல் இன்பம் அனுபவிக்கும்போது பெண் சிலந்தியால் அவை சாப்பிடப்பட்டு விடுகின்றன. ஆண் சிலந்தி பெண் சிலந்தியின் மேல் இருக்கிறது. அப்போது அது உச்சகட்ட பரவச நிலையில் இருக்கும்போது எல்லாமே கைவிடப்படுகிறது. அண் சிலந்தி எல்லாவற்றையும் மறந்து விடகிறது. உடனே பெண் சிலந்தி ஆண் சிலந்தியை சாப்பிட ஆரம்பித்து விடுகிறது. ஆனால் ஆண் சிலந்தி இன்னமும் தனது வேலையை முடித்திருக்காது. உச்சகட்ட பரவசநிலை முடியும்போது ஆண் சிலந்தியும் முடிந்துபோய் இருக்கும். எனவே ஆண் சிலந்தி ஒரே ஒரு முறை மட்டுமே உடல் இன்பம் பெறமுடியும். அந்த இடத்தில் இது நெறிகோணல் அல்ல. அது இயற்கையானது.

டி சாடோவைப் போல 'MASOCH' (மாசோச்) என்பவர் இருந்தார். அவரது பெயரில் இருந்துதான் 'ஆயளழஉடளைஅ' என்கிற வார்த்தை உண்டாக்கப்பட்டுள்ளது. அவர் சாடேக்கு நேர் தலைகீழானவர் அவர் பெண்கள் தன்னை அடிக்கும்படியும், உதைக்கும்படியும், சாட்டையால் அடிக்கும்படியும் கட்டாயப் படுத்துவார். இப்படி அவர் சாட்டையால் அடிக்கப்படாத வரையில் அவருக்கு காம இச்சை எழாது.

இப்போது. இந்த மக்கள் அனைவரும் திரண்ட உணர்விழந்த மனதினால் கஷ்டப்படுகிறார்கள். திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து ஏதோ ஒன்று வருகிறது. ஏதோ ஒன்று மேலே எழுந்து அவர்களின் உணர்வு மனதிற்கு வருகிறது. இது எங்கிருந்து வருகிறது என்று அவர்களால் புரிந்து கொள்ளமுடியாது. அவர்கள் குற்றவாளிகள் அல்ல. அவர்களுக்கு மருத்துவ சிகிச்சை தேவை.

டி. சாடே அவரது வாழ்நாள் முழுவதும் சிறையில் வாழும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். அது அசிங்கமானது. அது நியாயமற்றது. அவருக்கு ஆழ்ந்த அறிதுயில் சிகிச்சை தேவை. இத்தகைய மக்களிடம் நாம் கருணை காட்ட வேண்டும். அவர்கள் தங்களின் கடந்த காலத்தினால் கஷ்டப்படுகிறார்கள்.

இந்த விஷயங்கள் ஒவ்வொருவருக்கும் நடக்கிறது. ஆனால் அவை கனவுகளில் உணர்வு இழந்த மனதிற்கு வருகின்றன. இந்த ஏனைய மக்கள் பயந்தாங்கொள்ளிகள். அவர்களின் உணர்வு மனதிற்கும் உணர்வு இழந்த மனதிற்கும் இடையே சில வழிகள் உள்ளன. எனவே அவை மிகவும் சுலபமாக திறக்கப்பட்டு விடும்போது அவை அவர்களின் உணர்வு மனதில் மிதந்துவர ஆரம்பிக்கின்றன. எனவே அதன்பின்னர் அதனால் ஆட்கொள்ளப் பட்டு விடுகிறார்கள். அவர்களால் அதைத் தவிர்க்க முடியாது.

நீங்கள் பல லட்சடம் மிருகங்களின் பழக்கவழக்கங்களைப் பார்த்தால் நீ ஆச்சரியப்படுவாய். யானை ஒரு குறிப்பிட்ட வழியில் உடல் இன்பம் அனுபவிப்பதை நீ அறிவாயா? அதன் இணைதல் வேலை ஆண்டுக்கணக்காக தொடர்கிறது. இப்போது, யாராவது ஒருவர் தனது கடந்த பிறவியில் ஒரு யானையாக இருந்தால், அவரது உணர்வு இழந்த மனதில், திரண்ட உணர்வு இழந்த மனதில் எங்கோ ஒரு இடத்தில் இருந்தால் அதன்பின்னர் உடல் இன்பம் அனுபவிப்பது ஆண்டுக்கணக்கில் தொடர்ந்து நடந்து கொண்டே இருக்கும்.

பெண் யானையானது பத்துவருடத்தில் இரண்டுமுறை மட்டுமே உடல் இன்பம் காண்கிறது. இப்போது பத்து

வருடத்திற்கு இரண்டுமுறை என்கிற எண்ணத்தை உடைய அநேக பெண்களை நீ காண்பாய்! ஆனால் இது யானைகளைப் பொருத்தமட்டில் இயற்கையானது. ஏனெனில் பெண் யானையானது கர்ப்பத்தை இருபத்து இரண்டு மாதங்கள் சுமந்தாக வேண்டும். மேலும் இதுவும் ஒரு கர்ப்பகாலம்! ஒரு யானையை உனது கர்ப்பத்தில் இருபத்து இரண்டு மாதங்கள் சுமக்க வேண்டியதுள்ளது. எனவே பெண் யானையானது இந்த ஒட்டுமொத்த முட்டாள்தனமான உடல் இன்பத்தை நினைத்து மிகவும் பயப்படுகிறது. எனவே இரண்டு அல்லது மூன்று வருடங்களுக்கு எந்த ஒரு ஆண் யானையும் உடல் இன்பப் பயணத்திற்கு அதைத் தூண்டமுடியாது. மூன்று, நான்கு அல்லது ஐந்து வருடங்களுக்கு பிறகு, அந்த நினைவுகள் மங்கிவிடும் போது மட்டுமே பெண் யானையை தூண்ட முடியும். எனவே யானையோடு உடல் இன்பம் அனுபவிப்பது மிகவும் நீண்ட காலம் நடக்கிறது.

மேலும் இந்த விஷயங்கள் எல்லாம் உனது திரண்ட உணர்விழந்த மனதில் இருக்கின்றன. விலங்குகளைப் பொருத்தமட்டில் ஒரு விஷயம் இயற்கையானதாக இருக்கலாம். ஆனால் மனிதனைப் பொருத்தமட்டில் அது செயற்கையானதாக இருக்கலாம். அப்படித்தான் நெறி கோணங்கள் எழுகின்றன.

உனக்கு தெரியுமா? விலங்குகளுக்கு மத்தியில் இப்படிப்பட்ட விநோத பழக்கங்கள் இருப்பதைப் படித்தால் நீ மெய்சிலிர்த்து விடுவாய்! இயற்கையில் என்ன நடக்கிறது என்று உன்னால் நம்பமுடியாது. உனக்கு இந்த மூட்டைப்பூச்சியைத் தெரியும். பெண் மூட்டைப்பூச்சிக்கு உடலுறவு உறுப்பு கிடையாது. ஆண்மூட்டைப் பூச்சியானது ஒவ்வொரு முறையும் உடல் இன்பத்தை அனுபவிக்கும் போது அது பெண் மூட்டைப் பூச்சியில் ஒரு ஓட்டையை, துளையைப் போடவேண்டும். பெண்ணிடம் வழி கிடையாது. இப்போது இது ஆபத்தானது! ஆனால் இயற்கை சில குறிப்புகளைக் கொடுத்துள்ளது. பெண் மூட்டைப்பூச்சியின் வயிற்றில் ஒரு கோடு ஒன்று உள்ளது. ஏனெனில் ஆண்பூச்சியானது வேறு எந்த இடத்திலாவது ஓட்டை

போட்டுவிட்டால், அது பெண்மூட்டைப்பூச்சியைக் கொன்று விடும்! ஒரு குறிப்பிட்ட கோட்டின்மீது தான் ஆண்பூச்சி ஓட்டை போடவேண்டும். ஒரு பெண் மூட்டைப்பூச்சியை கவிழ்த்து போட்டு அந்த பெண் மூட்டைப்பூச்சி கற்புடையதா அல்லது இல்லையா என்றும் அல்லது அது எத்தனைமுறை உடல் இன்பம் அனுபவித்து உள்ளது என்றும் நீ தெரிந்து கொள்ளமுடியும். ஏனெனில் அந்த துளைகள் அங்கு இருக்கும், தழும்புகள் இருக்கும்.

ஆனால் இப்படிப்பட்ட விஷயம் யாருடைய மனதிலாவது மேலே எழுந்து வந்தால், அவன் ஒரு பெண்மணியின் வயிற்றில் ஓட்டை போட ஆரம்பித்தால், அது ஒரு நெறி கோணலாக இருக்கும். ஆனால் இது அப்படித்தான் இருக்கிறது. உனக்குள் மிகப்பெரிய திரண்ட உணர்விழந்த மனதின் பகுதி உள்ளது. அதில் பல லட்சம் பிறவிகளின், எல்லா அனுபவங்களும் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளது. புத்தமதத்தில் இதை ஆலய விஞ்ஞானம், அதாவது தன்னுணர்வின் வைப்பு அறை என்று அழைக்கின்றனர். அது எல்லையற்றது.

''காமக மனதின் நெறிகோணல் என்பது என்ன?'' என்று நீ கேட்கிறாய். அது உனது திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து மேலே எழுந்து வருவதாகும். ''மேலும் விநோதமாக உடல் இன்ப பழக்கங்கள் ஏன் வருகின்ற, எங்கிருந்து எழுகின்றன?'' என்று கேட்கிறாய். அவை திரண்ட உணர்வு இழந்த மனதில் இருந்து பரிணமிக்கின்றன. இந்த மனதில் இருந்து சில மக்களுக்கு வழி திறக்கிறது. இந்த வழிகள் மனிதனின் தான் தோன்றித்தனத்தினால் திறக்கின்றன. இது ஒரு குழந்தை ஆறு விரல்களோடு பிறப்பது அல்லது ஒரு குழந்தை குருடாக பிறப்பது போன்றதாகும். இவை விதிவிலக்குகள். அதே போன்றுதான் நெறி கோணுகின்ற மக்களும் இருக்கின்றன.

நேற்று இரவு சத்ய சாய் பாபா பற்றிய ஒரு புத்தகத்தை படித்துக் கொண்டு இருந்தேன். அந்த புத்தகத்தின் பெயர் ''வார்டு ஆப் தி ஏர்'' (Lord of the Air) இந்த புத்தகம் சத்யசாய் பாபாவுடன் அநேக வருடங்கள் வசித்த மக்களின் தனிப்பட்ட

அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளது. அவர் ஒரு ஓரினச் சேர்க்கையாளன் மட்டுமல்லாமல் அவர் ஒரு இருபால் உறுப்புக்களைக் கொண்டவர் என்று அவர்கள் கூறுகின்றனர். ஹெர்மாபுரோடைட் (Hermophrodite) என்பவர் ஆண் மற்றும் பெண் இருவரின் உடலுறவு உறுப்புக்களைப் பெற்றவர்.

இப்போது, இது போன்ற விலங்குகள் உள்ளன. அவற்றிடம் இது நெறி கோணல் கிடையாது. இது இயற்கையானவை. மண்புழுக்களுக்கு இரண்டு பால்இன உடலுறவு உறுப்புகளும் உண்டு. எனவே ஒரு மண்புழு ஆணா அல்லது பெண்ணா என்று உன்னால் முடிவு செய்யமுடியாது. ஏனெனில் இரண்டு உடலுறவு உறுப்புகளும் இருக்கும். எனவே மண்புழுக்கள் உடல் இன்பம் அனுபவித்தல் என்பது இரண்டு வழியில் செய்கின்ற காரியமாகும். ஒரு மண்புழு அடுத்த மண்புழுவிற்கு ஆணாகவும் நடந்து கொள்கிறது. அதுபோன்று பெண்ணாகவும் கூட நடந்த கொள்கிறது. ஒன்று மற்றொன்றுடன் இரண்டு வழிகளில் உடல் இன்பம் காண்கிறது. அந்த இடத்தில் இரண்டு புள்ளிகள் இருப்பதால், யார் யார் என்று தீர்மானிப்பது மிகவும் கடினமானதாகும். இரண்டுமே ஆண் அதே போன்று இரண்டுமே பெண். எனவே ஒரு மண்புழு அடுத்த மண்புழுவின் பெண் உடலுறுப்பில் உடல் இன்பம் காண்கிறது. அப்போது அந்த மண்புழு முதல் மண்புழுவின் ஆண் உடலுறவு உறுப்பில் உடல் இன்பம் காண்கிறது. இது ஒருவிதமான சுற்றுவட்ட உடல் இன்பம் அனுபவித்தல், மேலும் இரண்டுமே கர்ப்பம் தரிக்கும்.

மண்புழுக்களைப் பொருத்தமட்டில் ஒன்றுமில்லை. ஆனால்; இது சத்தய சாய்பாபாவிற்கு நேர்ந்தால் அதன்பிறகு அங்கு கஷ்டம் வந்துவிடும். மேலும் அவர் நடந்து செல்வதைப் பார்த்தால், இந்த மக்கள் கூறுவது சரியானதுதான் என்று தெரிகிறது. உண்மையில் அது நடக்கிறது. இதில் கண்டனம் செய்வதற்கு எதுவும் கிடையாது. இதுகுறித்து சத்ய சாய்பாபா என்ன செய்யமுடியம்? சில குழந்தைகள் இரண்டு உடலுறவு உறுப்புகளுடனும் பிறக்கின்றன. மிகவும் அபூர்வமாக

பிறக்கின்றன. ஆனால் அவர்கள் மிகவும் பயந்த, வாழ்க்கை, வாழ்கின்றனர். தங்களை மறைத்துக் கொண்டு வாழ்கின்றனர். யாருக்கும் அதுகுறித்து தெரியக்கூடாது.

மனிதன் இன்னமும் அந்த அளவுக்கு மெய்ஞ்ஞானம் அடையவில்லை. மற்றபடி இதில் எந்த தவறும் இல்லை. உண்மையில் மற்றவர்களை விடவும் சத்ய சாய்பாபா அதிக செழுமை மிக்கவர். ஏனெனில் அவர் இரண்டு வழிகளிலும் அதாவது ஒரு ஆணாகவும், ஒரு பெண்ணாகவும் உடல் இன்பத்தை அனுபவிக்க முடியும்.

உடலில் நெறி கோணல் இருக்கமுடியம், மனதில் நெறி கோணல் இருக்கமுடியம். ஆனால் அவை இரண்டும் திரண்ட உணர்விழந்த மனதில் இருந்து எழுகின்றன. மேலும் அந்த இரண்டையும் சரிசெய்து விடமுடியம். ஆனால் அதற்கு அபரிமிதமான ஆழ்ந்த அறிதுயில் நிலை தேவைப்படும். சாதாரண அறிதுயில் நிலை மருத்துவம் சரிப்பட்டு வராது. சாதாரண அறிதுயில் நிலை மருத்துவமானது உன்னை உனது உணர்விழந்த மனம் வரையில் மட்டுமே கொண்டு செல்லும். உனது திரண்ட உணர்விழந்த மனதிற்குள் போவதற்கு மிகவும் ஆழ்ந்த அறிதுயில் நிலை மருத்துவம் தேவைப்படும்.

புதிய கம்யூனில் நான் இந்த திரண்ட உணர்விழந்த நிலைக்கு ஆழ்ந்து செய்வதற்கான வழிமுறைகளை உனக்கு நான் கொடுக்கப் போகிறேன். ஆனால் அது மிகவும் ஆபத்தான பயணம். இந்த திரண்ட உணர்விழந்த மனதிற்குள் செல்வதற்கு மிகப்பெரிய ஏற்பாடுகள் தேவைப்படும். ஏனெனில் அந்த மனதில் அதிகம் உள்ளது. பல லட்சம் அனுபவங்கள் உள்ளது. எனவே அவை திடீரென்று வெடித்து கிளம்பும்.

அதற்கு ஒரு கம்யூன் தேவை. யாரும் உள்ளே வரமுடியாத மூடப்பட்ட கம்யூன் தேவைப்படும். மூடப்பட்ட ஒரு தோட்டம் தேவைப்படும். ஏனெனில் சாதாரண மக்கள் அதை அறிந்து கொள்வார்கள் என்கிற கேள்வி அல்ல. அவர்களால் அதை புரிந்து கொள்ளமுடியாது. அதனால்தான் ஏதாவது ஒன்று

மக்களைச் சென்றடையும் போது, சில நிர்வாண புகைப் படங்களும் மக்களைச் சென்றடைந்து விடுகிறது. உடனடியாக அவர்கள் எனக்கு எதிராக கிளம்பிவிடுகின்றனர். இங்கு என்ன நடக்கிறது என்பதை அவர்களால் புரிந்து கொள்ளமுடியாது.

நாம் தன்னுணர்வுகள் ஆழ்ந்த அடுக்குகளை ஊடுருவிச் செல்வதற்கு முயற்சித்துக் கொண்டு இருக்கிறோம். ஆனால் இது ஒரு ரசவாத பரிசோதனைக்கூடம். இதை சாதாரண மக்களால் புரிந்து கொள்ளமுடியாது. மேலும் அப்படியே அவர்கள் புரிந்து கொண்டாலும் அவர்கள் தங்களுக்கு தக்கபடி அதை புரிந்து கொள்வார்கள்.

நான் ஒரு புதிய கம்யூனுக்காக காத்துக் கொண்டு இருக்கிறேன். இன்னும் அதிகம் செய்யப்பட வேண்டியதுள்ளது. ஆனால் அதன் பின்னர் விஷயங்கள் இயல்புக்கு மீறியதாக ஆகிவிடும். மேலும் உனக்கு ஒரு பெரிய களம் தேவைப்படும். சாந்தப்படுத்துகின்ற சக்தி போன்ற ஒரு சக்தியின் தளம் உன்னைச் சுற்றிலும் இருக்கவேண்டும். அது உன்னை என்னோடு நங்கூரம் பாய்ச்சி இருக்கச் செய்யும். எனவே நீ அந்த திரண்ட உணர்விழந்த மனதில் உன்னை இழந்து விடமாட்டாய். அதன்பிறகு மட்டுமே உனது திரண்ட உணர்விழந்த மனதின் கதவுகள் திறக்கப்பட வேண்டும். அவற்றை திறக்கமுடியும். மேலும் அவை இருந்தால் உனக்கு அபரிமிதமான உதவிகரமாக இருக்கும்.

நீ உனது ஒட்டுமொத்த கடந்த காலத்தைப் பற்றியும் தெரிந்து கொண்டால், நீ அதிலிருந்து விடுதலை பெற்று விடுவாய். ஏதாவது ஒன்றைப் பற்றி தெரிந்து கொள்தல் அதிலிருந்து விடுதலை அடைவதாகும். உண்மையை அறிந்து கொள்வது விடுதலை அளிக்கிறது. நீ உனது கடந்த காலத்திற்குள், அதன் முடிவுவரை செல்வதற்கு அனுமதிக்கப்பட்டால், நீ எல்லா வற்றோடும் முடிந்து போய்விடுவாய். ஏனெனில் பல லட்சம் தடவைகள் நீ செல்வத்தை சேர்த்து வைத்தாய். ஆனால் ஒவ்வொரு முறையும் நீ தோல்வி அடைந்து விட்டாய். உன்னால் உனது முந்தைய பிறவிகளை நினைவுபடுத்த முடிந்தால், அப்போது எந்த பயனும் இல்லாமல் பல லட்சம் தடவைகள் நீ

அதே முட்டாள்தனமான விளையாட்டை விளையாடிக் கொண்டு இருந்ததைக் காணமுடியும். அதன்பின்னர் இந்தப் பிறவியிலும் உன்னால் அதே விளையாட்டை எப்படி விளையாடிக் கொண்டே போகமுடியும்? அது சாத்தியப்படாது. உன்னால் உனது பாலியல் அனுபவங்களை பார்க்க முடிந்தால், அதே விளையாட்டை இன்னமும் விளையாடிக் கொண்டே போவது அந்த அளவுக்கு முட்டாள்தனமானதாக இருக்கும்.

ஆனால் அதற்கு மிகவும் தனியான சூழ்நிலை மற்றும் மிகப்பெரிய திடநம்பிக்கை தேவைப்படும். அதனால்தான் நான் ஒரு கம்யூனை உருவாக்க விரும்புகிறேன். அது தனி உலகமாக இருக்கும். அங்கு இதுவரை செய்யப்படாத பரிசோதனைகளை ஆழ்ந்து பரிசோதிக்க முடியும்.

மேலும் நீ இப்படி பின்னால் சென்று தெரிந்து கொண்டால், உன்னால் மேல் நோக்கியும், முன்னாலும் செல்லமுடியும். ஏனெனில் செயல்முறை அதேதான். பின்னால் செல்வது சுலபமானதாக இருக்கிறது. ஏனெனில் அது தெரிந்த பாதை. நீ அதை பற்றி மறந்துவிட்டாய். ஆனாலும் கூட அது உனக்கு தெரிந்தபாதை; உன்னால் பின்நோக்கி போகமுடியும்.

ஆனால் மேல்நோக்கி, மேன்மையான உணர்வு மனதிற்கும், பிரபஞ்ச மனதிற்கும் செல்வது உனக்கு தெரியாத பாதையாகும். நீ பின்னோக்கி செல்வதுஎப்படி என்று தெரிந்து கொண்டால், உனது உயிர் உணர்வின் ஆபத்தான பகுதிகளை ஊடுருவிச் செல்வது எப்படி என்று நீ தெரிந்து கொண்டால் அதன்பின்னர் அடுத்தபடியாக உயர்நிலைக்கு செல்லமுடியும். நீ உணர்வு மனதில் இருந்து மேன்மையான உணர்வு மனதிற்கு நகர்ந்து செல்ல முடியும்.

இந்த மேன்மையான உணர்வு மனதில்தான் தேவதைகள், கடவுள்கள், குண்டலினி, சக்கரங்கள், தாமரை மலர்தல் ஆகிய எல்லா அனுபவங்களும் நிகழ்கின்றன. அவை எல்லாம் மேன்மையான உணர்வு மனதில் அடங்கி உள்ளன. அது ஒரு அழகான உலகம். அது ஒரு வண்ணமயமான உலகம். அதற்கு

அப்பால்தான் பிரபஞ்ச மனம் என்னும் உலகம் உள்ளது. அங்கு எல்லா அனுபவங்களும், அவை அசிங்கமானவையாக இருந்தாலும் அல்லது அழகானவையாக இருந்தாலும், அந்த அனுபவங்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. அங்கு அனுபவிப்பவர் மட்டும் தனியாக விடப்படுகிறார். முழுமையான தனிமையில் விடப்படுகிறார். மேலும் அதுதான் தன்னுணர்வின் முடிவான இலக்காகும். பரிணாம வளர்ச்சியானது அந்த இலக்கினை நோக்கித் தான் நகர்ந்து கொண்டு இருக்கிறது.

ஆனால் உனக்கு மேல்உள்ள அந்த உலகிற்குள் நீ தாண்டிக் குதிப்பதற்கு முன்பு, நீ உனது வேர்களுக்குள் ஆழ்ந்து செல்ல வேண்டும். இருள்நிறைந்த வேர்களுக்குள், உனது உணர்விழந்த மனதிற்குள், உனது கடந்த கால அனுபவங்களுக்குள் ஆழ்ந்து சென்றாக வேண்டும்.

புத்தர், மகாவீரர் ஆகிய இருவரும் முயற்சி செய்தனர், அவர்கள் மிகப்பெரிய பரிசோதனைகளைச் செய்தனர். அந்த பரிசோதனைகள் ஜாட்டி ஸ்மரண் அதாவது கடந்த காலத்தை நினைவுபடுத்துதல் என்று அழைக்கப்படுகின்றன. ஆனால் கடந்த காலம் மிகவும் பரந்து விரிந்தது. நீ அதை ஞாபகப்படுத்திக் கொண்டே சென்றால், அது உனக்கு ரகசியங்களை வெளிப் படுத்திக் கொண்டே செல்கிறது. தனது கடந்த காலத்திற்குள் சென்றுவிட்ட ஒரு மனிதன் முற்றிலும் ஆரோக்கியமாக, மன அளவில் முழுமையானவனாக திரும்பி வருவான். அவனிடம் எந்த ஒரு நெறி கோணலும் இருக்காது. அவன் வெறுமனே தனது கடந்த கால அனுபவங்களுக்கு உள்ளே சென்று மீண்டும் வெளியே வரும்போது அவனது ஒட்டுமொத்த வாழ்க்கையும் மாற்றம் அடைந்துவிடும். தான் செய்ய வேண்டும் என்று கற்பனை செய்துள்ள எல்லாவற்றையும் அவன் அநேக தடவை ஏற்கனவே செய்துவிட்டதை அவன் கண்டு கொள்ள முடியம். மேலும் அது எல்லாம் பயனற்றது, வீணானது என்றும் அவன் கண்டு கொள்ளமுடியும்.

வெறுமனே அதை புரிந்து கொண்டால் போதும், எல்லாமே மாற்றம் அடைய ஆரம்பிக்கிறது. மேலும் நீ உனது கடந்த

காலத்தில் இருந்து விடுதலை அடைந்து விட்டால் உன்னால் நிகழ்காலத்தினுள் நகர்ந்து செல்லமுடியும். இப்போது இங்குள்ள காலத்தில் நீ ஆழத்தில் குதித்துவிட முடியும்.

திருமணம் நடந்து சில மாதங்களுக்கு பிறகு, ஒரு பெண் கீழ்க்கண்ட கடிதத்தை அவளது மருத்துவருக்கு எழுதினாள்.

அன்புள்ள மருத்துவருக்கு,

எனக்கு திருமணம் ஆனதிலிருந்து, எனது கணவருக்கு பைத்தியம் பிடித்துவிட்டது போலத் தெரிகிறது. அவர் காலைச் சிற்றுண்டியின்போதும், காபி இடைவேளையின் போதும், மதிய உணவு நேரத்திலும், டீ குடிக்கும் நேரத்திலும் கூட என் பின்னாலேயே இருக்கிறார். அதன்பின்னர் இரவெல்லாம், ஒவ்வொரு சில மணிகளும் என் பின்னால் வருகிறார். அவருக்கு உதவுவதற்கு நான் ஏதாவது செய்யவோ அல்லது கொடுக்கவோ முடியுமா? நான் உங்களது பதிலுக்காக காத்திருக்கிறேன்.

*பின் குறிப்பு:* நடுக்கம் நிறைந்த எனது கையெழுத்திற்கு தயவுசெய்து மன்னிக்கவும்.

எனவே அவளது கணவர் இன்னமும் அவள் பின்னால் இருக்கிறார். அப்படிப்பட்ட விதமாக உடல் இன்பம் அனுபவிக்கின்ற அநேக மிருகங்கள் உள்ளன. இப்போது அந்த விலங்குகளின் உலகில் இருந்து ஏதோ ஒன்று மேலே எழுந்து வந்துவிட்டது.

ஒரு பெண் தனது கணவனின் காம உணர்வுகள் குறைந்து விட்டதாக புகார் கொடுப்பதற்கு ஒரு மருத்துவரிடம் சென்றாள்.

மருத்துவர் அவர்களின் குடும்பத்தின் பழைய நண்பர் என்பதால் அந்த பெண்ணிடம் சில மாத்திரைகளைக் கொடுத்தார். அந்த மாத்திரைகளை கணவனின் தேநீரில் போட்டு விடும்படி கூறினார். அப்போதாவது அந்த மனிதர் தான் சக்தி குறைந்தவர் என்கிற தாழ்வுமனப்பான்மை இல்லாமல் இருக்கட்டும் என்று அவர் அப்படிச் செய்தார்.

இரண்டு நாட்களுக்கு பிறகு அந்த பெண் மருத்துவரிடம் வந்தாள்.

மருத்துவர் அவளிடம், என்ன நடந்தது, மாத்திரை வேலை செய்ததா?'' என்று கேட்டார்.

அதற்கு அந்த பெண், ''மிகவும்; அற்புதம். அந்த மாத்திரையின் விளைவை அறிவதற்கு நான் மிகவும் ஆவலாக இருந்தால் நான் மூன்று மாத்திரைகளை ஒரு கோப்பை காப்பியில் போட்டு கொடுத்து விட்டேன். அதன்பின்னர் அதைக் குடித்து முடித்த ஒரு சில நொடிகளில், எழுந்தார், மேஜையை எட்டி உதைத்தார். என்னை தரையில் கீழே தள்ளினாக மேலும் என்னை கற்பழித்தார்,'' என்றாள்.

உடனே மருத்துவார், ''அப்படியா! நீ ஆச்சரியப்பட்டிருக்க மாட்டாய் என்று நான் நினைக்கிறேன்,'' என்றார்.

அதற்கு அந்த பெண், ''ஆச்சரியமா? நான் மீண்டும் அந்த உணவு விடுதிக்குள் ஒருபோதும் காலடி எடுத்து வைக்க முடியாது!'' என்றாள்.

அப்படித்தான் விலங்குகள் உடல் இன்பம் காண்கின்றன. நீ உனது உணர்வுகளை இழந்து விடமுடியும். அப்போது உன்னால் ஒரு மிருகம் போன்று நடந்து கொள்ளமுடியும். நெறி கோணல் என்றால் நீ உனது தன்னுணர்வை இழந்து கொண்டிருக்கிறாய் என்று அர்த்தம். நீ மனித இனத்திற்கு கீழே உள்ள ஏதோ ஒன்று போல நடந்து கொள்கிறாய். விலங்குகளின் நிலைக்கு கீழே விழுவதற்கும் கடவுள் உள்ள நிலைக்கு மேலே எழுவதற்கும் மனிதனிடம் திறமை உள்ளது. அதுதான் மனிதனின் மகிமை அதேசமயம் அதுதான் துயரமும் கூட. அதுதான் அவனது துன்பம் மற்றும் அதுதான் அவனது பேரின்பமும்கூட. ஆழத்தில் உள்ள நரகத்திற்கும், உயரத்தில் உள்ள சொக்கத்திற்கும் செல்கின்றன தகுதிபெற்ற ஒரே உயிர் ஒரே விலங்கு, இந்த உலகில் மனிதன் மட்டுமேயாகும்.

நெறி கோணல் என்பது நீ வெறுமனே பின்னோக்கி விழுந்து விட்டாய் என்று அர்த்தம். மாற்றம் என்றால் நீ மேல்நோக்கி,

நகர்ந்து செல்கிறாய், மேல்நோக்கி விழுகிறாய் என்று அர்த்தம். எனவே மேல்நோக்கிய பயணத்திற்கு ஒருவன் மாற்றப்படா விட்டால், ஒருவன் நெறி கோணியவனாக இருக்கிறான். உனது நெறிகோணல் மிகவும் விநோதமானதாக இல்லாமல் கூட இருக்கலாம். மேலும் அதற்கு நீ உன்னை சரிசெய்தும்; கொள்ள லாம். ஒருவேளை அது எல்லாரும் செய்கின்ற சாதாரணமான நெறி கோணலாகவும் கூட இருக்கலாம். அதன்பின்னர் அது சரியானது. அதை சகித்துக் கொள்ளமுடியும். ஆனால் ஒரு சிலமக்கள் விதிவிலக்கான நெறிகோணல்களை, தனிப்பட்ட நெறிகோணல்களை, தங்களுக்கே சொந்தமானவற்றை பெற்றுள்ளனர். மேலும் அவர்கள் இந்த சமுதாயத்தோடு தங்களை சரிசெய்து கொள்ளமுடியாது. எனவே இங்கு இரண்டு வகையான அதாவது நெறிகோணிய, நெறிமாறிய ஆகிய இரண்டு வகை மக்கள் மட்டுமே இருக்கிறார்கள் என்பதை நினைவில் கொள்.

ஆனால் நெறி மாறியவர்கள் மனித இனத்திற்கு மேலே எழுந்து நிற்க ஆரம்பித்து விடுகின்றனர். ஆனால் உனக்குள் உள்ள எல்லா மிருகத்தனங்களையும் நீ ஏற்றுக் கொள்வது மட்டுமே மனித இனத்திற்கு மேலே எழுந்து நிற்கின்ற ஒரே வழியாகும். ஒருவன் தான் என்னவாக இருக்கிறானோ அதையெல்லாம் ஏற்றுக்கொண்டு விட்டால் அவன் என்னவாக ஆகமுடியுமே அதை அவன் பெறுகின்ற தகுதியுடைய வனாகிறான்.

இன்று இது போதும்.

ஞானிக்கு நன்மை மற்றும் தீமை
ஆகிய இரண்டும் மிக உயர்ந்த நன்மையாகும்.
எந்த ஒரு தீமையும் கடவுளிடம் இருந்து வருவதில்லை;
அவரிடமிருந்து தீமை வருகிறது என்ற நீ நினைத்தால்,
நீ அதை நன்மையாகப் பார்ப்பது நல்லது.
திடநம்பிக்கையின் பாதையில்,
நீ ஒரு மாறுகண்ணுடையவன் இரண்டாகப்
பார்ப்பதுபோல நீ இருக்கிறாய் அல்லது
ஒரு முட்டாள் ஒட்டகத்தின் வடிவம் குறித்து
வாய்த்தகராறு செய்பவன் போன்று இருக்கிறாய்
என்பதால் நான் பயப்படுகிறேன்.
அவர் உனக்கு விஷத்தை கொடுத்தால்,
அதைத் தேன் என்று கருது;
மேலும் அவர் உன்னிடம் கோபத்தை காட்டினால்,
அதைக் கருணையாக கருது.

உனக்கு கொடுக்கப்பட்டுள்ளதோடு திருப்தியாக இரு;
ஆனால் உன்னிடம் ஏதாவது புகார்கள் இருந்தால்,
அவற்றை காடி (Cadi)யிடம் எடுத்துக் கொண்டு போ,
மேலும் அவரிடமிருந்து திருப்தியை பெற்றுக்கொள்.
-இப்படித்தான் ஒரு முட்டாளின் மனம் வேலை செய்கிறது!

அதிஷ்டமோ, துரதிருஷ்டமோ,
உனக்கு என்ன நேர்ந்தாலும் அது
கலப்படமற்ற ஆசீர்வாதம்;
உடன்வருகின்ற தீமையானது ஒரு
ஓடிப்போகின்ற நிழல்

*வார்த்தைகளின் உலகில்*
*''நன்மை'' மற்றும் ''தீமை'' ஆகியவற்றிற்கு*
*அர்த்தம் கிடையாது. அவை*
*''நான்'' மற்றும் ''நீ'' என்கிற இந்த உலகில்*
*உருவாக்கப்பட்ட வெறும் பெயர்கள்.*

*உனது வாழ்க்கையானது அவரது வாயில் ஒரு சிறுகவளம்*
*அவரது விருந்தானது ஒரு திருமணம் மற்றும்*
*ஒரு விழித்தெழுதல் ஆகிய இரண்டுமாக உள்ளது*
*இருள் ஏன் இதயத்தை பயமுறுத்த வேண்டும்?*
*ஏனெனில் இரவானது ஒரு புதிய தினத்தை கர்ப்பத்தில்*
*கொண்டுள்ளது.*

*காலம் என்னும் கம்பளத்தை சுருட்டி விட்டதாக*
*நீ கூறுகிறாய்,*
*அப்படியானால் அதன்பின்னர்*
*நீ கடவுளின் கட்டளைக்குள் வரும் வரை*
*வாழ்க்கை மற்றும் பகுத்தறிவிற்கு அப்பால்*
*காலடி எடுத்து வை.*

*இரவில் குருடனாக இருப்பதாலும்,*
*உனது முட்டாள் ஞானத்தால் பகலில்*
*ஒற்றைக் கண்ணோடு இருப்பதாலும்*
*உன்னால் எதையும் பார்க்க முடியாது!*

ஞானம் என்பது என்ன? நிச்சயமாக அது கற்றறிவு கிடையாது. கற்றறிவு ஒரு பாசாங்குக்காரன். அது ஒரு பொய்யான நாணயம். அது ஞானம் போன்று தோன்றுகிறது. மேலும் அது ஞானம் போன்று தோன்றுவதால் அது மிகவும் ஆபத்தானது. அதனால் ஒருவன் சுலபமாக ஏமாற்றப்பட்டு விடலாம்.

கல்வி அறிவு என்பது வெளியில் இருந்து வருகிறது. ஞானம் என்பது உள்ளுக்குள் எழுகிறது. கல்வி அறிவு என்பது ஒரு வியாபாரப் பொருள். நீங்கள் அதை சந்தையில் வாங்கமுடியும். அது விற்கப்படுகிறது. அது வாங்கவும்படுகிறது. ஞானம் என்பது

ஒரு வியாபாரப் பொருள் அல்ல. அதைக் கண்டு பிடிக்க நீங்கள் உங்களது வாழ்க்கையை பணயமாக வைக்க வேண்டும். அது பேரம்பேசி வாங்குவதல்ல, அது ஒரு சூதாட்டம்.

கற்றறிவு என்பது கடந்தகாலத்தில் நீ அறிந்து கொண்டது எல்லாவற்றையும் கொண்டுள்ளது. ஞானத்திற்கும் கடந்த காலத்திற்கும் சம்பந்தமே கிடையாது. அது நிகழ்காலம் பற்றியது. அதற்கும் கடந்த காலத்திற்கும் சம்பந்தம் கிடையாது. மேலும் அதற்கும் எதிர்காலத்திற்கும் கூட சம்பந்தம் கிடையாது. ஏனெனில் எதிர்காலம் என்பது கடந்த காலத்தின் நீட்டிப்பே தவிர வேறு ஒன்று இல்லை. அது கடந்த காலத்தை கொஞ்சம் மாற்றி, இங்கும் அங்கும் அலங்கரித்து, வண்ணம்தீட்டி, பளபளப்பாக்கி வைப்பதாகும். ஆனால் அது பழைய கடந்தகாலம் தான், கொஞ்சம் புதுப்பிக்கப்பட்டுள்ளது.

கல்வி அறிவு என்பது காலம் என்பதில் உள்ளது. காலம் என்பது கடந்தகாலம் மற்றும் எதிர்காலத்தை பெற்றிருக்கிறது. ஞானத்திற்கு காலத்தைப் பற்றி எதுவும் தெரியாது, ஞானத்திற்கு எல்லையற்ற காலம் மட்டுமே தெரியும். முடிவற்ற காலம் என்பதில் இப்போதுள்ள பொழுது, இந்த நொடிப்பொழுது, நிகழ்காலம் என்பதை மட்டுமே கொண்டுள்ளது. எல்லையற்ற காலம் என்பது வருவதும் இல்லை, போவதும் இல்லை, அது எப்போதும் இங்கேயே இருக்கிறது.

ஞானம் அமைதியைக் கொண்டு வருகிறது. கற்றறிவு கவலையைக் கொண்டு வருகிறது. அவை எவ்வளவுதான் ஒரே மாதிரி தோன்றினாலும், அவை நேர் எதிரானவை. ஞானம் திருப்தியை, முழுமையான திருப்தியை கொண்டு வருகிறது. கல்வி அறிவானது மேலும் மேலும் அதிருப்தியைக் கொண்டு வருகிறது. ஏனெனில் மனம் என்பது அதிகம் ஆசைப்படுவதில் மட்டுமே உள்ளது. அது இடைவிடாமல் அதிகம் ஆசைப்படக் கூடியது. உங்களிடம் பணம் இருந்தால், அது அதிக பணத்திற்கு ஆசைப்படுகிறது, உங்களிடம் அதிகாரம் இருந்தால் அது அதிக அதிகாரத்திற்கு ஆசைப்படுகிறது. உங்களிடம் கல்வி அறிவு இருந்தால் அது அதிக கல்வி அறிவிற்கு ஆசைப்படுகிறது. அதன்

செயல்முறை ஒரே மாதிரியானது. பொருள்கள் வேறுபடும். ஆனால் செயல்முறை அதே மாதிரியாகத் தான் இருக்கும்.

ஞானத்திற்கு 'அதிகம்' என்பதே தெரியாது. அது முழு திருப்தியானது. மேலும் இந்த ''அதிகம்'' என்பது உங்களைச் சுற்றிலும் இருந்தால் நீங்கள் இடைவிடாத மனப்பதற்றத்தில், ஒரு மோசமான மன அழுத்தத்தில் இருக்கிறீர்கள். ஏனெனில் எதுவுமே போதுமானதாகத் தெரியாது. நீங்கள் துக்கத்திலும், கவலையிலும் வாழ்கிறீர்கள்.

கல்வி அறிவானது உங்களது நான் என்னும் ஆணவத்தை திருப்திப்படுத்துகிறது. ஞானத்தில் ஆணவம் வெறுமனே மறைந்து விடுகிறது. அதைக் காணவே முடியாது. கற்றறிவிற்கு வித்தியாசங்கள் தெரியும், கற்றறிவு வித்தியாசங்களைச் சார்ந்தே இருக்கிறது. அதாவது இது மற்றும் அது, இங்கு மற்றும் அங்கு, இப்போது மற்றும் பின்னர், நன்மை மற்றும் தீமை, அழகு மற்றும் அசிங்கம்; கடவுள் மற்றும் சாத்தான் இப்படி வித்தியாசங்களைச் சார்ந்தே உள்ளது. நான்-நீ என்று இரட்டைத் தன்மையுடன் கல்வி அறிவு உள்ளது. அதுதான் அதன் வடிவம். அது உண்மை நிலையைப் பிரிக்கிறது. கற்றறிவு மனதைச் சிதைக்கிறது. ஞானம் ஒன்று சேர்க்கிறது.

ஞானம் என்றால் ஒன்று கலந்த புதிர் என்று அர்த்தம். அதன்பின்னர் அங்கு கடவுளும் கிடையாது, சாத்தானும் கிடையாது. ஒன்றே ஒன்று மட்டும் இருக்கிறது. நீங்கள் அந்த ஒன்றிற்கு என்ன பெயர் கொடுக்கிறீர்கள் என்பது வெறுமனே அறிவுக்கு பொருந்தாத தேர்வாகும். நீங்கள் அதைக் கடவுள் என்று அழைக்கலாம். ஆனால் அது சாத்தானுக்கு எதிரான கடவுள் அல்ல என்பதை நினைவில் கொள்ளுங்கள். ஞானத்தின் கடவுள் சாத்தானுக்கு எதிரானது அல்ல. அது சாத்தானை தனக்குள்ளே வைத்திருக்கிறது. நீங்கள் அதை தாவோ என்று அழைக்கலாம். நீங்கள் அதை தர்மா என்று அழைக்கலாம். நீங்கள் அதை லோகோஸ் என்றோ அல்லது நீங்கள் எப்படி விரும்புகிறீர்களோ அப்படி அழைக்கலாம். ஆனால் அதில் எதிரானதும் உள்ளது என்கிற ஒரு விஷயத்தை நினைவில் கொள்ளுங்கள். நினைவில்

கொள்ளவேண்டிய முக்கிய விஷயம் அதுதான். ஒரு ஞானி கடவுள் என்ற வார்த்தையைக் கூறும்போது, அதில் சாத்தான் என்கிற வார்த்தையும் உள்ளது.

சாத்தான் என்பதற்குரிய 'DEVIL' என்னும் ஆங்கில வார்த்தையின் மூலம் எது என்பதை அறிவீர்களா? அது தேவ் (DEV) என்னும் சமஸ்கிருத வார்த்தையில் இருந்து வருகிறது. தேவதா என்கிற சமஸ்கிருத வார்த்தையில் இருந்து அது வருகிறது. அவை இரண்டும் அதே மூலத்தில் இருந்து வருகிறது. தேவதா என்றால் கடவுள் என்று அர்த்தம். DEVIL என்றால் சாத்தான் என்று அர்த்தம். ஆனால் அவை தேவ் என்னும் அதே வார்த்தையில் இருந்து வந்தவை. 'DEV' என்னும் வார்த்தையில் இருந்துதான் 'DEVIL' என்னும் ஆங்கில வார்த்தை வருகிறது. மேலும் DEVINE என்ற ஆங்கில வார்த்தையும் கூட அதில் இருந்துதான் வருகிறது. தெய்வமும், சாத்தானும் இரண்டு விஷயங்கள் அல்ல.

இயற்கை ஒன்றாகத்தான் இருக்கிறது, முற்றிலும் ஒன்றாக உள்ளது. அது ஒரு உயிரோட்டமுள்ள ஒற்றுமை. எனவே ஞானி கடவுள் என்கிற வார்த்தையை பயன்படுத்தும்போது அதில் சாத்தான் என்பதும் அடங்கி உள்ளது. அது உள்ளடக்கியது. அது எதையும் வெளியேற்றுவது கிடையாது.

ஆனால் கற்றறிந்த ஒரு மனிதன் இதே வார்த்தைகளைப் பயன்படுத்தும் போது அவரது வெளிப்படையான அர்த்தமானது வேறுபட்டு இருக்கிறது. அவர் கடவுள் என்கிற வார்த்தையைப் பயன்படுத்தும்போது அவர் சாத்தானுக்கு எதிராக இருக்கிறார். அவர் நான் என்னும் வார்த்தையைப் பயன்படுத்தும்போது, அது நீ என்பதற்கு எதிரானதாக உள்ளது. அவர் வாழ்வு என்னும் வார்த்தையை பயன்படுத்தும்போது அது மரணம் என்பதற்கு எதிரானதாக உள்ளது.

ஞானத்திற்கு வித்தியாசங்கள் கிடையாது. எல்லா வித்தியாசங்களும் கைவிடப்பட வேண்டும். அதன்பின்னர் மட்டுமே ஒருவன் ஞானியாக ஆகிறான். நல்ஒழுக்கம் உருவாக்குகின்ற

வித்தியாசங்கள், நமது சாதாரண வாழ்க்கை எதன்மீது கட்டப்பட்டு அது இருக்கிறதோ அதில் உள்ள வித்தியாசங்கள், அந்த வித்தியாசங்கள் எல்லாம் கைவிடப்பட வேண்டும். ஆண் மற்றும் பெண்ணுக்கு இடையே உள்ள வித்தியாசம் மேம்போக்கானது. மேற்பரப்பில் உள்ளது. பொருள் என்பது மனம், தூக்கத்தில் இருக்கும் நிலையாகிறது. மனம் என்பது பொருளானது விழிப் புற்ற நிலையில் இருப்பதாகிறது. உடலுக்கும் ஆன்மாவிற்கும் இடையே உள்ள வித்தியாசமானது மேம்போக்கானது. உடல் என்பது ஆன்மாவின் கண்ணுக்கு தெரியும் பகுதி, ஆன்மா என்பது உடலின் கண்ணுக்கு தெரியாத பகுதி; அவை இரண்டு அல்ல. ஞானம் இந்த இரண்டு என்பதைப் பற்றி எதுவும் அறியாதது.

மேலும் இந்த ஞானமானது வெறும் தகவல்களைச் சேர்த்து வைப்பதால் மட்டும் சேர்த்து வைப்பதில்லை. அது நூலகத்திலோ அல்லது பல்கலைக்கழகத்திலோ உட்கார்ந்து கொண்டிருப்பதன் மூலம் நடப்பதில்லை. அது நீங்கள் உங்களது சொந்த நடுமையத்தில் கரைந்துவிடும்போது நடக்கிறது. அது உள்நோக்கி செல்வதன் மூலம் நடக்கிறது. உங்களது அடிமட்டத்தை தொடும்போது அது நடக்கிறது. நீங்கள் உங்களது தரையைத் தொடும்போது அது வெடிக்கிறது. எல்லா வித்தியாசங்களும் மறைந்து விடுகின்றன. திடீரென்று வாழ்க்கை ஒன்றாக இருக் கிறது. ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றோடும் இணைக்கப் பட்டுள்ளது. ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றைச் சார்ந்து உள்ளது, ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றின் அங்கத்தினராக உள்ளது.

அதன்பிறகு நீங்கள் மரத்தை மண்ணில் இருந்து தனி யானதாக பார்க்க மாட்டீர்கள். அது அப்படி அல்ல. அதன்பிறகு நீங்கள் மரத்தை சூரியனில் இருந்து தனியானதாகப் பார்க்க மாட்டீர்கள். ஏனெனில் அது அப்படி அல்ல. அதன்பிறகு மரமானது சூரியனில் கண்ணுக்கு தெரியாத கதிர்களோடு சேர்ந்திருக்கும். சூரியன் இல்லை என்றால் மரம் மறைந்துவிடும். அது பச்சையாக ஒருபோதும் இருக்காது. அதிலிருந்து மலர்கள் வராது. மேலும் பூமி இல்லை என்றால் அந்த மரத்தில் சாறு

இருக்காது. அது உயிர்த்துடிப்புடன் இருக்காது. மேலும் கடல் இல்லாவிட்டாலும்கூட அது இறந்துவிடும். நீங்கள் ஒரு மரத்திற்குள் ஆழ்ந்து சென்றால், அதில் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் இருப்பதைக் கண்டு கொள்வீர்கள்.

''நீங்கள் ஒரு சிறு மலரை அறிந்து கொண்டால், வேரோடு எல்லா விஷயத்தையும் அறிந்து கொண்டால், நீங்கள் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சத்தையும் அறிந்து கொண்டிருப்பீர்கள்'' என்று ஆல்பிரட் டென்னிசன் கூறுவது சரியானது தான். ஏன்? ஏனெனில் ஒரு சிறு மலர் கூட எல்லாவற்றையும் உள்ளடக்கி உள்ளது. அது சூரியனின் பகுதியாக, நிலவின் பகுதியாக, பல கோடி நட்சத்திரங்களின் பகுதியாக இருந்துள்ளது. அவை எல்லாம் இந்த சிறிய மலருக்குள் தங்களை ஊற்றி இருக்கின்றன. அதற்கு எல்லாமும் பங்களித்து இருக்கின்றன. பூமி மற்றும் நீங்கள் தொடர்பு உண்டு என்று காணாத பல விஷயங்களும் பங்களித்துள்ளன. ஒரு ரோஜாச் செடியின் அருகில் விளையாடு கின்ற ஒரு குழந்தையும்கூட அந்த ரோஜாச் செடி வளர்வதற்கு உதவி உள்ளது. அந்தக் குழந்தை அதைச் சுற்றி விளையாட வில்லை என்றால் அந்த ரோஜாச் செடியானது வேறுபட்டதாக இருந்திருக்கும்.

இப்போது இதைப் பற்றி அறிந்து கொள்வதற்கான அறிவியில் பூர்வமான வழிகள் உள்ளன. குழந்தையானது அந்த ரோஜாச் செடியை சுற்றி நடனமாடிக் கொண்டு, சந்தோஷமாக பாட்டுப் பாடிக்கொண்டு இருக்கும்போது அந்த ரோஜா யாரோடு தொடர்பு இருக்கிறது. அந்த ரோஜா, நடனத்தை உயிர்த்துடிப்பை உணர்ந்து வேகமாக வளர்கிறது. இப்போது ரோஜாச் செடிகள் இசையைக் கேட்கும்போது, அவை வேகமாக வளர்வதாகவும், அவை பெரிய பூக்களாக இருப்பதாகவும் நன்கு நிரூபிக்கப்பட்ட உண்மையாக உள்ளது. செடிகள் இசையைக் கேட்டால் அவை வேகமாக வளர்கின்றன. அவை பெரிய பழங்களைக் கொடுக்கின்றன. மேலும் மற்ற சமயத்தை விட இப்போது அவை சீக்கிரமாக பழங்களைக் கொடுக்கின்றன. அவை இசை அல்லாமல் சச்சரவால் சூழப்பட்டால், ஒத்திசைவான தாளங்கள்

இல்லாமல் தப்புத்தாளங்களோடு கூடிய கூச்சலாக இருந்தால் அவைகளின் வளர்ச்சி குறைகிறது. அவை நிலைகுத்தி நின்று விடுகின்றன. மலர்கள் வரும் ஆனால் அதிகபட்ச நிலைக்கு வராது. ஏதோ ஒன்று நலம் குன்றியதாக இருக்கிறது.

ஆகவே ஒவ்வொன்றும் ஏனைய ஒவ்வொன்றிற்கும் பங்களிக்கின்றன. இந்த பிரபஞ்சமானது என்னவாக அது உள்ளதோ அதனால்தான் நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அப்படி இருக்கிறீர்கள். நீங்கள் இந்த பிரபஞ்சத்தின் உள் உறைந்துள்ள பகுதி. நீங்கள் உங்களது சொந்த உயிர் உணர்விற்குள் நுழைந்துவிட்டால், நீங்கள் இந்த முழுமைக்கு கிடைப்பீர்கள். மேலும் இந்த முழுமையும் கூட உங்களுக்கு கிடைக்கும். நீங்கள ஒரு புதிய கண்ணோட்டத்தோடு பார்க்க முடியும்.

எனவே ஞானம் என்பது கல்வி அறிவல்ல. அப்படியானால் அது என்ன? ஞானம் என்பது தியானம். ஞானம் என்பது மௌனம். ஞானம் என்பது அமைதி. ஞானம் என்பது ஆ வெய். ஞானம் என்பதற்கு இந்த பிரபஞ்சத்தோடு முழுமையாக ஒன்றுகலந்து முழுமையான அமைதி நிலையில் இருத்தல் என்று அர்த்தமாகும். இந்த முழுமையோடு ஒத்திசைந்து இருக்கின்ற ஒரு உயிருள்ள அனுபவமாகும்.

கல்வி அறிவுள்ள ஒரு மனிதன், புனித நூல்கள், கொள்கைகள், தத்துவங்கள், மற்றும் மறை இயல்கள் ஆகியவற்றின் கடந்தகால சுமைகளைச் சுமந்து செல்கின்ற கழுதை போன்றவன். உண்மை அல்லாத பல லட்சம் கேள்விகளுக்கு அவனால் பதில் கூற முடிந்தாலும் கூட ஒரு சிறு உண்மையான கேள்விக்கு அவனால் பதில் கூறமுடியாது.

ஒரு யூதர், கழுதையினால் இழுத்துச் செல்லக்கூடிய சிறிய வண்டியை ஓட்டிக்கொண்டு பாலத்தில் உள்ள சுங்கச்சாவடிக்கு வந்தார். சுங்கம் வசூலிப்பவர் வெளியேவந்து, ''இந்த பாலத்தை கடப்பதற்கு முன்பு நீ சுங்கம் கொடுக்க வேண்டும்,'' என்றார்.

''என்னது! சுங்கம் செலுத்த வேண்டுமா?''

''ஆம், பாலத்தைக் கடப்பதற்கு ஐந்து செண்ட்''

ஒரு விவாதத்திற்கு பிறகு யூதர் ஐந்து செண்ட் பணம் கொடுத்துவிட்டு போய்விட்டார். மாலையில் அவர் மீண்டும் திரும்பி வந்தார். ஆனால் இந்த முறை அந்த கழுதையை வண்டியின் இருக்கையில் உட்கார வைத்துவிட்டு, அவர் வண்டியை இழுத்துக் கொண்டு வந்தார்.

சுங்கம் வசூலிப்பவர் வெளியே வந்து, ''நீ ஐந்து செண்ட் பணம் கொடுக்க வேண்டும் என்பதை அறிவாயா?'' என்று கேட்டார்.

அந்த யூதர் தலையை அசைத்துவிட்டு அந்த கழுதையைக் காட்டி, ''என்னோடு பேசாதீர்கள், ஓட்டுனரைக் கேளுங்கள்,'' என்றான்.

பண்டிதர், அறிவாளி, ஆகியோர் வண்டியில் உட்கார்ந்து கொண்டு ஓட்டுனர் போல பாசாங்கு செய்கின்ற ஒரு கழுதையைப் போன்றவர்கள். அவர் ஓட்டுனர் அல்ல, அவருக்கு எதுவும் தெரியாது. அவர் அதிக அறிவை சேர்த்து வைத்திருந்தாலும் அவருக்கு எதுவும் தெரியாது.

அறிதல் என்பது அறிவு என்பதை விடவும் முற்றிலும் வேறுபட்ட ஒரு விஷயம்.

ஒரு கத்தோலிக்க ஆர்ச்பிஷப்; ஒரு சிறிய கிராமத்தில் உள்ள தேவாலயத்திற்கு சென்றார். அங்கு இருந்த பயந்து கொண்டிருந்த ஒரு சிறுமியிடம் திருமணம் என்றால் என்ன என்று கேட்டார்.

அந்த சிறுமி, ''அதில் நுழைபவர்கள்,ஒரு பிரகாசமான, சிறந்த உலகிற்காக தயார் செய்து கொள்வதற்காக நிர்பந்தப்படுத்தி செல்ல வைக்கின்ற ஒரு பயங்கர வேதனை நிலை'' என்று கூறினாள்.

உடனே பாதிரியார், ''இல்லை, இல்லை, அது திருமணம் அல்ல, அது இறந்த பிறகு ஆன்மாவைத் தூய்மைப்படுத்துவ தாகும்,'' என்றார்.

அப்போது அந்த ஆர்ச்பிஷப், ''அவளை விட்டு விடுங்கள், அவள் கூறுவது சரியானதாக இருக்கலாம். உங்களுக்கும் எனக்கும் அதைப்பற்றி என்ன தெரியும்?'' என்றார்.

அறிதல் என்பது அனுபவித்தல் மூலம் வருகிறது. கல்வி அறிவு என்பது உங்களது சொந்த அனுபவம் அல்ல. அவற்றைப் பற்றி அறியாமலேயே நீங்கள் பல லட்சம் விஷயங்களை அறிந்து கொள்ள முடியும். ஆனால் அதன்பின்னர் அதைச் சார்ந்து இருக்காதீர்கள். அது உண்மை நிலையோடு ஒன்று சேர முடியாது. அது வாழ்க்கையின் புதிர்களை உங்களுக்கு வெளிபடுத்தாது.

பாஸ்டனில் இரண்டு பெண்கள் மணவாழ்க்கையின் அழகினைப் பற்றி பிஷப் எழுச்சியான பிரசங்கம் செய்ததைக் கேட்டார்கள். அந்தப் பெண்கள் உயர்வாக நினைத்துக் கொண்டும், திருப்தியோடு தேவாலயத்தை விட்டு வெளியே வந்தனர்.

அதில் ஒரு பெண், ''இன்றுகாலை மேதகு பிஷப் ஒரு நல்ல பிரசங்கத்தை நமக்கு கொடுத்தார்,'' என்றாள்.

உடனே அடுத்த பெண், ''ஆம் அப்படித்தான் இருந்தது. ஆனால் அந்த விஷயத்தைப் பற்றி அவர் செய்தது போன்று எனக்கு கொஞ்சம்தான் தெரியும் என்று நான் விரும்புகிறேன்,'' என்றாள்.

எதையுமே தெரிந்து கொள்ளாமல்; அறிந்து கொள்கின்ற ஒரு வழி இருக்கிறது. அதுதான் கல்வி அறிவு. உண்மையிலேயே தெரிந்து கொள்வதன் மூலம் அறிந்து கொள்கின்ற ஒரு வழி உள்ளது. அதுதான் ஞானத்தின் வழியாகும். ஞானம் என்பது இருப்புநிலை சார்ந்தது. கல்வி அறிவு என்பது அறிவு சார்ந்தது. கல்வி அறிவில் உங்களது மனதின் ஒருபகுதி மட்டுமே ஈடுபடுகிறது. ஞானத்தில் உங்களது முழுமையும் மூழ்கி விடுகிறது. மேலும் வேறுபாடானது அபரிமிதமானது, வேறுபாடானது நம்பமுடியாத, அளக்கமுடியாததாக இருக்கிறது.

உண்மைநிலை பற்றி அறிதல் என்பது உண்மையிலேயே அதை அறிதல் அல்ல. அந்த ''பற்றி'' என்பது உங்களைச்

சுற்றிச்சுற்றி எடுத்துச் செல்கிறது. ஆனால் ஒருபோதும் விஷயத்திற்கு வராது. அது ஒரு புதரைச் சுற்றி அடித்துக் கொண்டே செல்வதாகும். நீங்கள் சுற்றி சுற்றி அடித்துக் கொண்டே போகலாம். ஆனால் கிட்டத்தட்ட பயனற்றது.

ஞானத்திற்கு நேரடியாக அணுகுமுறை தேவைப்படுகிறது. ஞானத்திற்கு அந்த விஷயத்தினை சுற்றி சுற்றி வராமல் விஷயத்தின் மையத்திற்குள் குதித்து விடுதல் தேவைப்டுகிறது. அந்த விஷயத்தை சுற்றி சுற்றி வருவதால் நீங்கள் அதோடு பழக்கப்படலாம். ஆனால் பழக்கப்படுதல் அறிதல் ஆகாது. சாதாரண அர்த்தத்தில் கற்றறிவு என்ற அழைக்கப்படுவதெல்லாம் ஒரு தவறான சொல்வாக்கு. ஏனெனில் அது உங்களது நினைவாற்றல் என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. அது அறிவு அல்ல. நினைவாற்றல் அறிவு அல்ல. அது கிளிப்பிள்ளை போன்றது.

நீங்கள் அதற்கு கண்ணால் கண்ட சாட்சியாக இருக்கும் போது மட்டுமே அறிவு என்பது உண்மையானதாக இருக்கிறது. பார்த்தல் தான் நம்புதலாக உள்ளது. ஆனால் தேவாலயங்கள், கோவில்கள், மசூதிகளில் உள்ள மக்கள் இதற்கு எதிரான ஒன்றைக் கூறுகின்றனர். அவர்கள், "நம்புவதே காண்பது" என்று கூறுகின்றனர். நம்புவது எப்படி காண்பதாக இருக்கமுடியும்? நம்புதல் என்பது ஏமாற்றுதலாக மட்டுமே இருக்கமுடியும். நம்புதல் என்பது உங்களைச் சுற்றி ஒரு விதமான பிரம்மையை ஏற்படுத்துகிறது. நீங்கள் உண்மையில் ஒன்றினை அதிகம் நம்பினால் நீங்கள் அதைப் பார்க்க ஆரம்பிக்கலாம். ஆனால் அது அங்கு இல்லை. அது உங்களது மனதினால் உருவாக்கப்பட்டது. அது உங்களது திரையிடல்.

ஒருபோதும் நம்பிக்கையோடு ஆரம்பிக்காதீர்கள். அப்படிச் செய்தால் நீங்கள் ஒருபோதும் உண்மைநிலையை அறிந்து கொள்ள மாட்டீர்கள். உங்களது தேடுதலில் நம்பிக்கையும் இல்லாமல் அவநம்பிக்கையும் இல்லாமல் வெறுமையாகச் செல்லுங்கள். இப்படித் தெரிந்து கொண்டோ அல்லது அப்படி தெரிந்து கொண்டோ போகாதீர்கள். வெறுமனே திறந்த மனதுடன்

செல்லுங்கள். கள்ளம் கபடமற்று, முழுவதுமாக ஒன்றும் இல்லாமல் செல்லுங்கள்.

சீடனுக்கு திறந்தமனம் என்கிற ஒரே ஒரு விஷயம் மட்டுமே தேவை. நம்பிக்கை என்பது இல்லை. உண்மையான சீடன் கடவுளை முழுமையாக புரிந்து கொள்ள முடியாது என்று நினைப்பவன். அவன், ''எனக்கு தெரியாது, எந்த வழியிலும் நான் நம்பப் போவதில்லை. உண்மையானது வந்து எனது கதவைத் தட்டும் வரையில் நான் திறந்த மனதுடன் இருப்பேன். நான் தேடுவேன்'' என்று கூறிகிறான்.

ஆனால் நம்பிக்கை மற்றும் அவநம்பிக்கை இல்லமல் தேடுவதற்கு மிகப்பெரிய தைரியம் தேவை. மனம் நம்பிக்கைக்கு ஆசைப்படுகிறது. ஏனெனில் அது நம்பிக்கையைப் பற்றிக் கொள்ளும். அது மனதிற்கு மிகப்பெரிய ஆறுதலைக் கொடுக் கிறது. மனமானது, ''எனக்கு தெரியும், குறைந்தபட்சம் கொஞ்சம் தெரியும். ஆனால் எனக்கு தெரியும் நான் முற்றிலும் அறியாத வன் அல்ல'' என்று உணர ஆரம்பிக்கிறது.

முற்றிலும் அறியாதவனாக இருப்பதற்கு சீடனுக்கு தைரியம் தேவை. அந்த அறியாமையில் கள்ளம் கபடமின்மை எழுகிறது. அந்த கள்ளம் கபடமற்ற நிலையில் உங்களிடம் நான் என்னும் தன்முனைப்பை நீங்கள் கண்டு கொள்ளமுடியாது. ஆணவத் திற்கு நம்பிக்கை அல்லது அவநம்பிக்கை தேவைப்படுகிறது.; அவை எதிர்மறையான நம்பிக்கை என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. ஒருவர் கடவுளை நம்புகிறார். அடுத்தவர் கடவுளை நம்புவதில்லை. ஆனால் இருவரும் உறுதியாக உள்ளனர். இரு வரும் சாய்ந்து கொள்ள ஊன்றுகோல்களை வைத்திருக்கின்றனர்.

உங்களது ஊன்றுகோல்களை தூக்கி எறிந்துவிடுங்கள். அதன்பின்னர் மட்டுமே உண்மைநிலையை தெரிந்து கொள்வதற்கு சாத்தியப்படும். மேலும் அதைத்தான் நான், ''வேறு வகையன அறிதல்'' என்று அர்த்தம் கொள்கிறேன். உண்மை நிலையாக இருப்பது என்றும், அதைப்பற்றி தகவல்களைப் பெறுதல் அல்ல என்றும் அர்த்தமாகும்.

அன்பாக இருந்து அன்பைப் பற்றி அறிந்து கொள்ளுங்கள், அப்போது அது ஞானமாக இருக்கிறது. நீங்கள் பிரிட்டிஷ் அருங்காட்சியகத்திற்கு சென்று அன்பைப்பற்றி எழுதியுள்ள வற்றை எல்லாம் பார்க்க முடியம். மேலும் அன்பை நீங்கள் எழுதி அதில் டாக்டர் பட்டம்கூட வாங்கமுடியம். ஆனால் அன்பைப் பற்றி எதையும் அறிந்து கொள்ளமுடியாது. நீங்கள் அன்பை கொஞ்சம்கூட சுவைத்துப் பார்த்திருக்க மாட்டீர்கள். உங்கள் நாவில் ஒரு சொட்டு கூட சுவைத்திருக்க மாட்டீர்கள். நீங்கள் அன்பு குறித்து மிகமிக கெட்டிக்காரர் ஆகிவிடமுடியும். உங்களால் அதைப்பற்றி பேசமுடியும். ஆனால் அதை உங்களால்வாழ்ந்து பார்க்க முடியாது. ஆனால் உங்களால் அதை வாழ்ந்து பார்க்க முடியவில்லை என்றால் நீங்கள் அதை அறிந்து கொள்ளவில்லை என்பதை நினைவில் கொள்ளுங்கள். உண்மையான அறிதல் என்பது உண்மைநிலையில் இருப்பதாக, அந்த உண்மை நிலையோடு ஒன்றாக, அல்லது ஐக்கியப்பட்டு அதன் சுயம்பிரகாசமான நிலையில் இருப்பதாகும்.

நீங்கள் மூங்கில் குறித்து ஓவியம் வரைய விரும்பினால் முதலில் மூங்கில் காட்டிற்கு செல்லுங்கள் என்று ஜென்னில் கூறப்படுகிறது. கோடைகாலம், குளிர்காலம், மழைக்காலம் என்று எல்லாக் காலநிலைகளிலும் அந்த மூங்கிலோடு வாழுங்கள். மேலும் அந்த மூங்கில்களோடு நீங்கள் வாழும்போது அந்த மூங்கில்கள் எப்படி உணர்கின்றனவோ அதேபோன்று நீங்களும் உணரமுடியம். இருள்நிறைந்து இரவானது அமைதியாக இருக்கும்போது, மேலே நட்சத்திரங்கள் இருக்கும்போது அந்த மூங்கில்கள் எப்படி உணர்கின்றன என்பதை உணருங்கள். மேலும் சூரியன் உதித்து, பெரும் காற்று வீசும்போது அந்த மூங்கில்கள் அசைந்து நடனமாடும்போது, அந்த மூங்கில்கள் எப்படி உணர்கின்றனவோ அதை உணருங்கள். மேலும் மழை பெய்யும்போது மூங்கில்கள் மகிழ்ச்சி அடைகின்றன. அந்த மகிழ்ச்சியானது உங்களது உயிர் உணர்வில் நுழையட்டும்.

மூங்கிலை ஓவியமாக வரையவேண்டும் என்றால் முதலில் நீங்கள் ஒரு மூங்கிலாக ஆகிவிடுங்கள். மூங்கில்கள் உள்ளே

இருந்து நீங்கள் அதைப்பற்றி அறிந்து கொள்ளாத வரையில், அந்த மூங்கிலோடு நீங்கள் முற்றிலும் ஐக்கியமாகி விடாத வரையில், நீங்கள் என்ன வரைந்தாலும் அது ஒரு புகைப்படமாக மட்டுமே இருக்கும். ஒரு ஓவியமாக இருக்காது. அதுதான் புகைப்படத்திற்கும், ஓவியத்திற்கும் இடையே உள்ள வித்தியாசமாகும். வான்கோக் போன்று எந்த ஒரு புகைப்படக் கருவியும் படம் எடுக்கமுடியாது. எந்த ஒரு புகைப்படக் கருவியும் அதைச் செய்ய முடியாது.

முந்தின நாள் இரவு, ஒரு புகழ்பெற்ற ஓவியர் ஜெல்லி சந்நியாசம் வாங்கினார். என்னைப் பார்க்காமலேயே அவர் என்னை ஓவியமாக வரைந்து இருக்கிறார். ஆனால் அந்த உணர்வை அதில் காட்டி இருக்கிறார். அவர் அதை ஓவியமாக வரைந்தபோது அது மிகச்சரியாக எனது முகமாக இல்லாமல் இருக்கலாம். ஏனெனில் அவர் என்னைப் பார்க்கவில்லை. ஆனால் எனது உயிர் உணர்வின் தன்மையை அவர் கொண்டு வந்திருக்கிறார்.

சுற்றிலும் மலைகள் சூழ நான் அமர்ந்து இருப்பது போல அவர் ஓவியம் வரைந்திருக்கிறார். எனது தன்மையை அவர் வரைந்ததோடு மட்டுமல்ல என்னைச் சுற்றி உள்ள மலைகளும் கூட அதே தன்மையைப் பெற்றிருக்கின்றன. அதே தியானநிலை, அதே அசையாத தன்மை, அதே அமைதி, அதே குளிர்நிலை ஆகிய தன்மைகள் ஓவியத்தில் உள்ளன. மலைகளுக்கும் எனக்கும் இடையே அதில் அபரிமிதமான ஒற்றுமை உள்ளது. எந்த ஒரு புகைப்படக் கருவியும் அதைச் செய்திருக்க முடியாது.

முதல்முதலாக புகைப்படக் கருவியானது கண்டுபிடிக்கப் பட்ட பொழுது இப்போது ஓவியம் என்பது வழக்கொழிந்த ஒன்றாக ஆகிவிடும். மனித உருவ புகைப்படங்கள் காலம் கடந்தவை ஆகிவிடும் என்று எண்ணப்பட்டது. ஆனால் அதற்கு நேர் எதிராக நடந்தது. புகைப்படக் கருவியினால் ஓவியமானது ஒரு புதிய பரிமாணத்தை எடுத்தது. ஆனால் போலித்தனமான ஓவியர்கள் மறைந்துவிட்டார்கள். ஏனெனில் அவர்களின் வேலையானது புகைப்படக் கருவியால் செய்யப்பட்டு விட்டது.

இப்போது உண்மையான, முழுமையான ஓவியர்கள் மட்டுமே இருந்தார்கள்.

புகைப்படக் கருவி கண்டுபிடிப்பதற்கு முன்பு, ஒரு முகத்தை மிகச்சரியான அளவுகளில் வரைவது எப்படி என்பதை அறிந்த தொழில்நுட்ப கலைஞர் ஒரு மாபெரும் ஓவியராக எண்ணப்பட்டார். இப்போது அதை ஒரு புகைப்படக் கருவியினால் செய்யமுடியும். மேலும் மிகவும் துல்லியமாக செய்யமுடியும். எனவே அது போன்ற தொழில்நுட்ப ஓவியர் இப்போது தேவை இல்லை. இப்போது தியானம் செய்கின்ற ஓவியர் தான் தேவை. வெளியில் இருந்து செயல்படாமல், உள்ளே இருந்து செயல்படக்கூடியவர் தான் தேவை.

முந்தின தினம் நான் ஜெல்லிகு தீட்சை கொடுக்கும்போது எந்த ஒன்றோடும் பங்கு கொள்கின்ற தன்மையை, எந்த ஒன்றோடும் அதோடு ஒத்திசைவில் வீழ்ந்து விடுகின்ற தன்மையை அவருக்குள் என்னால் உணர முடிந்தது. அவருக்கு ஆனந் நாதோ என்கிற புதிய பெயரைக் கொடுத்தேன். அதற்கு பேரானந்தம் நிறைந்த ஒலியற்ற ஒலி என்று அதற்கு அர்த்தமாகும்.

அதுதான் தியானத்தின் தன்மை. அதில் ஒலி இருக்காது. அது ஒலி இல்லாமை. எனினும் அங்கு மாபெரும் இனிய இசை, கேட்கப்படாத, கேட்கமுடியாத இனிய இசை இருக்கிறது. எந்த ஒரு குறிப்பிட்ட நிறமும் அங்கு இல்லை. ஆனால் அது மிகவும் வண்ணம் நிறைந்ததாக உள்ளது. அந்த நிலை முரண்பாடானது. நீங்கள் இருப்பீர்கள் ஆனால் நீங்கள் இருக்கவும் மாட்டீர்கள். மேலும் இரண்டுமே உண்மைதான். நீங்கள் ஃபானாவில் இருக்கிறீர்கள். எனினும் நீங்கள் பாகாவில் இருக்கிறீர்கள். நீங்கள் ஃபானாவாக முற்றிலும் இல்லாமல் இருக்கிறீர்கள். மேலும் பாகாவாக முற்றிலும் பிரசன்னமாகி இருக்கிறீர்கள். நீங்கள் ஒரே நேரத்தில் இரண்டுமாக இருக்கிறீர்கள்.

நாதோ என்பது அந்தத் தன்மை, அவரைப் பார்த்ததும், அவரது கண்களைப் பார்த்ததும், அவரால் எப்படி என்னை

ஓவியமாக வரை முடிந்தது என்பதை என்னால் காணமுடிந்தது. அமெரிக்காவில் தொலைவில் இருந்து கொண்டு, என்னை ஒருபோதும் பார்க்காமல், அவரால் உயிடத்துடிப்பை பிடிக்க முடிந்துள்ளது. அந்த தொலைதூர பூமியில் இருந்து கொண்டு அவர் ஆழந்த பங்கு பெறுதலில் வீழ்ந்திருக்க வேண்டும். தூரம் ஆயிரக்கணக்கான மைல்கள் உள்ளது. ஆனால் என்னோடு அவர் இணைய முடிந்தது.

கல்வி அறிவு என்பது ஏதாவது ஒன்றைப் பற்றி அறிவதாகும். அது ஒரு ஒன்றிணைதல் அல்ல. ஞானம் என்பது ஒன்றிணைதல். ஆனால் தான் ஒரு விஞ்ஞானியை விடவும், ஒரு ஓவியர் ஞானிக்கு மிகவும் நெருக்கத்தில் இருக்கிறார் என்று நான் மீண்டும் மீண்டும் கூறுகிறேன். ஓவியர் மிகவும் நெருக்கமாக இருக்கிறார். மேலும் சில தருணங்களில் ஓவியர் கிட்டத்தட்ட ஒரு ஞானியாக இருக்கிறார். அந்தநிலை அந்த தருணத்தில் மட்டுமே இருப்பதாக இருந்தாலும் கூட, அந்த தருணங்கள் வந்துவிட்டு மறைந்தாலும் கூட, அவர் திரும்பவும் சாதாரண நிலைக்கு வந்துவிடுகிறார்.

ஞானி உயரத்தில் வாழ்கிறார். அவர் தனது வீட்டினை அங்கு கட்டிவிட்டார். ஓவியர் சிலசமயம் அந்த உயரத்தை அடைகிறார். மிகவும் விலைமதிப்பற்ற அந்த தருணங்களில் அவர் எழுகிறார். ஆனால் விழுந்து விடுகிறார். அவரால் அந்த உயரத்தில் வாழ முடியவில்லை. அவர் திரும்பவும் கீழே வந்துவிடுகிறார். நாதோ அந்த உயரத்தை அடைந்து இப்போது அவர் அங்கே நிரந்தரமாக வசிக்கின்ற ஒருவராக ஆகிவிடுவார் என்று நான் நம்புகிறேன்.

அதுதான் சந்நியாசம் என்பதாகும். நீங்கள் சாதாரண நிலைக்கு வரவேண்டிய அவசியம் இல்லை. ஒருவர் இருபத்தி நான்கு மணி நேரமும் புனிதத்தில் இருக்க முடியும். அதுதான் ஞானம். மேலும் அந்த நிலைதான் சுயம் பிரகாசம். நீங்கள் ஒன்றிணைய முடியும்போது, மூங்கில்கள் காற்றிலும் மழையில் அசைந்து நடனமாடுவதற்கு நீங்களும் ஒன்றிணைந்து விடமுடியும்போது அந்த ஒன்றிணைகின்ற அனுபவமானது

அதில் சுயம் பிரகாசத்தை பெற்றிருக்கிறது. அதுவே அதற்கு சாட்சி, உங்களுக்கு வேறு எந்த நிரூபணமும் தேவை இல்லை.

நீங்கள் மனிதர்களோடு, அதாவது உங்களது மனைவி, உங்களது கணவன். உங்களது நண்பர். உங்களது குழந்தை ஆகியவர்களோடு ஒன்றிணைந்து இருக்கமுடிந்தால் அந்த ஒன்றிணைதலே அதற்கு சாட்சியாக இருக்கிறது. அது மிகவும் சக்தி நிறைந்தது. அது மகிழ்ச்சி பொங்குவது. நீங்கள் அதற்கு வேறு நிரூபணங்களைத் தேட வேண்டியதில்லை. அதுவே போதுமானது. அதனால்தான் இந்த ஒட்டுமொத்த உலகமும் கடவுள் இல்லை என்று சொல்லிக் கொண்டே போகிறது. ஆனால் இயேசு அந்த ஒன்றிணைதல் நிலைக்கு வரும்போது அவர் தனது உயிரைப் பணயமாக வைப்பதற்கு தயாராக இருக்கிறார். ஆனால் கடவுள் இல்லை என்று அவர் சொல்வதற்கு தயாராக இல்லை.

''உன்னை ஒரு கடவுள் என்று அறிவிப்பதை நிறுத்திவிடு'' என்று இந்த ஒட்டுமொத்த உலகமும் மன்சூரிடம் கூறியது. அந்த ஆபத்து மிகப்பெரியது. அது குறித்து மீண்டும் மீண்டும் மன்சூர் உஷார்படுத்தப்பட்டார். அவரது சொந்த குருவும்கூட அவரிடம், ''அனல் ஹக், நானே கடவுள், நானே சத்யம்'' என்று கூறுவதை நிறுத்து. ஏனெனில் மக்கள் வெறியர்களாக இருக்கின்றனர். அவர்கள் உன்னைக் கொன்று விடுவார்கள்,'' என்று கூறினார்.

அதற்கு மன்சூர், ''அதை ஏற்றுக் கொள்ளமுடியும். அவர்கள் என்னதை சொல்லட்டும். ஆனால்; எனக்குள் என்ன நடந்துள்ளதோ அதுவே எனக்கு சாட்சி. இந்த ஒட்டுமொத்த உலகமும் எனக்கு எதிராக திரண்டாலும்கூட அதில் எந்த வேறுபாடும் இருக்காது. நான் இன்னமும் 'அனல் ஹக், நானே சத்யம்' என்று கூறுவேன். ஏனெனில் நான் இருக்கிறேன்'' என்று கூறினார். இது ஒரு சுயம்பிரகாச நிலை. ஞானம் சுயம்பிரகாச நிலையாக உள்ளது. கல்வி அறிவானது சுயம்பிரகாசமானது அல்ல. கற்றறிவிற்கு ஆதரவு தேவை.

''உங்களுடைய புத்தகங்களில் நீங்கள் கூறுகின்ற மேற்கோள்கள் எங்கிருந்து எடுக்கப்பட்டன. எந்த அதிகாரத்தில்

அது சொல்லப்படுகிறது என்று நீங்கள் ஏன் அடிக்குறிப்பு அல்லது பிற்சேர்க்கை வைக்கக்கூடாது. ஏனெனில் அப்போது ஒருவர் அதைப்பற்றி அறிந்து கொள்ளமுடியும்'' என்று கூறிக்கொண்டு பேராசிரியர்கள், பண்டிதர்கள் ஆகியவர்களிடம் இருந்து அநேக தடவைகள் நான் கடிதங்களைப் பெறுகிறேன்.

நான் என்ன கூறினலும் அது சுயம்பிரகாசமானது. அதற்கு அடிக்குறிப்புகள் தேவை இல்லை. அதற்கு பிற்சேர்க்கை தேவை இல்லை. அதற்கு ஆதரவு தேவை இல்லை. அதற்கு நானே போதும். நான் என்ன கூறினாலும் அதை எனது சொந்த அதிகாரத்தில் கூறுகிறேன். அடிக்குறிப்புகள், வாதபிரதி வாதங்கள், அதற்கு ஆதரவாக தகவல்களை சேகரித்தல், போன்றவற்றின் ஆதரவினால் நான் எந்த ஒரு கொள்கையையும் நிரூபிப்பதற்கு முயற்சி செய்யவில்லை.

உபநிடதங்களில் எந்த அடிக்குறிப்பும் கிடையாது. குர்ஆனுக்கு அடிக்குறிப்பைப் பற்றி தெரியாது. புத்தர் தான் கூறுவதற்குரிய மூல ஆதாரங்களைக் கொடுக்கவில்லை. அவை எங்கிருந்து வந்தன. அவர் எந்த அதிகாரத்தில் அதைக் கூறுகிறார் என்பது சொல்லப்படவில்லை. சத்தியமானது வரும்போது அது சுயம்பிரகாசமாக இருக்கிறது.

உண்மை அற்றதற்குதான் நிரூபணம் தேவைப்படுகிறது என்பதை நினைவில் கொள்ளுங்கள். உங்களுக்குள் உள்ள சந்தேகம் தான் அப்படி நிரூபணங்களைச் சேகரிக்கச் சொல்கிறது. உங்களது வாக்குமூலமானது தனது சொந்தக் காலில் நிற்கின்ற வாக்குமூலமாக இல்லை. அதற்கு நீங்கள் கம்புகளால் முட்டுக்கொடுக்க வேண்டியதுள்ளது. கற்றறிவுதான் அதிக தகவல்களை, வாத பிரதிவாதங்களை சேகரிக்கிறது.

ஞானமானது, அதைப் பருகுவதற்கு தயாராக இருக்கிற எல்லாருக்கும் கிடைக்கக்கூடிய ஒன்றாக வெறுமனே, கள்ளம் கபடமற்றது. ஆடைகள் ஏதும் இன்றி இருக்கிறது. ஞானமானது சுயம்பிரகாசமாக இருக்கின்ற அந்த தருணங்களில் தான், பொருட்கள் அவை உள்ளபடி ஒருபோதும் நேடியாக உறவு

கொள்ளவோ அல்லது அறியப்படவோ முடிவதில்லை. ஆனால் அதற்குமாறாக தன்னுணர்வில் நடக்கின்ற எப்போதும் அனுபவிக்கப்படாத, அல்லது அறியப்படாத வெறும் பொருட்கள் பற்றிய அறிவு மட்டும்தான் என்கிற வேறுபாட்டை அடையாளம் கண்டு கொள்தல் நிகழ்கிறது. ஆகையினால், எல்லா பொருள்களும் முக்கியமாக ஒரே ஒரு உண்மை நிலையாக மட்டுமே உள்ள தன்னுணர்வின் பொருள்மயமாதல், அல்லது பொருளாக குறைக்கப்படுதலில் மட்டுமே இருக்கின்றன.

வேறு வார்த்தைகளில் சொல்ல வேண்டும் எனில், அறிந்து கொள்ளப்பட்ட எதுவும் அறிதல் என்னும் செயல்பாட்டில் இருந்து அல்லது அறியப்பட்டதன் விழிப்புணர்வில் இருந்து முக்கியமாக வேறுபட்டு இல்லை. மேலும் அறிதல் என்பது அறிபவர் என்பதில் இருந்து முக்கியமாக வேறுபட்டு இல்லை. ஆகவேதான் இந்த உலகம் என்பது முக்கியமாக அறிபவராக அல்லது தூய தன்னுணர்வாக உள்ளது என்பதை ஒருவர் அறிந்து கொள்கிறார். எனவே எல்லாம் ஒன்றாக இருக்கிறது.

நீங்கள் ஞானத்தின் இந்த நிலையில் இருக்கும்போது, சுயம்பிரகாசமாக, அமைதியில், முழு இளைப்பாறுதலில், உங்களது வீட்டில் இருக்கும்போது, இந்த தன்னுணர்வுதான் எல்லாமும் என்கிற அறிதல் எழுகிறது. ஏனெனில் எது அறியப் பட்டாலும் அது தன்னுணர்வின் மூலமாகவே அறியப்படுகிறது. எது அறியப்பட்டாலும் அது தன்னுணர்வில் ஏற்படுகின்ற ஒரு பிம்பமே தவிர வேறு எதுவும் அல்ல. எது அறியப்பட்டாலும் அது தன்னுணர்வில் ஒரு உருவ அமைப்பு என்பதைத் தவிர வேறு எதுவும் அல்ல. தன்னுணர்வு என்னும் கடலில் எல்லா உருவங்களும் எழுகின்றன மற்றும் மறைகின்றன. ஆனால் தன்னுணர்வானது அப்படியே இருக்கிறது. அது முடிவில்லாதது.

உதாரணமாக, பகல் நேரத்தின்போது, ஆழ்ந்த தூக்கத்திற்கு பிறகு நீங்கள் கண்களைத் திறக்கும்போது, நீங்கள் ஒரு உலகில் இருந்து அடுத்த உலகிற்கு மாறுகிறீர்கள். ஒரு நொடிப் பொழுதிற்கு முன்புவரை இந்த உலகம் பற்றி அதாவது வீடு, மனைவி, மக்கள், பொதுமக்கள், அண்டைவீட்டுக்காரர் இப்படி

உலகம் குறித்து முற்றிலும் விழிப்புணர்வு இல்லாமல் இருந்தீர்கள். நீங்கள் அடுத்த உலகில், கனவுகளின் உலகில் காணாமல் போய்விட்டீர்கள். எனவே நீங்கள் இந்த உலகைப்பற்றி முற்றிலும் மறந்து விட்டீர்கள்.

இப்போது நீங்கள் உங்களது கண்களைத் திறக்கிறீர்கள். கனவுகளின் உலகம் மறைந்து போக ஆரம்பிக்கிறது. சில நொடிகளில் அது போய்விட்டது. எனவே நீங்கள் இந்த உலகம் பற்றி முழு விழிப்புணர்வுடன் இருக்கிறீர்கள். பகல் முழுதும் நீங்கள் இதில் வாழ்வீர்கள். இரவில் மீண்டும் நீங்கள் ஆழ்ந்த தூக்கத்திற்கு சென்று விடும்போது இந்த உலகம் மறைந்து விடுகிறது. கனவு உலகம் தன்னை உங்களுக்கு காட்டிவிடும். பகல் நேரத்தில் நீங்கள் கனவு உலகம் பற்றி எல்லாவற்றையும் மறந்து விடுகிறீர்கள். கனவு உலகில் இந்த விழிப்புநிலை உலகத்தை பற்றி எல்லாம் மறைந்து விடுகிறீர்கள்.

ஆனால் ஒரு விஷயம் மட்டும் அப்படியே உள்ளது. அதுதான் தன்னுணர்வு, விழித்திருக்கும் இந்த உலகத்தை பார்க்கின்றவர் மற்றும் கனவு உலகைப் பார்க்கின்றவர். இந்த ஒரே விஷயம் மட்டும் மாறாமல் அப்படி நிலையாக இருக்கிறது. அந்த நிலையான விஷயம்தான் உங்களது மேலான ஆன்மா, ஆத்மா, நான் இருக்கிறேன் என்று அழைக்கப்படுகிறது. இது நான் என்னும் தன்முனைப்பு அல்ல. ஏனெனில் அந்த நான் என்னும் ஆணவ மும் கூட வரவும், போகவும் செய்கின்ற ஒரு அமைப்புதான்.

நீங்கள் உங்களது ஆணவத்தை உணராத சில தருணங்கள் உள்ளன. நீங்கள் ஒரு அழகான சூரிய அஸ்தமனத்தை கவனித்துக்கொண்டு இருக்கும்போது நீங்கள் ஆணவத்தைப் பற்றி மறந்து விடுகிறீர்கள். அப்போது நீங்கள் அங்கு ஒரு தூய சாட்சியாக மட்டுமே, எந்த ஒரு ஆணவ எண்ணமும் இல்லாமல் இருக்கிறீர்கள். இசையைக் கேட்கும்போது நீங்கள் 'நான்' என்னும் தன்முனைப்பை பற்றி மறந்து விடுகிறீர்கள். அப்போது நீங்கள் யார் என்று ஞாபகத்தில் கொள்வதில்லை. ஆனால் இன்னமும் உங்களுக்குள் அந்த கவனிப்பாளர் அங்கு இருக்கிறார்.

ஆழ்ந்த உடல் இன்பத்தில், குறிப்பாக உச்சகட்ட பரவசநிலை வெளிப்படும்போது, நீங்கள் உங்களது தன்முனைப்பு பற்றி மறந்து விடுகிறீர்கள். அப்போது நீங்கள் நான் என்னும் தன்முனைப்பு இல்லாமல் வெறுமனே ஒரு மாபெரும் துடிக்கின்ற சக்தியாகவே இருக்கிறீர்கள். ஆனால் அதற்கான சாட்சி அங்கு இருக்கிறார். உங்களது முகம் பாக்கும் கண்ணாடி என்னவெல்லாம் நடந்து கொண்டிருக்கிறது என்பதை பிரதிபலித்து காட்டுகிறது.

ஞானம் என்பது இப்படி எல்லாவற்றையும் பிரதிபலிக்கின்ற இந்த கண்ணாடி பற்றி அறிந்து கொள்வதாகும். அது நன்மையை யும் பிரதிபலிக்கிறது. கெட்டதையும் பிரதிபலிக்கிறது. அது அழகையும் பிரதிபலிக்கிறது. அது அசிங்கத்தையும் பிரதிபலிக் கிறது. ஆனால் இவை எல்லாம் வெறும் பிரதிபலிப்புகள் தான் என்றும் நீங்கள் இந்த பிரதிபலிப்புகளுக்கு பின்னால் இருக்கிறீர்கள் என்றும் புரிந்து கொண்டுவிட்டால் அதன்பின்னர் அசிங்கத்திற்கும், அழகிற்கும் இடையே என்ன வேறுபாடு உள்ளது? நல்லதற்கும் கெட்டதற்கும் இடையே என்ன வேறுபாடு உள்ளது? அலைகள் இரண்டும் உங்களுக்குள் ஏற்பட்ட பிரதிபலிப்புகள், அவை இரண்டும் உங்களுக்குள் ஏற்பட்ட உருவாக்குதல்கள், அவை இரண்டும் உங்களுக்குள் ஏற்பட்ட அலைகள். ஒரு அலையை நீங்கள் அசிங்கம் என்று அழைக்கிறீர்கள். அடுத்த அலையை நீங்கள் அழகானது என்று அழைக்கிறீர்கள். ஆனால் இரண்டு அலைகளும் உங்களது அலைகளாக இருக்கின்றன. இது வெறுமனே தன்னுணர்வின் நடனம். இந்த அறிதல் தான் விடுதலை அளிக்கிறது. இது இரட்டைத் தன்மையில் இருந்து விடுவித்து இரட்டைத் தன்மை இல்லாத ஒன்றாக ஆகின்ற திறன் உள்ளவர்களாக உங்களை ஆக்குகிறது.

இப்போது சூத்திரங்கள்:

*ஞானிக்கு நன்மை மற்றும் தீமை*
*ஆகிய இரண்டும் மிக உயர்ந்த நன்மையாகும்.*
*எந்த ஒரு தீமையும் கடவுளிடமிருந்து வருவதில்லை.*

*அவரிடமிருந்து தீமை வருகிறது என்று நீ நினைத்தால்*
*நீ அதை நன்மையாயப் பார்ப்பது நல்லது.*

ஞானிக்கு நன்மை மற்றும் தீமை ஆகிய இரண்டும் மிகஉயர்ந்த நன்மையாகும். ஒரு ஞானிக்கு, எல்லாம் ஒன்று என்று அறிந்து கொண்ட ஒருவருக்கு நன்மைக்கும் தீமைக்கும் இடையே, புனிதருக்கும் பாவிக்கும் இடையே எப்படி வேறுபாடு இருக்க முடியும்? வித்தியாசம் இருப்பதற்கு சாத்தியமே கிடையாது.

நீங்கள் வித்தியாசத்தை உண்டாக்குகின்ற தருணத்தில் நீங்கள் ஒன்றைத் தேர்நதெடுப்பவராக ஏற்கனவே ஆகிவிட்டீர்கள். நீங்கள் தேர்ந்தெடுக்கும் உலகில் திரும்பவும் வீழ்ந்து விட்டீர்கள். நீங்கள் அதன்பின்னர் தேர்வு செய்யாத வெறும் விழிப்புணர்வாக இருப்பதில்லை. ஆனால் அதுதான் ஞானம் என்பதாக இருக்கிறது.

**...அவரிடமிருந்து தீமை வருகிறது என்று நீ நினைத்தால்...** இந்த முழுமையானது கடவுளை மட்டுமே வைத்திருக்கிறது. இங்கு தீமை என்பது எப்படி இருக்க முடியும்? ஆனால் சிலசமயம் நீங்கள் தீமை நடப்பதாக நினைக்கிறீர்கள். **நீ அதை நன்மையாய் பார்ப்பது நல்லது.** ஏனெனில் நீங்கள் எங்கோ கண்டிப்பாக தவறு செய்திருக்க வேண்டும். அது உங்களது தவறான பொருள் விளக்கமாக இருக்க வேண்டும்.

உதாரணமாக, யாரோ ஒருவர் இறக்கிறார். இப்போது மரணம் தீமையாகத் தெரிகிறது. மரணம் தீமையானது அல்ல; மேலும் அது தீமையானது போன்று தெரிந்தால் அது உங்களது தவறான பொருள் விளக்கமாகும். வெறுமனே உங்களது தவறான பொருள் விளக்கமாகும். உங்களுக்கு மரணம் என்றால் என்ன என்று தெரியவில்லை. அதனால்தான் அது தீயது போன்று தெரிகிறது.

மரணம் என்பது ஆடைகளை மாற்றுவது போலன்றி வேறு எதுவும் இல்லை. யாராவது ஒருவர் தனக்கு புதிய ஆடைகள் கிடைத்துவிட்டதால் தனது பழைய ஆடைகளை தூக்கி எறியும்போது அதை நீங்கள் தீயது என்று அழைப்பீர்கள்?

அவருக்கு புதிய ஆடைகள் கிடைத்துவிட்டன. எனவே அவர், பழைய ஆடைகளை தூக்கி எறிந்து விட்டார் என்பதை நீங்கள் அறிவீர்கள். உண்மையில் நீங்கள் அவரைப் பாராட்டுவீர்கள். அவருக்காக நீங்கள் வருத்தப்பட மாட்டீர்கள். பழைய ஆடைகள் உண்மையில் துர்நாற்றம் வீச ஆரம்பித்துவிட்டன. எனவே இப்போதாவது அந்த ஏழைக்கு புதிய ஆடைகள் கிடைத்ததே என்று நீங்கள் சந்தோஷப்படுவீர்கள்.

மிகச்சரியாக இதே கதைதான் மரணம் என்பதோடு நடக்கிறது. உடல் என்பது பலவகையான விஷயங்கள் கலந்தது. ஒருநாள் அது பிறக்கிறது. ஒருநாள் அது இளமையாகிறது. ஒருநாள் அது வயதாகிறது. மேலும் ஒருநாள் அது மரணமடைந்தாக வேண்டியதிருக்கிறது. இது வெறுமனே ஒரு தயார்படுத்துதல். மரணம் என்பது புதிய பிறப்பிற்கான தயார்படுத்துதல். அதை அறிந்து கொண்டவர்கள் மரணத்தை தீமையானது என்று கூறமாட்டார்கள். அது நல்லது, மிஞ்சும் அளவுக்கு நல்லது. ஆனால் இவை எல்லாம் நீங்கள் விஷயங்களுக்கு பொருள் விளக்கம் கொள்வதில் தான் உள்ளது.

மீண்டும் புத்துயிர் அளிக்கின்ற கிறிஸ்தவ சேவைப் பிரசங்கத்தின்போது பாதிரியார் அங்கு குனிந்து அமர்ந்திருந்த பார்வையாளர்களிடம் ''சாத்தானின் விசாரிப்பை தாக்குங்கள்'' என்றார்.

அந்த மாலை முழுவதும் நடுங்கிக் கொண்டு இருந்த ஒரு வயதான பெண்மணி திடீரென்று கால்களில் எழுந்து நின்று கொண்டு, ''நேற்று இரவு நான் சாத்தானின் கரங்களில் இருந்தேன். ஆனால் இன்று இரவு நான் கடவுளின் கரங்களில் இருக்கிறேன்!'' என்று கத்தினாள்.

அப்போது பின்பக்கம் இருந்து ஒரு குரல், ''சகோதரியே, நாளை இரவுக்கு உங்களிடம் தேதி கிடைக்குமா?'' என்று கேட்டது.

மக்கள் தங்களுக்கு சொந்தமான மனப்பாங்கினை, தேர்ந்தெடுத்தல்களை, புரிதல்களை, பொருள் விளக்கங்களை,

ஒன்றிலிருந்து பெற்ற விஷயங்களைக் கொண்டுள்ளனர். அவர்கள் அநேக அநேக வண்ணங்கள் நிறைந்த மிகவும் தடிமனான அடுக்கின் மூலம் காது கொடுத்து கேட்கின்றனர். அவர்கள் அநேக அநேக நிறமுள்ள கண்ணாடிகள் மூலம் பார்க்கின்றனர். அதன் பின்னர் விஷயங்கள் வண்ணமானதாகத் தெரிகிறது. ஆனால் அந்த நிறங்கள் அவர்களின் கண்ணாடி களால் திரையிடப்பட்டவையாகும்.

அயர்லாந்து நாட்டுக்காரன் ஒருவன் கட்டட வேலையில் ஈடுபட்டுக் கொண்டு இருக்கும்போது அங்கு அமைக்கப்பட்ட சாரத்தில் இருந்து கால்தவறி ஒன்பதாவது மாடியில் இருந்து விழுந்துவிட்டான். அப்போது கீழே சென்ற ஒரு தொலைபேசிக் கம்பியில் சிக்கி அதன்பின்னர் குதிரைகளுக்கு உணவளிப்பதற்கு போடப்பட்டிருந்த ஒரு வைக்கோல்; போர் மீது வந்து விழுந்தான்.

அப்போது அங்கு வந்த மருத்துவர், அதிசயப்படும்படியாக எலும்புகள் எதுவும் முறியவில்லை என்பதைக் கண்டுகொண்டார். அந்த அயர்லாந்து மனிதனுக்கு நினைவு வந்தபோது அந்த மருத்துவர் ஒரு கண்ணாடி தம்பளரில் தண்ணீர் வைத்துக் கொண்டு அதை அவனது உதடுகளில் வைத்து ஊற்றினார்.

உடனே அவன், ''என்ன சாத்தான் வேலை நடந்தது? கட்டிடம் விழுந்துவிட்டதா?'' என்று கேட்டான்.

அதற்கு மருத்துவர், ''இல்லை. நீதான் விழுந்துவிட்டாய். நீ மரணத்தில் இருந்து தப்பித்து விட்டாய்'' என்றார்.

உடனே அவன், ''அப்படியானால் நீங்கள் எனக்கு குடிப்பதற்கு என்ன கொடுக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்கு மருத்துவர், ''உன்னை உயிர்ப்பிப்பதற்கு தண்ணீர் கொடுக்கிறேன்'' என்று பதிலளித்தார்.

உடனே அவன், ''ஒன்பது மாடிகளில் இருந்து விழுந்ததற்கு எனக்கு வெறும் தண்ணீர் தான் கொடுக்கிறீர்களா? அப்படி யானால் எனக்கு குடிப்பதற்கு விஸ்கி கொடுக்க வேண்டும் என்றால் நான் இன்னமும் எவ்வளவு தூரம் விழவேண்டும்?'' என்று கேட்டான்.

வெறுமனே உங்களுக்குள் பாருங்கள். நீங்கள் எதிர்பார்ப்பு களை வைத்திருக்கிறீர்கள். நீங்கள் தப்பான அபிப்பிராயங்களை வைத்து இருக்கிறீர்கள். நீங்கள் நிலையான, குறிப்பிட்ட கருத்துகளை வைத்திருக்கிறீர்கள். எனவே நீங்கள் எப்போதும் அவைகளின் மூலமாகவே பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள்.

ஞானி தனது எல்லா எண்ணங்களையும் கைவிட்டு விடுகிறார். தனது காலத்தால் முற்பட்ட முடிவுகளை எல்லாம் கைவிட்டு விடுகிறார். ஞானி என்பவர் எந்த ஒரு முடிவோடும் இல்லாமல் வாழ்கின்ற ஒருவர் ஆகும். மேலும் நீங்கள் எந்த ஒரு முடிவும் இல்லாமல், உண்மைநிலையை உங்களால் பார்க்க முடிந்தால், நீங்கள் எந்த அளவுக்கு இதுவரை தவறவிட்டு விட்டோம் என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். அது அபரிமிதமான அழகுள்ளது. அது முழுமையாக நல்லது. அது சத்யம். அது உண்மைநிலையாக உள்ளது. அதுசிவம். அது நன்மையாக இருக்கிறது. அது சுந்தரம், அது அழகானதாக உள்ளது. அது சத்யம், சிவம், சுந்தரம்.

ஆனால் எது இல்லையோ அதை நாம் பார்த்துக் கொண்டே போகிறோம்.

*திட நம்பிக்கையின் பாதையில்,*
*ஒரு மாறுகண்ணுடையவன் இரண்டாகப் பார்ப்பதுபோல*
*நீ இருக்கிறாய் அல்லது ஒரு முட்டாள் ஒட்டகத்தின்*
*வடிவம் குறித்து வாய்த்தகராறு செய்வது போன்று*
*இருக்கிறாய் என்பதால் நான் பயப்படுகிறேன்*
*அவர் உனக்கு விஷத்தை கொடுத்தால்*
*அதைத் தேன் என்று கருது;*
*மேலும் அவர் உன்னிடம் கோபத்தைக் காட்டினால்*
*அதைக்கருணையாகக் கருது.*

''மாறுகண்ணுடையவன் இரண்டாகப் பார்ப்பதுபோல நீ இருக்காதே, மேலும் ஒட்டகத்தின் வடிவம் குறித்து வாய்த்தகராறு செய்கின்ற முட்டாள் போன்றும் இருக்காதே'' என்று சனாய் கூறுகிறாய். ஒட்டகமானது இன்னும் சிறப்பாக, அதிக வடிவமைப் புடன் உண்டாக்கப்பட்டிருக்க வேண்டும் என்ற நினைக்கின்ற

மக்கள் இருக்கிறார்கள். ஒட்டகம் எப்படி இருக்கிறதோ அதில் அது நிறைவானதாக உள்ளது. இந்த உலகம் இப்போது இருப்பதிலேயே நிறைவானதாக உள்ளது. தேவை இல்லாத வாதப் பிரதிவாதங்களைச் செய்யாதீர்கள்.

தாங்கள் இந்த உலகத்தை உண்டாக்கி இருந்தால். இதை இன்னும் மிகவும் சிறந்த உலகமாக இருந்திருக்கும் என்று நினைக்கின்ற மக்களும் இருக்கிறார்கள். தாங்கள் இந்த உலகை உண்டாக்கினால் தாங்கள் இதைச் செய்திருப்போம். தாங்கள் அதைச் செய்திருப்போம் என்று நினைக்கின்ற மக்கள் இருக்கிறார்கள். அந்த உலகில் நோய் இருக்காது. மரணம் இருக்காது. அங்கு அசிங்கம் என்பது இருக்காது. அங்கு முட்டாள்தனம் என்பது இருக்காது என்று கூறுகின்ற மக்கள் இருக்கிறார்கள். தர்க்க அறிவுப்படி இது சரி என்று தோன்றுகிறது. ''ஆம், நோய் இல்லாமல் ஒரு உலகம் இருந்தால் அது எவ்வளவு அழகானதாக இருக்கும்'' என்று தோன்றுகிறது.

ஆனால் உங்களுக்கு தெரியுமா? நோய் இல்லை என்றால், இங்கு ஆரோக்கியம் என்பதும் கூட இருக்காது. இங்கு அசிங்கம் என்பது இல்லை என்றால், இங்கு அழகு என்பதும் கூட இருக்காது என்பது உங்களுக்கு தெரியுமா? முட்கள் இல்லை என்றால் ரோஜாக்களும் இருக்காது என்பது உங்களுக்கு தெரியுமா? மரணம் இல்லாத ஒரு வாழ்க்கை இருந்தால் அது முற்றிலும் சலிப்பானதாக இருக்கும். சலிப்பை விட்டு ஒழிப்பதற்கு எந்த ஒரு வழியும் இருக்காது.

இந்தக் கதை மாவீரன் அலெக்சாண்டர் கீழைநாடுகளுக்கு வந்தபோது நடந்தது. இங்குள்ள ஒரு பாலைவனத்தில் அவர் ஒரு குறிப்பிட்ட குகையைக் கடந்து செல்ல வேண்டும் என்றும் அந்தக் குகையில் உள்ள சிறிய குளத்தில் அமுதம் இருக்கிறது என்றும் அவர் கேள்விப்பட்டார். அமுதத்தைக் குடித்தால் நீங்கள் மரணமில்லாதவர் ஆகிவிடுவீர்கள்.

இந்தக் கதை அழகானது. அலெக்சாண்டர் அந்த குகையை அடைந்தார். அவர் நுழைந்தார். அவர் மிகவும் சந்தோஷப் பட்டார். அவருடைய இடத்தில் நீங்கள் இருந்திருந்தால்

எவ்வளவு சந்தோஷம் அடைவீர்கள் என்று வெறுமனே நினைத்துப் பாருங்கள். அமுதம் அங்கு இருக்கிறது. வெறுமனே ஒரு நொடிப்பொழுது அதிகம் சென்றால் போதும் அவர் மரணமில்லாதவர் ஆகிவிடுவார். அவர் தனது கைகளைக் குவித்து அமுதத்தைக குடிக்கப் போனார், அப்போது அங்கு பாறை மீது அமர்ந்திருந்த ஒரு காகம் ஒன்று, ''ஒரு நிமிடம் பொறு'' என்றது.

அலெக்சாண்டர் ஆச்சரியப்பட்டார். காகம் பேசுவதா? உடனே அவர், ''நீ என்ன சொல்ல விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

அந்த காகம், ''ஒரே ஒரு விஷயம். அதனால்தான் நான்இங்கு உட்கார்ந்து கொண்டு இருக்கிறேன். நான் இந்த குளத்தில் இருந்துதான் குடித்தேன். இப்போது பல லட்சம் ஆண்டுகள் நான் இங்கு இருக்கிறேன். நான் மரணமடைய விரும்புகிறேன். ஒரு நாளில் இருபத்தி நான்குமணி நேரமும் மரணம் பற்றிய எண்ணம் தான் இருக்கிறது. இந்த நாற்றமடிக்கும் உடலை கைவிட விரும்புகிறேன். ஆனால் என்னால் முடியவில்லை. நான் முயற்சி செய்து பார்த்துவிட்டேன். ஆனால் எதுவும் வெற்றி பெற வில்லை. நான் விஷத்தைகூட சாப்பிட்டு விட்டேன். ஆனால் எதுவும் வேலை செய்யவில்லை. நான் மலைமீது இருந்து கீழே விழுந்து பார்த்தேன். அதுவும் வேலை செய்யவில்லை. நான் நெருப்பினுள் புகுந்து பார்த்தேன். அது என்னை எரிக்கவில்லை. இப்போது நான் மரணமடைவதற்கு வழியே இல்லை. மேலும நான் களைப்படைந்து விட்டேன்.

''வெறுமனே நினைத்து பாருங்கள். பல லட்சம் ஆண்டு களாக ஒவ்வொரு நாளும் அதே முட்டாள்தனமான காரியங்களை நான் திரும்பத் திரும்ப செய்ய வேண்டியதுள்ளது. மேலும் எதிர்காலத்தில் எந்த நம்பிக்கையும் இல்லை. நான் சாகவே முடியாது. என்னால் தற்கொலையும் செய்து கொள்ளமுடியாது. மேலும் நான் வாழ்க்கையினால் களைப்படைந்து இருக்கிறேன்! எனவே இதுதான் எனது சேவை. நான் இங்கு உட்கார்ந்து கொண்டு மற்ற மக்களைத் தடுக்கிறேன்,'' என்று கூறியது.

அலெக்சாண்டர் ஒரு நொடி சிந்தித்தார் அதன்பின்னர் அந்த அமுதத்தை குடிப்பதை கைவிட்டுவிட்டு அந்த குகையை விட்டு ஓடிப்போய் விட்டார். ஏனெனில் தான் எங்கு அதைக் குடிப்பதற்கு தூண்டப்பட்டு விடுவோமோ என்று பயந்துவிட்டார்.

மரணம் என்பது இல்லாமல், வாழ்க்கை என்பது தாங்க முடியாத சுமையாக இருக்கும். மரணம் தான் விடுவிக்கிறது. மேலும் நோய் இருப்பதால் தான் நீங்கள் ஆரோக்கியம் என்னும் உணர்வைப் பெற்றிருக்கிறீர்கள். இருள் நிறைந்த இரவினால் தான் காலைப் பொழுதானது அந்த அளவுக்கு அழகானதாக தெரிகிறது.

இயற்கை இரட்டை தன்மையுடன் உள்ளது மேலும் இயற்கை குறைகளுடன் கூடியதாகவும் உள்ளது. ஆனால் குறைகள் இருப்பதால்தான் அங்கு வளர்ச்சி இருக்கிறது. எல்லாரும் நிறைவானவர்களாக இருந்தால் அதன்பின்னர் வளர்ச்சி என்பது இருக்காது என்பதை வெறுமனே நினைத்துப் பாருங்கள். அதன்பின்னர் இந்த உலகம் ஒரு கல்லறைத் தோட்டமாக இருக்கும். எதுவும் வளராது.

சில நவீன ஓவியங்கள் மிகவும் பயங்கரமானதாக உள்ளன. அவர்கள் வாழ்க்கையை ஏதோ சிமெண்ட் மற்றும் கான்கிரீட் கொண்டு உண்டாக்கப்பட்டது போன்று, எல்லாமே நின்றுவிட்டது போன்றும். எதுவும் வளராதது போன்றும் வளர்கின்றனர். எல்லாம் நின்றுவிட்டால், மரங்கள் வளராமல் இருந்துவிட்டால், குழந்தைகள் வளரவில்லை என்றால் ஏற்படுகின்ற பயங்கரமான கனவு பற்றி கொஞ்சம் நினைத்து பாருங்கள். காலம் என்பது நின்று போய்விட்டால் இங்கு எப்போதும் வளர்ச்சி என்பது இருக்காது. மேலும் ஒவ்வொருவரும் அப்படியே இருந்து விடுவோம். அதுதான் நிறைவடைந்த ஒரு உலகின் நிலையாக இருக்கும். அந்த உலகம் மிகமிக வெளிறிப்போய், சுறுசுறுப்பற்று இருக்கும் மேலும் அது வசிக்க முடியாததாக இருக்கும்.

வாழ்க்கை குறைகளுடையதாக உள்ளது. அதனால்தான் வளர்ச்சி அடைவதற்கான சாத்தியங்கள் உள்ளன. நீங்கள் ஆழமாக கவனித்தால், ஆழமாக உற்று நோக்கினால், இந்த

உலகை மேம்படுத்துகின்ற முட்டாள் எண்ணத்தை கைவிட்டு விடுவீர்கள். இப்போது உள்ள நிலையிலேயே அது நன்றாக உள்ளது.

இந்த உலகின் ஞானிகளின் கண்டுபிடிப்பு இப்படித்தான் உள்ளது. ''இந்த உலகமானது அதன் குறைகளுடன் நிறைவுடன் இருக்கிறது. நீங்கள் அதை மேம்படுத்த முடியாது'' என்று அவர்கள் கூறுகின்றனர். ஆனால் நாம் கெட்டிக்காரர்கள் என்று நமது மனம் நினைத்துக் கொண்டே போகிறது. நமது மனம் வஞ்சகம் நிறைந்தது. எனவே அந்த வஞ்சகத்தனத்தை பயன்படுத்தி இந்த வாழ்க்கையை நாம் மேம்படுத்த முடியும் என்று நாம் நினைக்கிறோம்.

இந்த உலகில் நமது வஞ்சக மனம் வெற்றி பெறுகிறது. வியாபார ஸ்தலத்தில் அது வெற்றி பெறுகிறது. பல்கலைக் கழகங்களில் அது வெற்றி பெறுகிறது. விஞ்ஞானியின் பரிசோதனைக் கூடத்தில் அது வெற்றி பெறுகிறது. ஆனால்; அவர்கள் தியானத்தின் உலகில் வெற்றி பெறமுடியாது.

முல்டூன் தனது நகைச்சுவை மூலமாக வாழ்க்கையை நடத்தி வந்தான் மேலும் அவன் மதுபானக் கூடங்களில் காசில்லாமல் மதுபானத்தை பெறுகின்ற திறமையில் மிகவும் புகழ் பெற்றவனாக இருந்தான்.

ஒருநாள் நகரத்தின் மறுபக்கம் இருந்த மதுபானக் கூடத்திற்கு அவன் சென்றான். அந்த மதுபானக்கூட ஊழியர் வந்து இவனிடம், ''நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்கள்?'' என்று கேட்டான்.

''சிறிதளவு விஸ்கி'' என்றான் முல்டூன்

அவன் விஸ்கியை வாங்கி குடித்தான். ஆனால் அதற்கு பணம் கொடுக்க மறுத்தான். ஊழியர் தனது முதலாளியை அழைத்தான். ஆனால் முல்டூன் தான் மதுபானம் கேட்கவில்லை என்றான். ஊழியர் அவனிடம் என்ன இருக்கிறது என்று கேட்டான். முல்டூன் ஒரு உஷாரான பேர்வழி என்பதை உணர்ந்து கொண்ட முதலாளி. எந்த பிரச்சினையும் வரவிரும்பாமல், ஊழியரிடம் அதோடு முல்டூனை விட்டுவிடும்படியும் இனிமேல்

மீண்டும் இதுபோன்று நடக்காமல் பார்த்துக் கொள்ளும்படியும் கூறினார்.

சிலமாதங்கள் கழித்து முல்டூன் மீண்டும் அந்த மதுபானக் கடைக்கு வந்தான். அப்போது அங்கிருந்த ஊழியர், ''ஒருநாள் இரவு இங்கு மது அருந்திவிட்டு அதற்கு பணம் தராமல் சென்ற ஆள் நீதானே?'' என்றான்.

உடனே முல்டூன், ''இல்லை. அது நான் அல்ல'' என்றான்.

''அப்படியானால் இப்போது உனக்கு இரண்டு வேண்டுமா?'' என்றான்.

''நன்றி. நான் சாப்பிடுகிறேன்'' என்றான் முல்டூன்.

நீங்கள் உருவாக்கிய இந்த உலகில் உங்களது கெட்டிக் காரத்தனம் காரியத்தை சாதிக்கலாம். ஆனால் கடவுள் உருவாக்கிய அந்த உலகத்தில் உங்களது கெட்டிக்காரத்தனம் காரியத்தை சாதிக்காது. மனிதனால் உருவாக்கப்பட்ட இந்த உலகில் உங்களது கற்றறிவு உதவி நிறைந்ததாக இருக்கலாம். ஆனால் கடவுள் மற்றும் அவரது உலகில ஞானம் மட்டுமே ஊடுருவிச் செல்லமுடியும்.

கற்றறிவு கெட்டிக்காரத்தனம், ஞானம் கள்ளம் கபடமற்ற தன்மை. **திடநம்பிக்கையின் பாதையில், ஒரு மாறு கண்ணுடையவன் இரண்டாகப் பார்ப்பது போல நீ இருக்கிறாய் அல்லது ஒரு முட்டாள் ஒட்டகத்தின் வடிவம் குறித்து வாய்த்தகராறு செய்வது போன்று இருக்கிறாய் என்பதால் நான் பயப்படுகிறேன். அவர் உனக்கு விஷத்தைக் கொடுத்தால், அதைத் தேன் என்று கருது. மேலும் அவர் உன்னிடம் கோபத்தைக் காட்டினால் அதைக் கருணையாகக் கருது.**

திடநம்பிக்கை, அன்பின் பாதையைப் பின்பற்றுபவர்கள். கடவுள் தங்களுக்கு விஷத்தைக் கொடுத்தால் அதன்பின்னர் அது தேனாகத்தான் இருக்கும். வேறு எதாகவும் இருக்கமுடியாது என்பதை அறிந்து கொள்வார்கள். இப்போது நம்மால் அதைப்

புரிந்து கொள்ள முடியாது. ஏனெனில் நமது புரிதல் எல்லைகளைக் கொண்டுள்ளது. இப்போது அதில் உள்ள கருத்தை நம்மால் பார்க்க முடியாது. ஏனெனில் பார்வை மிகவும் சிறியதாக இருக்கிறது. நமது கண்ணோட்டம் குறுகியதாக உள்ளது. ஆனால் இந்த பிரபஞ்சமானது பரந்து விரிந்தது. மேலும் அதில் ஒவ்வொன்றும் மற்ற ஒவ்வொன்றோடும் இணைக்கப்பட்டு இருக்கிறது.

நமது சூழ்நிலையானது ஒரு யானையைப் பார்க்கப் போன ஐந்து குருடர்களைப் போன்று உள்ளது. அவர்கள் ஒவ்வொரு வரும் யானையின் ஒருபகுதியை மட்டும். தொட்டுப் பார்த்துவிட்டு, தான் யானையைப் பற்றி முழுமையாக அறிந்து கொண்டதாக நினைத்துக் கொண்டு அவர்கள் ஐந்து பேரும் வாய்த்தகராறு செய்ய ஆரம்பித்தது போன்று நமது சூழ்நிலை உள்ளது. அப்படித்தான் தத்துவவாதிகள் மற்றவர்களிடம் சண்டை போட்டுக் கொண்டு உள்ளனர். யாரும் யானையைப் பார்த்த தில்லை. ஆனால் ஒவ்வொருவரும் தனது நிலைப்பாடு குறித்து மிகமிக நிச்சயத்துடன் இருக்கின்றனர். மேலும் ஒருவிதத்தில் அவன் ஒரு பகுதியைப் பார்த்துவிட்டான். அவன் ஒரு பகுதியை உணர்ந்து விட்டான். யாரோ ஒருவன் யானையில் காலைத் தொட்டுப்பார்த்துவிட்டு யானையானது ஒரு தூண் போன்று உள்ளது என்று உணர்கிறான். ஆனால் அவன் சொல்வது முழுவதும் தவறானது அல்ல. உண்மையானது தான். அவன் அணுகுமுறையாக சரியாகச் சொல்கிறான். ஆனால் அரைகுறை உண்மையானது தன்னை முழுமையானது என்று சொல்ல ஆரம்பிக்கும்போது அங்கு ஆபத்து உள்ளது. அதன்பின்னர் அது ஒரு பொய்யை விடவும் அதிக ஆபத்தானது.

ஆனால் அதைத்தான் தத்துவ அமைப்பு முறைகள் செய்து கொண்டு இருக்கின்றன. கற்றறிவுள்ள மக்கள் குருட்டுமக்கள், அவர்கள் யானையை பார்த்ததில்லை. அவர்கள் ஒரு குறிப்பிட்ட வழியில் மட்டுமே தங்களை சிறப்பானவர்களாக ஆக்கி உள்ளனர். அந்த ஐந்து குருடர்களும் தனித்திறமை உள்ளவர்கள், நிபுணர்கள் ஒருவர் காலைத் தொட்டுப் பார்த்திருகிறார்.

அடுத்தவர் காதைத் தொட்டு பார்த்திருக்கிறார். மேலும் அடுத்த ஒருவர் தும்பிக்கையைத் தொட்டிருக்கிறார். அவர் தன் ஒரே ஒரு அங்கத்தில் மட்டும் தனித்திறமை வாய்ந்தவர்கள்.

எனவே இந்த சூழ்நிலைதான் இன்று உள்ளது. ரசாயனம் படித்தவருக்கு ரசாயனம் பற்றி மட்டுமே தெரிகிறது. இயற்பியல் படித்தவருக்கு இயற்பியல் மட்டுமே தெரிகிறது. மேலும் மனோதத்துவ நிபுணர் மனதைப் பற்றி மட்டுமே தெரிந்து வைத்திருக்கிறார். இப்படி போய்க்கொண்டே இருக்கிறது. இவர்கள் கணதிற்கு கணம் இல்லாதது போன்று தெரிகிறது. மேலும் இந்த குருட்டு நிபுணர்களுக்கு மத்தியில் மிகப்பெரிய வாக்குவாதம் நடக்கிறது. இயற்பியல் அறிஞருக்கு வேதியல் பற்றி எதுவும் தெரியாது. வேதியல் அறிஞருக்கு கவிதை பற்றி எதுவும் தெரியாது. மேலும் கவிஞருக்கு இசைபற்றி எதுவும் தெரியாது. இசைக் கலைஞருக்கு கணிதம் பற்றி எதுவும் தெரியாது. ஆனால் அவர்கள் அனைவரும் வாக்குவாதம் செய்து கொண்டு இருக்கின்றனர். அந்த வாக்குவாதம் பெரிய பெரிய அளவுகளில் வந்து கொண்டு இருக்கிறது. அறிவின் ஒவ்வொரு பிரிவும் மிகவும் தனிச்சிறப்புடன், மிகவும் குறுகியதாக இருப்பதால், எந்த ஒரு மனிதருக்கும் அடுத்த தனிச்சிறப்பாளர் களுடன் தொடர்பில் இருப்பது திட்டத்தட்ட சாத்தியமில்லாதது போன்று தெரிகிறது.

ஒரு கவிஞாகவும், கணிதமேதையாகவும், இயற்பியல் அறிஞனாகவும், ஒரு தத்துவ மேதையாகவும், ஒரு ஞானியாகவும் இருக்கின்ற ஒரு மனிதனைக் காண்பது மிகவும் கடினம். ஆனால் இப்படிப்பட்ட மக்கள் நமக்கு தேவை. இப்படிப்பட்ட மக்கள் இல்லாமல் மனிதன் தூரத்தில் விழுந்து விடுவான். இப்படிப்பட்ட மக்கள் இல்லாமல் ஒன்றிணைத்தல் என்பது சாத்தியப்படாது. இப்படிப்பட்ட மக்களாக யார் இருப்பார்கள்? ஒரு மனிதனுக்கு இது சாத்தியமா. ஒரு மனிதனுக்கு இது நடக்கக்கூடியதா? இயற்பியல், வேதியல், உடலியல், புவியியல் இப்படி எல்லாவற்றையும் ஒரு மனிதன் அறிந்து கொள்ளமுடியுமா? இன்று இருக்கின்ற அறிவியலின் எல்லா பிரிவுகளையும் யாரும் அறிந்து கொள்ள முடியாது.

ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகம் முன்னூற்று ஐம்பது பாடங்களாக கற்பிக்கிறது. மேலும் ஒவ்வொரு பாடமும் காலம்காலமாக அபரிமிதமான அளவுக்கு கற்றறிவை சேகரித்து வைத்துள்ளது. குறைவானவைதனைப் பற்றி அதிகம் அறிகிற வன் யாரோ அவர்தான் நிபுணர் என்று அவர்கள் கூறுகின்றனர். மேலும் மிகப்பெரிய நிபுணர் என்பவர் எதையுமே அறியாத ஒருவர் அல்லது ஒன்றுமில்லாதது பற்றி எல்லாம் அறிந்தவராக இருக்கிறார்.

முதல் முறையாக மனித இனமானது மிகவும் விநோதமான ஒரு சூழ்நிலையில் உள்ளது. அப்படியானால் இவர்களை எல்லாம் இணைப்பது யார்? ஞானிகள் மட்டுமே பாலம் போன்று ஆகமுடியும். ஒரு ஞானி இந்தப் பிரிவுகளை எல்லாம் அறிந்த ஒருவர் அல்ல. ஒரு ஞானி என்பவர் தனது சொந்த உயிர் உணர்விற்குள் ஆழ்ந்து சென்று, இந்த அறிவியல் பிரிவுகள் எல்லாம் எழுகின்ற அந்த தன்னுணர்வு பற்றி அறிந்த ஒருவராகிறார். ஞானியானவர் வேர்களுக்கு சென்று விடுகிறார். வேர்களைப் புரிந்து கொள்கிறார். மேலும் வேர்களைப் புரிந்து கொள்வதால், எல்லாக் கிளைகள், எல்லாம் பசுமை, எல்லாப் பழங்கள் மற்றும் எல்லா மலர்கள் பற்றி புரிந்துகொள்கிறார்.

*நம்பிக்கை அவநம்பிக்கை இரண்டையும்*
*விட்டுவிட்டு பக்தன் இறந்து விட்டான்.*
*பக்தி என்னும் ஒளிச்சுடரில் எரிக்கப்பட்டு விடும்போது*
*விட்டில் பூச்சியானது மசூதியின் விளக்கு ஒளிக்கும்*
*மடாலயத்தின் விளக்கின் ஒளிக்கும் இடையே*
*வித்தியாசம் பார்ப்பதில்லை.*

இது ஒரு சூஃபி கூற்று. "நீங்கள் இறக்கும்போது, உங்களது நான் என்னும் தன்முனைப்பு இறக்கும்போது ஞானம் எழுகிறது"

*நம்பிக்கை அவநம்பிக்கை இரண்டையும்*
*விட்டுவிட்டு பக்தன் இறந்து விடுகிறான்*
*பக்தி என்னும் ஒளிச்சுடரில் எரிக்கப்பட்டு விடும்போது*
*விட்டில் பூச்சியானது மசூதியின் விளக்கு ஒளிக்கும்*
*மடாலயத்தின் விளக்கு ஒளிக்கும் வித்தியாசம்*
*பார்ப்பதில்லை.*

தன்னை அழைத்தது மசூதியின் ஒளிவிளக்கா அல்லது கோவிலின் ஒளிவிளக்கா என்பதைப் பற்றி விட்டில் பூசசியானத கவலைப்படாது. விட்டில் பூச்சி ஒளிச்சுடரை மட்டுமே அடையாளம் காண்கிறது. அது எங்கிருக்கிறது என்பது சம்பந்தம் இல்லாதது.

மேலும் இதே போன்றுதான் ஒரு பக்தன், ஒரு சூஃபி, ஒரு சீடன் இருக்கிறான். குரு எங்கிருந்து கிடைக்கிறார் என்பதைப் பற்றி அவன் கவலைப்படுவதில்லை. கோவிலில், மசூதியில், தேவாலயத்தில் ஒளிச்சுடர் கிடைக்கிறது. அதைப்பற்றி அவன் கவலைப்படுவதில்லை. எங்கு அவன் ஒரு ஒளிச்சுடரைப் பார்க்கிறானோ அந்த ஒளிச்சுடரில் அவன் மரணமடையத் தயாராக இருக்கிறான். அந்த ஒளிச்சுடரில் அவன் மறைந்து போக தயாராக இருக்கிறான். எனவே அந்த மறைந்து போதலில் ஞானம் எழுகிறது.

நான் என்னும் தன்முனைப்பின் மரணம்தான் உங்களுக்குள் ஞானத்தின் உயிர்த்தெழுதலாக உள்ளது. நீங்கள் மீண்டும் ஒரு குழந்தையாக, கள்ளம் கபடமற்று, ஆச்சரியப்பட்டுக்கொண்டு, புதிர்நிறைந்து இருக்கிறீர்கள். அதன் பின்னர் இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் ஒரு புதிராக இருக்கிறது. அப்போது அது அற்புதமாக உள்ளது. அதன்பிறகு அதன் அழகு நம்பமுடியாததாக இருக்கிறது. அதன் பின்னர் அதன் மகிழ்ச்சியானது தாங்க முடியாததாக இருக்கிறது. அதன்பிறகு அதன் பரவசநிலை பொங்கி வழிவதாக உள்ளது.

*உனக்கு கொடுக்கப்பட்டுள்ளதோடு திருப்தியாக இரு*
*ஆனால் உன்னிடம் ஏதாவது புகார்கள் இருந்தால்*
*அவற்றைக் காடி (Cadi) யிடம் எடுத்துக் கொண்டுபோ.*
*மேலும் அவரிடமிருந்து திருப்தியைப் பெற்றுக் கொள்*
*-இப்படித்தான் ஒரு முட்டாளின் மனம் வேலை செய்கிறது.*

நீங்கள் உங்களது நான் என்னும் ஆணவத்தை உங்களது மேலான ஆத்மாவில் கரைத்துவிட்டால், அதன்பிறகு மாபெரும் திருப்தி இருக்கும். விஷயங்கள் எப்படி உள்ளனவோ அதிலேயே நீங்கள் திருப்தியாக இருப்பீர்கள். அதன்பிறகு எங்காவது போக

வேண்டும் என்றோ அல்லது வேறு ஒருவரைப்போல ஆக வேண்டும் என்றோ ஆசை இருக்காது. மாபெரும் திருப்தியுடன், மாபெரும் நன்றியுணர்வுடன் நீங்கள் உடனடியாக கடவுளுக்கு தலைவணங்குவீர்கள்.

**உனக்கு கொடுக்கப்பட்டதோடு திருப்தியாக இரு. ஆனால் உன்னிடம் ஏதாவது புகார்கள் இருந்தால்...** ஆனால் ஞானிக்கு புகார்கள் கிடையாது! அவருக்கு திருப்தியைத் தவிர வேறு எதுவும் தெரியாது. **உன்னிடம் ஏதாவது புகார்கள் இருந் தால் அதன் பிறகு அவற்றைக் காடி யிடம் கொண்டுபோ.** அதன்பின்னர் மதகுருவிடம் செல்லுங்கள். அவர் உங்களைத் திருப்திப்படுத்துவார். ஏனெனில் அதுதான் அவரது வேலை யாகும்.

திருப்தி மற்றும் திருப்தியாக்கப்படுதல் ஆகிய இரண்டு வார்த்தைகளுக்கு இடையே உள்ள வித்தியாசத்தை வெறுமனே பாருங்கள். திருப்தி என்பது ஞானத்தின் மூலம் எழுகிறது. அது ஞானத்தின் நறுமணம். ஆனால் திருப்தியாக்கப்படுதல் என்பது வெறுமனே கற்றறிலின் மூலம் உங்கள் மீது திணிக்கப்பட்டது. நீங்கள் மதகுருவிடம் சென்றால் அவர் உங்களை திருப்தியாக்கு வார். நீங்கள் மதகுருவிடம் சென்று, ''எனக்கு வயதாகிறது. எனவே நான் மரணத்தைக் கண்டு பயப்படுகிறேன்,'' என்று கூறுங்கள். அதற்கு மதகுரு, ''கவலைப்படாதீர்கள். உடல்மட்டுமே மரணமடைகிறது. ஆன்மாவிற்கு மரணம் கிடையாது,'' என்று கூறுவார். அவர் வெறுமனே உங்களுக்கு கற்றறிவைக் கொடுக் கிறார். அவரே இன்னும்; அந்த நிலையை அடையவில்லை. அடைந்திருந்தால்; அவர் ஒரு மதகுருவாக இருந்திருக்க மாட்டார்.

உங்களை ஆறுதல்படுத்துவது தான் மதகுருவின் வேலை ஆகும். எப்படியாவது உங்களை இந்த உலகத்தோடு சமாளித்துக் ;கொண்டு செல்ல வைப்பதுதான் மதகுருவின் வேலையாகும். இப்போது வரையில் அதுதான் மதகுருவின் வேலையாக இருந்து வந்திருக்கிறது.

இப்போது, குறிப்பாக மேலைநாடுகளில், அந்த வேலை யானது, மனஇயல்; மருத்துவர்களுக்கு மாற்றப்பட்டுக் கொண்டு

இருக்கிறது. இன்று மனஇயல் மருத்துவர் செயல்படுவதுபோன்று மதகுரு முன்பு செயல்பட்டு வந்தார். மதகுரு என்பவர் பழங்கால மனஇயல் மருத்துவர். மனஇயல் மருத்துவர் என்பவர் நவீன மதகுரு. மக்களைத் திருப்திப்படுத்துவதும், தாங்கள் வாழ்கின்ற சமுதாயத்தோடு சமாளித்துக் கொண்டு இருக்கச் செய்வதும் தான் அவர்களின் வேலையாகும். இப்படி திருப்தியாக்கப்படுதல், திருப்தி அல்ல. இது வெறுமனே மேல்பூச்சு பூசுவதாகும். கூடிய விரைவில் மீண்டும் சந்தேகம் வரும். ஆன்மா அழிவற்றது என்று மதகுரு சொல்கிறார். ஆனால் யாருக்கு தெரியும்? அவர் சொல்வது தவறானதாகவும் இருக்கலாம். அவர் பொய் கூறலாம். அவர் ஏமாற்றலாம். ஏனெனில், பல சூழ்நிலைகளில் நீங்களும் மதகுருவைப் பாாத்திருக்கிறீர்கள்.

இது நடந்த கதை.

சில தினங்கள் நான் ராய்ப்பூரில் இருந்தேன். ஒரு பேராசிரியரின் மனைவி இறந்து விட்டாள். எனவே அவரைப் பார்ப்பதற்கு சென்றேன். அங்கு அநேகம் பேர் இருந்தனர். மேலும் அவர்கள் அவரிடம் ''கவலைப்படாதீர்கள்'' என்று ஆறுதல் கூறிக்கொண்டு இருந்தனர். ஒரு பிராமணப் பண்டிதர், ஒரு அறிவாளி அவரிடம், ''ஆன்மா அழிவற்றது, உடல் மட்டுமே மரணமடைகிறது'' என்று கூறிக்கொண்டு இருந்தார்.

சில தினங்களுக்கு பிறகு, எதிர்பாராதவிதமாக, அந்த பண்தைரின் மனைவி இறந்து விட்டாள். அந்தப் பண்டிதர் இப்போது என்ன செய்கிறார் என்று பார்ப்பதற்காக நான் அங்கு வெறுமனே போனேன். அவர் அழுது கொண்டிருந்தார். உடனே நான் அவரிடம், ''இது அர்த்தமற்றது. நீங்கள் அழுகிறீர்கள்? பேராசிரியரின் மனைவி இறந்தபோது நீங்கள் அவரிடம் ஆன்மா அழிவற்றது என்று கூறிக்கொண்டு அவரை ஆறுதல்படுத்தியதை நான் பார்த்திருக்கிறேன். உங்களது கற்றறிவிற்கு என்ன நடந்தது?'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''அதைப்பற்றி எல்லாம் மறந்துவிடு. யாருக்கு தெரியும்.'' அந்த மனிதரை நான் வெறுமனே

ஆறுதல்படுத்தினேன். எனவே இந்த தருணத்தில் இப்படிப்பட்ட அசௌகரியமான கேள்விகளை எழுப்பாதே. எனது மனைவி இறந்துவிட்டாள். ஆனால் நீயோ சில தத்துவார்த்தமான விவாதத்தைக் கொண்டு வருகிறாய்'' என்று கூறினார்.

உங்களது மதகுருவானவர் ஆன்மா அழிவற்றது என்று உங்களிடம் கூறலாம். ஆனால் நீங்கள் அதை எவ்வளவு தூரம் திடமாக நம்பப்போகிறீர்கள்? ஒருநாள் அந்த மதகுரு இதற்கு நேர் எதிரான ஒரு விதத்தில் நடந்து கொள்வதை நீங்கள் பார்ப்பீர்கள். மதகுரு ஒன்றைச் சொல்கிறார். ஆனால் வேறுவழியில் நடந்து கொள்கிறார். மதகுரு மூலமாக திருப்தியை அடைவது சாத்தியப்படாது. ஆனால் உங்களை திருப்தியாக்குவதுதான் மதகுருவின் வேலையாகும்.

திருப்தியாக்குதல் திருப்தி அல்ல, திருப்தியாக்குதல் என்பது மீண்டும் ஒரு செல்லாக் காசு. ஞானத்தோடு ஒப்பிடும்போது கற்றறிவு எப்படி ஒரு செல்லாக் காசோ அதே போன்று திருப்தியோடு ஒப்பிடும்போது திருப்தியாக்குதல் என்பது ஒரு செல்லாக்காசு. திருப்தி என்பது உங்களது சொந்த புரிதலின் மூலம் எழுகிறது. திருப்தியாக்குதல் என்பது பிறரால் உங்களுக்கு கொடுக்கப்படுகிறது.

பிறரிடமருந்து பெறுவது குறித்து ஜாக்கிரதையாக இருங்கள். பிறரிடம் இருந்து வாங்குவது எப்போதுமே பொய்யானது. ஆனால் அதுதான் ஒரு முட்டாளின் மனம் எப்படி வேலை செய்கிறது என்பதாகும். ஞானத்தைவிடவும் ஆறுதல் அடைவதில் தான் முட்டாளின் மனம் அதிக ஆர்வத்துடன் இருக்கிறது.

எனக்கு ஒரு வயதான நண்பர் உண்டு. அவரது மகன் இறந்துவிட்டான். மகன் இறந்தபோது அவருக்கு வயது எழுபது. மகன் மிகவும் இளமையுடன் இருந்தான். நாற்பது வயதிற்கு மேல் இருக்காது. அந்த வயதான மனிதருக்கு இது மிகப்பெரிய அதிர்ச்சியாக இருந்தது. நான் அவரைப் பார்ப்பதற்கு சென்றேன். அவரிடம், ''அழுவதையும், கண்ணீர் விடுவதையும் நிறுத்துங்கள். அது அர்த்தமில்லாதது. முற்றிலும் ஆரோக்கியத்துடன்

இருக்கின்ற ஒரு இளைஞனும்கூட மரணமடைந்து விடுவான் என்று இப்போது நீங்கள் அறிந்து கொண்டீர்கள். மேலும் உங்களுக்கு வயதாகி விட்டது. உங்களுக்கு எழுபது வயதாகிறது. நீங்கள் ஆரோக்கியமாகவும் இல்லை. இதை ஒரு குறிப்பாக எடுத்துக் கொள்ளுங்கள். வெறுமனே அழுது கொண்டு, கண்ணீர் விட்டு கஷ்டப்படுவதில் உங்களது நேரத்தை வீணாக்காதீர்கள். உங்களுக்கும்; மரணம் வந்து கொண்டு இருக்கிறது என்பதற்கான அறிகுறி இதுதான்,'' என்று கூறினேன்.

அதற்கு அவர், ''என்ன?'' என்றார். அவர் தனது மகனைப் பற்றி மறந்துவிட்டார். அவர் என்மீது கோபப்பட்டார். ஏனெனில் இந்த தருணங்களில் தான் மக்கள் ஆறுதலைத் தேடுவார்கள். நான் அவரிடம், ''ஆம், உங்களது மரணம் நெருங்கிக் கொண்டு இருக்கிறது என்பதற்கு இதுதான் அறிகுறி. இப்போது உங்களது மரணத்திற்கு தயாராகுங்கள். இந்த இயற்கையாவது வெறுமனே உங்களை விழிப்படையச் செய்துள்ளது. இது ஒரு எச்சரிக்கை மணி,'' என்றேன்.

அவர் என்மீது மிகவும் கோபப்பட்டார். யார் தனது சொந்த மரணத்தைப்பற்றி கேட்பதற்கு விரும்புவார்? அவரது பையனைப் பற்றி ஏதாவது நன்றாக கூறவேண்டும் என்று அவர் விரும்பினார். எனவே அவர், ''ஏதாவது நல்லதாக சொல்ல முடியாதா?'' என்று கேட்டார்.

அதற்கு நான் அவரிடம், ''நல்ல விஷயங்கள் ஒன்றுக்கும் உதவாது. அவை உங்களுக்கு ஆறுதலை மட்டுமே கொடுக்கும். அவை உங்களை திருப்தியாக்கும் மேலும் இதை ஏனைய அநேகம் பேர் செய்து கொண்டு இருக்கிறார்கள். உண்மையில் தேவையானது எதுவுவோ அதைச் செய்வதற்கு என்ன விட்டு விடுங்கள். கதறி அழுதுகொண்டு, ஆறுதல் அடைந்து கொண்டு, இரக்கத்தை அனுபவித்துக் கொண்டு உங்கள் நேரத்தை வீணாக்கக் கூடாது என்பதுதான் இப்போது உங்களுக்கு உண்மையில் தேவையான ஒன்றாகும். அதிர்ச்சி அடைய வேண்டிய நேரம் வந்துவிட்டது. இப்படிப்பட்ட அதிர்ச்சியான நிகழ்வுகளால் மட்டுமே உங்களிடம் உள்ள அதிர்ச்சியை தாங்கிக் கொள்ளும்

அமைப்பினை அழிக்க முடியும். உங்களது மகனின் பிணத்தைப் பாருங்கள். நாற்பது வயது, முற்றிலும் இளமை மற்றும் ஆரோக்கியத்துடன் இருந்தவன். ஒரு நொடிப்பொழுதில் மரணமடைந்துவிட்டான். அவன் நோய்வாய்படவில்லை. இரவில் அவன் திடீரென்று இறந்துவிட்டால். காலையில் அவனது படுக்கையில் அவன் இறந்து கிடந்ததைக் கண்பீர்கள். படுக்கைக்கு செல்வதற்கு முன்பு அவன் ஆரோக்கியமாகத்தான் சென்றான். எனவே இப்போது உங்களைப் பற்றி நினைத்துப் பாருங்கள்;!'' என்று கூறினேன்.

இதனால் கோபமடைந்த அவர் என்னிடம் வருவதை நிறுத்தி விட்டார். மேலும் ஒரு வருடத்திற்குள் அவர் இறந்து விட்டார். ஆனால் அவர் தன்னை தயார்படுத்திக் கொள்ளவில்லை. அவர் கொஞ்சம் புத்திசாலித்தனத்துடன் இருந்திருந்தால் அவர் தன்னைத் தயார் செய்திருப்பார். அவர் தனது மரணத்தை முற்றிலும் வேறுபட்ட ஒரு வழியில் சந்தித்திருப்பார். அவர் தனது மரணத்தை தியானத்துடன் சந்தித்து இருப்பார்.

ஆனால் முட்டாளின் மனமானது ஒரு குறிப்பிட்ட வழியில் வேலை செய்கிறது. அவர் திருப்தியாக்கப்படுதல் மற்றும் ஆறுதல்படுத்தப்படுதல் ஆகியவற்றைப் பற்றி மட்டுமே கவலைப்பட்டார்.

திருப்திதான் உண்மையான விஷயம். ஆனால் உங்களது உண்மை நிலையை நீங்கள் தெரிந்த கொண்டால் மட்டுமே திருப்தி என்பது சாத்தியப்படும். நீங்கள் உங்களுக்குள் உள்ள உயிர் உணர்வின் நடுப்பாகத்தை ஊடுருவிச் சென்றபோது அங்கு மரணம் என்பது கிடையாது என்பதை நீங்கள் காண்பீர்கள். அங்கு நோய் என்பது கிடையாது என்பதைக் காண்பீர்கள். மேலும் அங்கு அது முடிவில்லாமல் எப்போதும் இருப்பது என்பதைப் பார்ப்பீர்கள். அது காலத்திற்கு அப்பாற்பட்டது. அதன்பின்னர் எல்லா பயமும், எல்லா மரண பயமும், எல்லாக் கவலையும், எல்லாத் துக்கமும் மறைந்து போய் மிகப்பெரிய திருப்தி எழுகிறது. அந்த திருப்திதான் பிரார்த்தனையாக இருக்கிறது.

*அதிர்ஷ்டமோ, துரதிருஷ்டமோ*
*உனக்கு என்ன நேர்ந்தாலும் அது*
*கலப்படமற்ற ஆசீர்வாதம்*
*உடன்வருகின்ற தீமையானது ஒரு*
*ஓடிப் போகின்ற நிழல்.*

*வார்த்தைகளின் உலகில்*
*'நன்மை' மற்றும் ''தீமை'' ஆகியவற்றிற்கு*
*அர்த்தம் கிடையாது. அவை*
*'நான்' மற்றும் 'நீ' என்கிற இந்த உலகில்*
*உருவாக்கப்பட்ட வெறும் பெயர்கள்.*

... உனக்கு என்ன நேர்ந்தாலும்... உங்களுக்குள் திருப்தி எழுந்துவிட்டால், திருப்தியின் வெறும் கொஞ்ச ருசி தெரிந்து விட்டால், ஞானத்தின் கொஞ்ச வெளிச்சம் தெரிந்துவிட்டால், உங்களது உயிர் உணர்வின் கொஞ்சப்பகுதி பிரகாசிப்பதாக ஆகிவிட்டால், அதன் பின்னர் **அதிர்ஷ்டமோ, துரதிருஷ்டமோ உனக்கு என்ன நேர்ந்தாலும் அது கலப்படமற்ற ஆசீர் வாதம்.** அதன்பின்னர் எல்லாமே ஆசீர்வாதமாக இருக்கிறது. ஏனெனில் எல்லாமே ஆசீர்வாதமாக மட்டுமே இருக்க முடியும். ஏனெனில் எல்லாமே கடவுளிடம் இருந்து வருகிறது. இந்த ஒட்டுமொத்த பிரபஞ்சமும் தெய்விகமானதாக இருக்கிறது. தீமை என்பது எப்படி நடக்கமுடியும்?

ஆனால் நீங்கள் உடன்வருகின்ற தீமையைப் பார்த்தால், அதன் பின்னர் அது ஓடிப்போகின்ற நிழல் என்று தெரிந்து கொள்வீர்கள். நீங்கள் சூரிய வெளிச்சத்தில் நடக்கும் போது நிழல் உருவாகிறது. ஆனால் நிழல் என்பது இல்லாத ஒன்றாகும். அதே போன்று நீங்கள் மிகப்பெரிய பேரானந்தத்தில் இருக்கும்போதும் ஒரு நிழல் உருவாகிறது. அந்த நிழலும் இல்லாத ஒன்றாகும். எனவே இல்லாத ஒன்றினைப் பற்றி கவலைப்பட வேண்டிய அவசியம் கிடையாது என்பதை நன்றாகத் தெரிந்து கொள் ளுங்கள். அது வெறுமனே ஒரு நிழலாக மட்டுமே இருக்கிறது.

தீமை என்பது நன்மையின் நிழலாக உள்ளது. வெறுப்பு என்பது அன்பின் நிழலாக இருக்கிறது. கோபம் என்பது

கருணையின் நிழலாக உள்ளது. மேலும் அசிங்கம் என்பது அழகின் நிழலாக உள்ளது. சோகம் என்பது மகிழ்ச்சியின் நிழலாக உள்ளது. இதை நான் சொல்கிறேன் என்பதற்காக இல்லாமல் நீங்கள் இதை சுயமாகத் தெரிந்து கொண்டால், அதன்பின்னர் உங்களது ஒட்டுமொத்த வாழ்க்கையும் இடைவிடாத ஆசீர்வாதத்தின் மழையைத் தவிர வேறு எதுவும் அல்ல.

**நன்மை மற்றும் தீமை ஆகியவற்றிற்கு அர்த்தம் கிடையாது...** அதன் பின்னர் நன்மை மற்றும் தீமை என்கிற கேள்வியே எழாது. எல்லாமே நன்மைதான். உன்னதமான நன்மைதான்... வார்த்தைகளின் உலகில். லாகோஸ், கடவுள், தாவோ, நன்மை, தீமை இவை எல்லாம் **நான் மற்றும் நீ என்கிற இந்த உலகில் உருவாக்கப்பட வெறும் பெயர்கள்.** அங்கு நீ என்பதும் நான் என்பதும் இல்லை என்றால் அது அடாப் (ADAB) என்பதாக உள்ளது; சூஃபிக்கள் அதை அடாப் என்று அழைக்கின்றனர். அதாவது ஒரு குருவின் சந்நிதானத்தில் இருக்கும்போது, அங்க 'நீ' மற்றும் 'நான்' என்கிற பார்வையம், உணர்வும் கிடையாது.

இந்தப் பொழுதிலேயே அதை உணருங்கள். மிகப்பெரிய விஷயங்களைப் பற்றி பேசுவதற்காக நான் இங்கு இல்லை. அந்த மிகப்பெரிய விஷயங்களின் ருசியை உங்களுக்கு கொடுப்பதற் காகவே நான் இங்கு இருக்கிறேன். ஒரு சிறு நொடிப்பொழுது மட்டுமே நீங்கள் என்பதாக இல்லாமல், மேலும் என்னை உங்களில் இருந்து தனியாகப் பிரிந்து இருப்பவன் என்று நினைக்காமல், ஒரு நொடிப்பொழுது இருந்தால், நாம் பாலத் தினால் இணைக்கப்பட்டு விடுகிறோம். அந்த நொடிப்பொழுதில் மிகப்பெரிய ஆசீர்வாதங்கள் இறங்கி வருவதை நீங்கள் காண்பீர்கள். அதுதான் ஒரு குருவோடு இருக்கின்ற அருளாக உள்ளது.

வேறு எங்கேயும் விடவும் ஒரு குருவிடம் 'நான்' மற்றும் 'நீ' என்பதை எளிதில் கைவிட முடிகிறது. இது ஏன்? வேறு எங்காவது உங்களால் இதைக் கைவிட ஏன் முடிவதில்லை? ஏனெனில் வேறு

எங்கு சென்றாலும் இரண்டு மனிதர்கள் அதைக் கைவிட வேண்டும். எனவே அது மிகவும் சிக்கல் நிறைந்ததாக இருக்கும். மேலும் இரு மனிதர்களும் ஒரே நேரத்தில் அதைக் கைவிட வேண்டும். அதன் பிறகு மட்டுமே அங்கு மகிழ்ச்சி என்னும் தருணம் வரும். குருவுடன் இருக்கும்போது அது சாத்தியப்படும். ஏனெனில் ஒருபக்கம், குருவின் பக்கம். அங்கு 'நான்' என்பதும் இல்லை 'நீ' என்பதும் இல்லை. எனவே பாதிவேலை ஏற்கனவே செய்யப்பட்டு விட்டது. இப்போது உங்கள் பக்கம் மட்டுமே செய்யப்பட வேண்டும். ஆகவே எப்போது உங்களால் உங்களது 'நான்' மற்றும் 'நீ' என்பதை கைவிட முடிகிறதோ. அப்போது உடனடியாக நீங்கள் தொடர்பில் இருக்கிறீர்கள். உடனடியாக நீங்கள் இணைக்கப்பட்டு வருகிறீர்கள்.

குரு என்பவர் ஒரு இல்லாதநிலை. நீங்களும் அந்த இல்லாமை நிலையை அடையும்போது, இரண்டு பூஜ்யங்களும் ஒன்றினுள் ஒன்று கரைந்து விடுகிறது. இரண்டு பூஜ்யங்களும் தனித்தனியாக இருக்கமுடியாது. இரண்டு பூஜ்யங்கள் இரண்டு பூஜ்யங்களாக இருப்பதில்லை. இரண்டு பூஜ்யங்களும் ஒரு பூஜ்யம் ஆகிவிடுகிறது.

சில தினங்களுக்கு முன்பு எனது பக்கத்தில் இருந்து எந்த ஒரு உறவும் இல்லை. ஒரு குருவிற்கும் சீடனுக்கும் இடையே உள்ள உறவு ஒருவழிப்பாதையாக உள்ளது என்று கூறினேன். அது சீடனின் பக்கத்தில் இருந்து மட்டுமே உள்ளது. சேத்னா என்குரு, ''நீங்கள் அதை நேர்த்தியாக கூறினீர்கள். அது இனிப்பு தடவிய மாத்திரை ஆனால் அது எனது தொண்டையில் நின்றுவிட்டது,'' என்று கூறி ஒரு அழகான கடிதம் எழுதியிருந்தார். சேத்னா என்னை இன்னும் கொஞ்சம் அதிகமாக குடி. அப்போது தான் அது உனது தொண்டைக்கு கீழ் செல்லும். என்னை இன்னும் கொஞ்சம் அதிகமாகப் பருகு. எனது இல்லாத நிலையை **கொஞ்சம்** அதிகம் பருகு. இல்லாத ஒருவரை கொஞ்சம்; அதிகம் பருகு. அது உன்னைக் காயப்படுத்துவதை என்னால் புரிந்து கொள்ளமுடிகிறது. இனிப்பு தடவி இருந்தாலும் கூட அது கசப்பான மாத்திரை. உனது பக்கத்தில் இருந்து மட்டுமே உறவு என்பது உள்ளது. குருவின் பக்கத்தில் இருந்து உறவு என்பது

கிடையாது என்கிற உணர்வு காயப்படுத்தும். குருவும் கூட உன்னைத் தனக்கு தேவை என்று நினைக்க வேண்டும் என்று நீ விரும்புகிறாய். ''நீ எனக்கு தேவை, நான் உன்னை மிகவும் நேசிக்கிறேன்'' என்று நான் உன்னிடம் கூறவேண்டும் என்று நீ விரும்புகிறாய்.

உனது தேவையை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அது உண்மையானதாக இருக்காது. எனவே நான், ''எனக்கு நீ தேவை இல்லை, நான் உன்னை நேசிக்கிறேன்'' என்று மட்டுமே கூறமுடியம்.

நான் என்னும் தன்முனைப்பு வரும்போதுதான் தேவை என்பது இருக்கிறது. நான் உன்னோடு உறவு கொண்டாட முடியாது. ஏனெனில் நான் இல்லை. நீ என்னோடு தொடர்பு கொள்ளமுடியும். ஏனெனில் நீ இன்னமும் இருக்கிறாய். நீ அங்கு இருப்பதால் தான் நீ தொடர்பு கொண்டு இருக்கிறாய். ஆனால் அந்த உறவானது வெறுமனே அக்கறை இல்லாத ஒன்றாக உள்ளது. நான் மறைந்து போய்விட்ட அதே வழியில் நீயும் கூட மறைந்து விட்டால். அதன்பிறகு அங்கு ஒரு சந்திப்பு நடக்கும். அது உறவாடுதல் அல்ல. ஆனால் அது ஒன்றுகலத்தல்.

உறவுகள் திருப்திப்படுத்த முடியாது. நீங்கள் அநேக உறவுகளை அறிந்து வைத்திருக்கிறீர்கள். அவைகளின் மூலமாக என்ன நடந்துவிட்டது? நீங்கள் நேசித்து இருக்கிறீர்கள். நீங்கள் நட்புடன் இருந்திருக்கிறீர்கள். நீங்கள் உங்களது அப்பா, அம்மா, சகோதரன், சகோதரி ஆகியோரைர நேசித்து இருக்கிறீர்கள். நீங்கள் உங்களது கணவன் அல்லது மனைவியை நேசித்து இருக்கிறீர்கள். நீங்கள் அநேக முறை நேசித்து இருக்கிறீர்கள். நீங்கள் அநேக முறை உறவுகளை உருவாக்கி இருக்கிறீர்கள். ஆனால் ஒவ்வொரு உறவும் உங்களது வாயில் ஒரு கசப்பான சுவையை விட்டுச் சென்றுள்ளது என்பதை நீங்கள் அறிவீர்கள். அது உங்களை திருப்தியானவர் ஆக்காது. ஒரு நொடிப்பொழுது அது உங்களை திருப்தியாக்கலாம். ஆனால் மீண்டும் அதிருப்தி வந்துவிடுகிறது. அது ஆறுதல் அளிக்கலாம். ஆனால் மீண்டும் நீங்கள் தனிமையின் கடுமையில் விடப்பட்டு விடுகிறீர்கள்.

உறவு என்பது உண்மையான விஷயம் அல்ல. உண்மையான விஷயமானது தோழமையாக, ஒற்றுமையாக, கூட்டுறவாக உள்ளது. ஒன்றிணைதல் தான் உண்மையான விஷயமாக உள்ளது. உறவாடும் போது நீங்கள் தனியாக இருக்கிறீர்கள். மேலும் பிரிவில் அசிங்கமாக, குறும்புத்தனமாக, வேதனை உண்டாக்குகின்ற ஆணவமாக நிச்சயமாக இருந்தாக வேண்டும். அது ஒன்றிணையும் போது மட்டுமே மறைந்து போகிறது.

எனவே, சேத்னா, எனது இல்லாமையைக் கொஞ்சம் அதிகம் பருகு. நீ தேவை என்று கூறாத எனது அன்பினைக் கொஞ்சம் அதிகம் குடி. அதன்பின்னர் அந்த மாத்திரை உனது தொண்டை வழியாக உள்ளே சென்று விடும். அப்போது நீ அதை ஜீரணித்து விடலாம். மேலும் நான் தேவைப்படாமல் நீ என்னை நேசிக்கின்ற அந்த மாபெரும் நாள் ஒருநாள் வரும்.

இரண்டு பேர் நேசிக்கும்போது, இரண்டு பேருக்கும் ஒருவருக்கு ஒருவர் தேவைப்படாத போது, அன்பானது சிறகுகளைப் பெறுகிறது. அதன்பின்னர் ஒருபோதும் அது சாதாரணமானதாக இருக்காது. அதன்பின்னர் அது இந்த உலகம் சார்ந்ததாக இருக்காது. அது அப்பால் உள்ளதற்கு சொந்தமாகி விடும். அது கடந்து சென்றதாக ஆகிவிடும்.

*உனது வாழ்க்கையானது அவரது வாயில் ஒரு சிறு கவளம்.*
*அவரது விருந்தானது ஒரு திருமணம் மற்றும் ஒரு*
*விழித்தெழுதல்*
*ஆகிய இரண்டுமாக உள்ளது*
*இருள் ஏன் இதயத்தை பயமுறுத்த வேண்டும்?*
*ஏனெனில் இரவானது ஒரு புதிய தினத்தை கர்ப்பத்தில்*
*கொண்டுள்ளது.*

நாம் அனைவரும் கடவுளின் வாயில் இருக்கிறோம். இது மிகவும் அபரிமிதமான கருத்து நிறைந்த வாக்குமூலம். **உனது வாழ்க்கையானது அவரது வாயில் ஒரு கவளம்...** அவரால் சாப்பிடப்படுங்கள். சண்டை போடாதீர்கள், தப்பி ஓடாதீர்கள். ஏனெனில் நீங்கள் அவரினுள் உறிஞ்சப்பட்டால் மட்டுமே

உண்மையான வாழ்க்கை என்பது என்ன என்று நீங்கள் அறிந்து கொள்வீர்கள்.

... **அவரது விருந்தானது ஒரு திருமணம் மற்றும் ஒரு விழித்தெழுதல் ஆகிய இரண்டுமாக உள்ளது.** இது மிகவும் அழகானது. இதுகுறித்து தியானம் செய்யுங்கள். **ஒரு திருமணம் மற்றும் ஒரு விழித்தெழுதல்.** விழித்தெழுதல் என்பது யாராவது இறந்துவிட்டால் நீங்கள் அந்த பிணத்தைப் பார்க்க வேண்டும் என்று அர்த்தம். ஒரு திருமணம் மற்றும் ஒரு விழித்தெழுதல் இரண்டும் ஒன்று சேர்ந்ததா?

ஆம், ஒன்று சேர்ந்தது. ஏனெனில் உங்களது மரணம் தான் உங்களது உயிர்தெழுதலாக உள்ளது. ஒருபக்கம் நீங்கள் மரணமடைகிறீர்கள். அது ஒரு விழித்தெழுதல். அடுத்தபக்கம் நீங்கள் அவரோடு காலா காலத்திற்கும் திருமணம் செய்து கொள்கிறீர்கள். இது ஒரு திருமணமாகிறது. இது ஒரு சிலுவை, சிலுவையில் அறையப்படுதல் மற்றம் பின் தொடர்கின்ற உயிர்த்தெழுதல். எனவே கடவுளில் மரணமடையத் தயாராக இருப்பவர்கள் மட்டுமே புதிதாகப் பிறக்கிறார்கள். அதன்பிறகு அவர்கள் பிரபஞ்ச ஆன்மாக்களை பெற்று விடுகின்றனர். அவர்கள் முடிவில்லாத உயிர் உணர்வைப் பெறுகின்றனர்.

**இருள் ஏன் இதயத்தை பயமுறுத்த வேண்டும்?** மரணம் மற்றும் இருள் பற்றி கவலைப்படாதீர்கள்... **ஏனெனில் இரவானது ஒரு புதிய தினத்தை கர்ப்பத்தில் கொண்டுள்ளது.** விரைவில், இரவானது இருள் அதிகமாக ஆனபின்னர் அதிக இருள் நிறைந்ததாக ஆகும்போது, காலைப்பொழுது நெருங்கி நெருங்கி வருகிறது. மரணமடையுங்கள், மரணமடையக் கற்றுக் கொள்ளுங்கள். அப்போது அபரிமிதமான வாழ்க்கையை நீங்கள் பெற்றுக் கொள்வீர்கள்.

*காலம் என்னும் கம்பளத்தை நீ சுருட்டிவிட்டதாக*
*கூறுகிறாய்.*
*அப்படியானால், அதன்பின்னர் நீ கடவுளின் கட்டளைக்குள்*
*வரும்வரை வாழ்க்கை மற்றும் பகுத்தறிவிற்கு அப்பால்*
*காலடி எடுத்து வை.*

எவ்வளவு காலம் நீங்கள் காலம் என்பதில் வாழ்ந்து இருக்கிறீர்கள்? பல லட்சம் பிறவிகளாக இருக்கிறீர்கள். கீழைநாட்டினர் கூறுவதை நீங்கள் திடமாக நம்பினால் அதன்பின்னர் எண்பத்தி நான்கு மில்லியன் பிறவிகள் உள்ளன. இது ஒரு நீண்ட பயணம். நீங்கள் காலம் என்னும் கம்பளத்தை போதுமான காலத்திற்கு சுருட்டி விட்டீர்கள். இப்போது முடித்துவிடுங்கள். இப்போது கொஞ்சம் அதிக புத்திசாலித் தனத்துடன் இருங்கள். நீங்கள் அதிலிருந்து பாடங்கள் எதையும் கற்றுக் கொள்ளவில்லையா? நீங்கள் அதிக காலம் வாழ்ந்து விட்டீர்கள். மேலும் பல லட்சம் தடவைகள் நீங்கள் ஆசைப் பட்டதையெல்லாம் செய்தும் விட்டீர்கள். என்றாலும்கூட இன்னமும் நீங்கள் விரக்தி அடையவில்லை. சலிப்பு அடையவில்லை.

**காலம் என்னும் கம்பளத்தை சுருட்டிவிட்டதாக நீ கூறுகிறாய். அப்படியானால், அதன்பின்னர் நீ கடவுளின் கட்டளைக்குள் வரும்வரை வாழ்க்கை மற்றும் பகுத்தறிவிற்கு அப்பால் காலடி எடுத்து வை.** இப்போது அந்த தருணம் வந்துவிட்டது. வாழ்க்கைக்கு அப்பால் காலடி எடுத்து வையுங்கள். கடவுளுக்குள் மரணம் அடையுங்கள். மேலும் நீங்கள் கடவுளுக்குள் மரணமடைய விரும்பினால் நீங்கள் பகுத்தறிவிற்கு அப்பால் அடிஎடுத்து வைக்க வேண்டும். ஏனெனில் பகுத்தறிவானது, ''நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்? மரணமா? யாருக்கு தெரியும்? உயிர்த்தெழுதல் என்பது பின் தொடர்ந்து வரலாம். பின்தொடர்ந்து வராமலும் போகலாம். யாருக்கு தெரியும்? விதையானது இறந்து போகலாம். ஆனால் அந்த இடத்தில் முளை விடாமல் போகலாம். மேலும் மரமும் இல்லாமல் போகலாம். அதை எப்படி உத்திரவாதமாக கூறமுடியும்? இப்படியாக, பகுத்தறிவானது ஆயிரத்தோரு சந்தேகங்களை உருவாக்கும்.

ஆனால நீங்கள் பல லட்சம் பிறவிகளாக பகுத்தறிந்து, பகுத்தறிந்து வந்திருக்கிறீர்கள். ஆனால் பகுத்தறிவானது ஒரு சிறு முடிவைக்கூட உங்களுக்கு கொடுக்கவில்லை. அது உங்களை கொஞ்சம் கூட அதிக புத்திசாலித்தனம் நிறைந்தவராக

ஆக்கவில்லை. அது உங்களை பழகிப்போன பழைய பாதையி லேயே கொண்டு செல்கிறது.

இப்படி பகுத்தறிவானது பழகிப்போன பழைய பாதையில் கொண்டு செல்கிறது என்பதை நீங்கள் கண்டு கொண்டால், தைரியமாக இருங்கள். திடமாக நம்புங்கள். தைரியம் என்றால் திடநம்பிக்கை என்று அர்த்தம், திட நம்பிக்கை என்றால் தைரியம் என்று அர்த்தம். ஆபத்தை கையில் எடுங்கள், பகுத்தறிவிற்கு அப்பால் செல்லுங்கள், வாழ்க்கைக்கு அப்பால் செல்லுங்கள். **நீங்கள் கடவுளின் கட்டளைக்குள் வரும் வரையில்** செல்லுங்கள்.

மேலும் நீங்கள் பகுத்தறிவிற்கு அப்பால், உங்களது வாழ்க்கைக்கு அப்பால் செல்ல முடிந்தால், திடீரென்று நீங்கள் எடுத்துக் கொள்ளப்படுகிறீர்கள். கடவுளால் ஆட்கொள்ளப்படு கிறீர்கள். அதன்பிறகு அவர் உங்கள் மூலமாக வாழ்வதற்கு ஆரம்பிக்கிறார். அதன்பின்னர் நீங்கள் ஒரு வெற்று மூங்கில், ஒரு புல்லாங்குழல் போன்று ஆகிவிடுகிறீர்கள். அதன்பின்னர் அவர் பாடலைப் பாடுகிறார்.

*இரவில் குருடனாக இருப்பதாலும்,*
*உனது முட்டாள் ஞானத்தால் பகலில்*
*ஒற்றைக் கண்ணோடு இருப்பதாலும்*
*உன்னால் எதையும் பார்க்க முடியாது!*

இரவில் உங்களால் பார்க்க பார்க்க முடியாது. ஏனெனில் அப்போது இருள் நிறைந்து இருக்கும். அறியாமையில் உங்களால் பார்க்க முடியாது. ஏனெனில் நீங்கள் அறியாதவராக இருக்கிறீர்கள். மேலும் கற்றறிவினாலும் உங்களால் பார்க்க முடியாது. ஏனெனில் உங்களது கற்றறிவு உங்களது கண்களை மூடிவிடுகிறது. அறியாதவன் கஷ்டப்படுகிறான். ஏனெனில் அவன் அறியாதவனாக இருக்கிறான். மேலும் கற்றறிந்தவனும் கஷ்டப்படுகிறான். ஏனெனில் அவன் கற்றறிந்தவனாக இருக்கிறான்.

அறியாமை மற்றும் கற்றறிவு ஆகிய இரண்டையும், கைவிடுங்கள். வெறுமனே அறியாமை மற்றும் கற்றறிவு ஆகிய

இரண்டும். முற்றிலும் இல்லாமல் முற்றிலும் சுத்தமாக இருங்கள். வெறுமனே ஒரு திறப்பு போல இருங்கள். அந்த திறப்பில் மாபெரும் விருந்தாளி வருகிறார். அந்த திறப்பில் நீங்கள் விருந்தளிப்பவர் ஆகி விடுகிறீர்கள். கடவுள் உங்களை ஊடுருவிச் செல்லத் தயாராக இருக்கிறார். ஆனால் ஒன்று உங்களது அறியாமை அவரைத் தடுக்கிறது. அல்லது உங்களது கற்றறிவு அவரைத் தடுக்கிறது. கள்ளம் கபடமற்ற தன்மை என்பது அறியாமை மற்றும் கற்றறிவு ஆகிய இரண்டும். இல்லாத நிலை என்பதை நினைவில் கொள்ளுங்கள். கள்ளம் கடபமற்ற மனிதன் தான் அறிந்து கொண்டவன் என்று விழிப்புணர்வு இல்லாமல் இருக்கிறான். மேலும் அவன் தனக்கு தெரியாது என்பது குறித்தும் விழிப்புணர்வு இல்லாமல் இருக்கிறான். அவன் வெறுமனே ஒரு சுத்தமான கண்ணாடி போன்று, எந்த நிலை வந்தாலும் அதை அப்படியே பிரதிபலித்துக் கொண்டு இருக்கிறான்.

ஒரு சுத்தமான கண்ணாடி போன்று ஆகிவிடுங்கள்.

தியானம் என்பது அதுதான்.

இன்று இது போதும்.

*முதல் கேள்வி*

*ஓஷோ,*

> *இந்த மக்கள் கூட்டம் இயேசுவிற்கு எதிரானதாக இருந்தது. அவர்கள் புத்தருக்கு எதிரானவர்களாக இருந்தனர். அவர்கள் உங்களுக்கும் எதிரானவர்களாக இருக்கின்றனர். இது ஏன்?*

இந்த மக்கள் கூட்டம் தனிமனிதன் அல்லாத ஓர் இருப்பு நிலையில் உள்ளது. அவர்கள் செம்மறி ஆடுகள் போன்று வாழ்கின்றனர். ஆகவே, இயேசு அல்லது புத்தர் போன்ற ஒரு மனிதர், தனது தனிமனிதத்தன்மையை, தனது எழுச்சியை, தனது விடுதலையை ஆணித்தரமாக எடுத்துரைக்கும் போது இயல்பாகவே அவர் வெறுக்கப்படுகிறார். அவரைப் பார்த்து மக்கள் கூட்டம் பயப்படுகிறது. அவர்களின் அஸ்திவாரங்கள் ஆட்டம் காண்கின்றன. இயேசு சரியானவர் என்றால், அதன்பின்னர் இந்த ஒட்டுமொத்த மக்கள் கூட்டத்தின் வாழ்க்கை முறையும் மாற்றப்பட வேண்டியதாக இருக்கும். அதற்கு கொஞ்சம் அதிகம் வேலை செய்யப்பட வேண்டும். ஆனால், இந்த மக்கள் தங்களின் அடிமைத்தனத்தில் அதிகம் முதலீடு செய்துள்ளனர்.

இயேசுவின் பிரசன்னமானது மக்கள், தாங்கள் திவாலாகி விட்டவர்கள் போன்று உணரச் செய்கிறது. நீ ஒரு புத்தரின் அருகில் வரும்போது, நீ மிகவும் அசிங்கமான மனிதாபிமானமற்ற உயிராக தரம் தாழ்த்தப்படுகிறாய். நீ உனது மரியாதையை எல்லாம் இழந்து விடுகிறாய். நீ தாழ்த்தப்பட்டவனாக உணர்கிறாய். நீ ஒரு புத்திசாலியாக இருந்தால் அந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு

உள்ளனை எழுச்சி அடையச் செய்து கொள்வாய். இதுவரையில் நீ அறியாமையில், தூக்கத்தில் வாழ்ந்து விட்டதை கண்டு கொள்வாய். மேலும் புத்தரின் பிரசன்னமானது உனது ஆன்மாவின் இரண்ட இரவில் ஒரு வெளிச்சக் கதிர் போன்று ஆகிவிட்டதற்காக நீ புத்தருக்கு நன்றி உணர்வு கொள்வாய். ஆனால் அந்த அளவிற்கு புத்திசாலித்தனம் என்பது மிகவும் அபூர்வமானது.

மக்கள் முட்டாளாகவும், பிடிவாதமானவர்களாகவும் இருக்கின்றனர்; அவர்கள் உடனடியாக எதிர்ச்செயல் புரிகின்றனர். உயரத்திற்கு எழுவதற்கு மாறாக, புத்தர் இருக்கின்ற அந்த உச்சநிலையை சவாலாக ஏற்றுக் கொள்வதற்கு மாறாக, அவர்கள் அவரை அழிக்கின்றனர். அவர்கள் இயேசுவை அழிக்கின்றனர். அப்போதுதான் அவர்கள் மீண்டும் ஆழ்ந்த தூக்கத்திற்கு சென்று அவர்களின் இனிய கனவுகளைக் காணமுடியும்.

அதனால்தான் அவர்கள் எனக்கு எதிராகவும் இருக்கின்றனர். நான் ஒருவிதமான தொந்தரவாக இருக்கிறேன். நான் இருப்பதை அவர்கள் கண்டு கொள்ளாமல் இருக்க முடியாது. ஒன்று நீ என்னோடு இருக்க வேண்டும். அல்லது நீ எனக்கு எதிராக இருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட மனிதரின் இருப்பினை உன்னால் கண்டுகொள்ளாமல் இருக்க முடியவில்லை என்றால் அப்போது நீ தேர்ந்தெடுக்க வேண்டியதிருக்கும். உனது உயிர் உணர்வில் மிகப்பெரிய குழப்பம் எழுகிறது. ஏனெனில் தேர்ந்தெடுத்தல் என்பது சுலபமானதல்ல, தேர்ந்தெடுத்தல் என்றால் மாற்றத்தை ஏற்படுத்துதல் என்று அர்த்தம்.

ஒரு குறிப்பிட்ட விதமாக நீ ஐம்பது வருடங்களாக வாழ்ந்து விட்டாய். அந்த பழக்கவழக்கங்கள் உன்னிடம் தங்கி விட்டன. இப்போது, நீ உண்மையான வாழ்க்கை என்று நம்பிக்கொண்டு இருக்கின்ற அந்த கற்பனையில் இருந்து வெளியே வரும்படிக்கு நான் திடீரென்று உன்னை அழைக்கிறேன். இதுவரை நீ வாழ்ந்ததை எல்லாம்,உனது மதிப்புகளை எல்லாம், உனது நல்ஒழுக்கங்களை எல்லாம், உனது அறிவாற்றலை எல்லாம், உனது மதங்களை எல்லாம் இங்கு நான் கண்டனம் செய்து கொண்டு இருக்கிறேன்.

எனவே மிகவும் தைரியமானவர்கள் மட்டும், மிகச் சில தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் மட்டுமே, இந்த சூழ்நிலைக்கு ஏற்றவாறு எழுச்சி அடைவார்கள். மேலும் கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒன்றிற்காக, நம்ப மட்டுமே செய்ய முடிகின்ற ஏதோ ஒன்றிற்காக அவர்களிடம் உள்ளவற்றை எல்லாம் பணயமாக வைப்பார்கள்.

இப்போது, சாதாரண மக்கள் கூட்டத்திற்கு இது கடினமானது. எனவே அவர்கள் தாங்கள் அறிந்த ஒன்றினை முடிவாக எடுத்து விடுகின்றனர். இயேசு அறியாத ஒன்றினைப் பற்றி கூறுகிறார். புத்தர் அப்பால் உள்ள ஒன்றினைப் பற்றி கூறுகிறார். இப்போது உன்னிடம் உள்ள கேள்வி இதுதான். ஏற்கனவே உனக்கு பழக்கப்பட்டதை, பாதுகாப்பனதை, சௌகரியமானதை, வசதியானதை தேர்ந் தெடுப்பதா அலலது எதுவுமே தெரியாத, போவதற்கான வழி இல்லாத, அது இருக்கிறதா அல்லது இல்லையா என்று நிச்சயமாகத் தெரியாத ஏதோ ஒன்றிற்கான புத்தருடன் செல்கின்ற வீர தீரப் பயணத்தை தேர்வு செய்வதா என்கிற கேள்வி எழுகிறது.

புத்தரே கூட ஏமாற்றப்படலாம் அல்லது அவர் ஒரு ஏமாற்றுக்காரராகவும் கூட இருக்கலாம். அதற்கு எந்த வழியும் இல்லை.இப்படியா அல்லது அப்படியா என்பது குறித்து முற்றிலும் நிச்சயப்படுத்திக் கொள்வதற்கு வழியே இல்லை. ஆழ்ந்த தயக்கத்தில, ஆழ்ந்த குழப்பத்தில், ஆழ்ந்த நடுக்கத்தில் மட்டுமே ஒருவர் புத்தருடன் சென்றாக வேண்டியதிருக்கும். இன்னமும் யார் இளமையாக இருக்கிறார்களோ, யாருடைய மனதில் அதிகப் படியான தூசி சேராமல் இருக்கிறதோ, யாருடைய மனம் இன்னமும் அதிசயப்படவும், வாழ்க்கையின் புதிர்களை உணரவும் செய்கிறதோ, யார் இன்னமும் முடிந்து போகாதவர்களாக, உயிருள்ளவர்களாக, நிலை பெறாதவர்களாக இருக்கிறார்களோ, அந்த ஒருசில மக்கள் மட்டுமே இயேசுவோடும், புத்தரோடும், என்னோடும் போக முடியும். மற்றவர்கள் கண்டிப்பாக அவர்களுக்கு எதிரானவர்களாக இருந்தாக வேண்டும்.

அதன்பின்னர் இதற்கு வேறு அநேக காரணங்களும் கூட உள்ளன. மக்கள் எப்போதும் ஏதாவது ஒரு கூட்டத்தைச் சார்ந்து

இருக்கத்தான் விரும்புகின்றனர். அது ஒரு வகையான ஆறுதலை, திருப்தியைக் கொடுக்கிறது. "நான் சரியான பாதையில்தான் செல்கிறேன்" என்கிற ஆறுதலைக் கொடுக்கிறது. நீ ஒரு கிறிஸ்தவனாக இருந்தால், அதன்பிறகு உன்னோடு பலகோடி கிறிஸ்தவர்கள் இருக்கின்றனர். நீ அவர்களைச் சார்ந்து இருக்கிறாய். நீ தனிமையில் இல்லை.

நீ என்னோடு இருந்தால், நீ கிட்டத்தட்ட தனிமையில்தான் இருக்கிறாய். இதுவரை நீ சார்ந்திருந்த கூட்டத்திலிருந்து நீ வேரோடு பிடுங்கப்பட்டு விடுவாய். ஒருசில தருணங்களில் நீ இல்லாமல் போய் விடுவாய், யாருமாக இல்லாமல் இருப்பாய். நீ ஓர் அனாமதேயம் ஆகிவிடுவாய். நீ ஒரு கிறிஸ்தவராகவோ அல்லது ஓர் இந்துவாகவோ அல்லது ஒரு முகமதியனாகவோ இருக்கமாட்டாய். ஆனால் அதுதான் உனது அடையாளமாக இருந்துவிட்டது.

நீ ஒரு கிறிஸ்தவனாகவோ அல்லது ஓர் இந்துவாகவோ அல்லது ஒரு யூதனாகவோ இருந்து விடுகிறாய். எனவே அதுதான் உனது அடையாளம். உன்னைப் பற்றி நீ அப்படித்தான் அறிந்து கொண்டிருக்கிறாய். யாராவது உன்னிடம், "நீ யார்?" என்று கேட்டால், "நான் ஒரு கத்தோலிக்கன்" என்று உன்னால் கூறமுடியும். உன்னைப்பற்றி ஏதோ நீ அறிந்து கொண்டது போன்றதொரு குறிப்பிட்ட பொய்யான உணர்வை அது உனக்கு கொடுக்கிறது. இந்த உலகில் மக்கள் ஏதோ ஒன்றைப்போல வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் ஏதோ ஒன்றைப்போல் வாழ்ந்து கொண்டு இருக்கிறார்கள். ஆனால் ஏதோ ஒன்றைப்போல இந்த உலகில் நீ நீண்ட காலம் வாழ்ந்து விடும்போது அது உண்மை யானது போலத் தோன்றுகிறது; நீ அதை நம்புவதற்கு ஆரம்பித்து விடுகிறாய்.

ஒரு குழந்தை பிறக்கும்போது அவன் ஒரு கிறிஸ்தவ னாகவோ அல்லது யூதனாகவோ அல்லது இந்துவாகவோ இல்லை. ஆனால் அப்படி இல்லாமல் இருந்தாலும் அவன் முற்றிலும் சந்தோஷமாக இருக்கிறான். ஆனால் கூடியசீக்கிரம் அவன் ஓர் இந்து அல்லது ஒரு முகமதியன் அல்லது வேறு யாராகவோ

ஆகிவிடுவான். அவனுக்கு கற்றுக் கொடுக்கப்பட வேண்டும். அவனுக்கு ஓர் அடையாளம், ஒரு பெயர் விலாசம் கொடுக்கப் படும். மேலும் அந்த பெயர் விலாசமனது உனக்கு அதிக பயனைத் தருகிறது. ஏனெனில் அந்த பெயர் விலாசத்தின் பின்னால் வெறுமை, சூன்யம் உள்ளது.

அந்த பெயர் அட்டையை எடுத்துவிட்டால் நீ வெறுமை என்னும் அதலபாதாளத்தில் வீழ்ந்து விடுவாய். உனக்கு உண்மையில் தைரியம் இல்லாவிட்டால், அந்த வெறுமைக்குப் போவதற்கு உனக்கு உண்மையான தைரியம் இல்லாவிட்டால், நீ அந்த பெயர் அட்டையைப் பற்றிக்கொண்டு இருப்பதற்கே விரும்புவாய்.

பிரிஸ்டர் பல்கலைக்கழகத்தில் ஹென்றி தாஜ்பெல்லால் மேற்கொள்ளப்பட்ட சில பரிசோதனைகள் எதிர்பாராத விடைகளைக் கொடுத்துள்ளது. பதினான்கு முதல் பதினைந்து வயதுள்ள பள்ளிச் சிறுவர்கள் இரண்டு கூட்டமாகப் பிரிக்கப்பட்டு அவர்கள் விரைவான ஆனால் போலியான ஒரு மனோதத்துவ பரிட்சைக்கு உட்படுத்தப்பட்டனர். அதன்பின்னர் ஒவ்வொரு மாணவனும் அவன் ஒரு ஜுலியஸ் ஆள் என்றோ அல்லது அவன் ஓர் அகஸ்டஸ் ஆள் என்றோ கூறப்பட்டான். இந்த ஜுலியஸ் மற்றும் அகஸ்டஸ் மக்களைப் பற்றிய எந்தவிதமான குணநலன்களும் விவரமாகக் கூறப்படவில்லை. அல்லது தங்களது கூட்டத்தில் உள்ள மற்ற சிறுவர்கள் யார் என்பதும் அவர்களுக்குத் தெரியாது.

இப்படி இருக்கும்போது, அவர்கள் மிகச்சரியாக தங்களின் கற்பனையான கூட்டத்தோடு தங்களை அடையாளப்படுத்திக் கொண்டு, தான் ஒரு ஜுலியஸ் ஆளாக இருப்பதற்கோ அல்லது ஓர் அகஸ்டசின் ஆளாக இருப்பதற்கோ பெருமைப்படுவதாக நினைத்தார்கள். தங்களது கூட்டத்தில் உள்ள ஊர், பேர் தெரியாத சகோதரர்களுக்காக பொருளாதார ரீதியில் பணம் கொடுத்து உதவுகின்ற அளவுக்கு சென்று விட்டார்கள். மேலும் அடுத்த கூட்டத்தில் உள்ளவர்களுக்கு அசௌகரியத்தை உண்டாக்கவும் தயாராகி விட்டனர்.

ஒரு மனிதன் இதற்கு முன்பு ஒருபோதும் கேள்விப்படாத ஒரு கூட்டத்தைச் சார்ந்தவன் என்று வெறுமனே அவனிடம் கூறிவிட்டாலே போதும், நீங்கள் அந்த மனிதனின் நடவடிக்கைகளை நீங்கள் தீர்மானிக்கக்கூடிய அளவுக்கு மாற்றிவிட முடியும் என்று தாஜ் பெல் கூறுகிறார். இந்த பரிசோதனைகளில் கலந்து கொண்டவர்கள் தங்களின் சொந்த கூட்டத்தினரைச் சார்ந்த ஊர் பேர் தெரியாத அங்கத்தினர்களுக்கு கிட்டத்தட்ட தாமாகவே முன்வந்து உதவுவதாகவும், அதே சமயம் அடுத்த கூட்டத்தை சேர்ந்தவர்களுக்கு தனது பாதையை விட்டு விலகிச் சென்றும்கூட கெடுதலைச் செய்வதற்கு விரும்புவதாகக் கூறுகிறார். ஒரு கூட்டத்தில் உள்ளவர்கள் எந்த கொள்கை உடையவர்கள் என்றோ அல்லது அதன் தன்மைகள் என்னவாக இருக்கும் என்றோ தெரியாத போதும்கூட மக்கள் தங்களுக்கு ஒதுக்கப்பட்ட கூட்டத்தோடு தங்களை ஐக்கியப்படுத்திக் கொண்டார்கள் என்றும் கூறுகிறார்.

மக்கள் இப்படி தாங்கள் ஒரு கூட்டத்தோடு ஐக்கியமாகிக் கொள்வதன் மூலம் மக்ளிடம் நேர்மறையாக, நல்ல விஷயங்களை விரைவாக முழுமையாக அவர்களிடம் இறக்குமதி செய்துவிட முடியும் என்பதை கவனித்ததன் மூலமாக பகைமையின் ஆரம்ப இடத்தை தேடிச் செல்வதற்கான ஒரு நிலையான அடித்தளத்தை ஒருவரால் உண்டாக்க முடியும்.

ஹென்றி தாஜ் பெல்லின் இந்த பரிசோதனைகள் மிகவும் முக்கியமானவை. மக்கள் யாரையாவது சார்ந்து இருப்பதைத்தான் விரும்புகிறார்கள். ஆனால் இயேசு போன்ற ஒரு மனிதர் வரும்போது, அவர் உன்னை உனது கூட்டத்தில் இருந்து வேரோடு பிடுங்கி விடுகிறார். இயேசு வந்து உன்னை யூத சமுதாயத்திலிருந்து வெளியே எடுத்து விடுகிறார். கடந்த காலம் இல்லாத, வரலாறு இல்லாத, மரியாதை இல்லாத புதிதான ஒன்றினை அவர் ஆரம்பிக்கிறார். அவர் வெறுமனே விஷயங்களை அ, ஆவன்னாவில் இருந்து ஆரம்பிக்கிறார்.

இப்போது, இயேசுவைப் பின்பற்றி அந்த ஒருசில மக்களும் கூட கண்டிப்பாக சில ஒருங்கிணைப்போடு இருந்திருக்க

வேண்டும். அப்படி இல்லையெனில் அவர்கள் இயேசுவைப் பின்பற்றி இருக்க மாட்டார்கள் ஏனெனில் இயேசுவைப் பின்பற்றுதல் என்பதற்கு அவர்கள் பிறந்து, வளர்ந்த ஏற்கனவே அவர்கள் சார்ந்து இருந்த அந்த யூத சமுதாயத்தோடு அவர்கள் இனிமேல் ஓர் அங்கமாக இருக்க முடியாது என்பதுதான் அர்த்த மாகும். ஆனால் அவர்கள் கடவுளால் தெரிவு செய்யப்பட்ட மக்க ளாக, யூதர்களாக இருப்பதற்காக எப்போதும் பெருமைப்பட்டுக் கொண்டு இருந்தார்கள். தாங்கள் தனிச்சிறப்பு வாய்ந்த மக்கள் என்று அவர்கள் எப்போதும் நம்பிக்கொண்டு இருந்தார்கள்.

இந்த நேரத்தில் ஒரு தச்சுத் தொழிலாளியின் மகனாக, தனக்கு ஆதரவாக எந்த ஒரு கடந்த காலத்தையும் கொண்டிராத, ஒரு நாடோடியாக இயேசு வருகிறார். அப்போது அவர் ஒரு மக்கள் கூட்டத்தை சேகரிக்க ஆரம்பிக்கிறார். இந்தக் கூட்டம் மிகவும் புதியது என்பதால் மக்கள் அதைச் சார்ந்து இருப்பதற்கு கொஞ்ச காலம் பிடிக்கும். இயேசு போய்விட்ட பின்னர் தான் அது நடக்கும். ஆனால் இயேசு போனபின்பு அப்படி நடந்தால் அதில் அர்த்தம் ஏதும் இருக்காது.

இயேசு இறந்து, இருநூறு முந்நூறு ஆண்டுகளுக்குப் பிறகு கிறிஸ்தவ மதமானது ஒரு தனிச்சிறப்பு மிக்கதாக ஆரம்பித்தது. அதன்பின்னர் சில மக்கள் அதைச் சார்ந்து இருப்பதில் சந்தோஷமாக இருந்தார்கள். இப்போது பல கோடி மக்கள் கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்து இருப்பதில் சந்தோஷம் அடைகிறார்கள்.

எளிய மக்கள் சார்ந்து இருப்பதற்கே விரும்புகிறனர். இப்போது, நீ என்னிடம் வந்தால், நீ சார்ந்து இருப்பதை இழந்து விடுவாய். நீ தனிமையானவாக ஆகிவிடுவாய். மேலும், கடந்த காலம் என்பது இல்லாமல், பாரம்பரிய ஆதரவு இல்லாத யாரோ ஒருவருடன் நீ போய்க்கொண்டு இருப்பாய். இது முற்றிலும் புதிய, ஆபத்தான ஓர் இடர் நிறைந்த துணிச்சலாக இருக்கும். இது ஒரு சூதாட்டம். எனவே மக்கள் இப்படி கற்பனையான கூட்டத்தைக் கூட சார்ந்து இருகக விரும்பும்போது, மதங்களைப் பற்றி என்ன சொல்வது?

ஆர்தர் கோஸ்ட்லர் என்பவர் கூறுகிறார்:

"ஹென்றி தாஜ் பெல்லின் இந்த பரிசோதனைகள் நிறைய விஷயங்களை வெளிப்படுத்துவதாக இருப்பதை நான் கண்டு கொண்டேன். இவை கொள்கைகளின் அடிப்படையில் மட்டுமல்ல, ஆனால் தனிப்பட்ட காரணங்களுக்காகவும்கூட இதைக் கூறுகிறேன். இது எனது குழந்தைப்பருவத்தில் நடந்த, எப்போதும் புதிராகவும், என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்துவதாகவும் உள்ள நிகழ்வுகளோடு தொடர்புடையதாக உள்ளது. ஹங்கேரியில் புடாபெஸ்ட்டில் எனக்கு ஐந்து வயது இருக்கும்போது, பள்ளிக்கூடத்தில் சேர்ந்த முதல் நாள் எனது எதிர்கால வகுப்புத் தேதழர்களால் என்னிடம், "நீ ஒரு MTKயா அல்லது FTCயா?" என்று கேட்கப்பட்டது. இவை சாக்கர் விளையாடும் இரண்டு முன்னணி குழுக்களின் முதல் எழுத்துகள். இந்த குழுக்கள் இரண்டும் லீக் சாம்பியன்ஷிப் போட்டியில் மோதுகின்ற பரம எதிரிகளாக அணிகள் என்பது என்னைத்தவிர ஒவ்வொரு பள்ளி சிறுவனுக்கும் தெரியும். ஏனெனில் நான் ஒருபோதும் கால்பந்து விளையாட்டுப் போட்டிகளுக்குச் சென்றதில்லை. பார்த்ததும் கிடையாது. இப்படி அந்த விளையாட்டைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது என்று ஒத்துக்கொண்டு எனது அறியாமையை வெளிப்படுத்துவது என்பது நினைத்துப் பார்க்க முடியாதது என்பதால் நான் "ஆம் MTKவை சார்ந்தவன்" என்று பதிலளித்தேன்.

எனவே இப்படியாக அதற்கான வார்ப்படம் தயார் செய்யப்பட்டது. ஹங்கேரியில் இருந்தவரையில் எனது இளமைக் காலத்தில் மீதி நாட்களிலும் மற்றும் எனது குடும்பத்தினர் வியன்னாவிற்கு சென்றபோது கூட நான் MTK அணிக்கு விசுவாசமான ஆதரவாளராக இருந்தேன். மேலும் இரும்புத்திரையின்

ஊடேயும் கூட இன்னமும் எனது இதயமானது அவர்களுக்கு ஆதரவாக உள்ளது. அவர்களது கவர்ச்சியான நீலம் மற்றும் வெள்ளை நிற பட்டைகள் உள்ள மேல் சட்டைகள் ஒருபோதும் அவற்றின் மாயாஜாலத்தை இழந்தது கிடையாது. அதே நேரத்தில் அவர்களின் எதிரி அணியினரின் கீழ்த்தரமான பச்சை மற்றும் வெள்ளை நிற மேல்சட்டைகள் இன்னமும் எனது இரத்த ஓட்டத்தில் தடையை ஏற்படுத்துகின்றன.

ஆரம்ப காலத்திலேயே நான் இப்படி மாற்றப்பட்டது நீல நிறத்தை எனக்குப் பிடித்தமான ஒரு நிறமாக ஆக்கியதில் பெரும் பங்கு ஆற்றியதாக நான் நம்புகின்றேன். வானம் நீலநிறமாகத்தான் இருக்கிறது. அது ஓர் ஆரம்ப ஆதார நிறம். அதே நேரத்தில் பச்சை என்பது நீல நிறமானது மஞ்சள் நிறத்தோடு கலப்படம் ஆனதால் உண்டான ஒரு நிறமாக உள்ளது. என்னைப் பார்த்து நான் சிரிக்கலாம். ஆனால் உணர்ச்சி பற்றுடன் கூடிய அந்த மாயாஜால இணைப்பானது இன்னமும்கூட என்னிடம் உள்ளது. மேலும் எனது விசுவாசத்தை நீலம் வெள்ளை நிறமுடைய MTK அணியில் இருந்து பச்சை வெள்ளை நிறமுடைய FTC அணிக்கு மாற்றுவது என்பது சரியான தெய்வ நிந்தனையாக இருக்கும் என்றும் கருதுகிறேன்.

உண்மையில், நாம் நமது கூட்டணிகளை தொற்றுநோய்க் கிருமிகள் போன்று பொறுக்கி எடுக்கிறோம். அதைவிடவும் இன்னமும் மோசமான நிலை என்னவென்றால் மனித இனத்தை ஒரு வரலாற்று பேரழிவில் இருந்து அடுத்த பேரழிவிற்கு கொண்டு செல்கின்ற இந்த நோயுற்ற நிலையை இன்னமும் உணர்ந்து கொள்ளாமலேயே நாம் வாழ்நாள் முழுவதும் நடந்து கொண்டு இருக்கிறோம்.

நீ என்னிடம் வரும்போது உனது வாழ்நாள் முழுவதும் ஏற்கனவே ஒரு கூட்டத்தைச் சார்ந்து இருக்கிறாய். நீ ஓர் இந்து, ஒரு

முகமதியன், ஒரு கிறிஸ்தவன், ஒரு யூதனாக இருந்து வந்திருக்கிறாய். மேலும் இந்த குழுக்கள் கால்பந்து விளையாடும் குழுக்கள் போன்று அல்லாமல் ஆரம்பத்தில் இருந்தே உனக்கு கொள்கைகளை நிரப்பி, உன்னைக் கட்டுத்திட்டம் செய்வதற்கு ஆரம்பிக்கின்றன. உனக்குள் மாபெரும் கட்டுத்திட்டம் உள்ளது.

எனவே, இயேசு அல்லது புத்தர் போன்ற ஒரு மனிதர் உன்னிடம் இருக்கும்போது, உனது கட்டுத்திட்டங்கள் அவருக்கு எதிராகச் செல்கின்றன. அவர் கட்டுத்திட்டங்கள் இல்லாத ஒரு மனதை உருவாக்க விரும்புகிறார். அதுதான் பிரச்சினை. அவர் உனது நோயின் மீது உனக்குள்ள பற்றுதல்களை விட்டொழிக்க விரும்புகின்றார். அதுதான் பிரச்சினை. நீ உனது நோயுடன் அதிக அளவு பற்றுக்கொண்டு விட்டால், உன்னை யாராவது ஆரோக்கியமானவனாகவும், முழுமையானவனாகவும் பார்க்க விரும்பினால் அவர்கள் உனக்கு விரோதிகள் போன்றுதான் தெரியும். இந்த கருத்தினைப் பார்.

த்வாபா என்கிற மற்றொரு புதிய சந்நியாசி எனக்கு எழுதியுள்ள கடிதத்தில், "இங்கு நான் நன்றாக இருக்கிறேன். ஆனால் நான்வெளியே சென்ற பின்னர் அங்கு கிறிஸ்தவ மதம் பற்றிய துண்டு பிரசுரங்களையும், இயேசுவைப் பற்றி துண்டு பிரசுரங்களையும் என்னிடம் கொடுத்து என்னை கிறிஸ்துவுக்கு எதிரானவன் என்று கூறுகின்றனர். எனவே நான் என்ன செய்வது?" என்று கேட்கிறார். இது இயற்கையானதுதான். கிறிஸ்தவர்கள பயப்படுகிறார்கள். ஏனெனில் அநேக கிறிஸ்தவர்கள் என்னிடம் வந்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களின் பயம் இயற்கை யானது. அவர்களுக்கு அதில் ஆதாயம் உள்ளது. இந்துக்கள் பயப்படுகின்றனர், சமணர்கள் பயப்படுகின்றனர், அவர்களின் பயம் புரிந்து கொள்ளக்கூடியது. எந்த ஒரு கூட்டத்தில் இருந்தும் ஒருவரை வெளியே எடுப்பது அந்தக் கூட்டத்தை பாதிக்கும். ஏனெனில் அவர்களின் எண்ணிக்கை குறைக்கப்படுகிறது. மேலும் எண்ணிக்கை என்றால் பலம் என்று அர்த்தம். இந்த உலகில் உனது கூட்டத்திற்கு எந்த அளவுக்கு அதிகமாக மக்கள் சார்ந்து இருக்கிறார்களோ அந்த அளவுக்கு நீங்கள் அதிக பலம்

மிக்கவராக இருக்கிறீர்கள். மதம் என்கிற பெயரில் அதிக அதிகாரஅரசியல் நடந்துகொண்டு இருக்கிறது.

எனவே அவர்கள் நான் கிறிஸ்துவுக்கு எதிரானவன் என்று உன்னிடம் கூறுவார்கள். இயேசுவைப் பின்பற்றி வந்தவர்களை, இயேசு மோசஸிற்கு எதிரானவர் என்று இந்த மனிதர்கள் தான் கூறினார்கள். புத்தரைப் பின்பற்றி வந்தவர்களிடம், புத்தர் வேதங்களுக்கு எதிரானவர் என்று கூறியதும் இவர்களேதான். இது மிகவும் பழைய பழைய கதை; இது ஒன்றும் புதிதானது அல்ல.

மக்கள் கூட்டத்தால் உண்மையை ஏற்றுக்கொள்ள முடியாது. ஏனெனில் மக்கள் கூட்டம் பொய்களில் வாழ்கிறது. மேலும் அந்தப் பொய்களோடு அவர்கள் நீண்ட நெடுங்காலம் வாழ்ந்து விட்டபடியால், அந்த பொய்கள் அவர்களுக்கு பொய்யாகவே தெரியவில்லை. அவர்கள் உண்மையிலேயே அதை நம்புகின்றனர். எனவே நீ அவர்களின் நம்பிக்கையில் இருந்து வேறுபட்டு ஏதாவது ஒன்றைக் கூறினால் நீ அவர்களிடம் குழப்பத்தை உருவாக்குகிறாய். ஆனால் யாரும் குழப்பம் அடைய விரும்புவதில்லை.

நீ அவர்களுக்குள் நடுக்கத்தை உருவாக்குகிறாய். ஒரு சந்தேகத்தை ஏற்படுத்துகிறாய். ஆனால் யாரும் சந்தேகத்தில் இருப்பதற்கு விரும்புவதில்லை. சந்தேகம் அங்கு இருக்கிறது. அவர்கள் உண்மையை அறிந்திருந்தால் அங்கு பயம் இருக்காது. அவர்கள் உண்மையை அறிந்து கொள்ளவில்லை. அவர்கள் நம்ப மட்டுமே செய்துள்ளனர். அவர்களின் ஆன்மாவின் அடி ஆழத்தில் சந்தேகம் உள்ளது. எனவே அவர்களின் சந்தேகத்திற்கு எதிராக நீ எதையாவது கூறும்போது அவர்களின் சந்தேகம் மேலே எழுந்து வர ஆரம்பிக்கிறது. ஆனால் அவர்கள் சந்தேகத்தில் இருப்பதற்கு பயப்படுகின்றனர். ஒவ்வொருவரும் நிச்சயத்துடன் இருப்பதை விரும்புகின்றனர். இது ஏன்? ஏனெனில் நிச்சயத் தன்மையானது பாதுகாப்பைக் கொடுக்கிறது. நிச்சயத்தன்மை என்பது உனக்கு நம்பிக்கையைக் கொடுக்கிறது. சந்தேகம் உன்னை நடுங்கச் செய்கிறது.

ஆனால் நான் உனக்குள் அதிக சந்தேகங்களை உருவாக்கப் போகிறேன். ஏனெனில் எனது பார்வையில், சந்தேகமானது உனது பொய்யான நிச்சயங்களை அழிக்காத வரையில் உண்மையான நிச்சயங்களை அடைவதற்காதன சாத்தியங்கள் கிடையாது. உண்மையான நிச்சயத்தன்மை என்பதுவெறும் நம்பிக்கையினால் வருவதில்லை. அது அனுபவத்தினால் வருகிறது. அது உனது சொந்த அறிந்து கொள்ளலாய் வருகிறது.

நான் கிறிஸ்துவனுக்கு எதிரானவன் அல்ல. நிச்சயமாக நான் கிறிஸ்துவ மதத்திற்கு எதிரானவன். நான் புத்தருக்கு எதிரானவன் அல்ல, நான் புத்த மதத்திற்கு எதிரானவன். நான் கிருஷ்ணருக்கு எதிரானவன் அல்ல. ஆனால் நான் இந்து மதத்திற்கு எதிரானவன். நான் இங்கு என்னவெல்லாம் பேசிக்கொண்டும், செய்து கொண்டும் இருக்கிறேனோ, அவை எல்லாம் இயேசுவின் வேலை, புத்தர் மற்றும் கிருஷ்ணரின் வேலையாகும். ஆனால் நிச்சயமாக நான் அதே மொழியில் பேசவில்லை. அதே மொழியில் பேசுவது எப்படி சாத்தியமாகும்? உன்னிடம் நான் எப்படி அராபிக் மொழி பேச முடியும்? இயேசு பயன்படுத்திய உருவகங்களை நான் எப்படி பயன்படுத்த முடியும்? அந்த உருவகங்கள் காலத்திற்கு பொருந்தாதவை. அவை இந்த நூற்றாண்டு சார்ந்தவை அல்ல.

நான் அதிக அறிவியல் பூர்வமாக இருந்தாக வேண்டும். நான் அதிக தர்க்க அறிவுடன் பேச வேண்டும். தர்க்க அறிவுக்கு அப்பால் நீ போக வேண்டும் என்று நான் விரும்பினாலும் கூட, முதலில் நான் உன்னை தர்க்க அறிவின் கடைசி முனை வரை உன்னை கொண்டு சென்றாக வேண்டும். அதன்பிறகு மட்டுமே உன்னால் தர்க்க அறிவு இல்லாத ஒன்றிற்குள் குதித்துவிட முடியும்.

புத்தர் பேசியது போன்று நான் உன்னிடம் பேச முடியாது. அவர் வேறுபட்ட பார்வையாளர்களிடம் பேசினார். எனது வார்த்தைகள் வித்தியாசமாக இருக்கும். எனது அணுகுமுறை வித்தியாசமாக இருக்கும். எனது செயல்முறைகள் வித்தியாசமாக இருக்கும். ஆனால் நான் சுட்டிக் காட்டுகின்ற நிலவு அதே நிலவுதான். எனது விரல்கள் வித்தியாசமானவை. கண்டிப்பாக அது அப்படித்தான் இருந்தாக வேண்டும். எனது விரல்களை நீ

இயேசுவின் விரல்களோடு ஒப்பிட்டால் அவை வேறுபட்டுத்தான் தெரியும். ஆனால், நாங்கள் சுட்டிக்காட்டுகின்ற நிலவு அதே நிலவுதான். எனவே நீ நிலவினைப் பார். மேலும் விரல்களைப் பற்றி அதிகம் கவலைப்படாதே.

***இரண்டாம் கேள்வி:***

***ஓஷோ,***

> *குறைந்தபட்சம் ஏழு வருடங்கள் நான் ஒரு சந்நியாசி ஆக வேண்டும் என்று நினைத்துக்கொண்டு இருக்கிறேன். என்னால் ஏன் சந்நியாசி ஆக முடியவில்லை?*

மரணம் குறித்து நீ விழிப்புணர்வு கொள்ளவில்லை போன்று தெரிகிறது. நீ மரணம் குறித்து விழிப்புணர்வு அடைந்தால் உன்னால் இதுபோன்று ஒத்திப்போட முடியாது. மேலும் இப்போது, நீ இப்படி ஏழு வருடங்களாக ஒத்திப் போட்டுக்கொண்டு வந்துவிட்டதால், ஒத்திப்போடுதல் என்பது உனக்கு ஒரு பழக்கமாக ஆகிவிட்டது. நீ அதை நீண்ட நாட்கள் பயிற்சி செய்துவிட்டாய் ஒத்திப்போடுவதன் மீது நீ அதிகம் பற்றுதல் கொண்டு விட்டாய்.

ஒத்திப்போடுதல் ஒரு நல்ல உணர்வைக் கொடுக்கிறது. முதலாவதாக, அது ஆபத்தானது அல்ல; நீ மாற்றம் அடைய வேண்டிய அவசியம் கிடையாது. எப்போதுமே நீ நாளைக்குத்தான் மாற்றம் அடையப் போகிறாய். ஆனால் நாளை என்பது ஒருபோதும் வராது. இதற்கிடையில் நீ எப்படி இருக்கிறாயோ அப்படியே இருக்க முடியும். நாளை என்பது ஒரு பாதுகாப்பாக ஆகிவிடுகிறது. "நாளைக்கு நான் ஒரு சந்நியாசி ஆவேன். எனவே இன்று நான் என்னவாக இருக்கிறேனோ, அதுவாகவே நான் இருந்தாக வேண்டும். ஒரே ஒருநாள் மட்டுமே உள்ளது. மேலும் நான் சந்நியாசியாக ஆகிவிடுவேன்" ஆனால் நாளை வரும் போது, அது எப்போதும் இன்று என்பதாகத்தான் வருகிறது.

இப்போது, நீ ஏழு வருடங்களாக ஒத்திப்போடுவதை நீ பயிற்சி செய்து வந்திருக்கிறாய். இது ஒரு வகையான அடிமைப் பழக்கம் ஆகிவிட்டது. மரணம் என்பது எந்த நொடிப்பொழுதும் நிகழலாம் என்பதை நினைவு கொள். மரணம் குறித்து விழிப்புணர்வு

உள்ளவர்கள் ஒத்திப்போடுவதை கைவிட்டு விடுகிறார்கள். ஏனெனில் நாளை என்பது நிச்சயமானது அல்ல. இந்த நொடிப் பொழுது மட்டுமே நிச்சயமானது. உனது கையில் ஏற்கெனவே இருக்கின்ற இந்த நொடிப்பொழுதுதான் நிச்சயமானது. அடுத்த நொடிப்பொழுதும்கூட நிச்சயமற்றது.

ஆகவே ஏதாவது ஒன்றில் ஏதாவது மதிப்பு மிக்கது இருந்தால் அதைச் செய்துவிடு. மேலும் அதை இப்போதே செய்துவிடு. இப்போது இல்லை என்றால் ஒருபோதும் இல்லை என்பதை நினைவில் கொள். நீ அதைச் செய்வதற்கு விரும்பவில்லை என்றால், அதைச் செய்யும்படி உன்னிடம் கூறுவது யார்? அதைப் பற்றி மறந்து விடு. ஆனால் தயவு செய்து ஒத்திப்போடாதே. ஒன்று, "நான் சந்நியாசம் எடுக்கப் போவதில்லை" என்று முடிவெடு. மேலும் அது முற்றிலும் நல்லது. அப்படி செய்தால் அதில் முடிவெடுத்தல் என்பதாவது இருக்கும். உனது கவலை கைவிடப்படும். "நான் சந்நியாசம் எடுக்கப் போவதில்லை" என்று முடிவெடு. மேலும் அதோடு விட்டுவிடு; அல்லது சந்நியாசத்தில குதித்து அதை முடித்து விடு.

ஓர் ஆண் டினோசரும், ஒரு பெண் டினோசரும் காதலித்து வந்தன. பத்து மில்லியன் ஆண்டுகளாக அவை சுற்றித்திரிந்து, பேசிப்பழகி, ஒருவர் மற்றவரின் கண்களைப் பார்த்து வந்தனர். அதன்பின்னர் சிலசமயம் அவை கைகோர்த்துச் செல்லும். இது இன்னும் இருபது மில்லியன் ஆண்டுகளுக்கும் அதிகமாகத் தொடர்ந்தது.

அடுத்த பதினைந்து மில்லியன் ஆண்டுகளுக்கு அவை இரண்டும் ஒன்றுக்கொன்று முத்தம் கொடுத்து எல்லா இடங்களிலும் தொட்டுப் பார்க்கும். அதன்பின்னர் இறுதியாக ஆண், பெண்ணிடம், "அன்பே நாம் அநேக ஆண்டுகள் ஒன்றாக இருந்து விட்டோம். நீ அதைப்பற்றி எப்படி உணர்கிறாய். உனக்குத் தெரியுமா, நாம் உடல் இன்பம் அனுபவிப்பதற்கான நேரம் இதுதான் என்று நான் நினைக்கிறேன்" என்றது.

அதற்கு பெண் டினோசர், "அதைத்தான் நானும் விரும்புகிறேன். ஆனால் என்னால் முடியாது. இப்போது அடுத்த

எழுபது மில்லியன் ஆண்டுகளுக்கு நான் மாதவிலக்கு காலத்தில் இருக்கிறேன்" என்று பதிலளித்தது.

நீ ஒன்றும் டினோசர் அல்ல, காலம் மிகவும் குறுகியது. வாழ்க்கை மிகவும் சிறியது. எழுபது வருட வாழ்க்கையில் கிட்டத்தட்ட முப்பத்துஐந்து ஆண்டுகள் தூக்கத்தில் இழக்கப்பட்டு விடுகின்றன. அதன்பின்னர் சாப்பிடுதல், குடித்தல், ஆடைகள் அணிதல், அலுவலகம் செல்லுதல், வீட்டிற்கு வருதல், அதன் பின்னர் உனது சாப்பாட்டிற்கு சம்பாதித்தல், உனது நண்பர்கள், கிளப்கள், ஹோட்டல்கள், திரைப்படங்கள், தொலைக்காட்சி ஆகியவற்றைப் பார்த்தல் என்று பட்டியல் நீண்டுகொண்டே போகிறது. வெறுமனே கணக்கிட்டுப் பார்த்தால் நீ வாழ்வதற்கு ஒரு வருடம் கூட மிச்சம் இருக்காது. எழுபது வருடகாலத்தில் தியானம் செய்வதற்கு, ஆன்மிகத்தைத் தேடுவதற்கு, நீ இருப்பதற்கு ஒரு வருடத்தைக்கூட உன்னால் கண்டுகொள்ள முடியாது.

ஏழு வருடங்கள் சந்நியாசம் பற்றி நினைத்துக் கொண்டு இருந்தது ஏற்கனவே அதிக காலம் ஆகிவிட்டது. ஒன்று சந்நியாசம் எடு அல்லது அதைப்பற்றி மறந்துவிடு. ஆனால் முடிவெடுப்ப வனாக இரு. இவ்வளவு நீண்ட காலம் நீ முடிவு எடுக்காமல் இருப்பது ஆபத்தானது. ஏனெனில் அதன்பின்னர் இந்த முடிவெடுக்க முடியாமல் இருக்கும் நிலை உனது இயற்கை குணமாக ஆகிவிடும்.

***மூன்றாம் கேள்வி:***

***ஓஷோ,***

> ***நான் ஒருபோதும் மெய்ஞ்ஞானம் அடையப் போவதில்லை என்பதை இறுதியாக உணர்ந்து கொண்டேன். ஆனால் இறந்து போவதற்கும் எந்த ஒரு வழியும் இல்லை. என்ன செய்வது?***

இது மிகப்பெரிய உணர்தல். யாரும் மெய்ஞ்ஞானம் அடையப் போவதில்லை. ஏனெனில் மெய்ஞ்ஞானம் என்பது நடக்கப் போகின்ற ஏதோ ஒன்று அல்ல.அது ஏற்கனவே நடந்து விட்டது. நீ மெய்ஞ்ஞானம் அடைந்தவனாக இருக்கிறாய். நீ

வெறுமனே உனக்குள் உற்றுப்பார்த்து அதைக் கண்டுகொள்ள வேண்டும். அது ஏற்கனவே உள்ள ஒரு விஷயமாகும்.

பொழுது விடிந்து பொழுது போகும்வரை, வருடம் தொடங்கி வருடம் முடியும் வரை அந்த ஒட்டுமொத்த கருத்தைத் தான் நான் உனக்குப் போதித்துக் கொண்டு இருக்கிறேன். என்றோ ஒருநாள் நடக்கின்ற ஒரு சாதனை போன்றது அல்ல மெய்ஞ்ஞானம். அது ஏற்கனவே நடந்து விட்டது. நீ மெய்ஞ்ஞானம் அடைந்தவன், மெய்ஞ்ஞானம் அடையாதவர் என்று இங்கு யாரும் இல்லை.

ஆனால் மனிதனுக்கு எதையும் நினைப்பதற்கோ அல்லது மறப்பதற்கோ உண்டான திறமை இருக்கிறது. எனவே நீ அதை மறந்து விட்டாய். அதை மறந்து விடவேண்டும் என்று நீ முடிவெடுத்து விட்டாய். நீ அதை உனது பின்புறத்தில் வைத்துக் கொண்டு இருக்கிறாய். அது அங்குதான் இருக்கிறது; பல மில்லியன் பிறவிகளுக்கு நீ அதை உனது பின்புறத்தில் வைத்திருக்க முடியும். எனவே அதுஅங்கு உள்ளது. மேலும் அது அங்கேயே தான் இருக்கும். ஆனால் எந்த நொடிப்பொழுதில் நீ நேராக நூற்றி எண்பது டிகிரி கோண அளவு திரும்பிப் பார்க்க முடிவு எடுக்கிறாயோ அப்போது நீயே ஆச்சரியப்படுவாய். உனக்காக அது எப்போதும் காத்துக்கொண்டு, நீ வீட்டிற்கு வருவாய் என்று காத்துக்கொண்டு இருக்கிறது.

நீ மெய்ஞ்ஞானம் அடையப்போவது கிடையாது. ஏனெனில் நீ மெய்ஞ்ஞானம் அடைந்தவன். உன்னை மெய்ஞ்ஞானம் அடையச் செய்வதற்காக நான் இங்கு இருக்கவில்லை. ஆனால் வெறுமனே உனக்கு ஞாபகப்படுத்தவே நான் இங்கு இருக்கிறேன். வெறுமனே உனக்கு ஞாபகப்படுத்துவதுதான் ஒரு குருவின் வேலை. உனக்கு விழிப்பு வரும்படி உன்னை உலுக்கி எழுப்புவதுதான் ஒரு குருவின் வேலை.

கடவுள் தன்மை என்பது உனது இயற்கை இயல்பு. உனக்கு தேவைப்படுவது எல்லாம், உனக்கு எப்போதுமே தேவைப்படுகின்றவை எல்லாம். ஏற்கனவே கொடுக்கப்பட்டு உள்ளன. அது ஏற்கனவே அளிக்கப்பட்டு உள்ளது. ஆனால் நீ உனக்குள்

தேடிப்பார்க்கவில்லை. நீ உனக்குள் உள்ள புதையல்களைத் திறந்து பார்க்கவில்லை. ஆனால் நீ பூமி முழுவதும் தேடிக்கொண்டே செல்கிறாய். நீ தேடிக்கொண்டே போகவேண்டியதுதான். உன்னால் அதைக் கண்டுகொள்ள முடியாது. ஏனெனில் அது கண்டு பிடிக்கப்பட வேண்டிய ஒன்று அல்ல. அது நீ ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டிய ஒன்றாகும். இரண்டிற்கும் உள்ள வித்தியாசத்தைப் பார்; வேறுபாட்டைப் பார். அது மிகவும் பரந்தது. இந்த வித்தியாசம் தான் மாபெரும் வேறுபாட்டை உண்டாக்குகிறது.

இது,நீ உனது சட்டைப் பையில் பணத்தை வைத்துவிட்டு மறந்துவிட்டு அதன்பின்னர் ஒருநாள் திடீரென்று அதை ஞாபகப் படுத்திப் பார்க்கும் போதும் அது அங்கே இருக்கிறது என்பதைக் கண்டுகொள்வது போன்றதாகும். ஒருநாள் வேறு எதையோ தேடும்போதும் கூட திடீரென்று நீ அதைக் கண்டு கொள்ளலாம்.

மெய்ஞ்ஞானம் என்பது எதிர்காலத்தில் உள்ள ஒன்று அல்ல, அது நீ நிகழ்காலத்தில் இருக்கும் நிலை. இப்போது அதுகுறித்து விழிப்புணர்வு கொள். இதுதான் அது.

*நான்காம் கேள்வி:*

*ஓஷோ,*

> *"பெண்களை பொது உடைமையாக்குவதை வலியுறுத்தி ஓஷோ முக்கியத்துவம் கொடுக்கிறார்" என்று சன்டே பத்திரிகைக்கு கொடுத்த பேட்டி ஒன்றில் மொரார்ஜி தேசாய் அவர்கள் கூறி இருக்கிறார்.*
>
> *"விபச்சாரிகள் பொது உடைமை ஆக்கப்பட்டதுபோல, எல்லாப் பெண்ணும் பொது உடைமை ஆக்கப்பட வேண்டும்" என்று ஓஷோ விரும்புவதாக அவர் கூறி இருக்கிறார். அவர் மேலும் கூறி இருப்பதாவது, "ஓஷோ இதைவிட இன்னும் ஒரு படி மேலே சென்று இங்கு திருமணம் என்பதற்கான அவசியமே இல்லை என்கிறார். ஓஷோ சுதந்திரமான பாலியல் உறவை ஆதரித்து வாதாடுகிறார்" என்பதாகும். இதுகுறித்து நீங்கள் என்ன கூறுகிறீர்கள் ஓஷோ?*

மொரார்ஜி தேசாய் ஓர் ஆண் ஆதிக்க வெறி பிடித்தவர். பெண்கள் சொத்துகள் அல்ல. ஆகவே அவர்கள் எப்படி பொதுச் சொத்தாகவோ அல்லது தனிப்பட்ட சொத்தாகவோ இருக்க முடியும்? ஆண் என்னவாக இருக்கிறான். பொதுச் சொத்தா அல்லது தனிச்சொத்தா? ஆண் மட்டும் பொதுச் சொத்தாகவோ அல்லது தனிப்பட்ட சொத்தாகவோ இருக்க வேண்டிய அவசியம் இல்லை என்னும்போது, பெண் மட்டும் ஏன் பொதுச் சொத்தாகவோ அல்லது தனிப்பட்ட ஒருவரின் சொத்தாகவோ இருக்க வேண்டும்? இந்த ஒட்டுமொத்த கருத்தும் ஆண் ஆதிக்க வெறியின் நோக்கங்கள், கடந்த கால மனிதனிடம் அழுகி நாற்றமடிக்கின்ற எல்லாவற்றையும் மொரார்ஜி தேசாய் பிரதிநிதித்துவம் செய்கிறார். இந்த இரண்டு நோக்கங்களும் தான் ஆண்கள் பெண்களைப் பற்றி எடுத்த நோக்கங்களாக இருக்கின்றன; இரண்டுமே தவறானவை.

கார்ல் மார்க்ஸ் மற்றும் எங்கல்ஸ் ஆகிய இருவரும் இதுகுறித்து கொஞ்சம் அகநோக்கு பெற்றிருக்கின்றனர். பொருள்கள் குறித்து சொந்தம் கொண்டாடுகின்ற அதே நேரத்தில்தான் பெண்களையும் சொந்தமாக்கும் செயல் எழுகிறது என்று அவர்கள் கூறினார்கள். கணவன் மனைவி என்னும் உறவு தனிப்பட்ட சொத்து என்பதால் வந்த ஓர் உப உறவு. அதனால்தான் மார்க்ஸ் மற்றும் எங்கல்ஸ் பெண்களை பொதுவுடைமை ஆக்குவதற்கு ஆதரவாக இருந்தனர். அது ஒரு முட்டாள்தனத்தில் இருந்து மற்றொரு முட்டாள்தனத்திற்குப் போவதாகும். ஆனால் அடிப்படை எண்ணம் ஒரே மாதிரியானதுதான். அதாவது பெண் என்பவர் ஒரு சொத்து. ஒன்று அவள் ஒரு குறிப்பிட்ட மனிதனுக்கு அவளது வாழ்நாள் முழுவதும் சொந்தமாக இருக்கிறாள். அப்போது அவள் ஒரு மனைவியாக இருக்கிறாள். அல்லது ஒரு ஆணால் ஒருநாள் இரவு மட்டும் சொந்தமாக்கிக் கொள்ளப் படுகிறாள். அப்போது அவள் ஒரு விலைமாதாக இருக்கிறாள்.

மனைவிக்கும் விலைமாதுவுக்கும் இடையே உள்ள வேறுபாடு என்ன? ஒன்றுதற்காலிகமான ஏற்பாடு. அடுத்தது கொஞ்சம் அதிக நிரந்தரமானது. திருமணம் என்பது நிரந்தரமான வகையிலான விபச்சாரம். அடியாழத்தில் அது வேறுபட்டது அல்ல.

அதனால்தான் திருமணமும், விபச்சாரமும் ஒன்று சேர்ந்து இருந்துள்ளது.

நீ இதற்குள் சென்று பார்த்தால் திருமணம்தான் விபச்சாரத்தை உருவாக்கி உள்ளது. எனவே திருமணம் என்பது மறையாத வரையில் இந்த உலகில் இருந்து விபச்சாரம் என்பது ஒருபோதும் மறையாது; அது திருமணத்தின் நிழல். உண்மையில் விலை மாதுக்கள் திருமணத்தைக் காப்பாற்றிக் கொண்டிருந்தனர். ஆண் எப்போதாவது ஒருவித வெறியில் செல்வதற்கு அது ஒரு பாது காப்பான ஏற்பாடு. ஒரு மாற்றத்திற்காக, அடுத்த பெண்ணிடம், ஒரு விலைமாதுவிடம் சென்று அவனது திருமணத்தையும் அதன் நிரந்தரத்தன்மையையும் காப்பாற்றி வந்தான்.

பழங்காலத்தில் அப்படித்தான் செய்யப்பட்டு வந்தது. உன்னையும், உனது திருமணத்தையும் பாதுகாப்பதற்கு விலைமாது இருந்தாள். எனவே உனது திருமணத்தில் சிக்கல் இருந்தால் நீ எப்போதும் ஒரு விலைமாதுவிடம் செல்ல முடியும். உனது சொந்த மனைவியிடம் உனக்கு சலிப்பு ஏற்படும்போது, அவளோடு நீ களைப்படைந்து விடும்போது, வெறுமனே புத்துணர்ச்சி பெறுவதற்காக நீ ஒரு விலைமாதுவிடம் போக முடியும்; அப்போது உனது சொந்த மனைவியிடம் மீண்டும் விஷயங்கள் சரியாக நடக்க ஆரம்பித்துவிடும். விலைமாது என்பவள் ஒருவிதமான விடுமுறை தினம் போன்று இருந்தாள்.

விபச்சாரம் என்பது திருமணத்திற்கு எதிரானது என்று மக்கள் நினைக்கிறார்கள். அவர்கள் முற்றிலும் தவறாக நினைக்கிறார்கள். விபச்சாரம் என்பது நாணயத்தின் மறுபக்கம். ஒருபக்கம் அது திருமணம் என்பதாக உள்ளது. மறுபக்கம் அது விபச்சாரமாக உள்ளது. அதனால்தான் குறைந்தது ஐயாயிரம் ஆண்டுகளாக திருமணம் என்பது இங்கு இருக்கிறது. ஆனாலும்கூட மக்களால் இன்னமும் இந்த விபச்சாரத்தை ஒழிக்க முடியவில்லை. அவர்களால் முடியாது. அதில் ஒரு தர்க்கரீதியான உறவு உள்ளது. அவை இரண்டும் ஒன்றை ஒன்று சார்ந்து இருப்பவை. விபச்சாரம் என்பது வெறுமனே நின்று போய்விட்டால், திருமணங்கள் முறிந்து போக ஆரம்பித்து விடும். விபச்சாரம் என்பது கோந்து போன்றது.

விலைமாதானவள் நீ உனது மனைவியுடன் சலிபப்படையாமல் இருப்பதற்கு உனக்கு உதவுகின்றாள். ஆனால் மனைவி, விலைமாது ஆகிய இருவரும் சொத்து, ஒரு போகப்பொருள் என்னும் கருத்தை அடிப்படையாகக் கொண்டது மட்டுமே யாகும்.

சீனாவில் பல நூற்றாண்டுகளாக ஓர் ஆண் அவனது மனைவியை கொன்றுவிட்டால், அது ஒரு கொலை என்று நினைக்கப்படாத ஒரு கட்டம் இருந்தது. நீதிமன்றம் அவனைத் தண்டிக்க முடியாது. ஏனெனில் பெண் என்பவர் அவனது சொத்தாக இருந்தாள். நீ உனது நாற்காலியை உடைப்பதற்கு உனக்கு உரிமை உள்ளது. அல்லது நீ உனது வீட்டை இடித்துத்தள்ள விரும்பினால், அதில் வேறு யாரும் குறுக்கிடுவதற்கு வேலை இல்லை.

பல நூற்றாண்டுகளாக பெண் ஒரு போகப்பொருளாக, ஒரு சொத்தாக எண்ணப்பட்டாள். இந்தியாவில் அதற்கான வார்த்தைகள் கூட இருக்கின்றன. அதாவது பெண் என்பவள் நாரி சம்பந்தி, பெண் சொத்து என்று அறிந்து கொள்ளப்பட்டாள். அந்த சிறுமிக்குத் திருமணம் ஆகும்போது அவளின் தந்தை அந்தக் குழந்தையைத் தானமாகக் கொடுக்கும்படி அதாவது கன்யாதானம் என்று கூறப்பட்டது. பெண் ஒரு பொருள் போன்று நடத்தப்பட்டு வந்திருக்கிறதா. நான் இதற்கு எதிராக இருக்கிறேன்.

பெண்களை நான் பொதுவுடைமை ஆக்க விரும்புவதாக மொரார்ஜி தேசாயிடம் யார் சொன்னது? அது அவரது அனுமானமாக இருக்க வேண்டும். நான் ஒருபோதும் அப்படிச் சொல்லவில்லை. பெண்களை பொதுவுடைமை ஆக்கவேண்டிய அவசியமும் கிடையாது. ஏனெனில் அப்படிச் செய்வதால்கூட மீண்டும் பெண்ணை மனிதாபிமானமற்ற வழியில் நடத்துவதாகும்.

அதுதான் எங்கல்ஸ் மற்றும் மார்க்ஸின் எண்ணமாக இருந்தது. ஏனெனில், அவர்கள் கிளர்ச்சியாளர்களாக இருந்தனர். அவர்கள் தனி உடைமைக்கு எதிராக இருந்தனர். ஆகவே தொழிற்சாலைகள், நாட்டுடைமை, பொதுவுடைமை ஆக்கப்பட்டு மாநிலத்திற்கு

சொந்தமானதாக ஆக்கப்படுவதைப் போன்று தனிப்பட்ட உடைமைகள் எல்லாம், இந்த சமுதாயத்திற்கு சொந்தமானதாக ஆக்கப்பட வேண்டும் என்றனர். பெண்கள் சமுதாயத்தற்கு செந்தமானவர்களாக இருக்க வேண்டும் என்ற திட்டம் அவர்களிடம் இருந்தது. மக்கள் ஒவ்வொருவரின் உடைமைகளாக இருக்கின்ற ஒவ்வொன்றும் அந்த மாநிலத்திற்கு அல்லது சமுதாயத்திற்கு சொந்தமானதாக இருக்க வேண்டும் என்று அவர்கள் நினைத்தனர்.

நான் ஒரு கம்யூனிஸவாதி அல்ல, நான் கம்யூனிசத்திற்கு எதிரானவன். பெண் ஒரு பொருள் அல்ல, பெண் ஒரு மனித உயிர் என்பதுதான் எனது ஒட்டுமொத்த அணுகுமுறையாகும். யாரும் யாரையும் தனது சொந்தமாக்கிக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. கணவன் மனைவியை தனது சொந்தமாக்கிக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. அல்லது மனைவியும் கணவனைத் தனது சொந்தமாக்கிக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. சொந்தமாக்கிக் கொள்ளுதல் என்கிற ஒட்டுமொத்த எண்ணமும் அசிங்கமானது. வன்முறையானது தரம் தாழ்த்துவது. நான் இதை ஒருபோதும் சொன்னதில்லை.

ஆனால் என்னைப்பற்றி ஆயிரத்தோரு வதந்திகள் உள்ளன; நான் என்ன சொல்கிறேன், இங்கு நான் என்ன செய்கிறேன் என்று ஏகப்பட்ட வதந்திகள் உள்ளன. இது உண்மையில் விநோத மானதாக தெரிகிறது. வதந்தியைப் பரப்புகின்ற இந்த மக்கள் இங்கு என்ன நடக்கிறது என்பதைப் பார்ப்பதற்கு ஒருபோதும் இங்கு வருவதில்லை. அவர்கள் வதந்திகளை நம்பிக்கொண்டே செல்கின்றனர்.

முதல் விஷயம்: பெண் என்பவள் ஆணிலிருந்து வேறு பட்டவள். ஆனால் சமமானவள். அவளுக்கு சம உரிமைகள் உள்ளது. வேறுபாடு உள்ளது. ஆனால் அந்த வேறுபாடு அழகானது. மேலும் அந்தவேறுபாடானது கண்டிப்பாக அப்படியே பராமரிக்கப்பட வேண்டும்.

இப்போது. மேலை நாடுகளில் இந்த வேறுபாட்டை அழிப்பதற்கான மனப்பாங்கு இருக்கிறது. மேலும் மனதில்

ஏதாவது ஒன்று நிகழ ஆரம்பிக்கும் போது, அது உடனடியாக உடலைப் பாதிக்கிறது. மேலை நாட்டுப் பெண்கள் அதிக பெண் தன்மையை இழந்துகொண்டு இருக்கிறார்கள். அந்த எண்ணம், குறிப்பாக இந்தப் பெண் விடுதலை இயக்கங்களின் எண்ணமானது இந்த வேறுபாடுகளை அழிப்பதிலேயே இருக்கிறது. அதன்பிறகு மட்டுமே அவர்கள் சமமானவர்களாக இருக்க முடியும் என்று நினைக்கின்றனர். அது முட்டாள்தனமானது.

நீங்கள் வேறுபட்டு இருந்து கொண்டே சமமானவர்களாகவும் இருக்க முடியும். தாமரையில் இருந்து ரோஜா வேறுபட்டு இருக்கிறது. ஆனால் சூரிய ஒளியும், மழையில், காற்றில் அவை இருப்பதற்கு அவை இரண்டிற்கும் சம உரிமை உள்ளது. அவை வேறுபட்டுதான் உள்ளன. ஆனால் அவற்றின் வேறுபாடு அழகானது. அது வாழ்க்கையைச் செழுமை ஆக்குகிறது. அது பல வகைகளைக் கொடுக்கிறது.

ஆணும் பெண்ணும் வித்தியாசமானவர்கள்.மேலும் கண்டிப்பாக அவர்கள் வேறுபட்டுதான் இருந்தாக வேண்டும். ஏனெனில் அதுதான் அவர்கள் ஒருவரை ஒருவர் கவர்ந்து இருப்பதற்கான ஒட்டுமொத்த காரணமாகும். அவர்கள் அதிகம் ஒரே மாதிரி ஆகிவிட்டால் அவர்கள் கவர்ச்சியை இழந்து விடுகிறார்கள். கண்டிப்பாக அவர்கள் நேர் எதிரானவர்களாக இருந்தாக வேண்டும். அவர்கள் எவ்வளவு சாத்தியப்படுமோ அவ்வளவு தூரம் விலகி இருக்க வேண்டும். அப்போதுதான் புதிரானது தொடர்ந்து இருக்கும். மேலும் அடுத்தவரிடம் உள்ளதைக் கண்டுபிடிப்பதற்கான ஆசை தொடர்கிறது.

மேலை நாட்டுப் பெண் ஏதோ ஒன்றை இழந்து கொண்டு இருந்தாள். கீழைநாட்டு பெண் இன்னமும் ஒரு மனித இனமாக இல்லை. அவள் ஒரு போகப்பொருளாக எண்ணப்படுகிறாள். மொரார்ஜி தேசாய் போன்ற மக்கள் இன்னமும் பெண்களை ஒரு சொத்தாக, தனிப்பட்ட பொருளாக நினைத்துக் கொண்டு இருக்கின்றனர். கீழை நாட்டில் பெண் இன்னமும் ஒரு பொருளாக, வாங்கி விற்கின்ற ஒரு பொருளாக இருக்கிறாள். ஒன்று நிரந்தரமாக வாங்கப்படுகிறாள். அப்போது அது திருமணம் என்பதாகிறது.

அல்லது தற்காலிகமாக வாங்கப்படுகின்றாள். அப்போது அது விபச்சாரம் ஆகிறது. விபச்சாரத்திற்கும் உங்களது திருமணத் திற்கும் இடையே கொஞ்சம்தான் வேறுபாடு உள்ளது. அந்த வேறுபாடு தன்மையில் இல்லை,வேறுபாடு அளவில் மட்டுமே உள்ளது.

மேலை நாடுகளில், பெண் விடுதலை இயக்கங்களினால், பெண் என்பவள் ஆணைப்போல் இருக்க வேண்டும், அப்போது மட்டுமே அவள் சரிசமமானவள் என்கிற எண்ணம் எழுந்து கொண்டிருக்கிறது. அது மீண்டும் அடுத்ததாக ஒரு முட்டாள் தனமாகும். சமமாக இருப்பதற்கு அதே மாதிரி இருக்க வேண்டிய அவசியம் கிடையாது. மேலும் பெண் ஆணைப்போன்று அதேமாதிரி ஆகிவிட்டால், அவள் தனது எல்லா அழகையும், எல்லா வசீகரத்தையும், எல்லா அருளையும் இழந்து விடுவாள்.

அவளது உடலும் கூட ஆணைப்போன்று மாறி அதற்கு தன்னை சரிசெய்து கொள்கிறது. அவள் தனது உடல் வளைவுகளை இழந்து விடுகிறாள். அவள் தனது மென்மையை இழந்து கொஞ்சம் கடினமானவளாக ஆகிவிடுகிறாள். அவள் கிளர்ச்சிமிக்கவளாக ஆகிவிடுகிறாள். அவள் தனது பெற்றுக்கொள்கின்ற தன்மையை இழந்து விடுகிறாள். மேலும் அவள் ஓர் ஆணைப்போன்று பாசாங்கு செய்து கொண்டிருக்கிறாள். ஒருபெண், ஆண் போன்று பாசாங்கு செய்து கொண்டு இருந்தால் அவர் எப்போதுமே ஓர் இரண்டாம் தரமான பெண்ணாக இருப்பாள். அவள் ஒருபோதும் முதல் தரமானவளாக ஆகமுடியாது. அவள் ஒரு நகல் போன்று தான் இருப்பாள். ஒரு பெண் எப்படி முதல் தரமான ஆளாக ஆக முடியும்? அது சாத்தியப்படாது.ஓர் ஆண் முதல் தரமான பெண்ணைப் போன்று ஆவதற்கு முயற்சி செய்வதைப் போன்று சாத்தியப்படாது. அப்போது அவன் ஒரு நகலாக, ஒரு நடிகராக, ஒரு பாசாங்குக்காரனாக மட்டுமே இருப்பான். எனவே எல்லா பாசாங்குத்தனங்களும் கண்டனத்துக்குரியவை.

பெண் என்பவள் பெண்ணாகவே இருக்கவேண்டும். பெண் தனக்குரிய தூரத்தை எப்போதும் கடைபிடிக்க வேண்டும். பெண்

அந்த வேறுபாடுகளை வளர்க்க வேண்டும். ஏனெனில் அந்த வேறுபாடுகள்தான் அளவுகடந்த மதிப்புள்ளவை. அந்த வேறுபாடுகளில்தான் கவர்ச்சி இருக்கிறது. அந்த வேறுபாடுகளில் தான் வாழ்க்கையின் ஒட்டுமொத்த கவிதையும் உள்ளது. அந்த வேறுபாடுகள்தான் காந்தம் போன்ற ஈர்க்கும் சக்தியாகும். ஆணையும், பெண்ணையும் ஒரே மாதிரியாக இருக்கும்படியாக, நெருக்கமான தோற்றமுள்ளவர்களாக ஆக்கிவிட்டால் நீங்கள் அளவுகடந்த மதிப்புள்ள ஒன்றினை அழித்து விடுகிறீர்கள். இயற்கையான கவர்ச்சியானது போய்விடும்.

எனவே நான் அதற்கு ஆதரவாகவும் இல்லை,அ ல்லது பெண்கள் விற்பனைப் பொருள் போன்று நடத்தப்பட வேண்டும் என்கிற கீழை நாட்டு முட்டாள்தனத்திற்கு ஆதரவானவனும் கிடையாது. ஆணும் பெண்ணும் ஏன் நண்பர்கள் போன்று இருக்கக்கூடாது. சரிசமமாக இருந்துகொண்டு முற்றிலும் வேறுபட்டு ஏன் இருக்கக்கூடாது? பெண் தனிப்பட்ட சொத்தாகவோ அல்லது ஒரு சமூகச் சொத்தாகவோ இருக்க வேண்டிய அவசியம் என்ன? சொந்தமாக்குதல் என்கிற அந்த எண்ணமே தவறானது. யாரும் யாரையும் சொந்தமாக்க முடியாது.

இந்த உலகில் புரிதல் என்பது வளர்ந்து விட்டால், பெற்றோர்களும் கூட தங்களது குழந்தைகளைச் சொந்தமாக்கிக் கொள்ள மாட்டார்கள். அவர்கள் அப்படி ஆக்கக்கூடாது. ஏனெனில் சொந்தமாக்குதல் என்கிற எண்ணமே மனிதனின் சிறப்பியல்பை நீக்குவதாகும். குழந்தைகள் உங்கள் மூலமாக வருகின்றன. ஆனால் அவற்றை நீங்கள் சொந்தமாக்க முடியாது. அவை உங்களது சொத்து அல்ல. நீங்கள் அவர்களைப் பெற்று விட்டதால் அவர்களை நேசியுங்கள். ஆனால் அவர்களையும் மற்றவர்களைப் போல நடிப்பவர்களாக ஆக்கிவிடாதீர்கள். உங்களது சொந்த லட்சியங்களுக்காக அவர்களை பயன்படுத்தவோ அல்லது சுரண்டவோ செய்யாதீர்கள். அவர்கள் உங்களுக்குச் சொந்தமானவர்கள் என்று கோராதீர்கள். அவர்கள் இந்த இயற்கைக்கு சொந்தமானவர்கள். வேறு யாருக்கும் சொந்தமானவர்கள் அல்லர்.

“பெண்களை பொதுஉடைமை ஆக்குவதை வலியுறுத்தி ஓஷோ முக்கியத்துவம் கொடுக்கிறார். விபச்சாரிகள் பொது உடைமை ஆக்கப்பட்டதுபோல எல்லாப் பெண்களும் பொது உடைமை ஆக்கப்பட வேண்டும் என்று ஓஷோ கூறுகிறார்” என்று சண்டே பத்திரிகைக்கு கொடுத்த பேட்டி ஒன்றில் மொரார்ஜி தேசாய் கூறி இருக்கிறார் என்று நீ கேட்கிறாய்.

இது முற்றிலும் பொய்யானது. நான் ஒருபோதும் அப்படி சொல்லவில்லை. மேலும் ஒரு நாட்டின் பிரதமராக உள்ள ஒரு பொறுப்புள்ள மனிதர் நான் என்ன கூறினேன், நான் என்ன கூறவில்லை என்பது குறித்து கொஞ்சம் உண்மைகளுக்கு உள்ளே சென்று, கொஞ்சம் அறிவுப்பூர்வமாக சிந்திக்க வேண்டும் என்று ஒருவர் நம்புவது மிகவும் சரியானது.

மேலும் அவர், “ஓஷோ இன்னும் ஒரு படி மேலேசென்று இங்கு திருமணம் என்பதே தேவை இல்லை என்கிறார்” என்று கூறுகிறார்.அது உண்மைதான். திருமணத்திற்கான அவசியம் கிடையாது, நட்பு மட்டுமே போதுமானது. மனிதனிடம் அன்பும் தோழமையும் இல்லாமல் போய்விட்டால் தான் திருமணம் என்கிற நிகழ்வே வந்தது. இது மிகவும் செழிப்பற்ற ஒரு மாற்று ஏற்பாடு.

நீங்கள் யார் மீதாவது அன்பு செலுத்தினால், நேசித்தால், அதை சட்டரீதியான ஓர் ஒப்பந்தமாக ஆக்கவேண்டிய அவசியம் கிடையாது. மேலும் அப்படிப்பட்ட சட்டரீதியான ஓர் ஒப்பந்தமானது நீ அந்த ஆளை எப்போதைக்கு நேசிப்பாய் என்கிற நிச்சயத்தைக் கொடுத்துவிட முடியாது. அன்பின் மீது அந்த சட்டரீதியான ஒப்பந்தத்திற்கு எந்த அதிகாரமும் கிடையாது. திருமணம் என்பது சட்டப்பூர்வமான ஒப்பந்தம். அது சொந்த மாக்குதல், தனிப்பட்ட நபரின் சொத்தாக்குதல். அது பெண்ணை சொந்தமாக்குவதற்கான ஓர் உரிமம். நீங்கள் நாய்களுக்கு உரிமம் வைத்திருப்பது போன்று. நீங்கள்தான் அந்தப் பெண்ணின் சொந்தக்காரர் என்பதற்கான உரிமம் அங்கு அன்பு இல்லை என்பதைத்தான் இது வெறுமனே காட்டுகிறது. அன்பு என்பதுஇல்லாத போதுதான் சட்டம் என்பது உள்ளே வருகிறது. மற்றபடி அன்பே அதனளவில் போதுமானது.

அன்பு என்பது ஆரம்ப விஷயமாக இருக்கவேண்டும். அதன் பின்னர் நீங்கள் ஒன்று சேர்ந்து இருக்க முடியும். ஒன்று சேர்ந்து இருப்பது என்பது ஒரு நட்பாக, ஒரு பொறுப்பாக இருக்க வேண்டும். இரண்டு பேர் ஒருவரை ஒருவர் நேசிக்கும்போது அவர்கள் பொறுப்புள்ளவர்கள் ஆகின்றனர். அவர்கள் ஒருவர்மீது ஒருவர் அக்கறை கொள்கின்றனர். அந்த அக்கறையையும், பொறுப்பையும் உருவாக்க ஒரு சட்டம் தேவையில்லை. மேலும் எந்த ஒரு சட்டத்தினாலும் அதை உருவாக்கவும்கூட முடியாது. அதிகபட்சமாக அது உன்மீது ஒரு குறிப்பிட்ட அமைப்பைத் திணிக்க முடியும். ஆனால் அதுஉனது அன்பை, உனது நட்பை அழித்துவிடும்.

சமுதாயமானது மேலும் மேலும் விழிப்புணர்வு அடையும் போது, மேலும் மேலும் தன்னுணர்வு அடையும்போது, திருமணம் என்பது மறையத்தான் போகிறது. திருமணத்திற்குப் பதிலாக நட்பு, தோழமை என்பது அங்கு இருக்கும். கடந்த காலத்தில் கணவன், மனைவி என்று அழகான வார்த்தைகள் இருந்ததைப் போன்று எதிர்காலத்தில் ஆண் தோழன், பெண் தோழி என்பது அதற்குரிய இடத்தப் பிடித்துக் கொள்ளும்.

இதற்கிடையில் நீ ஒரு சமுதாயத்தில் வாழ வேண்டியது இருந்தால் மட்டுமே நீ திருமணம் செய்து கொள்ள முடியும். ஆனால், திருமணம் என்பது இரண்டாம் பட்சமானதாகவே இருக்க வேண்டும். நீங்கள் ஒருவரை ஒருவர் நேசித்தால் மட்டுமே அது இருக்க வேண்டும். அது உங்களது அன்பில் இருந்து வரவேண்டும். நேர்மாறாக வரக்கூடாது. கடந்த காலங்களில் அது முயற்சித்துப் பார்க்கப்பட்டது. முதலில் திருமணம் செய்து கொள்ளுங்கள். அதன்பின்னர் ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துங்கள் என்று கூறப்பட்டது. அது சாத்தியப்படாது. அன்பை யாராலும் நிர்வாகம் செய்ய முடியாது. அன்பை உருவாக்கும் சக்தி யாருடைய அதிகாரத்திலும் கிடையாது. அது நிகழும் போதுதான் நிகழும்.

நீங்கள் இரண்டு பேரை ஒன்று சேர்த்து வைக்கலாம். அதுதான் செய்யப்பட்டது. இரண்டு பேருக்குத் திருமணம் செய்து வைத்துவிட்டால் அவர்கள் ஒன்றாகச் சேர்ந்துதான் வாழ

வேண்டியதிருக்கும். இரண்டு பேர் ஒன்று சேர்ந்து இருக்கும்போது அவர்கள் ஒருவரை ஒருவர் விரும்புவதற்கு ஆரம்பிப்பார்கள். அதாவது சகோதரர்கள் தங்களின் சகோதரிகளை விரும்புவதைப் போல அல்லது சகேதரிகள் தங்களின் சகோதரர்களை விரும்புவது போல விரும்ப ஆரம்பிப்பார்கள். இது நிர்பந்திக்கப்பட்ட ஓர் ஏற்பாடு. மேலும் இரண்டு பேர் ஒன்று சேர்ந்து இருக்கும்போது, ஒரு விருப்பம், ஒருவிதமான ஆசை எழுகிறது. மேலும் அவர்கள் ஒருவரை ஒருவர் சார்ந்து உள்ளனர். அவர்கள் ஒருவரை ஒருவர் பயன்படுத்திக் கொள்கின்றனர். ஆனால் நேசம் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒரு விஷயம்.

திருமணம் என்பது முதலில் நடந்து விடுமானால், கிட்டத்தட்ட அங்கு அன்பு என்பது எப்போதும் நிகழாமல் போவதற்கான சாத்தியங்கள் கிடையாது. உண்மையில் நேசத்தை தடுப்பதற்காகத் தான் திருமணம் என்பது உருவாக்கப்பட்டது. ஏனெனில் நேசம், காதல் என்பது ஆபத்தானது. அது உன்னை மகிழ்ச்சி, பேரானந்தம், கவிதை, காதல் கவர்ச்சி போன்ற சிகரங்களுக்கு எடுத்துச் சென்று விடுவதால், மக்களை அந்த அளவுக்கு உயரத்திற்கு எழுப்புவதற்கு விடுவது, உயரம் மற்றும் ஆழத்தைப் பார்க்க விடுவது இந்த சமுதாயத்திற்கு மிகவும் ஆபத்தானது. ஒருவன் நேசத்தை அறிந்து கொண்டு விட்டால், எதுவும் ஒருபோதும் அவனை திருப்திப்படுத்தாது. அதன்பின்னர் நீங்கள் அவனுக்கு வங்கியில் மிகப்பெரிய பணத்தைக் கையிருப்பாகக் கொடுத்தாலும் அவனைத் திருப்திப்படுத்த முடியாது. அந்த வங்கி கையிருப்பு உதவாது. இப்போது அவன் உண்மையாக செல்வச் செழிப்பு பற்றி அறிந்து கொண்டிருக்கிறான்.

ஒரு மனிதன் அந்தப் பேரானந்த தருணங்களில் நேசித்தும் வாழ்ந்தும் விட்டால் அதன்பின்னர் உங்களால் அவனை அதிகார அரசியல் நோக்கி அவனை இழுப்பதற்கு முடியாது. அதைப்பற்றி யார் கவலைப்படுவார்கள்? அசிங்கமான மனிதாபிமானமற்ற வேலைகளில் உங்களால் அவனை நிர்ப்பந்திக்க முடியாது. அவன் ஓர் ஏழை மனிதனாகவே வாழ்வதற்கு விரும்புவான்; ஆனால் அவனிடம் அன்பு பொங்கி வழிந்துகொண்டு இருக்கும். நீங்கள் அன்பைக் கொன்று விட்டால், அதன் பின்னர் அந்த மனதனின்

சக்தியானது அன்பினுள் ஒருபோதும் நகர்ந்து செல்வதாகாது. அந்த சக்தியானது இந்த சமுதாயத்தால் சுரண்டப்படுவதற்கு கிடைக்கிறது. மேலும் திருமணம் என்பது அன்பைக் கொல்வதற்கான ஒரு முயற்சியாகும்.

நீங்கள் அவனை ஒரு போர்வீரனாக ஆக்க முடியும். மேலும் அவன் மிகவும் ஆபத்தான ஒரு போர் வீரனாக இருப்பான். அவன் கொலைசெய்யத் தயாராக இருப்பான். எந்த ஒரு சாக்குபோக்கும் போதும். உடனே அவன் கொலை செய்வதற்கோ, அல்லது கொலை செய்யப்படவோ தயாராக இருப்பான். அவன் விரக்தி மற்றும் கோபத்தில் கொதித்துக்கொண்டு இருப்பான். நீங்கள் விரும்பப்படுகின்ற திசையில் அவனை வ்லுக்கட்டாயமாக திணிக்க முடியும்.

அவன் ஓர் அரசியல்வாதியாக ஆகிவிடுவான். அவன் மொரார்ஜி தேசாய் போன்று ஆகிவிடுவான். இந்த நாட்டின் பிரதமராக ஆவது எப்படி என்பது மட்டுமே அவனது வாழ்க்கையின் ஒட்டுமொத்த சிந்தனையாக இருக்கும். இப்போது அவர் தனது எண்பத்து மூன்றாம் வயதில் பிரதமர் ஆகி இருக்கிறார். அவர் நீண்ட நாள் வாழ பிரார்த்தனை செய்யும்படி மக்களை கேட்டுக்கொண்டதாக முன்தினம் பத்திரிகையில் நான் படித்தேன். நீண்ட ஆயுளா - இன்னுமா? இந்த ஏழை நாட்டை விட்டு நீங்கள் செல்வீர்களா அல்லது மாட்டீர்களா? அவருக்கும் அவரது சகாக்களுக்கும் நீண்ட ஆயுள் தேவைப்படுகிறது. அப்போதுதான் அவர்களால் இந்த நாட்டிற்கு சேவை செய்ய முடியும். வேறு சில மக்கள் இந்த நாட்டிற்கு சேவை செய்வதற்கு நீங்கள் அனுமதிக்க மாட்டீர்களா? இப்போது, அவர் எவ்வளவு காலம் வரை நம்மைத் துன்புறுத்த விரும்புகிறார்?

இந்த மக்கள் அன்பு என்றால் என்ன என்று அறியாத மக்கள். அன்பானது விரக்தி அடைந்துவிட்டால் அது பேராசையாக ஆகிவிடுகிறது. விரக்தியடைந்த அன்பானது வன்முறையாக ஆகிவிடுகிறது. விரக்தி அடைந்த அன்பானது உன்னை லட்சியங்கள் நிறைந்த உலகிற்குமுன் வழிநடத்தி சென்று விடுகிறது. விரக்தி அடைந்த அன்பானது மிகவும் அழிக்கக்கூடியது.

ஆனால் இந்த சமுதாயத்திற்கு அழிக்கக்கூடிய மக்கள் தான் தேவைப்படுகின்றனர். இதற்கு மிகப்பெரிய போர்ப்படை தேவைப்படுகிறது. அதற்கு அரசியல்வாதிகள் என்னும் போர்ப்படை தேவைப்படுகிறது. அதற்கு எழுத்தர்கள் என்னும் போர்ப்படை தேவைப்படுகிறது. எதையும் செய்யக்கூடிய மனிதர்கள் அதற்கு தேவைப்படுகிறார்கள். ஏனெனில் அவர்கள் வாழ்க்கையில் உயர்ந்த எதையும் அறிந்ததில்லை. அவர்கள் தங்களின் வாழ்க்கையில் கவிதைத்தனமான தருணங்களை ஒருபோதும் தொட்டதில்லை. அவர்கள் தங்களின் வாழ்நாள் முழுவதும் பணத்தை எண்ணிக்கொண்டே போவார்கள். மேலும் அதுதான் எல்லாம் என்றும் நினைத்துக்கொண்டு இருப்பார்கள்.

நேசம் ஆபத்தானது, எல்லாருக்கும் மோசமானது கிடைக்கக் கூடிய ஒன்றாக ஆகவேண்டும் என்று நான் விரும்புகிறேன். மேலும் திருமணம் என்பது நடந்தாலும்கூட, அது அன்பு என்பதிலிருந்து கிடைக்கின்ற ஒரு உப செயலாக மட்டுமே இருக்க வேண்டும். திருமணம் என்பது இரண்டாம்பட்சமானதாக இருக்க வேண்டும். ஒருநாள் அந்த நேசமானது மறைந்து போய்விட்டால், அந்த திருமணத்தை முறிப்பதற்கு எந்த ஓர் இடையூறும் உருவாக்கப்படக் கூடாது. இருவர் திருமணம் செய்து கொள்ள விரும்பினால் அதற்கு இருவரும் சம்மதிக்க வேண்டும். ஆனால் விவாகரத்திற்கு, ஒருவர் விவாகரத்து வேண்டும் என்று விரும்பினாலே போதும். அதுவே போதுமான காரணமாக இருக்க வேண்டும். விவாகரத்திற்கு இரண்டு பேரும் சம்மதிக்க வேண்டும் என்றே அவசியம் கிடையாது.

இப்போதைய நிலையில், திருமணத்திற்கு எந்த ஓர் இடையூறும் உருவாக்கப்படவில்லை. எனவே இரண்டு முட்டாள்கள் திருமணப் பதிவு அலுவலகத்திற்கு சென்று திருமணம் செய்துகொள்ள முடியும். ஆனால் விவாகரத்திற்கு ஆயிரத்தோரு இடைஞ்சல்கள் உருவாக்கப்படுகின்றன. இது மிகவும் பைத்தியக்காரனத்தனமான அணுகுமுறை.

எனது நோக்கத்தில், மக்கள் திருமணம் செய்து கொள்ளும் போது எல்லாவிதமான இடையூறுகளும் உருவாக்கப்பட

வேண்டும். அவர்களிடம், "இரண்டு வருடம் காத்திருங்கள், இரண்டு வருடங்கள் ஒன்று சேர்ந்து விடுங்கள். மேலும் இரண்டு வருடங்களுக்குப் பின்னரும் கூட நீங்கள் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று விரும்பினால் திரும்பி வாருங்கள்" என்று கண்டிப்பாக கூறப்பட வேண்டும். மக்கள் ஒன்று சேர்ந்து வாழ்வதற்கு அனுமதிக்கப்பட வேண்டும். அப்போதுதான் அவர்கள் எப்படிப்பட்ட மனிதர்கள், அவர்கள் பொருத்தமானவர் களா அல்லது இல்லையா, அவர்கள் சகஜமாக பழகுவார்களா, அவர்களின் வாழ்க்கையில் அவர்களால் ஒத்திசைவை உருவாக்க முடியுமா அல்லது முடியாதா என்பதை அவர்கள் அறிந்துகொள்ள முடியும்.

ஆனால் இப்போது யார் வேண்டுமானாலும், திருமணப் பதிவு அலுவலகத்திற்குச் சென்று திருமணம் செய்து கொள்ளலாம். மேலும் யாரும் எந்த தொந்தரவையும் உருவாக்குவதில்லை. இது முட்டாள்தனமாது. மேலும் அவர்கள் பிரிந்து வாழ்வதற்கு விரும்பும்போது ஒட்டுமொத்தமாக நீதிமன்றம், சட்டம், காவல் துறையினர் மற்றும் அனைவரும் அதைத் தடுக்கின்றன. இந்த சமுதாயமானது திருமணத்திற்கு ஆதரவாக உள்ளது. மேலும் விவாகரத்திற்கு எதிரானதாக உள்ளது.

நான் திருமணத்திற்கு ஆதரவானவனும் அல்ல அல்லது விவாகரத்திற்கு ஆதரவானவனும் அல்ல. என் நோக்கத்தில், இருவரிடையே ஒரு வகையான நட்பு, ஒரு பொறுப்பு, ஓர் அக்கறை மட்டுமே இருக்க வேண்டும். எனவே அந்த நாள் வெகு தொலைவில் இருக்கிறது என்றால், அதன்பின்னர், அதற்கிடையில் திருமணம் என்பதை அத்தனை சுலபமாக ஏற்றுக்கொள்ளக்கூடாது. மக்கள் ஒருவரை ஒருவர் பரிசோதித்துக் கொள்ளவும், எல்லாவிதமான சூழ்நிலைகளில் வாழ்வதற்கும் அவர்களுக்கு சந்தர்ப்பம் கொடுக்கப்பட வேண்டும். வெறுமனே கவிதைத் தன்மையான நோக்கில், வெறுமனே கண்டதும் காதல் என்கிற நோக்கில் திருமணம் என்பதை அனுமதிக்கக் கூடாது.

விஷயங்கள் தணியட்டும், விஷயங்கள் சாதாரணமானதாக ஆகட்டும். அவர்கள் தங்களால் சாதாரண வாழ்க்கையில்,

அன்றாட பிரச்சினைகளில், சமாளிக்க முடிகிறதா என்பதை கண்டுகொள்ளட்டும். அதன்பின்னர் மட்டுமே அவர்களை திருமணம் செய்துகொள்ள அனுமதியுங்கள். அதுவும் கூட தற்காலிகமானதாக மட்டுமே இருக்க வேண்டும். இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை வந்து அவர்கள் அதைப் புதுப்பித்துக் கொள்ளலாம். அவர்கள் வரவில்லை என்றால், அது முடிந்து விட்டது. அந்த உரிமமானது இரண்டு வருடங்களுக்கு ஒருமுறை புதுப்பிக்கப்பட வேண்டும். மேலும் அவர்கள் பிரிந்துவிட விரும்பும்போது எந்த ஒரு பிரச்சினையும் உருவாக்கப்படக்கூடாது. இதுதான் எனது நோக்கம். நான் திருமணத்திற்கு எதிரானவன் அல்ல. ஆனால் நான் அன்பிற்கு ஆதரவானவன். எனவே அன்பு என்பது மட்டுமே தீர்மானிக்கக்கூடிய காரணமாக இருக்க வேண்டும்.

மேலும் மொரார்ஜி தேசாய், "ஓஷோ சுதந்திரமான பாலியல் உறவை ஆதரித்து வாதாடுகிறார்" என்று கூறுகிறார். நீங்கள் அதைப்பற்றி என்ன கூறுகிறீர்கள்?" என்று நீ கேட்கிறாய். நான் என்ன சொல்கிறேன் என்பதை மொரார்ஜி தேசாய் மற்றும் அவரைப் போன்ற மக்கள் புரிந்துகொள்வது மிகவும் கடினம். நான் உண்மையில் காமத்தைக் கடந்து செல்வதைத்தான் கூறிக் கொண்டிருக்கிறேன். நான் காமத்தை போதித்துக் கொண்டு இருக்க மாட்டேன். நான் அன்பைப் போதிக்கிறேன். ஆனால் இந்த மக்களின் மனதில் காமம் மற்றும் அன்பு ஆகிய இரண்டிற்கும் எந்த ஒரு வேறுபாட்டையும் உண்டாக்குவதில்லை. அவர்களின் மனதில் நேசம் என்றால் காமம் என்று அர்த்தம். ஏனெனில் அவர்கள் நேசம் என்பதை அறிந்ததில்லை. அவர்கள் காமத்தைப் பற்றி மட்டுமே அறிந்துள்ளனர்.

காமமும் அன்பும் வெகு தொலைவில் இருப்பவை. காமம் என்பது உடல்ரீதியான விஷயம். அன்பு என்பது மனிதாபிமான விஷயம். எனவே வேறுபாடு என்ன? உடல் அளவில் இயற்கையானது உன்னில் ஆர்வத்துடன் இருக்கிறது. எனவே உன்னால் குழந்தைகளைப் பெற முடிகிறது. எனவே உயிர்கள் தொடர்கின்றன. காமம் என்பது மனித இனத்தை உற்பத்தி

செய்கின்ற அமைப்பு முறை. எனவே இயற்கையாகக் காமம் என்பதற்கு வேறு எந்த அர்த்தமும் கிடையாது. மனித இன உற்பத்தி என்பதைத்தவிர வேறு எந்த சிறப்பான இயல்பும் காமத்திற்குக் கிடையாது. இந்தக் காமமானது கொஞ்சம் கொஞ்சமாக உடல் அளவில் இருந்து விடுதலை பெறுவதற்கு மனிதனுக்கு மட்டுமே உரித்தான மகிமை. அவனது மதிப்பு மற்றும் சுதந்திரம் ஆகும்.

காமம் என்பது விளையாட்டானதாக, வேடிக்கையானதாக, கொண்டாட்டமாக ஆகிக்கொண்டு இருக்கிறது. இப்படி காமமானது வேடிக்கை, விளையாட்டு மட்டும் கொண்டாட்டமாக ஆகிறபோது, அது அன்பு என்னும் ஒரு புதிய தன்மையை நோக்கி நகர்ந்து செல்ல ஆரம்பிக்கிறது. மனித இனத்தை உற்பத்தி செய்வதற்கு அன்பு தேவை இல்லை. அன்பு என்பது இசையைப்போல, கவிதை போல, ஓவியம் போல, ஒரு சுவையாக இருக்கிறது.

இரண்டிற்கும் உள்ள வேறுபாடானது இப்படி உள்ளது. அதாவது விலங்குகளும் சாப்பிடுகின்றன, மனிதனும் கூட சாப்பிடுகிறான்; சாப்பிடுதலைப் பொருத்தமட்டில் எந்த ஒரு வேறுபாடும் கிடையாது. ஆனால் நீங்கள் மிகவும் நெருக்கமாகக் கவனித்தால், விலங்குகள் சாப்பிடும்போது அவை உண்பதை மற்ற விலகுகள் பார்த்துவிடாத ஓர் இடத்திற்கு நகர்ந்து சென்றபின்னர் அவை சாப்பிடுகின்றன. ஏனெனில் மற்ற விலங்குகள் தங்களின் உணவை எடுத்துக்கெள்ளும் என்று அவை எப்போதும் பயப்படுகின்றன. விலங்குகள் தனியாகவே சாப்பிடுகின்றன.

மனிதன் மட்டுமே மற்ற மக்களோடு சாப்பிடுவதற்கு விரும்புகிறான். அவன் மட்டுமே அடுத்தவர்களையும் அழைக் கிறான். சாப்பிடுதல் என்பதை அவன் ஒரு கொண்டாட்டமாக ஆக்குகிறான். இது மிகவும் புதியது. இது முற்றிலும் புதியது. விலங்குகளின் உலகில் இது கிடையாது. விலங்குகளை வெறுமனே தங்களின் உடல் தேவைகளை நிறைவேற்றுவதற்காக மட்டுமே சாப்பிடுகின்றன. மனிதன் தனது சாப்பிடும் பழக்கத்திற்கு சில கலை உணர்வுகளைக் கொண்டு வருகிறான். அவன் உணவைத் தயாரிக்கிறான், அதை அழகான வடிவங்களில் தயாரிக்கிறான். மேலும் அவன் உணவிற்கு அழகான நிறங்களைக் கொடுக்கிறான்.

மேலும் அதில் நன்னடத்தைகளை வைத்திருக்கிறான். அவன் அதற்காக மேஜைகளை ஒழுங்குபடுத்தி, உணவில் வாசனையை உருவாக்கி, விளக்குகள் நறுமணங்களை உண்டாக்கி நண்பர்களோடு சேர்ந்து வீண் பேச்சு பேசிக்கொண்டு, இசை இசைத்துக்கொண்டு அதன்பின்னர் சாப்பிடுகிறான். இப்போது சாப்பிடுதல் என்பது முற்றிலும் வேறுபட்ட ஒரு திருப்பத்தை எடுத்துவிட்டது. அது ஒரு கலவையாக ஆகிவிட்டது.

இதே நிலைதான் இப்போது காமத்திலும் உள்ளது. விலங்குகளில் உடல் உறவு என்பது வெறும் இனவிருத்தி என்கிற ஒரு விஷயமாகவே இருக்கிறது. மொரார்ஜி தேசாயின் குருவாகிய மகாத்மா காந்தி, "இனவிருத்தி செய்ய வேண்டும் என்றால் மட்டுமே நீங்கள் உடலுறவு கொள்ளுங்கள்" என்று கூறுவது வழக்கம். இப்போது, இது மிருகத்தனமானது, மனித நிலைக்குக் கீழானது. ஆனால் அவர் மிக உயர்ந்த தத்துவத்தை, ஆன்மிகத்தைப் போதிப்பதாக நினைத்துக் கொண்டார். அது ஆன்மிகமே கிடையாது. அது மனிதனின் தகுதிக்குக் கீழானது. அவர் போதித்தது முற்றிலும் மிருகத்தனமானது. நீ ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள விரும்பினால் மட்டுமே உடலுறவு கொள்ள வேண்டும். மற்றபடி கூடாது என்று மகாத்மா காந்தி கூறிக் கொண்டிருந்தார். அப்படியானால் அதில் அன்பு என்பதற்கான சாத்தியங்களே இருக்காது.

அன்பு என்பது காமத்தின் கலை வடிவம். உடல் அளவில் இருந்து மனிதனை விடுதலை அடையச் செய்வதற்கான ஒரு முயற்சியாகும். அன்பு என்பது உள்ளது, நீ ஒரு பெண்ணைக் காதலிக்கிறாய். அடிப்படையாக, ஒரு குழந்தை பெற்றுக்கொள்ள வேண்டும் என்கிற ஆர்வத்தில் நீ அவளைக் காதலிப்பது கிடையாது. அவளுக்காகவே நீ அவளைக் காதலிக்கிறாய். அவளோடு இருப்பதில் வெறுமனே மகிழ்ச்சி அடைவதால்தான் நீ ஒரு பெண்ணை நேசிக்கிறாய். அவளோடு இருப்பதால் உனது சக்தியைப் பகிர்ந்து கொண்டு மகிழ்ச்சியாக இருக்க முடிகிறது என்பதற்காகவே நீ ஓர் ஆணைக் காதலிக்கிறாய்.

காமம் என்பது அதற்குள் வரலாம் அல்லது வராமலும்கூட போகலாம். அதில் காதல் இருந்தால், அதில் அன்பு என்னும் சீதோஷ்ண நிலை இருந்தால் அதில் காமம் என்பது உள்ளே வரும்போது அந்த காமம் என்பதும்கூட அதன்பிறகு சாதாரண மான காமம் போன்று இருக்காது. அது அன்பு என்னும் சீதோஷ்ண நிலையால் உருமாற்றம் அடைந்திருக்கும். ஆனால் அது வரவேண்டும் என்கிற அவசியமும் கூட கிடையாது. இரண்டு காதலர்கள் கைகளைக் கோர்த்து அமர்ந்து கொண்டு, முழு நிலவைப் பார்த்துக்கொண்டு இருக்க முடியும். தேவை இல்லாமல் அதில் எந்த ஒரு காமமும் நுழைய வேண்டிய அவசியம் கிடை யாது. அதுவே போதுமானது. அதுவே அளவுகடந்த திருப்தியுள்ள தாக இருக்கும். இரண்டு காதலர்கள் ஒருவருக்கொருவர் கவிதைகளை வாசிக்கலாம், ஒரே பாட்டை இருவரும் பாடலாம். நடனமாடலாம், கட்டி அணைக்கலாம். ஒருவரை ஒருவர் பிடித்துக் கொள்ளலாம். காமம் என்பது ஒரு தேவை அல்ல. அது தானாக நடந்தால், அதன்பிறகு அது நல்லது. அது நடக்கவில்லை என்றால்கூட அது நடக்க வேண்டும் என்கிற ஏக்கம் அங்கு இருக்காது.

அன்பே அதனளவில் நிறைவானது. அன்பு என்பது காமத்தை விட உயரத்திற்குச் செல்வதாகும். நான் அன்பைப் போதிக்கிறேன். மேலும் நீ அன்பை அறிந்து கொண்டால், நீ கொஞ்சம் கொஞ்சமாக காமத்திற்கு அப்பால் நகர்ந்து செல்ல ஆரம்பித்து விடுவாய்.

மகாத்மா காந்தியிடம் காதல் என்னும் பார்வை கிடையாது. மேலும் மொரார்ஜி தேசாய் தனக்கு தெரிந்ததை எல்லாம் மகாத்மா காந்தியிடம் இருந்துதான் கற்றுக்கொண்டார். அவரிடம் காதல் என்னும் நோக்கம் கிடையாது. அவர் ஒருபோதும் யாரையும் காதலித்திருப்பார் என்று நான் நினைக்கவில்லை. காதல் என்பதைப்பற்றி அவருக்கு ஏதாவது தெரியும் என்று நான் நினைக்கவில்லை. அவருக்கு தெரிந்தது எல்லாம் லட்சியம், பேராசை, அதிகார அரசியல் ஆகியவை மட்டுமே ஆகும்.

அவருக்கு காமம் தெரிந்திருக்க வேண்டும். ஏனெனில் அவர் குழந்தைகளைப் பெற்றெடுத்திருக்கிறார். ஆனால் அந்தக் காமம்

என்பது கண்டிப்பாக அசிங்கமான ஒன்றாக, மிருகத்தனமானதாக, இயந்திரத்தனமானதாக, வெறுமனே இனவிருத்தி செய்ய வேண்டும் என்பதற்கானதாக மட்டுமே இருந்திருக்கும். மொரார்ஜிக்கு பெண்களின் அரவணைப்பில் கிடைக்கின்ற கதகதப்பிற்கு எதிரானவர். அதனால்தான் அவர் தனது குருவாகிய காந்திக்கே அறிவுரை கூற ஆரம்பித்தார்.

மகாத்மா காந்தி, அவரது வயதான காலத்தில், தனது இரண்டு பக்கத்திலும் ஓர் ஆதரவிற்காக இரண்டு பெண்களோடு நடந்து செல்வது வழக்கம். அவர் அந்தப் பெண்களின் தோள்களில் தனது கைகளைப் போட்டுக்கொண்டு நடப்பதுண்டு. அவர் அந்தப் பெண்களை தனது நடைக்கோல்கள் என்று அழைப்பதுண்டு.

ஆனால் இதைப்பற்றி மொரார்ஜி தேசாய் தம்பட்டம் அடித்ததைக் கேள்விப்பட்டால் நீ ஆச்சர்யமடைவாய். "இது சரி அல்ல, நீங்கள் பெண்களைத் தொடக்கூடாது. மேலும் உங்களது கைகளை அவர்களின் தோள்களின் மீது போட்டுகொண்டு நீங்கள் நடக்கக்கூடாது. அது நல்லதல்ல" என்று மகாத்மா காந்திக்கு அறிவுரை கூறியதாக மொரார்ஜி கூறுகிறார். இப்போது இந்த மக்களுக்கு மனித கதகதப்பு பற்றி எதுவுமே தெரியாது. இந்த மனிதர் இடைவிடாமல் காமத்தின் மீது தீவிர உணர்ச்சியுடனே இருக்கிறார். அவர் தனது வாழ்க்கையில் மிகமிக அடிப்படைக் கூறான விலங்குகளின் உடல் இன்பத்தை மட்டுமே அறிந்திருக்கிறார்.

எனவே அவர் தனது எண்ணங்களை என்மீது திரையிட்டுக் கொண்டு செல்கிறார். நான் சுதந்திரமான பாலியல் உறவை போதிக்கவில்லை. நான் அன்பை, ஆதரவைப் போதிக்கிறேன். அன்பு என்பது நிச்சயமாக காமத்தை ஓர் உயர்ந்த தளத்திற்குக் கொண்டு வருகிறது. அது காமமானது உடல் அளவில் இருந்து நகர்ந்து சென்று ஆன்மிகம் நோக்கி செல்வதற்கு உதவுகிறது.

ஆனால், அதன்பிறகு மேலும் ஒரு படி உள்ளது. ஒருவர் மற்றவரின் உடைமையாக ஆகிவிட்டால், உடைமையாக்கிக் கொள்ளாத அனபு செலுத்துபவராக நீ இருந்தால், உனது

அன்பானது நட்பில் ஆழமாக வளர்ந்து கொண்டு வந்தால், மற்றவர் இப்படி இருக்க வேண்டும் அல்லது அப்படி இருக்க வேண்டும் என்று எந்த ஒரு கோரிக்கையும் வைக்காமல் அவர் எப்படி இருக்கிறாரோ அதை அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டால், ஒருவர் மற்றவர் மீது ஆதிக்கம் செலுத்தாமல் இருந்தால், அந்த அன்பில் இருந்து பிரார்த்தனை, வழிபாடு வருகிறது.

அன்பில் சிலசமயம் காமம் என்பது ஒரு பகுதியாக இருக்கும். ஆனால் பிரார்த்தனையில் காமம் என்பது முற்றிலும் மறைந்து விடுகிறது. காமம் மற்றும் பிரார்த்தனை ஆகிய இரண்டையும் இணைக்கின்ற ஒரு பாலமாக அன்பு என்பது இருக்கிறது. எனவே அந்த பாலத்தில் அப்படியே நின்று விடாதே, காமத்திற்கு அப்பால் நடந்து செல்.

ஆனால் எதற்கு அப்பாலும் நீ செல்வேண்டும் என்றாலும் அதன் மூலமாகத்தான் செல்ல வேண்டும். அதனால்தான் நான் காமத்தை வெறுத்து ஒதுக்காதே என்று கூறுகிறேன். அப்படிச் செய்தால் உன்னால் அன்பு என்பதை அறிந்து கொள்ளவே முடியாது. காமத்தை உருமாற்றம் செய், அதை வெறுத்து ஒதுக்காதே. உன்னால் வெறுத்து ஒதுக்கப்பட்ட எதுவும் வண்டல் மண் போன்று உன்னைச் சுற்றி இருந்துகொண்டே இருக்கிறது. மொரார்ஜி தேசாய் வெறுமனே ஓர் ஆணாதிக்கம் நிறைந்த பாரம்பரியவாதி.

***ஐந்தாம் கேள்வி:***

***ஓஷோ,***

> *எனக்கு உதவியும், வழிகாட்டுதலும் வேண்டும் என்பதற்காக என் மனதில் உள்ள பிரச்சினையை எனது நேசமிகு குருவாகிய உங்கள் பக்கமாக ஏற்கனவே திருப்பிவிட்ட பின்னர் அந்த பிரச்சினையைப் பற்றி விரிவாக உங்களிடம் தகவல் பரிமாற வேண்டியது அவசியமா? இப்போது அந்த பிரச்சினை என்னுடையது என்பதை விடவும் அது உங்களுடைய பிரச்சினை என்று நான் கருதலாமா?*

சுபுத்தா, நீ முற்றிலும் என்னை திடமாக நம்பலாம். உனது பிரச்சினைகளைப் பற்றி மறந்துவிடு, நான் அதை எடுத்துக்

கொண்டு விட்டேன். மீண்டும் மீண்டும் அது உனக்குள் எழலாம். நீ அதை என்னிடம் கொடுத்து விட்டதை இடைவிடாது நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். அதைப்பற்றி நீ இனிமேல் நினைத்துப் பார்க்கக்கூடாது. அதற்கும் உனக்கும் இனி சம்பந்தம் கிடையாது.

இந்தப் பிரச்சினையில் உன்னால் இதைச் செய்ய முடிந்தால் உன்னால் அதற்கான சாவியைக் கண்டுகொள்ள முடியும். அதன் பின்னர் அதை உன்னால் உனது எல்லாப் பிரச்சினைகளுக்கும் செய்துவிட முடியும். பிரச்சினைகள் ஒருபோதும் தீர்க்கப்படுவ தில்லை. அவை எப்போதும் கரைக்கப்படுகின்றன. அவற்றைக் கரைப்பதும்கூட மதிப்புடையது அல்ல. ஒருவர் அதனைக் கடந்து அதற்கு அப்பால் செல்ல வேண்டும். மேலும் அவற்றுக்கு அப்பால் செல்வதற்கு இதுதான் வழி.

இது அடாப் என்பதன் முக்கியமான ஒரு பகுதியாகும். உனது பிரச்சினைகளை குருவிடம் ஒப்படைத்து விட்டு அவற்றைப் பற்றி மறந்துவிடு. அதன்பின்னர் உன் வேலை முடிந்து விட்டது. அதன்பின்னர் அது உன் வேலை அல்ல.

மேலும் அது என்னுடைய பிரச்சினையாக ஆகிவிடவில்லை என்பதையும் நினைவில் கொள். உனது பிரச்சினை என்ன என்றும் கூட எனக்குத் தெரியாது. மேலும் உனது பிரச்சினையால் நான் கலக்கம் அடையப் போவது கிடையாது. அதுகுறித்து கவலைப்பட்டு அதற்காக நான் எனது தூக்கத்தை இழக்கவும் போவதில்லை. எதுவுமே கிடையாது! நான் வெறும் சாக்குபோக்கு மட்டுமே. அப்போதுதான் உன்னால் உனது பிரச்சினையை கைவிட முடியும். அதைக் கைவிடுவதன் மூலம் நீ அதற்கு அப்பால் சென்று விடுகிறாய். அப்படி நீ அதைக் கைவிடுவதிலேயே உனக்குள் ஏதோ ஒன்று நடக்கிறது. அப்படிக் கைவிடுவதினால் திடநம்பிக்கை நிகழ்கிறது. அப்படிக் கைவிடுவதினால் அந்தப் பிரச்சினைகளில் மாட்டிக் கொண்டிருந்த சக்தியானது வெளியிடப்படுகிறது. நீ மேலும் அதிக உயிர்த்துடிப்புள்ளவனாக ஆகிவிடுகிறாய். ஒரு புதிய சக்தியோடு நீ துடிக்கிறாய். எனவே உன்னால் உயரே எழும்ப முடியும். பிரச்சினைகள் ஒருபோதும் தீர்க்கப்படுவதில்லை.

ஆனால் ஒருவன் அதனைத் தாண்டி அதற்கு அப்பால் போய்விட முடியும். எனவே ஒருவன் அதற்கு அப்பால் போய்விடும்போது அவை அதற்கு மேல் இருப்பதில்லை. அவை சம்பந்தமில்லாதவை ஆகிவிடும்.

நான் வெறுமனே ஒரு சாக்குபோக்கு மட்டுமேயாகும்; நான் ஒரு காரியத்தையும் செய்வதில்லை. ஆனால் என்மூலமாக நீ அதிசயங்களைச் செய்ய முடியும். மேலும் சுபுத்தா அதைச் செய்ய முடியும். அவனுக்கு அந்தக் குணம் உள்ளது. அது எல்லாரிடமும் உள்ள திறமை அல்ல. ஆனால் சுபுத்தாவின் கண்களை நான் உற்று நோக்கியதில் நான் அதை உணர்ந்தேன். சரணமடைதல் என்பது எப்படி என்று அவனுக்குத் தெரியும்.

நீ உனது பணத்தை என்னிடம் சரணடையச் செய்யும்படி நான் கூறவில்லை. நான் உன்னிடம், "வெறுமனே உனது பிரச்சினைகளை என்னிடம் விட்டுவிடு. உனது எல்லா நோய்களையும் என்னிடம் விட்டுவிடு. உனது எல்லா உடல் உபாதைகளையும் என்னிடம் விட்டுவிடு" என்றுதான் நான் கூறுகிறேன். அப்படி என்னிடம் விட்டு விடுவதில் நீ சுமைகள் குறைந்து இருப்பாய். நீ சுதந்திரமானவனாக இருப்பாய்.

***கடைசி கேள்வி:***

***ஓஷோ,***

> ***மெய்ஞ்ஞானம் அடையாத மனிதர்கள் ஒப்பிட்டுப் பார்க்கக்கூடாது என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால் நான் எப்போதுமே என்னை மற்றவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டும், மதிப்பீடு செய்து கொண்டும் இருக்கிறேன். இது எனக்கும் எனது ஆன்மாவிற்கும் இடையே இடைவிடாமல் மேகங்களைக் கொண்டு வந்து ஒரு தூரத்தை உருவாக்குவதாக உணர்கிறேன். இதுகுறித்து நான் என்ன செய்வது?***

மெய்ஞ்ஞானம் அடையாத மனிதர்கள் ஒப்பிட்டுப் பார்க்க முடியாதவர்கள் என்று நான் கூறினேன். ஏனெனில், அவர்கள் முற்றிலும் ஒருவருக்கு ஒருவர் வேறுபட்டவர்கள். அவர்களின் வரலாறு வேறுபட்டது. அவர்களின் சுயசரிதைகள் வேறுபட்டது.

அவர்களின் கடந்த காலங்கள் வித்தியாசமானது. அவர்கள் பல்வேறு பதவிகளில், பல்வேறு வழிகளில், பல்வேறு பகுதிகளில் நகர்ந்து வந்துள்ளனர்; அவர்களின் கர்மாக்கள் வேறுபட்டவை. அவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. அப்படிச் செய்வது ஒரு கல்லை ஒரு ரோஜா மலரோடு ஒப்பிட்டுப் பார்ப்பது போன்றோ அல்லது ஒரு ரோஜா மலரை ஒரு நட்சத்திரத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பதைப் போன்றோ இருக்கும். மக்கள் அந்த அளவுக்கு மற்றவர்களிடம் இருந்து வேறுபட்டு இருப்பதால் அவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது.

மெய்ஞ்ஞானிகள் மட்டுமே ஒப்பிட்டுப் பார்க்க முடிந்தவர்கள். அதன்பின்னர் அவர்கள் ஒருபோதும் வேறுபட்டவர்களாக இருப்பதில்லை. வெறுமை என்பது ஒரே ஒரு சுவையை மட்டுமே பெற்றிருக்க முடியும். இரண்டு அறைகள் முற்றிலும் வெறுமையாக இருக்கும்போது அவற்றில் ஒப்பிட்டுப் பார்ப்பதற்கு என்ன இருக்கிறது? அவை அந்த அளவுக்கு ஒரே மாதிரியாகத் தெரியும். அதை நீ ஒப்பிட்டுப் பார்க்க விரும்பினால், உன்னால் ஒப்பிட்டுப் பார்க்க முடியும்; இரண்டுமே வெறுமையாக உள்ளது என்று உன்னால் கூற முடியும்.

மெய்ஞ்ஞானம் அடையாத மனிதர்கள் முற்றிலும் தனித்துவம் வாய்ந்தவர்கள், அவரைப்போல வேறு யாரும் கிடையாது. அவருக்கு என்று உடல்நோய் உள்ளது. அவருக்கே உரிய மன நோய் உள்ளது, மேலும் மேலும் யாரும் அதைப் பெற்றிருக்கவில்லை. ஒருவகையில் உன்னால் ஒப்பிட்டுப் பார்க்க முடியும்.

இரண்டு மெய்ஞ்ஞானிகள் அந்த அளவுக்கு ஒன்று போல் இருப்பதால், அவர்கள் ஒன்று போல இருப்பதாக உன்னால் ஒப்பிட்டுப் பார்க்க முடியும். ஆனால் இதில் உள்ள முரண்பாட்டை புரிந்துகொள்ள வேண்டும். இரண்டு மெய்ஞ்ஞானிகள் ஒரேமாதிரி இருப்பதால் அவர்களை நீ எப்படி ஒப்பிட்டுப் பார்ப்பாய்? மேலும் முரண்பாட்டின் மறுபக்கம் என்னவென்றால், இரண்டு மெய்ஞ் ஞானம் அடையாதவர்களும்கூட மிகவும் ஒரே மாதிரியானவர்

களாக இருப்பதால் மனமானது அவர்களையும் ஒப்பிட்டுப் பார்க்க முனைகிறது. ஒருவரிடம் இந்த அளவுக்குப் பணம் உள்ளது. அடுத்தவரிடம் இன்னும் அதிகம் உள்ளது. ஒருவரிடம் இந்த வகையான குணம் உள்ளது. அடுத்தவரிடம் வேறு ஏதோ உள்ளது; ஒப்பிட்டுப் பார்ப்பதற்குரிய தூண்டுதல் அங்கு உள்ளது.

இந்த தூண்டுதல் எங்கிருந்து வருகிறது? இது உனது சொந்த 'நான்' என்னும் ஆணவத்தில் இருந்து தான் வருகிறது. அந்த அளவுகோலில் நீ அங்கு இருக்கிறாய் என்று நீ இடைவிடாமல் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே இருக்கிறாய். யாராவது உன்னைவிட ஏழையாக இருந்தால் நீ நன்றாக இருப்பதாக உணர்கிறாய். ஆனால் யாராவது உன்னைவிடவும் பணக்காராக இருந்தால் நீ கெட்டதை உணர்கிறாய். ஏழை மனிதனைப் பார்க்கும் போது நீ நன்றாக இருப்பதாக உணர்கிறாய். சிலசமயம் அந்த உணர்வினால் அந்த ஏழைக்குக் கொஞ்சம் உதவி செய்வதற்குக் கூட நீ விரும்பலாம். பணக்காரனைப் பார்த்தால் நீ பொறாமைப் படுகிறாய். நீ கவலை அடைகிறாய்; காயப்படுகிறாய். பணக்கார மனிதரைப் பார்த்த உடன் அந்த அளவுக்குப் பணக்காரன் ஆவது எப்படி, உன்னை நிரூபித்துக் காட்டுவது எப்படி என்கிற மிகப்பெரிய ஆசை எழுகிறது. ஆனால் இது ஒரு பல பரிமாணங்கள் கொண்ட விஷயமாகும்.

நீ ஓர் அசிங்கமான மனிதனைப் பார்த்துவுடன் நீ நன்றாக இருப்பதாக உணர்கிறாய். ஆனால் நீ ஓர் அழகான மனிதரைப் பார்த்தவுடன் நீ கவலைப்படுகிறாய்; இது ஓர் இடைவிடாத ஒப்பிட்டுப் பார்த்தல். ஏனெனில் இந்த ஒப்பிட்டுப் பார்த்தலுக்கு இடையே மட்டுமே உனது ஆணவமானது இருக்க முடியும். இந்த ஒப்பிடுதலை நீ கைவிட்டு விட்டால், "நான் என்னவாக இருக்கிறேனோ அதுதான் நான். மேலும் அவர்கள் எதுவாக இருக்கிறார்களோ அதுதான் அவர்கள்" என்று நீ வெறுமனே கூறினால், அதன்பிறகு ஆணவமானது அதன் வேர்களை உன்னில் இழந்து விடுகிறது. அதன்பிறகு அது இருக்க முடியாது. அது உயர்வு மனப்பான்மைக்கும் தாழ்வு மனப்பான்மைக்கும்

இடையே மட்டுமே இருக்கிறது. இது புரிந்துகொள்ளப்பட வேண்டும்.

ஆணவமானது தாழ்வு மனப்பான்மைக்கும், உயர்வு மனப்பான்மைக்கும் இடையே அமுக்கப்பட்டு கிடக்கிறது. அது இரண்டிற்கும் இடையே உள்ள ஒரு மெல்லிய அடுக்காகும். எனவே அது இப்படி தாழ்வு மனப்பான்மைக்கும் உயர்வு மனப்பான்மைக்கும் இடையே அமுக்கப்பட்டு கிடப்பதால் அது எப்போதுமே சிக்கலில், துன்பத்தில், மனப்பதற்றத்தில் இருக்கிறது. எல்லாருமே அமுக்கப்பட்டு இருக்கிறோம்.

நீ உன்னைக் கவனித்துப் பார்த்தால், எப்போதுமே உனக்கு பின்னால் பலர் இருக்கிறார்கள், உனக்கு முன்னால் பலர் இருக்கிறார்கள். மேலும் நீயோ இரண்டிற்கும் இடையில் இருக்கிறாய் என்பதைக் காண்பாய். உனக்குப் பின்னால் உள்ள மனிதர் உனக்கு முன்னால் வருவதற்கு முயற்சி செய்து கொண்டு இருக்கிறார். எனவே அவரை நிறுத்தியாக வேண்டும். மேலும் உனக்கு முன்னால் உள்ள மனிதரும் கூட இன்னமும் முன்னால் செல்ல முயற்சி செய்து கொண்டிருக்கிறார். அவரும்கூட நிறுத்தப்பட வேண்டும். நீ முன்னே செல்ல வேண்டும், மேலும் நீ வேகத்தை அதிகரிக்க வேண்டும், நீ போராட்டம் மற்றும் போட்டியில் அதிக சக்தியை செலுத்தியாக வேண்டும்.

இப்படித்தான் ஆணவத்தின் ஒட்டுமொத்த உலகமும் தொடர்கிறது. உனது ஆணவத்தின் வழிகளைக் கவனித்துப் பார். அதன்பின்னர் அதை கைவிடுவது மிகவும் கடினமானது அல்ல. அதை வெறுமனே பார்ப்பதன் மூலம், அதைப் புரிந்து கொள்வதன் மூலம் உனது பிடியானது தளர்கிறது. அதில் என்ன உள்ளது? இந்த உலகில் பல மில்லியன் மக்கள் உள்ளனர். அவர்கள் ஒவ்வொருவரிடம் நீ உன்னை ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே போனால், உனது ஒட்டுமொத்த வாழ்க்கையுமே வெறுமனே துன்பமானதாக ஆகிவிடும்.

சிலருக்கு அழகான கண்கள் உள்ளது. ஆனால் உன்னிடம் அது இல்லை. வேறு சிலரிடம் வேறு ஏதோ ஒன்று உள்ளது.

ஆனால் உன்னிடம் அது இல்லை. எனவே இரண்டு வழிகளிலும் அது நல்லதல்ல. உன்னிடம் ஏதோஒன்று இருந்து அதுமற்றவரிடம் இல்லை என்றாலும்கூட அதன்பிறகு அது மோசமானதுதான். அதன்பின்னர் உனது ஆணவமானது ஊதிப் பெரிதாகிறது. ஆனால் இப்படி ஊதிப் பெரிதான ஆணவமானது மிகவும் புலன் உணர்வு மிக்கதாகவும், மிகவும் இதயத்தைத் தொடுவதாகவும் இருப்பதால் யார் வேண்டுமானாலும் அதைக் காயப்படுத்திவிட முடியும்.

"மெய்ஞ்ஞானம் அடையாதவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது என்று நீங்கள் கூறுகிறீர்கள்" என்று நீ என்னிடம் கேட்கிறாய். ஒரு வகையில் அவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. ஏனெனில் அவர்கள் தனித்துவம் வாய்ந்தவர்கள். ஒருவகையில் அவர்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியும். ஏனெனில் அவர்களின் தனித்தன்மையானது அளவுகளில் மட்டுமே வேறுபாட்டை கொண்டுள்ளது. ஒருவகையில் மெய்ஞ்ஞானிகளை ஒப்பிட்டுப் பார்க்க முடியும். ஏனெனில் அவர்கள் அனைவரும் ஒரேமாதிரி இருக்கின்றனர். ஆனால் அவர்களை ஒப்பிட்டுப் பார்க்கவும் முடியாது. ஏனெனில் அவர்கள் அந்த அளவிற்கு ஒன்றுபோல் உள்ளனர்.

என்னை நீ சரியாகப் புரிந்து கொண்டால், ஒப்பிட்டுப் பார்த்தல் என்பது அந்த அளவுக்கு அர்த்தமற்றதாகத் தெரியும். மெய்ஞ்ஞானம் அடையாதவர்களோடும் அது அர்த்தமற்றது. மெய்ஞ்ஞானம் அடைந்தவர்களோடும் அது அர்த்தமற்றது. ஒப்பிட்டுப் பார்த்தல் என்பதே தவறானது. மேலும் ஒப்பிட்டுப் பார்க்கும் மனம் ஓர் ஆணவக்கார மனமாகும்.

வெறுமனே உனக்குள்ளே செல். ஏனெனில் நீ ஒப்பிட்டுப் பார்க்கும்போது வெளிப்பக்கம் சென்றாக வேண்டும். நீ மற்றவர்கள் மீது உனது மனதை ஒருமுகப்படுத்தியாக வேண்டும். வெறுமனே உனக்குள் சென்று நீ யார் என்பதைப் பார். ஒப்பிட்டுப் பார்க்காமல் வெறுமனே நீ யார் என்று பார். உனது உண்மை நிலைஎன்ன என்று வெறுமனே பார். மற்றவர்களோடு ஒப்பிட்டு நீ யார் என்று பார்க்காதே.

நீ உனது சொந்த உரிமையில் உண்மையான ஒன்றாக இருக்கிறாய். அதை ஏன் பார்க்கக்கூடாது? ஏன் ஒப்பிட்டுப் பார்க்கிறாய்? ஒப்பிட்டுப் பார்ப்பது ஒரு பொய்யான அடையாளத்தைக் கொடுக்கிறது. மேலும், அந்த பொய்யான அடையாளம் தான் 'நான்' என்னும் தன்முனைப்பு என்று அழைக்கப்படுவதாகிறது.

பொய்யானது கைவிடப்படும்போது, உண்மையானது எழுகிறது. மேலும் அந்த உண்மையானது ஒப்பிட்டுப் பார்க்க முடியாதது. ஏனெனில் உண்மை என்பது எந்த ஓர் ஆன்மாவும் அல்ல, அது திறந்த வானம்.

இது சொல்லப்பட்ட ஒரு கதை. ஒரு பணக்கார கிழவன் ஓர் இளம் பெண்ணைக் கூட்டிக்கொண்டு தனது பல மாடிக் குடியிருப்பிற்கு சென்றான். அப்போது மிகவும் கடுமையான கோடையின் இரவு நேரமாக இருந்தது. அவர்கள் படுக்கைக்குச் சென்றனர். அதுதான் அந்தக் கிழவனின் நோக்கமாக இருந்தது.

துரதிருஷ்டவசமாக அந்தக் கிழவன் தன்னால் அசைபோட்டு சுவைக்க முடியாத அளவுக்கு அதிகமாக கடித்து விட்டான்.மேலும் அந்த இளம் பெண்ணின் மேல் படுத்திருந்தான். அவனது முகத்தில் வியர்வை கொட்டியதுதான் மிச்சம். வேறு எதுவும் நடக்கவில்லை. இறுதியாக அந்த இளம் பெண் பொறுமை இழந்து பின்னால் சென்று அவளது தலையணையில் இருந்து சில பறவைகளின் இறகுகுளை வெளியே எடுத்து அதைக் கொண்டு அந்தக் கிழவனின் தலையை வருட ஆரம்பித்தார்.

இதைக்கண்ட கிழவன், "நீ என்ன செய்கிறாய்? நான் ஏற்கனவே போதுமான கஷ்டத்தில் இருக்கிறேன்" என்று கத்தினார்.

அவள் இனிமையாகப் பார்த்துவிட்டு, "நல்லது, ஒப்பிட்டுப் பார்த்துப் பேசுவது என்றால், நான் உங்களது மூளையை அடித்து வெளியேற்றிக் கொண்டு இருக்கிறேன்" என்று முணுமுணுத்தாள்.

மனமானது இடைவிடாமல் ஒப்பிட்டுப் பார்த்தே நினைத்துக் கொண்டு இருக்கிறது. அது ஓயாமல் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டே இருக்கிறது. மனமானது ஏதாவது ஒன்றைச் சார்ந்தே வாழ்கிறது. மனம் என்பது ஓர் உப விளைவு. சார்ந்திருத்தல் என்பதன் விஷயமாகும். ஆனால் நீ சார்பியல் தத்துவத்தின் ஒரு பகுதி அல்ல. நீ ஆல்பர்ட் ஐன்ஸ்டீனின் சார்பியல் தத்துவத்திற்கு அப்பால் உள்ள ஒன்றாகும். நீ காலமும் அல்ல, இடமும் அல்ல. நீ அவற்றுக்கு அப்பால் உள்ளவன். நீ சாட்சியாக இருக்கிறாய். எனவே, சாட்சியானவன் எந்த ஒரு காலம் மற்றும் இடத்தினால் கட்டுண்டு இருப்பவன் அல்லன்; சாட்சியாளன் சார்ந்திருப்பதற்கு அப்பால் உள்ளவன். காட்சியாளன் அங்கு முழுமையாக எதையும் சார்ந்து இல்லாமல் இருக்கிறான். அதன் இருப்பு நிலை முழுமையானதாகும்.

முழுமை என்று எதுவும் கிடையாது என்று ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் கூறுகிறார். அறிவியலைப் பொருத்தமட்டில் அவர் கூறுவது உண்மைதான். ஆனால் அவர் கூறுவது தவறானது. ஏனெனில் அவர் தனக்குள் உற்றுப் பார்த்தது கிடையாது.

வெளியே, எல்லாமே சார்ந்திருப்பது; உள்ளே, எதுவுமே சார்ந்திருப்பதில்லை. வெளியே, எல்லமே நகர்ந்து கொண்டு இருக்கிறது; உளேள், எதுவும் நகர்வதில்லை. வெளியே எல்லாமே மாறிக்கொண்டிருப்பது; உள்ளே, எல்லாமே முடிவற்றது. ஆனால் அவர் தனக்குள் பார்த்தது கிடையாது. அவர் புயலின் மையத்தைக் கண்டதில்லை.

தனது தாயாருடன் மிருகக்காட்சி சாலைக்கு சென்ற பத்து வயது சிறுவனின் பழைய கதையை நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? அவர்கள் யானையின் அருகில் வந்தபோது அந்தச் சிறுவன் அந்த யானையில் இருந்து தொங்கிக்கொண்டு இருப்பது என்ன என்று தனது தாயாரிடம் கேட்டான்.

"அது அதன் வால் மகனே" என்று பதிலளித்தாள் தாய்.

“இல்லை, தொங்கிக் கொண்டிருக்கிற வேறு ஒன்று என்ன” என்றான் சிறுவன்.

“அது அதன் தும்பிக்கை” என்றாள் தாயார்.

“இல்லை, தொங்கிக் கொண்டிருக்கிற வேறு ஒன்று என்ன?” என்றான் சிறுவன்.

தர்மசங்கடத்திற்குள்ளான தாயார், “அது ஒன்றுமில்லை மகனே, ஒன்றுமில்லை” என்றாள்.

சில வாரங்களுக்குப் பிறகு அந்தச் சிறுவன் தனது தந்தை யுடன் சர்க்கஸ் ஒன்றுக்குச் சென்றான். அங்கு ஒரு யானையைப பார்த்த உடன் அந்தச் சிறுவன் மீண்டும் ஆரம்பித்து விட்டான்.

“யானையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கிறதே அது என்ன?” என்று கேட்டான்.

“அது அதன் வால்” என்றார் தந்தை.

“இல்லை, இல்லை, தொங்கிக் கொண்டிருக்கிற வேறு ஒன்று” என்றான் சிறுவன்.

“அது அதன் தும்பிக்கை” என்றார் அப்பா.

“இல்லை, இல்லை, யானையிலிருந்து தொங்கிக் கொண்டிருக்கிற வேறு ஒன்று என்ன?” என்று மீண்டும் வலியுறுத்திக் கேட்டான்.

உடனே தந்தை, “நல்லது மகனே, அதை அறிந்து கொள்ளும் அளவுக்கு போதுமான வயது உனக்கு இப்போது இல்லை என்று நினைக்கிறேன்” என்று கூறிவிட்டு அவர் அவனுக்கு வாழ்க்கை யின் உண்மைகளை விளக்கினார். அவர் கூறி முடித்தவுடன், அந்தச் சிறுவன் தந்தையின் பக்கம் திரும்பி, “அது எப்படி நான் அம்மாவிடம் கேட்டபோது அவள் அது ஒன்றுமே இல்லை என்று எப்படிக் கூறினாள்?” என்று கேட்டான்.

அதற்கு அவனது அப்பா, "நல்லது மகனே, உனது தாயாரை யாரோ கொஞ்சம் கெடுத்து வைத்திருக்கிறார்கள்" என்றார்.

இது உனக்குப் புரிகிறதா? இப்படித்தான் மனமானது இடைவிடாமல் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டே போகிறது.

ஒப்பிட்டுப் பார்ப்பதை விட்டுவிட்டு வெறுமனே இரு. வேறு எதனோடும் ஒப்பிடாமல் எது உள்ளதோ அதை வெறுமனே பார். மேலும் நீ உனக்குள் பார்த்து உள்ளே உள்ளதை, வேறு எதனோடும் ஒப்பிடாமல் பார்த்துவிட்டால், அதன்பின்னர் நீ எந்த அளவுக்குத் தவறவிட்டுக் கொண்டு வந்திருக்கிறாய் என்பதை அறிந்து ஆச்சர்யப்படுவாய். அதன்பின்னர் கண்களைத் திறந்து எந்த ஓர் ஒப்பீடும் இல்லாமல் விஷயங்களைப் பார்.

ஒரு ரோஜா மலரை ஏனைய ரோஜா மலர்களோடு ஒப்பிட வேண்டியதில்லை. அது அதன் சொந்த உரிமையில் உள்ளது. இந்த பூமியில் இதுவரை இருந்துள்ள அல்லது இந்த பூமியில் இனிமேலும் எப்போதாவது இருக்கப் போகின்ற வேறு எந்த ரோஜா மலர் குறித்தும் நீ ஒப்பிட்டுப் பார்க்க வேண்டியதில்லை. அது தனியானது, அதிகாரப்பூர்வமாக தனியானது. அதேபோன்று ஒவ்வொரு மனிதரையும் ஓர் அதிகாரப்பூர்வமான தனிமனிதராகப் பார். அதன்பின்னர் இந்த வாழ்க்கையானது மிகவும் செழிப்பான தாக, எல்லையில்லா செழிப்பு மிக்கதாகத் தெரியும். ஏனெனில் வாழ்க்கையானது அபரிமிதமான தனித்துவங்களைப் பெற்றிருக் கிறது.

நமது ஒப்பிட்டுப் பார்த்தல் நமது மனதை சுறுசுறுப்பற்றதாக ஆக்குகிறது. நமது ஒப்பிட்டுப் பார்த்தலினால் நமது தன்னுணர்வு என்னும் கண்ணாடியில் தூசி படிய ஆரம்பிக்கிறது. ஒப்பிட்டுப் பார்க்கின்ற இந்த பழைய பழக்கத்தைக் கைவிடு. ஆனால் நீ உனக்குள் இதை ஆரம்பிக்க வேண்டும். பழைய பழக்கங்கள் ஒழிவது மிகவும் கடினம். ஆனால் நீ விழிப்புணர்வு அடைந்து விட்டால் அவற்றை கைவிட்டு விடலாம்.

இதற்கு கொஞ்ச காலம் பிடிக்கலாம். ஆனால் இந்த பழக்கம் மறைய ஆரம்பிக்கும் போது, நீ உண்மையான உலகில் நுழைந்துவிட ஆரம்பிப்பாய். அது ஒப்பிட்டுப் பார்த்தல் என்பது இல்லாத ஓர் உலகம். மேலும் அப்படிப்பட்ட ஒப்பிட்டுப பார்த்தல் இல்லாத உலகம்தான் கடவுளின் உலகம். முழுமையின் உலகமாகும். அதைத்தான் நாம் தேடிக்கொண்டு இருக்கிறோம்.

அறிவியல் சார்பியல் உலகைத் தேடுகிறது. மதமானது முழுமையை, சார்பியல் இல்லாததைத் தேடுகிறது.

இன்று இது போதும்.



# இணைப்பு

## 1. மூல ஒலி வடிவத் தொகுப்புகள் பற்றிய தகவல் :

ஓஷோவின் நூல்கள் அவர் மக்கள் கூட்டத்திற்கு நேரடியாய் நிகழ்த்திய போதனைகளில் இருந்து எடுக்கப்பட்ட நகல்கள் ஆகும். ஓஷோவின் போதனைகள் யாவும் புத்தகங்களாய் வெளியிடப்பட்டிருப் பதோடு, பதிவு செய்யப்பட்ட ஒலி வடிவங்களாயும் கிடைக்கின்றன. பதிவு செய்த ஒலி வடிவங்கள் பற்றியும், புத்தக மூலாதாரப் பதிவேடுகள் பற்றியும் ஓஷோ நூலகத்தில் தகவல்கள் கண்டறிய முடியும். தகவல்களைப் பெற இணைய முகவரி www.osho.com

## 2. ஓஷோவைப் பற்றி :

தனி நபரின் செயல்நோக்கத் தேடலில் இருந்து இன்றைய சமுதாயம் எதிர்கொண்டிருக்கும் உடனடியான சமூக, அரசியல் பிரச்சினைகள் வரை ஒவ்வொன்றையும் பிரதிபலித்து, துணிச்சலாய் எதிர்த்து நின்றிருக்கிறார்.

அக உருமாற்ற விஞ்ஞானத்திலும், சமகால வாழ்வின் துரிதகதியைப் பேசும் தியானத்திலும் ஓஷோவின் புரட்சிகரமான பங்களிப்பு ஒரே மாதிரிதான்.

உடலிலும், மனதிலும் வளர்ந்து பெரிதாகும் உளைச்சலை (Stress) வெளியேற்ற இடமளிக்கும் வகையில் ஓஷோவின் அரிதான செயல்திறன் கொண்ட தியானங்கள் (Active Meditations) வடிவமைக்கப்பட்டிருக்கின்றன. அதனால், ஆழ்ந்த அமைதி காண்பதும், எண்ணங்களற்ற தியான நிலையை அடைவதும் எளிதாகிறது.

புதிதாய் ஒரு மனிதப்பிறவி தோன்றுவதற்கான நிலைமைகளை உருவாக்கித் தருவதையே தம்முடைய குறிக்கோளாய்க் கொண்டிருந்தார் ஓஷோ. அந்த மனிதனை 'புத்த ஸோர்பா' (Zorba the Buddha) என்றும், அவனுடைய பாதங்கள் மண்ணில் அழுந்த ஊன்றியிருக்கும், கைகள் விண்வெளியில் நட்சத்திரங்களைத் தொட்டுக் கொண்டிருக்கும் என்றும் அவர் வர்ணித்தார். ஓஷோவின் அனைத்து நோக்கு முறைகளிலும் அனாதியான (Timeless) கிழக்கத்திய விவேகத்தையும், மேற்கத்திய விஞ்ஞான தொழில்நுட்ப ஆற்றலையும் உள்ளடக்கிய ஒரு பார்வை இருக்கிறது.

அந்தப் பார்வையின் காட்சிப் பரப்பெல்லையை நாம் புரிந்துகொண்டு வாழ்வில் செயற்படுத்தும் பட்சத்தில், அது மனித இனப் பண்பையே முழுமையாய் மாற்றக்கூடியதாகும்.

ஓஷோவின் நூல்கள் எழுதப்பட்டவையல்ல. அவர் முப்பத்தைந்து ஆண்டு காலத்தில் முன்னேற்பாடின்றி மக்களிடையே நிகழ்த்திய உரைகளிலிருந்து எழுத்து வடிவம் பெற்றவையாகும்.

ஓஷோவை, 'இருபதாம் நூற்றாண்டை உருவாக்கிய ஆயிரம் பேரில் ஒருவர்' என்று 'சண்டே டைம்ஸ்' (Sunday Times - London) பத்திரிகையும், 'இந்தியாவின் தலையெழுத்தை மாற்றியமைத்த பத்து பேரில்-- காந்தி, நேரு, புத்தர் உள்ளிட்டவர்களில் ஒருவர் என்று 'சண்டே மிட்–டே' (Sunday Mid-Day) பத்திரிகையும் விவரிக்கின்றன.

**ஓஷோ தியான மையம்:**

மக்கள் விழிப்புணர்வு, ஒய்வு, வேடிக்கை விளையாட்டு இவற்றுடன் கூடிய புதிய வாழ்க்கை முறையின் அனுபவத்தைப் பெறவேண்டும் என்பதற்காக ஓஷோ தியான மையம் தோற்று விக்கப்பட்டது. அது இந்தியாவில் மும்பைக்குத் தென்கிழக்காய் (100 மைல் தொலைவு) புனேயில், நீண்ட வரிசையாய் நிழல்தரு மரங்கள் அணிசெய்யும் 'கோரேகான் பார்க்' பகுதியில் (40 ஏக்கர் பரப்பளவு) அமைந்துள்ளது. ஆண்டுதோறும் நூறு நாடுகளில் இருந்து வருகைதரும் ஆயிரமாயிரம் மக்களுக்குப் பலவகை நிகழ்ச்சி நிரல்களை மையம் வழங்குகிறது. வருகை புரிவோர் தங்குவதற்கு வளாகத்திற் குள்ளாயமைந்த புதிய ஓஷோ விருந்தினர் இல்லத்தில் வசதிகள் உண்டு.

தியான மையத்தின் பல்வேறு நிகழ்ச்சிகளும் புகழ்பெற்ற 'ஸென் தோட்டப் பூங்கா'வை அடுத்த பிரமிடு காம்ப்ளக்ஸில் நடைபெறும். மக்களுக்குப் புதிய வாழ்க்கை முறையை வடித்துக் கொடுக்கும் சாதனங்களால் அந்த நிகழ்ச்சி வடிவமைக்கப்பட்டிருக்கும். அவற்றில் ஒன்று ஓய்வு சார்ந்த தெரிநிலை (Relaxed Awareness) ஆகும். அதுவே தங்கள் வாழ்க்கை நெடுகிலும் அவர்கள் தொடரக்கூடிய அணுகு முறையும் ஆகும்.

சுயத்தைக் கண்டறியும் வகுப்புகள், அமர்வுகள் பயிற்சித் தொடர்கள், தியானச் செயல்முறைகள் இவை ஆண்டு முழுவதும்

அளிக்கப்படுகின்றன. உடற்பயிற்சிக்கும், உடல்நலம் காக்கவும் ஒரு திறந்தவெளி அரங்கம் உள்ளது. அங்கே ஸென் அனுகுமுறையில் விளையாட்டுகளையும், பொழுதுபோக்கையும் செய்து பார்க்க முடியும்.

பிரதான தியான அரங்கில் செயல்திட்ட நேரம் காலை 6 மணி முதல் இரவு 11 மணி வரையில் ஆகும். இதில் சுறுசுறுப்பானது, அமைதியானது என இரு தியான முறைகள் இடம்பெறும். தினமும் மாலைத் தியானக் கூட்டத்திற்குப் பிறகு, பல்வேறு கலாசாரங்களைக் கொண்ட இம்மையத்தின் திறந்தவெளி உணவருந்தும் பகுதிகளில் நண்பர் குழாமுடன் ஆட்டமும் பாட்டமுமாய் இரவு வாழ்க்கை உயிர்த் துடிப்போடு காணப்படும்.

மையம் பாதுகாப்பான முறையில் சுயமாய் தயாரித்து வடிகட்டிய குடிநீரையும், மையத்தின் சொந்த நிலத்தில் பயிரிடப்பட்ட தாவர வகைகளில் தயாரிக்கப்பட்ட உணவையும் வழங்குகிறது.

தியான மையத்திற்கு நேரடிச் சுற்றுப்பயணம் மேற்கொள்வோர் தேவையான தகவல்களை www.osho.com தளத்தில் பெற முடியும்.

இது 'ஆன்லைன்' பத்திரிகை, ஒலிஒளியுடன் கூடிய தகவல்வகை (Web Casting), ஓர் ஆடியோ புக் கிளப், முழுமையான ஆங்கில இந்தி உரை சேமிப்புகள், ஓஷோ ஒலிஒளி, புத்தக வெளியீடுகளின் முழுமையான விலைப்பட்டியல் இவற்றுடனான விரிந்து பரந்த இணைய தளம் ஆகும். ஓஷோ அபிவிருத்தி செய்த செயல்மிக்க தியான உத்திகளும், ஆற்றொழுக்கு போன்ற ஒளிக்காட்சி (Video) விளக்கங்களும் இதில் அடங்கியுள்ளன.

தியான மையத்தில் பங்கேற்போர் விரிவான தகவல்களைப் பெற அன்பு கூர்ந்து தொடர்பு கொள்ளவும்:

**OSHO COMMUNE INTERNATIONAL**
17, KOREGAON PARK, PUNE–411001. M.S. INDIA.
Phone : 0204019999 Fax : 0204019990
E-Mail : visitor@osho.net Website : www.osho.com